முதற் பதிப்பு : 1993,

This book is published with financial assistance of Thirumala Thirupathi Devasthanams Under their scheme "Aid to publish Religious Books."

பதிப்பாசிரியர் :

**திருமதி லட்சுமிநாராயணன்**
9, கோபாலகிருஷ்ண ரோடு.
தி. நகர், சென்னை-17.

**விலை : ரூ. 60-00**

விற்பனை உரிமை :

**கீதாசாரியன் பதிப்பகம்**
7, தெற்கு மாட வீதி
திருவல்லிக்கேணி, சென்னை-5

அச்சிட்டோர் :

**குரு அச்சகம்,**
19, இருசப்ப கிராமணி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5
போன் : 844371

# முன்னுரை

பேராசிரியர் C. ஜெகந்நாதாசார்யர்
M. A. (History) M. A. [Tamil] L.T., P.O.L. Dipl.Geog, Vidwan.
முன்னாள் தலைமைத்தமிழ்ப் பேராசிரியர் விவேகானந்தர் கல்லூரி,
மயிலை, சென்னை-4.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

## ஹரிவம்சம்-விஷ்ணுபர்வம் (தமிழாக்கம்)

இந்தத் தமிழாக்க நூலுக்கு **மதிப்புரை** வழங்குவதற்கு முன்னர் குறிக்கொள்ளத்தக்க சில விஷயங்கள் உள. அவை வருமாறு:—

## நூல் வந்த வழி

*ஹரிவம்ச நூலினில் விஷ்ணுபர் வத்திற்*
*குரியதமி ழாக்கமிந் நூல்.*

*சிந்திக்க வைக்கும் ஹரிவம்ச நூலுக்கும்*
*சந்தத் தமிழாக்கஞ் செய்யென்று—முந்தி*
*வியாசரின் பாரதத்தைத் தண்டமிழி லீந்த*
*தயாளர் பணித்திட்டா ராங்கு.*

*அவரிட்ட அப்பணியைத் தெய்வப் பணியா*
*அவர்மருக னார்சிரமேற் றாங்கிப்—புவனஞ்*
*செழிக்க அரிநாம மோங்கவே செய்தார்*
*தழைக்க அவர் நாமந் தான்.*

**ஹரிவம்சம்** என்பது வடமொழியில் அமைந்த நூல்; அது மஹாபாரதத்தோடு ஒட்டிய நிறைவாகும் [supplement]

ஆகவே, இதனைப் பாரதத்தின் பத்தொன்பதாவது பர்வம் என்றும் கூறுவர். ஆனால் பெருவழக்காகப் பதினெட்டுப் பர்வங்கள் உள. இந்த ஹரிவம்சத்தை முதன்முதலில் தோன்றிய புராதன முதல் புராணம் என்பர். இது ப்ரஜாபதி தொடங்கி வ்ருஷ்ணி குலத்தவரின் வரலாற்றைக் கூறுவது. இது வ்ருஷ்ணி குலத்தின் வரலாறோடு கிருஷ்ணனின் பெருமைகளையெல்லாம் பேசுவது.

ஹரிவம்சத்திற்கு ஏனைய பேர்கள்:— கிலா [khila], ஆஸ்சர்ய பர்வம், பாரிஜாதம், மாதுரா என்பன.

**பெயர்க்காரணம்:**— ஹரிவம்சம் மஹாபாரதத்தின் நிறை விணைப்பு, ஆதலின், **கிலா** [khila] எனப்பட்டது. கிருஷ்ண ஆஶ்சர்யன் என்று அழைக்கப்படுவதாலே அவன் ஜீவ்ய சரித்திரப் **ஆஶ்சர்ய பர்வம்** எனப்பட்டது. இதில் நாரதர் கிருஷ்ண ஆஶ்சர்யன் என்றே அழைத்தார். இந்தப் பர்வத்தை மகாபாரத தோடு ஒட்டிப் பத்தொன்பதாவதாகச் சேர்த்துள்ளார்கள் என்ப

இதனைப் **பாரிஜாதம்** என்றது-பாரிஜாத மரத்தைக் கிருஷ்ண துவாரகைக்குக் கொண்டு வந்தமையால், பாரிஜாதஹரணம்.

இதனை **மாதுரா** என்றது—கிருஷ்ணன் பிறந்த இடம் மதுர [வட_மதுரை]; அவன் வளர்ந்த இடம் மதுராவையடுத்த கோகுல பிருந்தாவனம். மாமனாகிய கம்ஸனைக் கொன்றதும் மதுராவிலே ஆகவே, இந்த மாதுரா நூல் எனப்படும் ஹரிவம்ச நூல், வைச பாயன முனிவர் ஜனமேஜயனுக்குச் சொன்னார். சுருங்கக் கூறி இந்த ஹரிவம்ச நூல் யாதவ வம்சத்தைச் சேர்ந்த வ்ருஷ்ணி குலத்தில் பிறந்த கிருஷ்ணனைப் பற்றிக் கூறுவது

*வடமொழி ஹரிவம்சம் முதல் volume-இல் [volume-I] அ நூல் மொத்தம் 6073 சுலோகங்களைக் கொண்டது என்று குறிக்க பட்டுள்ளது. [Introduction-page XXIX] இந்த வடமொழி முத volume- 1 முதல் 118-அத்தியாயங்களைக் கொண்டுள்ளது. மூன் பர்வங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவையாவன— †ஹரிவ பர்வம், விஷ்ணுபர்வம், பவிஷ்யபர்வம் என்பன.

| | | |
|---|---|---|
| ஹரிவம்சபர்வம் | — | 1 முதல் 45 அத்தியாயங்களைக் கொண்ட [மொத்தம்-45 அத்தி]. |
| விஷ்ணுபர்வம் | — | 46 முதல் 113 அத்தியாயங்களைக் கொண்ட [மொத்தம்-68 அத்தி]. |
| பவிஷ்யபர்வம் | — | 114முதல்118 அத்தியாயங்களைக் கொண்ட [மொத்தம்-5 அத்தி]: |

---

*வடமொழி ஹரிவம்ச நூல் முதல் volume-ஐக் கொடுத்து பார்வையிட உதவியவர்கள் மயிலையில் திகழும் ஸம்ஸ்க கல்லூரிப் பெருந்தகையோர் ஆவர். அன்னார்க்கு அடியேன் ந யல்லால் கைம்மாறிலேன்

†ஹரிவம்சம் என்பது முழுநூலுக்குப் பெயர். அந்த நூல முதல் பர்வத்திற்கு ஹரிவம்சபர்வம் என்று பெயர். இது நோக் தக்கது.

ய

[குறிப்பு:- இனி வடமொழி இரண்டாம் volume உட்பட—மொத்தம் 318 அத்தியாயங்கள் இருக்கலாம் எனத் தோற்றுகிறது ஆனால் பின்னர்க் காணப்படும் 200 அத்தியாயங்கள் ஹரிவம்ச நூலின் முக்கிய விஷயங்களோடு பெரிதும் சம்பந்தப்படாது தொடர்பின்றியுள்ள பிற்சேர்க்கைகளாகத் தோன்றுகின்றது என்பர்]

இப்போது அடியேன் **மதிப்புரை** வழங்க எடுத்துக்கொண்டது வடமொழி ஹரிவம்சத்தில் 68 அத்தியாயங்களைக் கொண்டுள்ள இரண்டாம் பர்வமாகிய **விஷ்ணு பர்வத்தின் தமிழாக்க நூலுக்காகும்.** இந்தத் தமிழாக்க நூல் 128 அத்தியாயங்களைக் கொண்டதாகி இரண்டு பகுதிகளாக வெளியிடப்படுகின்றது. ஆகவே, ஒவ்வொரு பகுதியும் 64 அத்தியாயங்களைக் கொண்டுள்ளது. இப்போது வெளிவரும் இது **முதற்பகுதியாகும்.** நரகாசுர வதத்தோடு முடிகின்றது. மேல்வரவிருக்கும் இரண்டாம் பகுதி—மேலும் 64 அத்தியாயங்கள் கொண்டு [அத்தி. 65-128] பாரிஜாதஹரணம் தொடங்கி, மங்களகரமான உஷையின் திருமணவைபவம் கூறி, மேலும் இந்த நூலைக்கற்போர் கேட்போர்க்காகும் நற்பயன்களைக் கூறுமுகத்தான் பலஶ்ருதியோடு முடிகின்றது.



# மதிப்புரை

## ஹரி வம்சம் - விஷ்ணு பர்வம் (தமிழாக்கம்)

**ஹரிவம்சம் என்ற பெயர்க் காரணம்.**

மனு வமிசத்தில் இக்ஷ்வாகு பிறந்தான். அந்த இக்ஷ்வாகு வமிசத்தில் ஹரியஸ்வன் என்ற ராஜா இருந்தான். அவன் பெயரால் அவன் வழி வந்த வம்சம் **ஹரிவம்சம்** எனப் பெயர் பெற்றது. எனவே அந்த ஹரியஸ்வன் என்பவனே ஹரிவம்சத்தின் மூலபுருஷனுவான். அவன் மதுவசுரன் மகள் மதுமதி என்பவளை மணந்தான். அந்தவமிசத்தில் உதித்த அரசன் **யது**. அதனுல் அவன் பிரஜைகளுக்கு யாதவர் எனப் பெயருண்டாயிற்று. அவன் தன் மனைவியருடன் சமுத்திரத்தில் ஜலக்ரீடை செய்தான். அப்போது தூம்ரவர்ணன் என்ற சர்ப்பராஜனுல் இழுக்கப்பட்டு, சர்ப்ப நகரத்திற்குச் செல்ல நேர்ந்தது. அங்கு அந்தத் தூம்ரவர்ணன் தன் கன்னியர் ஐவரை இந்த யதுவுக்குத் திருமணம் செய்து கொடுத்தான். அந்த ஐந்து நாக மங்கையருக்கு ஐந்து பிள்ளைகள் தோன்றினர். அவர்கள் யது குலத்தை விளக்க வந்தவர். அவர்கள் பெயர்கள்—மகா பாஹு, முசுகுந்தன், பத்மவர்ணன், ஸாரஸன், ஹரிதன் என்பன. இந்த ஐவருக்கும் பிறந்த பிள்ளைகளால் யாதவ வம்சம் பெருகிற்று. இந்த யாதவ வம்சத்தில் ஏழு குலங்கள் மிக்க கீர்த்தி வாய்ந்தவை. அவற்றின் பெயர்கள்—பைமர், குகுரர், போஜர், அந்தகர், யாதவர், தாஸார்ஹர், வ்ருஷ்ணி என்பவை. பின்னர் இந்த ஏழு குலமும் விளங்க உதித்த அரசன் நகுஷனின் மகனுகிய **யயாதி**: அவனுக்குப் பிள்ளைகள் ஐவர். மூத்த மகன் பெயர் **யது**. அவனுல் இந்த யாதவ வமிசம் மேலும் சிறப்புற்றுப் போற்றப்படுகிறது. சந்திர வமிசம் போல் கீர்த்தி வாய்ந்ததாயிற்று. அதனுல் இந்த யதுவை யாதவ குலத்துக்கு மூல புருஷனுகிய அரசன் என்பர் இந்த வமிசத்தில் பிறந்தார் வசுதேவர். அவர் வ்ருஷ்ணி குலத்தைச் சேர்ந்தவர். அவர் மகன் வாசுதேவனுகிய கிருஷ்ணன். ஆகவே கிருஷ்ணன் வ்ருஷ்ணி குலத்தில் அவதரித்த யாதவ வமிசத்தைச் சேர்ந்தவன். யாதவர்கள் பெரும்பாலும் புறவில் ஆநிரை புரந்திடும் இடையர் குலத்தவராவர்.

இந்தக் கிருஷ்ணன் பத்தினிமார், ருக்மிணி தவிர மற்றும் எட்டுப் பேர்கள். அவர்கள் பெயர்கள் காளிந்தி, மித்ரவிந்தை, ஸத்யநு, ஜாம்பவதி, ரோஹிணி, லக்ஷ்மணை, ஸத்தியபாமா,

காந்தாரீ. இவர்களைத் தவிர வேறு ஆயிரக் கணக்கான ஸ்த்ரீகளையும் மணம் புரிந்தான். அவர்களிடத்தில் அந்தக் கிருஷ்ணனுக்கு ஆயிரக் கணக்கில் வீர புத்திரர்கள் பிறந்தனர்— ''பதினாறு மாயிரவர் தேவிமார் பணி செய்யத் துவரையென்னும், அதில் நாயகராகி வீற்றிருந்த மணவாளர்'' என்பது பெரியாழ்வார் பாசுரம். ருக்மிணியிடத்துக் கிருஷ்ணனுக்குப் பத்து ஆண் பிள்ளைகளும் சாருமதி என்னும் பெயருடைய ஒரு பெண்ணும் பிறந்தனர் எல்லாப் பிள்ளைகளும் பலவான்கள். இங்ஙனம் யாதவ வம்சம் பரந்து பெருகலாயிற்று.

இந்தக் கிருஷ்ணன் ஹரியாகிய **விஷ்ணுவின் அவதாரம்**. கார் மேகம் போல் இருந்ததால் **கிருஷ்ணன்** என்ற நாமம் பெற்றான். பசுக்களின் மத்தியில் வளர்ந்தான்; துஷ்டநிக்ரஹம், சிஷ்ட பரிபாலனம், தர்ம சம்ஸ்தாபனம் என்ற மூன்றின் நிமித்தமாக ஹரி [விஷ்ணு] கிருஷ்ணனாக அவதரித்தார் என்பதை

**பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்க்ருதாம் |**
**தர்மஸம்ஸ்த்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே!!**

என்ற கீதாஸ்லோகத்தாலும் அறிக-ஆக, இந்த **ஹரிவம்சம்** என்ற நூலில் **விஷ்ணுபர்வத்தில்** பெரும்பாலும் கிருஷ்ணன் அவதரித்த யாதவ வம்சத்தின் மேன்மை சிறப்பாகக் கூடுப்படுகின்ற பொருளடக்கமாகும் ஆக, **விஷ்ணுபர்வம்** என்ற இப்பகுதி கிருஷ்ணாவதாரத்தின் பெருமைகளைப் பரக்கப் பேசுவதாகும்.

இந்த விஷ்ணுபர்வம் ஹரிவம்ச நூலின் முதற்பகுதியைச் சேர்ந்ததாகும். இந்நூல் 'ஜயம்' என்னும் மறுபெயருடைய மகாபாரதத்தின் வழிவந்ததாகும். இந்த ஹரிவம்ச நூல் நுவலும் விஷயங்கள் யாவும் வைசம்பாயன முனிவரால் ஜனமேஜய ராஜாவுக்குச் சொல்லப்பட்டதன் விரிவாகும்.

இரண்டெழுத்துக் கொண்ட ஹரி என்ற நாமம் 'ராம' நாமம் போல் பெரிதும் போற்றப்படுவதாகும். ஹரி நாமத்தின் பெருமையைப் பின் வரும் சான்றுகளால் அறியலாம்:-

1 ''மலைக்கு மேல் மலைவிளக்காம் அழகா! வேத
வான்குதலை நான்கு தலை மகனார் வாளா
தலைக்குமேல் எழுதுகின்றார் **அரியென்று** எங்கள்
தாலத்தின் மேல் எழுதச் சமர்த்திலாரோ''

என்றது அழகர் கலம்பகம்.

2 ............... முனிவர்களும் யோகிகளும்
மெள்ளவெழுந்து **அரி**யென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்
என்றது திருப்பாவை.

3 " 'அரன் அதிகன்' என்று கூறிய கம்பர் அதே மூச்சில் "**உலகளந்த அரி அதிகன்** என்று அடை கொடுத்து அரி நாமத்தைச் சிறப்பித்துள்ளமை காணலாம். மற்றும் "ஆதியந்தம் **அரி**யெனயாவையும் ஓதினர், அலகில்லன உள்ளன வேதங்கள்" என்றதும் காண்க.

4. "வானவர் தானவர்க்கென்றும் அறிவதரிய **அரியாய** அம்மானே! என்றும் (திருவாய்-9-4:4): '**அரி**யாய அம்மானை அமரர் பிரானை" என்றும் (திருவாய் 9.4:5) நம்மாழ்வார் அருளிச்செய்துள்ளார்.

கிருஷ்ணாவதாரத்தின் அரிய சேஷ்டிதங்களை இந்நூலில் காண லாம். மாதுலனாகியும் ஏதிலனாகிய கம்ஸன் விருத்தாந்தத்தாலும் அவனது மாமனார் ஜராசந்தன் விருத்தாந்தத்தாலும், காலயவனன் விருத்தாந்தத்தாலும், பூமி புத்திரன் நரகாசுரன் விருத்தாந்தத் தாலும் அவற்றை மையமாகக் கொண்டு 64 அத்தியாயங்களால் பெற வைக்கப்பட்டுள்ளன,

இந்நூல் வடமொழியின் ஹரிவம்சத்தின் மொழிபெயர்ப்பு ஆதலின், தமிழ்நடை அதற்கேற்ப அமைக்கப்பட்டுள்ளது. வட மொழிப் போக்கினைத் தழுவித் தமிழாக்கஞ் செய்யப்பட்டுள்ள தென்பது பல இடங்களில் தெளிய வைக்கப்பட்டுள்ளன. வட சொற்கள் தற்சமமாகவும், தற்பவமாகவும் தமிழ்மொழியில் பயில வருவது இயல்பே. "வட சொற்கிளவி வடவெழுத்து ஒரீஇ எழுத் தொடு புணர்ந்த சொல்லாகும்மே," "சிதைந்தனவரினும் இயைந்தன வரையார்" என்பன தொல்காப்பியம். பிற்காலத்தில் நன்னூலாரும், நாலுவகைச் சொற்களில் வடசொல்லைச் சிறப்பாக எடுத்தாண்டுள்ளார். ஆக, இந்த ஹரிவம்சம் தமிழில் ஆக்கப் பட்டமை ஒரு அரும்பெருஞ்செயலாகும் என்பது தட்டில்லை.

இந்நூல் "வடகலை தென்கலையொடு பயிலும் வித்தகர்" அனைவருக்கும் தெவிட்டாத இன்பமாகும். இதில் கூறப்பட்டுள்ள விஷயங்களைப் படிக்குங்கால் 'அண்ணிக்கும் அமுதூறும் நாவுக்கே" என்ற கணக்கிலே சிறக்கும்.

இதனுள் கூறப்பட்டுள்ளவை—இயற்கை வளம்; பர்வ கால வருணனைகள் (வர்ஷா காலம், சரத் காலம், சந்தியா காலம்,

வைகறை இவற்றின் வருணனைகள்)ः வருணாசிரம தர்மங்கள்; ராஸக்கிரீடை; யது—யாதவ சரித்திர வரலாறு; பலராம—ரேவதி விவாகம்; கிருஷ்ண—ருக்மிணி விவாகம்; பிரத்யும்நன்—சுபாக்கி விவாகம்; அநிருத்தன்—ருக்மவதி விவாகம். இவை சிறப்பாகக் குறிக்கப்பட்டுள்ளன. [சுபாக்கி-ருக்மியின் புத்ரியாவள்; ருக்மவதி—ருக்மியின் பௌத்ரியாவள்]

மற்றும் **முக்கியமான விஷயங்கள்** கூறப்படுகின்றன: உதாரணமாகச் சில காட்டுவல்;

பூதனை—கம்ஸனுடைய வளர்ப்புத்தாய் எனல், தாதி என்பாரும் உண்டு. (P. 25);

தாமோதரன் என்ற பெயர்க் காரணம் (P. 29);

கோகுலத்திலிருந்து ஆய்ப்பாடி பிருந்தாவனத்திற்கு மாற்றப் படல் (P 33—36).

தாய் முலையன்ன சரயு என்று கம்பர் கூறியது போல, இங்கு யமுனா நதியின் விழுமிய சிறப்பு (P. 43—44);

பசுக்களை மேய்க்கும் பொழுது கன்றுகளுடன் கூடிய பசுக்களைப் பேர் சொல்லிக் கூவிக் கொள்ளுதல் (P 53):

சங்கர்ஷணன் என்னும் பெயருடைய பலராமனுக்குப் **பலதேவன்** பட்டம் கொடுத்தல் (P 58);

பாரத யுத்தம் பின்னர் நடக்கப் போவதை முன்னரே அறிந்து இந்திரன் தன் அம்சமான மகன் அருச்சுனனைக் கிருஷ்ணன் கையில் அடைக்கலமாக ஒப்பித்தல் (P 82 ;

அசுப நிமித்தங்கள், கிரக சாரங்களின் செல்வாக்கு (Astrological significance) (P 102—103);

கிருஷ்ணன்—கேசவ நாமம் பெறல்; அதன் பெருமை (P—110)

''கெடும் இடராயவெல்லாம் கேசவா என்னநாளும்
கொடுவினைசெய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார்''
—என்றார் நம்மாழ்வார் (திரு:10—2-1)

''மாதவனைக் கேசவனை; கேசவனைப் பாடவும் நீ கேட்டே
கிடத்தியோ''—திருப்பாவை:30, 7.

**கம்ஸன்** என்ற பெயர் ஏற்பட்ட விவரம் [கஸ்யத்வம்]—இதன் பொருள்—நீ யாரைச் சேர்ந்தவன் [P 137]

கம்ஸனின் தம்பியின் பெயர் ''ஸீநாம'' [P 162]

ருக்மிணியின் அழகு வருணனை [P 313-314]

பலராமர் தலைமையில் யாதவர்கள் ஜராஸந்தன் சிசுபாலன் இவர்களோடு கடும் போர் புரிதல் [315-316]

பலராமன் ருக்மியைச் சதுரங்கப் பலகையால் [chess-board] அடித்துக் கொல்லுதல் [325]

**சில சிறப்புடைப் பகுதிகள் :**

ஆர்யா ஸ்துதி— [அத்.3]

யாதவன் அந்தகன் கம்ஸனுக்கு யாதவ குலத்தின் மேன்மையைக் கூறிப் புத்திமதி சொல்லுதல் [அத், 23]

அக்ரூரர்க்கு விச்வரூபம் [அத் 26];

யாதவ குலம் தோன்றிய சரித்திர வரலாறு [அத் 37, 38]

மிக்க வலிமையுடைய பலராமனின் மஹாத்மியம் [அத். 62].

**தத்துவங்கள்:**

இந்த உலகம் முழுவதும் காலத்திற்கு உட்பட்டது [P 19]; [உலகின்] எவனுடைய புத்தி முதிர்ந்திருக்கிறதோ அவனே பெரியோன்; தலை நரைத்ததாலும், நூற்றுக் கணக்கான வயதானதாலும் பெரியோனல்லன். [P 96];

தினமும் பிராமணர்கள் செய்ய வேண்டிய ஹோமங்கள் [P 112];

பிள்ளையானவன் மாதா பிதாக்களுக்கு முறைப்படி ப்ரதியுபகாரம் செய்ய வேண்டும் என்பது தர்ம சாஸ்திரம் [P 118];

மனிதன் வாழ்க்கை நிலையற்றது [P 152]

அரசனிடம் ஒழுக்கீனம் கூடாது [P 157];

அசத் கர்மங்கள் செய்யும் மக்கள் உலகில் அதிகம் [P 157];

ஊழ்வினை மீற முடியாது [P 159];

எல்லாப் பிராணிகளும் காலத்திற்கு வசப்பட்டவை [P 160]

காலத்தால் ஆயுள் தேய்கிறது; ஒருவனும் அகாலத்தில் சாக மாட்டான். காலம் வந்த போது ஜீவிக்கவும் மாட்டான். இவ்விதம் நிச்சயம் செய்து, ஒருவனுக்கும் பயமடையப்படாது. [P. 252]

சென்றது சென்றதே [what is past is past] [P 263]

**உவமைகள் :** இந்த நூலில் காணப்படும் உவமைகள் மிகவும் ரசிக்கத்தகுந்தவை. உருவகங்களும் அப்படியே. இனி உவமைகளில் சில காட்டுவல்:—

அடிக்கடி சுற்றித்திரிந்து நிலையில்லா குதிரைக்குட்டிகள் போல் விளையாடினர்கள் கிருஷ்ண பலராமர்கள். [p 30];

இலை ஊதலில் இரு கைகளும் முகமும் சேர்ந்து மூன்று தலை பாம்பு போல் சோபித்தனர். [P 30]

சூன்ய பிரதேசமாகிய இக்காடு வ்யன்ஜனமில்லா சாப்பாடு போன்றது [p 31];

தலைமயிர் வகிர் எடுத்தாற் போலக் காளிந்தி யமுனை ஓடுகிறது. [p 32];

சில கோபர்கள் உடலில் தொங்கும் அணைகயிறு மற்ற கயிறுகளின் சுமைகளால் விழுதுகளுடைய ஆலமரங்கள் போல் தோற்றமளிக்கின்றனர். (p 35);

பருவக் காற்றால் தரை சுத்தம் செய்யப்பட்ட பூமி யௌவன பருவத்தினள் போல் காணப்படுகிறது (p 37);

சந்தனப் பூச்சு கொண்ட அங்கங்களுடன் அழகிய திருமேனி கொண்டு யமுநாதீரத்தில் இறங்கி, சேறு பூசப்பட்ட உடலை யுடைய காளைகள் போல் விசேஷமாகப் பிரகாசித்தனர் (p 125);

காக்கை போல் மூச்சு விட்டுக்கொண்டு சொன்னான். (p 127);

கடப்ப மரங்கள் (சிவப்பு) முட்பூக்களைத் தரித்துத் தீபங்கள் போல் விளங்கின (p 134);

நெய்பெய்த அக்நிபோல் என் ஹிருதய அக்நி கொழுந்து விட்டு வளர்கிறது (p 136);

மலையில் தலை மறைந்த சர்ப்பத்தின் பின்பாகத்தைக் கருடன் இழுப்பது போல் பலராமன் யானையின் வாலை வேகமாக இழுத்தான் (p 142);

குட்டியிழந்த பெண்மான்போல் அழுது கொண்டு (p 155);

மற்றும், ஓடைநீர் போல் வாடியிருக்குமவரை எப்படிப் பார்ப்பேன்? (p 156);

கூழாங்கற்களைப் பூஷணமாகவுடைய கங்கை வேகமாக ஓடுவது போன்று பெரிய மலையிலிருந்து கீழே விழும் நதிக் கரையில் (p 198);

புலியால் முகரப்பட்ட மான்கள் போல ஓடினர் (p 224);

வேரறுந்த கொடி போல் (p 230);

கணவனைப் பிரிந்த பெண்கள் போல் (p 242);

எல்லா அசுரர்களும் இரத்தத்தால் பூசப்பட்டு, புஷ்பித்த சிம்சுப மரங்களைப் போல் காணப்பட்டனர் (p 336)

**உருவகத்திற்குச் சில எடுத்துக்காட்டுகள்:-**

சக்ரவாஹ பக்ஷிகளாய ஸ்தன ப்ரதேசத்தையும், மணல் திட்டுகளாய ப்ருஷ்ட பாகத்தையும், ஹம்ஸ பக்ஷிகளாய அழகிய புன்சிரிப்பையும் உடைய நதிகள் ஸமுத்ரமாய பதியையடைகின்றன (p 62);

யமுனைநதி மணல் திட்டுகளாகிற பின்பாகத்தையுடையவள்; தண்ணீரால் அடிக்கப்பட்டுச் சிதைந்த நுரைகளாகிற மேகலைகளைத் தரித்தவள் (p 237);

நுரையாகிற சிரிப்பு (p 238).

தேவதூதர் ஓலையைச் சிரமேல் வகித்து அரசர் கூட யடைந்தனர் (p 255).

**நூலின் கவினிய நடை: [style]**

புராணம் பிரவசனம் செய்யும் பொழுது சொன்ன விஷய களையே திரும்பத் திரும்பச் சொல்லுவது இயல்பு. இது 'கூறியது கூறல்' என்னும் குற்றமாகாது. மற்றும் முன்னுலேயே நடந் நிகழ்ச்சிகளையெல்லாம் தொகுத்துக் கூட்டிச் சொல்லுதல் கேட போருக்கு விஷயங்களை அப்பொழுது அப்பொழுது ஞாபக படுத்துவது போல் அமைவது இயல்பே. அங்ஙனமே இந்நூலி போக்கு அமைந்துள்ளது. உதாரணமாக, புராண ரீதியில் ப ருடைய பெயர்களைச் சேர்த்துச் சொல்லுதல் வழக்கம். அதன் படியே, யாதவ முதல்வர்கள் சிலரின் பெயர்கள் (p 90,91);

ஜராசந்தன் பிரியத்தை விரும்புபவரின் பெயர்கள் (p 168);
பலதேசத்து அரசர்களின் பெயர்கள் (p 213);
வ்ருஷ்ணி குல முக்யர்களின் பெயர்கள் (p 314);

ருக்மிணியின் பிள்ளைகளின் பெயர்கள் (p 320);—இவை கூறப் பட்டுள்ளன. படிக்கப்படிக்க வாயினிக்கும், நா சுவைக்கும்.

மற்றும், இந்த நூலில் பல நுணுக்கங்கள் பூகோள ரீதியாக வும் (geographical), புவியியல் ரீதியாகவும் (geological), சரித்திர வரலாற்று ஆராய்ச்சி ரீதியாகவும் (historical research) எடுத்து இயம்பப்பட்டுள்ளன. அவற்றை அந்தத் துறை வல்லுநர்கள் ஆராய்ச்சி செய்வதால் பல உண்மைகள் வெளிப்படும். உதாரண மாக, கோகுலத்தை விட்டுப் பிருந்தாவனம் வருதல் (அத் 9); மதுரையை விட்டு யாதவர்கள் துவாரகை வருதல் (அத் 56); யமுனு நதியின் போக்கைக் கலப்பையாலே பலராமன் பிருந்தா வனத்திற்குத் திருப்புதல் (அத் 46); பலராமன் அஸ்தினுபுரத்தைக் கங்கையில் இழுத்தல் (அத் 62); கிருஷ்ண-பலராமர் தென்திசை யாத்திரையாக ஸஹ்யமலைத் தாழ்வரையில் பரசுராமரைக் கண்டு அவர் ஐந்நூறு வில்லடி தூர நீளமும் ஐந்நூறு அம்படி தூர அகலமும் உள்ள விஸ்தாரமான பெரிய தேசத்தை அமைத் தலைப் பாராட்டல் (அத் 39). [இது. கேரள நாட்டை இன்றும் பரசுராம க்ஷேத்திரம் என்று கூறுவதால் அறியலாம் ]

**முடிவு:**

இந்நூலைத் தமிழாக்கம் பெற எழுதியவர் பெரிதும் பாராட் டற்குரியவர். அவர் திருநாமம் S **ராமாநுஜ அய்யங்கார் (M A.L.T)** என்பது. இவர் நாகப்பட்டினத்திலுள்ள ஆசிரியர் பயிற்சிப் பள்ளியின் தலைமையாசிரியராகப் பணியாற்றிக் கல்விச் சீரேற்றத் திற்குத் தம்மையே நல்கிய பெருந்தகையாவர். இந்த உத்தமர் யாரெனில்,

''நீடாழி உலகத்து மறை நாலோடைந்தென்று நிலை நிற்கவே, வாடாத தவ வாய்மை முனிராசன் சொன்ன'' பாரதத்தைத் தமிழ்த்தாய் களிக்கும்படி தமிழில் அனைத்துப் பர்வங்களையும்

தமிழ்நாடு பயன்படும்படி பெருந்தொண்டு புரிந்த மஹா மஹோபாத்யாய **மா. வீ. ராமாநுஜாசாரியாரின்** மாப்பிள்ளையாவர், அவர் விருப்பத்தின்படியே இந்த ஹரிவம்ச நூலை, வடகலை தென்கலை பலகலையும் பொலி நாவினராகிய தமிழர் கற்றுப் பயன்படும்படி தமிழில் S. ராமாநுஜ அய்யங்கார் ஆக்கஞ் செய்தனர். இதனை இவரது இரண்டாவது மகளான **ஸ்ரீமதி லக்ஷ்மி நாராயணன்** என்னும் பெண்ணரசி தமது கருத்தில் பொதிய வைத்து அனைவரும் கற்றுப் பயன்படும்படி இந்நூலைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

இது முதற் பகுதியாகும். நரகாசுரவதத்தோடு முடிந்துள்ளது. மேலும், ஒரு பகுதி வர வேண்டியுள்ளது. விரைவில் வெளிவர வேண்டும் என்பது அவா.

**''மகன்தந்தைக் காற்றும் உதவி யிவன்தந்தை**
**என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்**--என்றார் திருவள்ளுவர்.
அது போல இங்கு ''மகள் தந்தைக்காற்றும் உதவி'' பெரிதும் போற்றத்தக்கது.

இந்த மதிப்புரையை எழுதுதற்கு "உதவிய இருவர்-திருமதி E. N. **சுதா** M.A. Econ, M.A. (Vaishnavism), செல்வி M. B. **ஸ்யாமளா** M.A. (Tam). M.Phil. ஆவர். இவ்விருவர்க்கும் பார்த்தசாரதிப் பெருமான் ஸகல ஸௌபாக்யங்களையும் அருள்வானாக.

இந்தப் பதிப்பில் அச்சுத்தாள் திருத்துவோர் சோர்வாலும், அச்சுச்சாலையார் அஜாக்கிரதையாலும் பல பிழைகள் நேர்ந்திட்டன; அவற்றுள் முக்கியமான பலவற்றிக்குத் திருத்தம் காட்டியுள்ளேன் பல இடங்களில் புள்ளி பெற வேண்டிய எழுத்துக்கள் புள்ளி பெறாமலும், எழுத்துக்கள் சிதறியும், தலை கீழாகமாறியும், வல்லினறகர இடையின ரகரங்கள் தம்முள் மாறிய தவறுகளும், ணகர னகரங்கள் தம்முள் மாறிய தவறுகளும், ளகர ழகரங்கள் தம்முள் மாறிய தவறுகளும், லகர ளகரங்கள் தம்முள் மாறிய தவறுகளும், சந்தி சேர்க்க வேண்டிய இடங்களில் சேர்க்காத தவறுகளும் இங்ஙன் பல வழுக்களும் உள்ளன இப்பிழைகளையெல்லாம் விஷய கௌரவம் நோக்கிக் கற்றோரும் கற்போரும் பொறுமையை மேற்கொண்டு திருத்திப் படித்துக் கொள்வாராக.

''நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கு முண்டு''

என்பதைக் குறிக்கொள்ளவும்.

'குற்றங் களைந்து குணங்கொண்டு வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்'

*1 தேரடித்தெரு*
*திருவல்லிக்கேணி, சென்னை 5.*
*7—10—1993*

இங்ஙனம்,
C. **ஜெகந்நாதாசார்யர்.**

# பொருளடக்கம்

## அட்டவணை

அத்தி 59 க்ருஷ்ணன் ருக்மிணியை அபஹரித்தல்; ஜராஸந்தன் சிசுபாலனுடன் யாதவர்கள் கடும்போர்.

அத்தி 60 க்ருஷ்ண ருக்மிணீ விவாஹம்; ருக்மியின் தோல்வி; ருக்மிணியின் ஸந்தானம் பற்றிச் சுருக்க அறிமுகம்.

அத்தி 61 ருக்மிபுத்ரி சுபாக்கி ப்ரத்யும்நனை மணத்தல்; அநிருத்தன் ருக்மியின் பௌத்ரி ருக்மவதியை மணத்தல்; பலராமனால் ருக்மி வதம்.

அத்தி 62 பலதேவனின் மஹாத்மியம் — ஹஸ்தினபுரத்தைக் கங்கையில் இழுத்தல்.

அத்தி 63 நரகாஸுர பரிசயம்; த்வாரகைக்கு இந்திரன் வந்து நரகாஸுர வதத்தைச் செய்யக் க்ருஷ்ணனை வேண்டுதல்; ஸத்யபாமா ஸஹிதம் ப்ராக்ஜ்யோதிஷபுரம் சென்று முரு[கு]; நிஸுந்தன், ஹயக்ரீவன் பஞ்சநதன் முதலிய அஸுரர்களையும் நரகாஸுரனையும் வதம் செய்தல்.

அத்தி 64 நரகாஸுரன் மாளிகையில் புகுந்து அங்குள்ள செல்வங்களை த்வாரகைக்கு அனுப்புதல்: அப்படியே பதினாறாயிரம் பெண்களை விடுவித்து த்வாரகைக்குக் கொண்டு போதல்; தேவலோகத்தில் அதிதியிடம் குண்டலங்களைக் கொடுத்துப் பாரிஜாதமரம் கொணர்தல்.





பாஷா பாரத துரந்தர் மஹா மஹோபாத்யாய
ஸ்ரீமான் மா. வி. ராமானுஜாச்சாரியார்



ஸ்ரீமான் மா. வீ. ராமானுஜாசாரியாரின் மாப்பிள்ளை

**ஸ்ரீமான் எஸ். ராமானுஜம், M.A., L.T.**

# நன்றியுரை

திருவரங்கம் எம்பெருமான் பெரிய பெருமாள் பெரியபிராட்டி அருள் ஆசியாலும் அலுமேலுமங்கா ஸமேத திருவேங்கட முடையான் கருணையாலும் வேதவல்லி ஸமேத பார்த்தசாரதி பெருமாள் க்ருபையாலும் செய்து கொள்ளும் விஞ்ஞாபனம்.

ஹரிவம்சம் என்னும் மஹாகாவ்யம் ஸ்ரீமன் நாராயண னுடைய சரித்ரம். அவர் பல அவதாரங்கள் செய்த லீலைகளை உடையது. இந்த ஹரிவம்சத்தில் அடங்கிய 'விஷ்ணு பர்வத்தை அடியேன் தகப்பனார் காலம் சென்ற எஸ். ராமானுஜயங்கார் அவர்கள் இதை தமிழ் ஆக்கம் உரைநடையாக செய்துள்ளார். இக்காவ்யம் மகாபாரதத்தின் ஸாரம் என்னுடைய தகப்பனாரின் மாமனார் அதாவது என்னுடைய 'மாதாமஹர்' தாத்தா "பாஷா பாரத துரந்தர மஹா மஹோ உபாத்யாய மா வீ ராமானுஜாச் சார்யார் மஹாபாரதத்தை தமிழ் ஆக்கம் செய்துள்ளார். அவர் எனது தகப்பனாருக்கு இட்ட கட்டளை தன்னால் ஹரிவம்சத்தை தமிழில் எழுத சக்தி அற்றவனாக ஆனதால் தாங்கள் இந்த தெய்வீக காரியத்தை ஏற்று முடிக்குமாறு 'கேட்டுக் கொண்டார். அவரது நியமனப்படி தனது 80 வயதில் அநேக பண்டிதர்களின் ஆசீர் வாதத்தாலும் அருளாலும் மூன்று வருட காலம் அரும்பாடுபட்டு இந்த காவ்யத்தை எழுதி அந்த மஹானின் ஆசையை பூர்த்தி செய்தார் ஆனால் இதை அச்சில் கொண்டு வருவதற்கு முன் எம் பெருமான் தன் திருவடி ஜோதியில் சேர்த்துக் கொண்டார். என்னுடைய மாதாமஹர், விருப்பப்படியும் எனது தகப்பனார் அபிப்ராயப்படியும் ஆசார்யர்கள் அருளாலும் இக்காவ்யத்தை அடியேன் எடுத்துக் கொண்டேன்.

என்னுடைய மாப்பிள்ளை கிரிதரகோபாலன் அவர்கள் உதவியால் திருமலை வெங்கடேஸ்வர பல்கலைகழக பேராசிரியர் திரு எம் வரதராஜன் M.A. Phd ஆதரவினால், அவரே இக்கைப் பிரதியை பரிசோதித்து அத்தியாயங்களாகப் பிரித்து அதற்கு தலைப்பு அமைந்து பொருளடக்கம் செய்து தந்த உதவிக்கு நான் என்றும் கடமைப்பட்டு உள்ளேன்.

மேலும் அவருடைய உதவியால் இக்காவ்யத்தை அச்சில் கொண்டு வர திருமலை திருப்பதி தேவஸ்தானத்திலிருந்து நிதி உதவியும் பெற உதவினார். இக்காவ்யத்தை அச்சில் கொண்டு வர போதுமான அளவு நிதி உதவி தேவைப்பட்டதால் பல பெரியோர்களை சந்தித்து அவர்கள் கொடுத்த உதவியால் அச்சில் கொண்டு வர நேரிட்டது. நிதி உதவி செய்த பெரியோர்களின் சிலரின் விவரம் T V.S காக்குமானி Charities, குசலாம்பாள், வைஷ்ணவி சாரிடீஸ் முதலியன. சாரிடீகளை அறிமுகப்படுத்தி நிதி உதவி வாங்கி வாங்கி கொடுத்த என் சிநேகிதி ஸ்ரீமதி சரளாவிற்கு

மிகுந்த நன்றி. தவிர பலஅன்பர்களும் உவினர்களும் நண்பர்களும் தங்களால் இயன்ற உதவியைச் செய்து உற்சாகப் ஊட்டினார்கள். நிதி உதவியைக் கேட்க ஒவ்வொரிடமும் தன் வேலைகளுக்கு நடுவில் என்னை ஸ்கூட்டரில் அழைத்துச் சென்ற திரு. பாலசுப்ரமணியன் அவர்களுக்கு மிகவும் நன்றி உடையவளாக இருப்பேன்

இக்காவியத்தை அச்சில் கொண்டு வர வழி தெரியாமல் திண்டாடும் போது, "கீதாசாரியன்" ஆசிரியர், ஸ்ரீ வெங்கட கிருஷ்ணன் குரு அச்சகத்தை அறிமுகப்படுத்தியதும் அல்லாமல் முதலில் proof பார்த்து தந்த உதவிக்கு மிகவும் நன்றி உள்ளவளாகவுள்ளேன்.

இந்த காவியத்தை அச்சில் கொண்டு வர திருவல்லிக்கேணி 'குரு அச்சகத்தாருக்கு' எப்படி என் க்ருதக்ஞதையை தெரிவிப்பது என்று சொல்லத் தெரியாமல் இருக்கிறேன். என்னால் அவ்வப் பொழுது சிறிது சிறிது தொகையாகக் கொடுத்த பொழுதும் கூட தயைக் காட்டி உற்சாகப்படுத்தி ஆதரவு தந்து அச்சில் பூர்த்தி செய்து கொடுத்தத திரு இ வ. கிருஷ்ணன் அவர்களுக்கு நான் மிகவும் நன்றி உடையவளாக இருப்பேன்.

அடியேனின் அருமை சகோதரன் திருவல்லிக்கேணி சாரநாத கோபாலன் தனது குடும்பத்தில் ஏற்பட்ட இன்னல்களுக்கு நடுவில் இந்த காவ்யத்தின் 'proof' பார்த்து தந்ததற்கு என்றும் எப்பொழுதும் கடமைபட்டவளாக இருப்பேன். இந்த காவ்யத்திற்கு சிறப்புரை எழுதிக் கொடுக்க திரு வரதராஜன் மூலம் அறிமுகப்படுத்தப்பட்ட விவேகானந்த கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்ற மஹாமேதை வித்வான், ஸ்ரீ 'C.J ஜகன்னாத்தாச்சாரியார் அவர்களுக்கு தாளும் தடக்கைகளைக் கூப்பி நமஸ்கரித்து என் நன்றியை எப்பொழுது சொல்வது என்று தெரியாமல் தவிக்கிறேன்.

அவரை நான் முதலில் சந்தித்த பொழுது 'அடியேனின் மாதாமஹர்' மஹா மஹோபாத்யாய ராமானுஜாச்சாரியாரின் திருநாமத்தை கேட்டு மிகவும் உகப்பு அடைந்து இந்நூலில் விசேஷ கவனம்செலுத்தி இந்த தள்ளாத வயதிலும் மதிப்புரையும் பொருளடக்கமும் பிழைத்திருத்தமும் செய்து கொடுத்து உயர்த்தியதற்கு மிகவும் நன்றி உடையவளாக இருப்பேன். அவரிடம் 'திருமங்கையாழ்வார்' விஷயமாக ஆராய்ச்சி செய்யும் குமாரி ச்யாமளா உதவிக்கு நான் நன்றி உடையவளாக இருப்பேன். ஸ்ரீ CJ ஜெகன்னாதசாரியரின் பேரன் பார்யாள் ஸ்ரீமதி சுதா, இக்காவிய வழியாக உதவி செய்து கொடுத்ததற்கு மிகவும் நன்றி உடையவளாக இருப்பேன். இந்த மஹாகாவ்யத்தை அச்சில் எடுத்துக் கொண்ட நான் பல அரிய பெரிய மஹானின் சந்திப்பும் ஆசியும் முக்கியமான காரணம் அடியேனின் 'மாதாமஹர்' பிதாவின் ஆசீர்வாதம் அவ்வப்பொழுது எனக்கு அறிவுரைக் கொடுத்தும் உற்சாகப்படுத்திய எனது கணவரான திரு ஆர். எஸ். நாராயணன் அடியேன் தந்தை இச்சையை பூர்த்தி செய்ய உதவினார்.

9, கோபாலகிருஷ்ண ரோடு.      லக்ஷ்மி நாராயணன்
தி. நகர், சென்னை-17.      (மகள்)

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஹரிவம்சம் விஷ்ணுபர்வம்

## முதல் அத்தியாயம்

### ஸ்ரீ நாரதர் மதுரை வருதல் கம்ஸனுக்குப் பயத்தை உண்டு பண்ணுதல்

நாராயணன், நரன், (பத்ரீ நரநாராயணர்) புருஷோத்தமனாகிய க்ருஷ்ணன், ஸரஸ்வதி தேவி, வ்யாஸர், இவர்களை வணங்கி பிறகு, ஜயத்தை (மஹாபாரதத்தை) சொல்ல வேண்டும்.

1. வைசம்பாயனர் சொன்னார். ஜனமேஜயரே! விஷ்ணுவும் தேவாம்சங்களும் பூமியில் அவதரித்ததை அறிந்து, நாரதர், கம்ஸனுக்கு விநாசத்தை சூசிப்பவராக மதுரைக்கு வந்தார்.

2. தேவலோகத்திலிருந்து இறங்கின அந்த முனிச்ரேஷ்டர் நாரதர், மதுரையின் உபவனத்தில் இருந்துகொண்டு கம்ஸனுக்குத் தூதனை அனுப்பினார்.

3. அந்த தூதன் வனத்தில் முனிவரின் வரவைத் தெரிவித்தான். பத்மலோசனனான அந்த அஸுரகம்ஸன் நாரதர் வரவைக் கேட்டு, மிக வேகத்துடன் தன் பட்டிணத்திலிருந்து வெளிக் கிளம்பினான்.

4. அந்த கம்ஸன் கல்மஷமற்ற, ச்லாக்யரான அதிபரான தேவரிஷியைப் பார்த்தான்.

5. தேஜஸ்ஸால் ஜ்வலிக்கும் தோற்றமும் சூர்ய வர்சஸ்ஸுமுள்ள சரீரமுடைய அவரை வணங்கி அந்த ரிஷிக்கு முறைப்படி பூஜை செய்தான்.

6. அந்த கம்ஸன், அக்னி போல் ஒளி வீசும் ஆஸனத்தைக் கொடுத்து உபசாரம் (அர்க்ய பாத்ய ஆசமனீயம்) செய்தான். இந்திரன் நண்பரான அந்த முனிவர் அந்த ஆஸனத்தில் அமர்ந்தார்.

7. உக்ரஸேனின் மகனும் பரமகோபிஷ்டனுமான கம்ஸனை நோக்கிக் கூறினார்; வீரனே உன்னால் நான், சாஸ்த்ர

முறைப்படி பூஜிக்கப்பட்டேன். இதனால், என் (நல்) வார்த்தையைக் கேள். மனதில் நிறுத்திக் கொள்.

8, 9. அப்பா! ப்ரஹ்ம லோகம் முதலான தேவலோகங்களில் ஸஞ்சரித்து, நந்தன (இந்தரன்) வனத்தையும், சைத்ராக (குபேரன்) வனத்தையும் பார்த்து சூர்ய ஸகாவான, விசாலமான மேருபர்வதத்தை அடைந்தேன்.

10. தேவதைகளுடன் எல்லாதீர்த்தங்களிலும் நதிகளிலும்' ஸ்நாநம் செய்யப்பட்டது. ஸ்மரணமாத்ரத்திலேயே எல்லோருடைய பாபங்களையும் அடியோடு போக்கக்கூடிய மூன்று பிரிவாகச் செல்லும் திவ்யமான புண்ய கங்கை நதி என்னால் பார்க்கப்பட்டது.

11. 12. திவ்யமான தீர்த்தங்களில் முறைப்படி ஆசமனம் செய்யப்பட்டது தேவ கந்தர்வர்கள் அப்ஸரஸ்ஸுக்களுடைய கானகோஷங்களாலும் இனிய நாதம் வ்யாபிக்கப்பட்டதும், ப்ரஹ்ம ரிஷிக்கூட்டங்களால், ஸேவிக்கப்பட்டதுமான ப்ரஹ்மாவின் ஸபையை அடைந்தேன்.

14. அங்கு, நா நாவித ரத்னங்களையும், வெண்ணிறத் தலைப் பாகைகளையும் அணிந்து, திவ்ய ஆஸனங்களில் அமர்ந்திருக்கும், ப்ரஹமாவுடன் கூடிய தேவர்களைக் கண்டேன்.

15. அங்கு, ஆலோசனை செய்கிற தேவர்களிடம், உன்னையும், உன்னைச் சேர்ந்தவர்களையும், கொல்வதற்குரிய மிகக்கொடிய உபாயம், என்னால் கேட்கப்பட்டது.

16 கம்ஸா! மதுரையிலுள்ள உன் அழகிய ஸஹோதரியின் எட்டாவது கர்ப்பம், உனக்கு 'ம்ருத்யு' ஆவான். என்று (என்னால் கேட்கப்பட்டது).

17. அந்த எட்டாவது கர்ப்பம், தேவர்களுக்கு எல்லாமும் அவனே; ஸ்வர்க்கத்திற்கு அவனே புகலிடம். தேவர்களுக்குப் பரம ரஹஸ்யப் பொருளும் அவனே. அவன் உனக்கு 'ம்ருத்யு' ஆவான்.

18. அவன் அத்தேவர்களுக்கு, பரமும் அபரமும், (மோக்ஷமும், ஸ்வர்க்கமும்). அவனே தேவலோக வாஸிகளுக்கு 'ஸ்வயம்பூ'

னும் ப்ரஹ்மாவும் ஆவான். ஆதலால், அது திவ்யமானது; மிகப் பெரிது; அதை உனக்குச் சொல்கிறேன்.

19. கம்ஸ! முன்னமேயே எல்லோருக்கும் ம்ருத்யுவாய் இருந்து கொண்டிருக்கும் அவனே உனக்கு இப்பொழுது ஶ்லாக்ய ம்ருத்யுவாக வரப்போகிறான் என்று நினைத்துக் கொள். தேவகியின் கர்ப்பத்தை அழிப்பதில் முயற்சியும் செய்யப்படட்டும்.

20. உன்னிடமுள்ள ப்ரீதி காரணமாகவே, நான் இங்கு வந்தேன். உன்னால் எல்லா போகங்களும் அனுபவிக்கப்படட்டும். உனக்கு மங்களம் உண்டாகட்டும். நான் போகிறேன்.''

21. இவ்விதம் கூறி நாரதர் சென்றதும், அவர் வார்த்தையை ஆலோசனை செய்யும் கம்ஸன். பிறகு, பற்கள் தெரிய வெகு நேரம் உரக்கச் சிரித்தான்.

22. ஸேவகர்கள் முன் இருக்கும் அவன், புன்சிரிப்புடனேயே சொன்னான்: ''அந்த நாரதர் எல்லோராலும் பரிஹஸிக்கத் தகுந்தவர். விசேஷ ஸமர்த்தரில்லை.

23. நான் உட்கார்ந்திருந்தாலும், படுத்திருந்தாலும் கவனமில்லாமலிருந்தாலும் மதி மயங்கியிருந்தாலும் இந்திரனுடன் கூடிய தேவர்களும் என்னைப் பயமூட்ட சக்தர்களில்லை.

24. விசாலமான இரு கைகளால் இந்த பூமியை, நிலைகலங்கச் செய்யக் கூடிய என்னை, மனித உலகத்தில், நிலை கலங்கச் செய்ய சக்தி உள்ளவன் எவன் இருக்கிறான்?

25. இந்த நான், இன்று முதல் தேவர்களுக்கும், தேவர்களைப் பின்பற்றும் மனிதர், பறவை, பசுக் கூட்டங்களுக்கும் மஹத்தான ஸம்ஹாரத்தைச் செய்கிறேன்.

26. 27. ''குதிரை கேசி, ப்ரலம்பன், தேனுகன், காளை அரிஷ்டன்பூதனை,காளியன் (ஆகிய நீங்கள்) இஷ்டரூபங்கொண்டு பூமி முழுவதையும், இஷ்டப்படி ஸஞ்சரியுங்கள். நம் பக்ஷத்தைத் தூஷிக்கிறவர்கள் எல்லோரையும் கொல்லுங்கள்.

28. கர்ப்பத்திலிருக்கும், ப்ராணிகளின் போக்குங்கூட அறியத்தகுந்தது. நாரதரால், கர்ப்பங்களிலிருந்து தானே நமக்கு பயம் சொல்லப்பட்டது.

29. நீங்களோவெனில் பயமின்றி, இஷ்டப்படி ஸந்தோஷமாயிருங்கள். என்னை நாதனாக அடைந்த உங்களுக்கு தேவ பயம் கிடையாது.

30. அந்த நாரதரோ, விளையாட்டாகப் பேசுபவர். (நண்பர்களை) பேதப்படுத்துவதே வேலையாகவுடைய ப்ராஹ்மணன். இவ்வுலகில் மிக நெருங்கியவர்களையும் பேதப்படுத்திக் கொண்டு சந்தோஷம் அடைகிறார்.

31. எம்பொழுதும் தினவெடுத்தவராய் சஞ்சல புத்தியுடன் அரசர்களிடை தந்த்ர விரோதங்களை உண்டு பண்ணிக் கொண்டு திரிகிறார்.''

32. அந்த கம்ஸன், இவ்விதம் சொல்லால் மட்டும் புலம்பிக் கொண்டே, மனதில் வெந்து கொண்டு அரண்மனையை அடைந்தான்.

**முதல் அத்யாயம் முற்றிற்று**

---

## 2ம் அத்தியாயம்

## தேவகீ கர்ப்ப விநாசத்திற்கு கம்ஸன் ப்ரயத்னம்

**பலராமரை கர்ப்பம் மாற்றவும், ஷட்கர்ப்பர்களை தேவகீ கர்ப்பத்தில் வைக்கவும் விஷ்ணு, நித்ரா தேவியை ஸ்துதி செய்து ஏற்பாடு செய்தல்**

1. **வைசம்பாயனர் சொன்னார்** : அவன் (கம்ஸன்) க்ரோதம் நிறைந்தவனாய், தனக்கு ஹிதகாரரான மந்த்ரிகளைப் பார்த்து "தேவகியின் கர்ப்பத்தை நாசம் செயவதில் எல்லோரும் முயற்சியுடன் இருங்கள்" என்று கட்டளையிட்டான்.

2. 'ஏழு கர்ப்பங்களும், முதலிலிருந்தே கொல்லப்பட வேண்டியவைகள். எங்கு அது சந்தேகமோ அது அனர்த்தம், அடியிலிருந்தே அழிக்கப் படவேண்டியது.

3. தேவகியும் வீட்டினுள்ளே காவலாட்களால் காக்கப் பட்டு இஷ்டப்படி ஸஞ்சரிக்கட்டும். கர்ப்ப காலத்தில் விசேஷமாகப் பாதுகாக்கப்படட்டும்.

4. என்னுடைய ஸ்த்ரீகள் (தேவகியின்) ரஜஸ்வலாஸமயம முதல் மாஸங்களைச் கணக்கிடட்டும். கர்ப்பத்தின் முதிர்ந்த ஸமயத்தில், பாக்கி கார்யத்தை நாம் பார்த்துக் கொள்வோம்.

5. வஸுதேவர், ஸத்ரீகளுடன் கூடிய இடங்களில் (அந்தப் புரத்தில்) எனக்கு ஹிதகாரர்களான ஸத்ரீகளாலும் அலிகளாலும் கவனத்துடன் இரவும் பகலும் காக்கத் தகுந்தவர். காரணம் சொல்லக்கூடாது.

6. இது கேட்கப்படட்டும்: இந்த மனித யத்னம், மனிதர்களால் செய்யப்படுகிறது. தெய்வ யத்னமோ என் போன்றவர்களால் எதிர்த்துத் தாக்கப்படுகிறது.

7. நன்கு தொகுக்கப்பட்ட மந்த்ர ஸமூகங்களாலும், நன்கு பயன்படக் கூடிய மருந்துகளாலும், அனுகூல முயற்சியினாலும், தெய்வமும்கூட அனுகூலமாக்கப்படுகிறது.

8. சைவம்பாயனர் கூறுகிறார், நாரதரிடம் விஷயமறிந்த அந்த கம்ஸன் பயத்தினால் மந்த்ராலோசனை செய்தான் இவ்விதம் தேவகியின் கர்ப்பத்தை அழிப்பதில் முயற்சி செய்தான்.

9. கெடுதலைத் தோற்றுவிக்கும் கம்ஸனின் ப்ரயத்னத்தைக் கேட்டு அந்தர்யாமியான வீர்யவான் விஷ்ணு சிந்தித்தார்.

10. ''இந்த ஏழு (தேவகியின்) கர்ப்பங்களையும் போஜ குமாரன் கம்ஸன் அழிக்கப் போகிறான். எட்டாவது கர்ப்பத்தில் நான் இருப்பது, என்னால் செய்யத் தக்கது.

11 இவ்விதம் சிந்திக்கும் விஷ்ணுவின் மனது, கர்ப்ப க்ருஹத்தில் சயனித்திருக்கும் 'ஷட்கர்ப்பர்' எனப்பெயர் கொண்ட அஸுரர், வசிக்கும் பாதாள லோகத்தை அடைந்தது.

12. அந்த 'ஷட்கர்ப்பர்' காலநேமியின் பிள்ளைகள். அவர்கள் பராக்ரம உடல் உடையவர்: அம்ருதம் உண்டவர் போன்றவர்; தேவர் போன்ற, தேஜஸ்விகள். யுத்தத்தில் தேவர்களை ஒத்தவர்.

13. அவர்கள் முன்னர் தங்கள் பிதாமகன் ஹிரண்ய கசிபுவை அறவே விட்டு, முதல் லோகபிதாமஹரான ப்ரஹ்மாவை உபாஸித்தனர்.

14, ஜடா மண்டலத்தை தரித்துக்கொண்டு, அவர்கள் கொடிய தவம் செய்தார்கள். அந்த ஷட்கர்பரிடத்தில் ப்ரீதியடைந்த ப்ரஹ்மா வரம் தந்தார்.

15, ப்ரஹமா சொன்னர் "ஓ! தானவஸ்ரேஷ்டர்களே! தபஸ்ஸால் நான் மிக்க ஸந்தோஷமடைந்தேன் உங்களில் யார் யாருக்கு, என்ன விருப்பம் என்பதைச் சொல்லுங்கள். அதை அவனுக்குச் செய்கிறேன்."

16. ஒரே நோக்குடைய அந்த எல்லா அஸுரர்களும். ப்ரஹ்மாவிடம் கூறினர் "எங்களிடம் தேவரீர் ப்ரீதராகுல், எங்களுக்கு ஶ்ரேஷ்டமான வரம் கொடுக்கப்படட்டும்.

17. பெரிய நாகர்களுடன் கூடிய தேவதைகளாலும். கொல்லப்படக்கூடாதவர்களாக ஆகக்கடவோம். சாபத்தை ஆயுத மாகவுடைய மஹர்ஷிகளாலேயும் எங்களுக்கு மங்களம் உண்டா கட்டும்.

18, பகவானே! எக்களுக்கு வரம் கொடுக்கிறீராகுல், யக்ஷ, கந்தர்வ தலைவர்களாலும், சித்தர் சாரணர் மனிதர்களாலும், எங்களுக்கு வதம் உண்டாகக் கூடாது."

19. ப்ரஹ்மா மிக ப்ரீதி கொண்ட மனதுடன், "உங்களால் சொல்லப்பட்ட இந்த எல்லாம், அப்படியே ஆகும்" என்று சொன்னர்.

20. ப்ரஹ்மா ஷட்கர்பர்களுக்கு வரத்தைக் கொடுத்துத் தன் உலகம் சென்றர். பிறகு கோபங் கொண்ட (பிதாமஹனை) ஹிரண்ய கசிபு சொன்னன்.

21. "என்னை விட்டு தாமரையில் தோன்றிய ப்ரஹ்மாவிட மிருந்து வரம் பெறப்பட்டதால், உங்கள் ஸ்நேகம் என்னுல் விடப் பட்டது. சத்ருக்களாகிய உங்களை த்யஜிக்கிறேன்."

22. எந்த தகப்பனுல் 'ஷட்கர்ப்பர்' என்ற பெயர் வளர்க்கப் பட்டதோ, அந்த தகப்பனே, கர்ப்பத்தில் புகுந்த உங்கள் எல்லோரையும் கொல்லப் போகிருன்.

23. 'ஷட்கர்ப்ப'ரெனும் மஹா அஸுரர்களாகிய நீங்கள்: தேவகியின் கர்ப்பத்தில் ஆறு கர்ப்பர்களாகவே தோன்றுவீர்கள்.

பிறகு, (தற்போது கால நேமியான) கம்ஸன், கர்ப்பத்தில் இருக்கும் உங்களைக் கொல்வான்.''

24. வைசம்பாயனர் சொன்னார்: பிறகு தம் லோகத்திலிருந்து, விஷ்ணு, அந்த அஸுரர்களிருக்கும் பாதாள லோகத்திற்குச் சென்றார்; அங்கு ஒன்று கூடிய ஷட்கர்ப்பர், ஜலத்தில் கர்ப்பக்ருஹத்தில் படுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

25. ஜலத்தில் கர்ப்பக்ருஹத்தில் நிலைபெற்று தூங்குகிறவர்களாயும், காலரூபிணியான நித்ரையினால் மறைக்கப்பட்டவர்களாகயும் உள்ள ஷட்கர்ப்பர்கள் எல்லோரையும் அவர் (விஷ்ணு) பார்த்தார்.

26. பிறகு, விஷ்ணு, ஸ்வப்நரூபமாக அவர்களுடைய சரீரங்களில் புகுந்தார். அப்பொழுது அவர்களுடைய முக்ய ப்ராணன்களை இழுத்து நித்ரா தேவியிடம் கொடுத்தார்.

27. 28. பிறகு ஸத்ய பராக்ரமன் விஷ்ணு, நித்ராதேவியைப் பார்த்து கூறினார்: ''நித்ரே! என்னால் தூண்டப்பட்ட நீ தேவகீக்ருஹஸமீபம் அடைவாய். ப்ராணேஶ்வரர்களும் அஸுரோத்தமர்களுமான இந்த ஷட்கர்ப்பர்களை எடுத்து இவர்களைத் தேவகியின் கர்ப்பத்தில் வரிசைப்படி சேர்ப்பாய்.

29. 30. இந்த கர்ப்பங்கள் பிறந்ததும், யமலோகத்துக்கு அழைத்துப் போகப்பட்டு, கம்ஸனின் முயற்சி வீணாகி தேவகியின் ஶ்ரமம் ஸபலமான போது, நித்ரா தேவியே! உலகத்தில் என் பெருமைக்கு ஸமமான அனுக்ரஹத்தை உனக்குச் செய்வேன். அதனால் நீ எல்லா லோகத்துக்கும் தேவி ஆவாய்.

31. தேவகியின் ஏழாவது கர்ப்பம் எனது அழகு அம்ஶம் கொண்ட தமயன் ஆவான். அவன் ஏழாவது மாஸத்தில் (வஸுதேவர் பத்னி) ரோஹிணியிடம் உன்னால் சேர்ப்பிக்கப்பட வேண்டியவன்.

32. கர்ப்பத்திருந்து இழுக்கப்பட்ட காரணத்தால் அவன் ஸங்கர்ஷணன் எனும் யுவா ஆவான். சந்த்ரன் தோற்றத்தையுடைய அவன் எனக்குமுன் பிறந்த ஸஹோதரன் ஆவான்.

33. தேவகியின் இந்த எழாவது கர்ப்பம், கம்ஸ பயத்தால் அழிந்துவிட்டது என்று எட்டாவதான நான் கர்ப்பத்தில் இருக்கும்போது, கம்ஸன் கொல்ல முயற்சி செய்வான்.

34, 35. நந்தகோபருக்கு ப்ரியையும், பூமியில் கீர்த்தி வாய்ந்தவளும், கோபகுலத்துக்கு எஜமானியுமான யசோதை இருக்கிறாள். நீ க்ருஷ்ண பக்ஷம் நவமிதிதியில் எங்கள் குலத்தில் ஒன்பதாவதாக அவளுடைய (யசோதையுடைய) கர்ப்பமாக ஆவாய். உனக்கு மங்களம்.

36. நான் நடு இரவில் அபிஜித்யோகத்தின் முற்பகுதியில் ஸுகமாகவே கர்ப்பத்திலிருந்து வெளிவருவேன்.

37. கம்ஸனின் நாசகாலம் வந்தும் எட்டாம் மாஸத்தில் ஒரே ஸமயத்தில் நாமிருவரும் பிறந்து, மாறுதலை அடைவோம்.

38. தேவீ! நான் யசோதையை அடைவேன். நீ தேவகியை அடை. நம்முடைய கர்ப்ப சேர்க்கையில் கம்ஸன் அறியாமையை அடையட்டும்.

39. பிறகு உன்னை காலைப் பிடித்து கல்லில் மோதப் போகிறான். விடுபட்ட நீ ஆகாயத்தில் நிலையான இடத்தை அடையப்போகிறாய்,

40. 46. உனது நிறம் என் போன்ற கருப்பு; முகம் பலராமனைப் போன்ற விசாலமானவை. உன் கைகள் மூன்று; சிகைகளுடைய சூலத்தையும், தங்கப்பிடியுடைய கத்தியைம், மது பூர்ணமான பாத்ரத்தையும் மிக நிர்மலமான தாமரைப்பூவையும் கையில் பிடித்திருப்பாய், நீலநிறப் பட்டாடை உடுத்தினவள்; மஞ்சள நிறமான உத்தரீயம்; மார்பில் சந்த்ரக்கிரண ப்ரகாச ஹாரம்; திவ்யமான குண்டலங்கள் நிறைந்த காதுகளால் அலங்கரிக்கப்பட்டவள்; சந்த்ரனுடன் போட்டியிடும் முகக்காந்தி; விசித்ரமான க்ரீடமும் கூந்தல் கட்டும் உடையவள்; பாம்புகள் போன்ற பயங்கர புஜங்களால் பத்துதிக்குகளையும் ப்ரகாசப் படுத்துபவள்; உயர்த்திய மயில்தோகைக் கொடியால் ப்ரகாசிப்பவள்; மயில் தோகை தோளணியால் விளங்குபவள். பயங்கர பூதகணங்களால் சூழப்பட்டு என் ஆஜ்ஞையைப் பின்பற்றுபவளாய் கௌமார வ்ரதத்தை மேற்கொண்டு, நீ ஸ்வர்க்க லோகத்தை அடைவாய்.

47. அங்கு நூற்றுக்கணக்கான கண்களுடைய இந்த்ரனால் என் ஆஜ்ஞைப்படி திவ்யமான அபிஷேகத்தால் தைவங்களோடு சேர்க்கப்படுவாய்.

48. அங்கேயே அந்த இந்த்ரன், உன்னை சகோதரியாக அங்கீகரிப்பாள். குசிக கோத்ரத்தால் நீ 'கௌசிகி, என்று அழைக்கப்படுகிறாய்.

49. அவன் சிறந்த விந்த்ய பர்வதத்தில் உனக்கு நிலையான இடத்தை அளிப்பான் பிறகு ஆயிரக்கணான இடங்களால் நீ பூமியை ப்ரகாசப்படுத்துவாய்.

50. புண்யவதியே; அந்த நீ பூமியில் இஷ்டரூபத்துடன் மூன்று லோகங்களிலும் சஞ்சரித்து. உன்னை உபாஸிப்பவர் களுக்கு நிச்சயமாக வரவளிப்பவள் ஆவாய்.

61, அங்கே மலையில் 'சும்ப' 'நிசம்ப', என இரண்டு அஸுரர்கள் ஸஞ்சரிக்கின்றனர். என்னை மனதில் நினைத்து அவர் களையும், பின் தொடர்ந்தோரையும், அழிப்பாய்.

52. கண், மாம்ஸம் நிவேதனம் ப்ரியமுடை நீ பூதங்களால் பின் தொடரப்பட்டு நவமிதிதியில் ம்ருக பலியோடு கூடிய பூஜையை அடைவாய்.

53. என் பெருமையை அறிந்து உன்னை வணங்கும் மனிதர் களுக்கு, புத்ரன், தனம் முதலிய எதுவும் அடைய முடியாததாக ஆகாது.

55. காட்டில் கஷ்டப்படுபவர்களுக்கும் மஹாஸமுத்ரத்தில் மூழ்கியவர்களுக்கும், திருடர்களிடம் அகப்பட்டவர்களுக்கும் நீ மேலான கதி ஆவாய்.

55. மங்கள தேவதையே! உன்னை இந்த ஸ்தோத்ரத்தால் பக்தியுடன் துதிப்பவர்கள் எனக்குப் ப்ரியமானவர்கள் நானும் அவர்களுக்கு ப்ரியமானவன்.

(இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று)

## 3ம் அத்தியாயம்

## ஆர்யா ஸ்துதி

**வைசம்பாயனர் சொன்னர் :** முற்காலத்தில் ரிஷிகளால் சொல்லப்பட்டபடி ஆர்யா ஸ்தோத்ரத்தைச் சொல்வேன். மூவுலகத்தலைவியான நாராயணீ தேவியை நமஸ்கரிக்கிறேன்.

2 ஸித்தி, தகுதி, கீர்த்தி, ஸ்ரீவித்யா, ஸந்நதி, மதிஸந்த்யா. ராத்ரீ, ப்ரபா, நித்ரா, காள ராத்ரி, இவையாவும் நீயே.

3 ஆர்யா, காத்யாயனீ, தேவீ, கௌசிகீ, ப்ரஹ்ம சாரிணீ, ஸித்த ஸேனனின் அன்னை, உக்ரசாமீ மஹாபலா, இவையாவும் நீயே.

4 ஜயா, விஜயா, புஷ்டி, துஷ்டி, க்ஷமா, தயா யமனின் மூத்த ஸஹோதரி நீலப்பட்டாடையாள் இவையாவும் நீயே.

5. பஹுரூபா, விரூபா, அநேக விதிசாரிணீ விரூபாக்ஷீ, விமாலாக்ஷீ, பக்தர்களை நன்கு ரக்ஷிப்பவள் எல்லாம் நீயே.

6. மஹாதேவியே, பர்வத சிகரங்களிலும், பயங்கர நதிகளிலும், குகைகளிலும். வனங்களிலும் உபவனங்களிலும் உனக்கு வாஸம்.

7. சபரர், பர்பரர், புளிந்தர், (மூவகை மலைவாஸிகள்) இவரால் நன்கு பூஜிக்கப்பட்டவள். மயில்தோகை கொடியுடையளாய் லோகங்களில் எல்லாவிடங்களிலும் ஸஞ்சரிக்கிறாய்.

8. கோழிகள், வெள்ளாடுகள், செம்மறியாடுகள், ஸிம்மங்கள், புலிகள், இவைகளால் சூழப்பட்டவள். தன் பக்கல் அதிக மணியோசை யுடையவள். விந்த்யமலை வாசியாக ப்ரஸித்தி பெற்றவள்.

9, த்ரிசூலம், பட்டிஸம் (கூரிய ஈட்டி) இவை இரண்டையும் தரித்தவள். சூர்ய சந்த்ரர்களைக் கொடியாகவுடையவள். க்ருஷ்ண பக்ஷ நவமியாகவும் சுக்ல பக்ஷ ஏகாதசியாகவும் விளங்குபவன்.

10. பலதேவன் தங்கை ராத்ரி ஸ்வரூபிணி, கலக ப்ரியை, எல்லா பூதங்களுக்கும் வசஸஸ்தானமும், முடிவும் உயர்ந்த நதியும் ஆவாய்.

11. நந்தகோபன் பெண்; தேவர்களுக்கு ஜயம் கொடுப்பவள்: மரவுரி தரித்தவள்; நல்ல ஆடை அணிந்தவள் பயங்கரமானவள்; ஸந்த்யா காலத்தில் ஸஞ்சரிப்பவள்; நிசா (இரவு)

12. விரித்த கூந்தலுடையவள்; யம ஸ்வரூபிணி; கள், மாம்ஸம், ம்ருகபலி ப்ரியா; லக்ஷ்மீ; அஸுரவதத்துக்காக நீ அலக்ஷ்மி ஆகிறாய்.

13. தேவர்களுக்கு ஸாவித்ரி தேவி; பூதகணத்துக்கு மாதா; கன்னிகைகளுக்கு ப்ரஹ்மசர்ய வ்ரதம் நீ; யுவதிகளுக்கு ஸௌபாக்யம் (புருஷ ஸ்த்ரீ இருவருள் உறுதியான அன்பு)

14. யாககுண்டமத்யம்; ருத்விகளுக்கு தக்ஷிணை, உழவர்களுக்கு கலப்பைமுனை (ஸீதா); ஸகல ப்ராணிகளையும் தாங்கும் பூமி.

15. கடல் ப்ரயாணிகளுக்கு பல ஸித்தி ஸமுத்ரத்துக்கு கரை; யக்ஷர்களுக்கு முதல் யக்ஷி (குபேரன் தாய்); நாகர்களுடைய தாயார் ஸுரஸா.

16. ப்ரஹ்ம வாதினியான தீக்ஷை; மிக உயர்ந்த சோபை எல்லா ஜோதிகளுக்கும் ப்ரகாசம்; நக்ஷத்ரங்களுள்ரோஹிணி,

17. அரண்மனை வாசல்; புண்ய தீர்த்தங்கள்; நதிஸங்கமம், இவைகளில் நிறைந்திருப்பவள் (லக்ஷ்மீ); சந்த்ரனிடத்தில் பூர்ணிமை; க்ருத்திவாஸையென ப்ரஸித்தி பெற்றவள்.

18. வால்மீகி மஹர்ஷியிடத்தில் ஸரஸ்வதீ; வ்யாஸரிடத்தில் ஸ்ம்ருதீ (அடந்தவை பற்றிய அறிவு) ரிஷிகளிடத்தில் தர்மபுத்தி; தேவதைகளிடத்தில் சித்தவ்ருத்தி

19. ஸமஸ்த ப்ராணிகளிடத்தில் தம் கார்யங்களால் ஸுரா தேவியாகத் துதிக்கப்படுகிறாய்) இந்தரனுக்கு ப்ரிய த்ருஷ்டி. ஆயிரம் கண்ணுடையாள்.

20. தபஸ்விகளுக்கு தேவி; அக்னி ஹோத்ரிகளுக்கு அரணி. எல்லா ப்ராணிகளுக்கும் பசி; தேவதைகளுக்கு த்ருப்தி.

21. எல்லா ப்ராணிக்கும் ஸ்வாஹா, த்ருப்தி, த்ருதி, மேதை, தேவதைகளுக்கு ஸ்வதா; மனிதர்களுக்கு ஆசை கடமை முடித்தவர்களுக்கு புஷ்டி (பலன்).

22. திக்குகள், விதிக்குகள் (இடைதிக்குகள்); அக்னி சிகை ப்ரபை, ஸகுநி (அரக்கி), பூதனை (அரக்கி) மித க்ரூரமான ரேவதி (அரக்கி)

23. நீ எல்லா ப்ராணிகளுக்கும் மயக்கும் நித்ரை, நீ க்ஷத்ரியை வித்யைகளுக்குள் ப்ரஹ்ம வித்யை, நீ ஓங்காரம், வஷட்காரம் (தேவதைகளுக்கு ஆஹூதி மந்த்ரம்.

24. ரிஷிகள், உன்னைப் பெண்களுள், புராண ப்ரஸித்தமான பார்வதியாக அறிகிறார்கள். ப்ரஹ்மாவின் வசனப்படி அன்புடையோரில் நீ அருந்ததி.

25. நீ என்னுடைய அநேக பர்யாய நாமங்களால் இந்த்ராணி ரூபமாக ப்ரஸித்தியடைகிறாய். உன்னால் ஸ்தாவர ஜங்கம ரூபமான இவ்வுலக முழுதும் வ்யாபிக்கப்பட்டுள்ளது.

26. 27. காட்டு பயங்களிலும், வெளியூர் வாஸத்திலும், ராஜ தண்டனையிலும், சத்ருக்களின் ஆக்ரமிப்பிலும, எல்லா விதமான ப்ராண பயங்களிலும், நீ காப்பு, ஸந்தேகமில்லை.

28. உன்னிடத்தில், என்னுடைய, ஹ்ருதயம் சித்தம், மனது இவை லயித்துள்ளன. எல்லா பாபங்களிலிருந்து, என்னை காப்பாற்று. அனுக்ரஹம் செய்ய வேண்டும்.

29, 30. இந்த திவ்ய ஸ்துதியை வ்யாஸர் அருளியதாக காலை எழுந்து, சுத்தனாய், மன அடக்கத்துடன், படிக்கிறவனுக்கு மூன்று மாதங்களில் விரும்பிய பலத்தைக் கொடுக்கிறாய். ஆறு மாஸங்களில் உயர்ந்த ஒரு வரத்தைக் கொடுக்கிறாய்.

31, மூன்று மாதங்கள் அர்ச்சிக்கப்பட்ட நீ, திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுக்கிறாய். ஒரு வருஷத்தில் விரும்பியபடி ஸித்தியைக் கொடுக்கிறாய்.

32. 33. வ்யாஸரின் வார்த்தையின்படி, ஸத்யமும் திவ்யமு மான ப்ரஹ்மமாக இருக்கிறாய். மனிதர்களுக்கு பந்தம், வதம் புத்ர நாசம், தனக்ஷயம், வ்யாதி ம்ருத்யு பயமாகிய கோரமான இவற்றை, நீ பூஜிக்கப்பட்டவளாய் அடக்குகிறாய். புண்யவதியே. இஷ்டரூபமெடுக்கவல்ல நீ, வரங்களைக் கொடுப்பவளாகவும் ஆகிறாய்.

34. அந்த கம்ஸனை மோஹிக்கச் செய்து, நீ ஒருத்தியே. உலகத்தை அனுபவிப்பாய். நானும் பசுக்களிடையில், ஆயர்போல் என் கார்யத்தைச் செய்கிறேன்.

35, 36. நான் எங்களுடைய வ்ருத்தியின் பொருட்டு, கம்ஸனுக்குட்பட்ட இடையனாக ஆவேன்.'' இவ்விதம் அவளுக்கு கட்டளையிட்டு விஷ்ணு மறைந்தார். அவளும் அவரை (விஷ்ணுவை) வணங்கி, 'அப்படியே ஆகட்டும்' என்று உறுதி கூறினாள்.

37. இந்த ஸதுதியை அடிக்கடி படிக்கிறவனும் கேட்கிறவனும் எல்லா கார்ய ஸித்தியையும் அடைகிறான். இதில் ஸந்தேஹமில்லை.

மூன்றும் அத்தியாயம் முற்றிற்று

## 4ம் அத்தியாயம்

**தேவகியின் ஆறு குழந்தைகளை கம்ஸன் கொல்லுதல்; ஏழாவது ரோஹிணி கர்ப்பத்துக்கு ஏழாம் மாஸம் மாற்றம்; க்ருஷ்ணன் பிறப்பும், நித்ராதேவியான யசோதைக் குழந்தை மாற்றமும். கம்ஸன் ஏமாற்றமும்.**

1. **வைசம்பாயனர் சொன்னார்** : கர்ப்பாதானம் செய்யப் பட்டதும் தேவதை போன்ற தேவகீ முறைப்படி கர்ப்பம் தரித்தாள்.

2. கம்ஸன் வெளிவந்த அந்த ஆறு கர்ப்பங்களையும் கல்லில் (மோதிக்) கொன்றான். பிறகு வந்தடைந்த ஏழாவது கர்ப்பத்தை, அந்த நித்ராதேவி ரோஹிணியிடம் சேர்த்தாள்.

3. கர்ப்பம் தரித்த (தேவகீ) நடுநிலையில், நித்ராதேவியால் ஆவேசிக்கப்பட்டு, கர்ப்பம் நழுவிவிழ ரஜஸ்வலையாக பூமியில் விழுந்தாள்.

4. அந்த தேவகி தன்னிடமிருந்து வெளிவந்த அந்த கர்ப்பத்தை ஸ்வப்நம் போல் பார்த்து தன் கர்ப்பத்தை வெளியே காணாமல், ஒரு முஹூர்த்தம் (48 நிமிஷங்கள்) துக்கமடைந்தாள்.

5 நடுநிசியில், சந்த்ரனுக்கு ரோஹிணீ போல புத்திமான் வசுதேவருடைய ப்ரிய பத்னியும், ஆச்சர்யமடைந்தவளுமான ரோஹிணீயைப் பார்த்து நித்ரா

6. தேவி கூறினாள் ':சுபே! கஷ்டம் கொடுக்கும் இந்த கர்ப்பம் உன் கர்ப்பத்தில் இழுத்து வைக்கப்படுவதால் உனக்கு 'ஸங்கர்ஷணன்' என்ற புத்ரன் உண்டாவான்''

7. சந்தோஷமடைந்த அந்த ரோஹிணீ தேவி, இவ்விதம் புத்ரனையடைந்து (லஜ்ஜையால்) சிறிது குனிந்த முகத்துடையளாய் மிக்க ப்ரகாசமுடைய ரோஹிணி நக்ஷத்ரம் போல் வீட்டில் நுழைந்தாள்.

8. தேவகி தேவி அந்த (மறைந்த ஏழாவது) கர்ப்பத்தின் வழியில் எதன் பொருட்டு அந்த ஏழு கர்ப்பங்களும் கம்ஸனால் அழிக்கப்பட்டனவோ, அந்த எட்டாம் கர்ப்பத்தைத் தரித்தாள்.

9, அந்த (எட்டாவது) கர்ப்பத்தையோ அக்கம்ஸனின் மந்த்ரிகள், மிக்க முயற்சியுடன் பாதுகாத்தனர். அந்த ஹரியும் கர்ப்ப வாஸத்தில் தன் இச்சையால் வஸித்தார்.

10. யசோதை தேவியும், அந்நாளிலேயே, விஷ்ணுவின் சரீரத்தில் உண்டானவளாயும், அவர் ஆஜ்ஞையைச் செய் பவளாயும் உள்ள நித்ரா தேவியை கர்ப்பத்தில் தரித்தாள்.

11. கர்ப்பகாலம் நிறைவு முன்பே எட்டாம் மாதத்தில் தேவகி யசோதையாகிய அந்த இரண்டு பெண்களும் அப்பொழுது ஸம காலத்தில் ப்ரஸவித்தனர்.

12. எந்த இரவில் வ்ருஷ்ணிகுல உயர்வுக்குக் காரணமான க்ருஷ்ணன் ஜனித்தானோ அதே இரவில் யசோதையும் கன்னிகை யைப் பெற்றாள்.

13. ஸமகாலத்தில் கர்ப்பம் தரித்த அவ்விருவருள், யசோதை நந்தகோபனுடைய பார்யை; மற்றவளாகிய தேவகி வஸுதேவருடைய பார்யை.

14. (க்ருஷ்ண ஜனனத்தால்) விசேஷமாக ப்ரகாசப்படுத்தப் பட்ட நள்ளிரவில் அபிஜித் முஹூர்த்தம் வந்த அளவில், தேவகி விஷ்ணுவை பெற்றெடுத்தாள். யசோதையோ அந்தப் பெண்ணைப் பெற்றாள்.

15. ஜனார்த்தனன் ஜனிக்கும் போது, ஸமுத்ரங்கள் கொந்தளித்தன், மலைகள் அசைந்தன. சாந்தமான அக்னிகள் மிக ஜ்வலித்தன.

16. ஜனர்த்தனன் ஜனிக்கும்போது, காற்று மங்களமாக வீசின. தூசி அடங்கியிருந்தது. நக்ஷத்ரங்கள் மிக ஒளி வீசின.

17. ஜனார்த்தனன் பிறக்கும் ஸமயம் (ரோகிணி) அபிஜித் என்னும் நக்ஷத்ரம்; ஜயந்தி என்னும் இரவு விஜயம் என்கிற முஹூர்த்தம்.

18. அறிவரியன், சாஸ்வதன், சூக்ஷ்மன், பாபஹரி, ப்ரபு நாராயணனுகவும் உள்ள ப்ரபுக்ருஷ்ண பகவான் பிறக்கும்ஸமயம் தன் திருக்கண்களால் உலகத்தை மோஹமடைச் செய்தான்.

19. ஆகாயத்தில் தேவ துந்துபி வாத்யங்கள் அடிக்கப் படாமலேயே (தாமாகவே) முழங்கின தேவேந்த்ரனும் ஆகாயத் திலிருந்து பூமாரியைப் பொழிந்தான்.

20. தொடர்ந்து மஹர்ஷிகளுடன் கந்தர்வரும் அப்ஸரஸ் ஸுக்களும் மங்கள வார்த்தைகளால் மதுஸூதனனை ஸ்தோத்ரம் செய்து கொண்டு அங்கு வந்தனர்.

21. ஹ்ருஷீகேசன் பிறக்கும் பொழுது உலகு முழுதும் ஆநந்தத்தில் மூழ்கியது. இந்த்ரனும் தேவர்களுடன் மதுஸூதனனைத் துதித்தான்.

22. வஸுதேவரும், இரவில் பிறந்த அதோக்ஷஜனை அந்த புத்ரனை, திவ்ய லக்ஷணங்களுடன் கூடியவனும், ஸ்ரீவத்ஸ அடையாளமுடையவனுமாகப் பார்த்து "ப்ரபோ! இந்த ரூபத்தை மறைத்துக் கொள்ளும்" என்று சொன்னர்.

23. "தேவனே! கம்ஸனிடமிருந்து நான் பயப்படுகிறேன், ஆகையால் இவ்விதம் சொல்கிறேன். தாமரைக்கண்ணா! உன் மூத்த ஸஹோதரர்களான என் புத்ரர்கள் கம்ஸனல் கொல்லப் பட்டனர்."

24 வைசம்பாயனர் சொன்னர்: அச்சுதன் வஸுதேவர் வார்த்தையைக் கேட்டு, பிதாவாக அவரை அங்கீகரித்து. 'நந்தகோபன் வீட்டுக்கு அழைத்துச் செல்' எனச் சொல்லி ரூபத்தை மறைத்துக் கொண்டான்.

25. புத்ரவ வாத்ஸல்யமுள்ள வஸுதேவரும் பிள்ளையைச் சீக்ரமாகவே எடுத்துக் கொண்டு, இரவில் யசோதை வீட்டில் நுழைந்தார்.

26. யசோதைக்குத் தெரியாமல் அங்கு பிள்ளையை வைத்து விட்டு பெண்ணையும் எடுத்துக் கொண்டு வந்து தேவகியின் படுக்கையில் வைத்தார்.

27. அக்குழந்தைகளுடைய மாற்றம் செய்யப்பட்டதும், க்ருதார்த்தரான வஸுதேவர், பயத்தினல் வ்யஸனமடைந்தவராய் இருப்பிடத்திலிருந்து வெளிக்கிளம்பினர்.

28. பிறகு, வஸுதேவர், கம்ஸனுக்கு அப்போது அ
அழகிய பெண் குழந்தையைத் தெரியப்படுத்தினர்.

29. அதைக் கேட்டு வீர்யவான் கம்ஸன், வேகமாக வ
காவலர்களுடன், வஸுதேவரின் வீட்டு வாசலை வேகம
அடைந்தான்.

30. வாசலில் அந்த கம்ஸன். "என்ன பிறந்தது" என்
கேட்டான். "சீக்ரம் கொடுக்கப்படட்டும்" என்று இவ்
வார்த்தைகளால் அதட்டினன்.

31. பிறகு, தேவகியின் வீட்டில், எல்லா ஸ்த்ரீகளும் "ஹ
ஹா;' எனக்கூவினர்கள். வருத்தமுற்ற தேவகியும், கண்ணீர் சோ
தளதளத்த குரலுடன் சொன்னள்:

32. "ப்ரபுவே! என்னுடைய ஸ்ரீமான்களான ஏழு பிள்ளை
களும் உன்னல் கொல்லப்பட்டனர். (இப்போது) பிறந்திரு
கிறதோ பெண்" என்று கம்ஸனைக் கெஞ்சி வேண்டினள்.

33. நீ எண்ணப் பார்த்தால் இவள் பெண். கொல்ல
பட்டவளே, ஆவள் பார்" என்று சொல்லி, கம்ஸன் தேவகியை
நோக்கி ஸந்தோஷத்துடன், அந்த கன்னிகையை இழுத்தான்.

34, 35. கர்ப்ப சயனத்தில் கஷ்டப்பட்டவளும், கர்ப்ப ஜல
தினல் நனைந்த தலைமயிரையுடையவளும், பூமிக்கு ஸமானமா
வளுமான அந்தக் குழந்தை, கம்ஸனுக்கு முன்னல் பூமியி
வைக்கப்பட்டாள். வீணன எண்ணமுடைய அந்த கம்ஸனு
"இவள் எப்பொழுது பிறந்தாளோ கொல்லப்பட்டவளே ஆவள்
என்று சொல்லி இவளைப்பிடித்து உதறி சுழற்றி தூக்கி
கொண்டே சட்டென்று கல்லில் மோதினன்.

36. அக்குழந்தை, கல்லில் உருக்குலையாமல், உதறி எறிய
பட்டு ஆகாயத்தில் கிளம்பினள்

37. அவள் கர்ப்ப சரீரத்தைத் துறந்து விரித்த கூந்தலுட
திவ்யமாலைகளையும் பூச்சுகளையும் அணிந்து கம்ஸனை
அதட்டிக் கொண்டு திடீரென்று கிளம்பினள்.

38. ஹாரத்தால் சோபிக்கும் ஸர்வாங்கங்களுடன் ஜ்வலிக்கு
க்ரீடம் தரித்து தேவர்களால் துதிக்கப்பட்டு திவ்ய ரூபமுடன்
நித்ய கன்னிகையாக விளங்கினள்

39. மஞ்சளாடையும், நீலமேலாடையும் தரித்து யானை மஸ்தகங்கள் போன்ற ஸ்தனங்கள் தேர் போன்ற பரந்த அல்குல் சந்த்ரமுகம், நான்கு புஜங்கள் இவையுடையவளாக விளங்கினாள்.

40. மின்னல் போன்ற விசேஷ காந்தி பால சூர்யன் போன்ற கண்கள், ஞானப்பால் நிறைந்த ஸ்தனங்களுடைய அவள் மேகங்களுடன் கூடிய ஸ்ந்த்யா காலம் போன்று விளங்கினாள்,

41. அவள் பூதகணங்களால் சூழப்பட்டு இருள் நிறைந்த நள்ளிரவில், நர்த்தமை செய்து கொண்டும் சிரித்துக் கொண்டும் கோரமாகப் ப்ரகாசித்தாள்.

42, ஆகாயத்தில் சென்ற பயங்கரமான அவள் சிறந்த (மது) பானத்தைக் குடித்தாள். அட்டஹாஸமாக சிரித்தாள் கோபங் கொண்டு கம்ஸனைப் பார்த்துக் கூறினாள்.

43 44 "கம்ஸ! ஏ! கம்ஸ! நான் உன்னால் பலாத்காரமாக நன்கு உயரத் தூக்கப்பட்டு கல்லில் மோதி, உன் நாசத்தின் பொருட்டுக் கொல்லப்பட்ட காரணத்தால் உன் மரணகாலத்தில் சத்ருவால் இழுக்கப்பட்ட உன்னுடைய சரீரத்தைக் கைகளால் பிளந்து உஷ்ணமான ரத்தத்தைக் குடிப்பேன்.

45. அந்த (நித்ரா)தேவி, இவ்விதம் கோரமான வார்த்தை யைச் சொல்லி இஷ்டப்பட்ட மார்க்கத்தால் தன் கணங்களுடன் கூட தேவர்கள் இருப்பிடமான ஸ்வர்க லோகத்தில் ஸஞ்சரித்தாள்.

46. காப்பாற்றப்பட்ட அந்த கன்யை வஸுதேவர் ஆஜ்ஞை யால் புத்ரனைப் போல் வ்ருஷ்ணி கூட்டத்தாரால் நன்கு பூஜிக்கப் பட்டு, அங்கே (ஸவர்க்க லோகத்தில்) வளர்ந்தாள்.

47. ஜனமே ஜயா! விஷ்ணுவின் அம்சத்திலிருந்து உண்டானவளாகவும், தனக்கென அம்சமில்லாதவளான யோக கன்யையாகவும், கேசவனின் மெய்காவலுக்காக அவதரித்தவளா கவும், இவளை நீ அறிந்துகொள்.

48. திவ்ய சரீரமுடைய அவளால் க்ருஷ்ணன், தேவர்களால் போல், ரக்ஷிக்கப்பட்டான். அந்த தேவியை, எல்லா யாதவர்களும் நல்ல மனஸுடன் பூஜித்தார்கள்.

49. அவள் [நித்ரா தேவி], மறைந்ததும் அவளை க
தனக்கு ம்ருத்யுவாக நினைத்தாள். தனி இடத்தில் வெட்கம
வனாய் தேவகியைப் பார்த்துக் கூறினான்.

50. கம்ஸன் சொன்னான்: "ஸஹோதரீ! என்னால் ஏ
முயன்ற சிசுக்கள் கொல்லப்பட்டனர், தேவியே! வேறு வ
மற்றொரு ம்ருத்யுவே எனக்கு வந்து விட்டாள்.

51. அறியாமையால் முயன்று தன் ஜனங்கள்
அபஹாரம் செய்யப்பட்டது. என் முயற்சியால் நான் தெய்வ
மீறவில்லை.

52. சிசுக்களைப் பற்றிய கவலையை விடு. அவை
[மரணத்தைக்] குறித்து துக்கத்தை விடு. கால விபரீதமிரு
போது, நான் அவைகள் வதத்திற்கு [போலி] நிமித்த மானே

53. காலந்தான் மனிதர்களுக்கு சத்ரு. காலமே [ட
பிறப்பு] மாறுதலுக்குக் காரணம். காலந்தான் எல்லாவற்றை
அழைத்துச் செல்கிறது. என் போன்றவன் [போலி] நிட
மாத்ரந்தன்.

54. துன்பங்கள் பங்குமுறைப்படி வரவே போகின்
றந்து, 'நான் கர்த்தா' என்று நினைக்கிற இது கஷ்டம்.

55 புத்ர விஷயமான கவலைக் கொள்ளாதே! துக்கத்
லுண்டான புலம்பலை விடு. மனிதப் பிறவி இத்தகைய
கலத்துக்குநிலை இல்லை.

56. தேவகியே! உன் புத்ரனைப் போல் எனது சிரஸால் உ
பாதங்களில் [வணங்குகிறேன்] எனனிடத்தில் உண்டா
கோபம் விடப்படட்டும். உனக்குச் செய்த அபஹாரத்
உணர்கிறேன்.

57. இவ்விதம் சொல்லி (வணங்கிய) கம்ஸனைப் பார்த்
கண்ணீர் நிரம்பி வழியும் முகத்தையுடைய தனையான தே
பர்த்தாவை பதம் பார்த்துக் கொண்டு தாய் போன்று பேசு
வளாய் "குழந்தாய்! கம்ஸா! 'எழுந்திரு எழுந்திரு' என்
சொன்னாள்.

58. தேவகி சொல்கிறாள்: ''குழந்தாய், காம ரூபியான உன்னால், என் சிசுக்கள் என் முன்னால் கொல்லப்பட்டன. அதற்கு நீ மாத்ரம் காரணமில்லை. தெய்வமும் காரணமாகும்.

59. தன் கார்யத்தில் பஸ்சாதாபம் கொண்டு, என் கால்களில் தலையால் (வணங்கி) விழுகிற உன்னால் செய்யப்பட்ட இந்த சிசு ஹத்தி, பொறுத்துக் கொள்ளத் தகுந்தது.

60. கர்ப்பத்திலும் மரணம் நிச்சயம். பால்யத்திலும் (மரணம்) ஒழிவதில்லை· வாலிபனும் மரணத்துக்கு வசப்பட்டவனே. கிழவனே இறந்தவனே.

61. இந்த உலக முழுதும், காலத்துக்குட்பட்டது. உன் போன்றவன் (போலிக்) காரண பூதனே, பிறப்பில்லையானால் (முடிவு) கால தர்ஸனமில்லை; காற்று எப்படியோ அப்படியே தான்.

62, பிறந்தபோதிலும்,விதியினால் எங்கு அழைத்துச் செல்லப் படுகிறானே. அங்கு பிறவாதவனாகி (மறைந்து) விடுகிறான். ஆகையால் குழந்தாய்! நீ போ. என்னைச் சேர்ந்த சிசு மரண காரணம் உனக்கு வேண்டாம்.

63. உண்மையில் ப்ராரப்த விதி காரணமாக ம்ருத்யுவால் முன் அடிக்கப்பட்டபின், மீதி வ்யாஜமாக ஆகிறது. அதே ப்ராப்த விதி காரணமாக ப்ரஜா ஸ்ருஷ்டியும்; தாய், தகப்பன் காரியம் வ்யாஜம்.''

64. 65. வைசம்பாபாயனர் சொன்னார்: அந்த கம்ஸன் தேவகீ வாக்யத்தைக் கேட்டு, தவிக்கும் மனதுடையவனாய் பரபரப்புடனும், கார்யம் நிறைவேறாததால் மனமுடைந்தும் மிக மெலிவுற்றும் சென்று, தன் வீட்டில் நுழைத்தான்.

**4-ம் அத்தியாயம் முற்றிற்று.**

## 5ம் அத்தியாயம்

### பீடிகை

**நந்தகோபன், பத்னி ஸஹிதம் கம்ஸனுக்கு கப்பம் கட்ட மதுரை வந்தான். வந்த நந்தகோபனை வஸுதேவர், குழந்தைகள் இருவர் பாதுகாப்பு பற்றி எச்சரித்துஊர் திரும்பச் செய்தல்.**

1. வைசம்பாயனர் சொன்னார்:— கோகுலத்திலே முன்னரே சந்த்ரனைக் காட்டிலும் அழகிய முகமுடைய ஒ பிள்ளையை, ரோஹிணி தேவி பெற்றதாக வஸுதேவர் கேள்வி பட்டார்.

2. அவர் நந்தகோபரைப் பார்த்து சுபமான வாக்கா கூறினார். "நீர் இந்த யசோதையோடு கூடவே சீக்ரமாக இடை சேரிக்கே போய்ச் சேரும்.

3. நண்பா அங்கே சென்று அந்த இரு குழந்தைகளுக்குட் ஜாதகர்ம முதலிய சுபகார்யங்களைச் செய்வித்து கோகுலத்தி ஸுகமாக வளர்ப்பீராக.

4. ரோஹிணி பெற்ற என் பிள்ளையையும் கோகுலத்தி நன்கு காப்பீராக. நான் ஒரே குழந்தையின் முகத்தைப் பார்க் வில்லை. யென்று புத்ரர்களுடைய ஜ்ஞாதிகளால் நிந்திக்க படுபவன்.

5. புத்திமானான எனக்கும் கூட விவேகம் அபஹரிக்க படுகிறது. இரக்க மற்ற இந்த கம்ஸனிடமிருந்து குழந்தையி வதத்தில் பயம் உண்டாகிறது.

6. 7. ஆகையால் நந்தகோபரே! நீர் ரோஹிணிக்கு பிறந்த என் பிள்ளையைக் காப்பாற்றும்படி, தத்வத்தை அறிந் செய்யும். உலகத்தில் பல விக்னங்கள் குழந்தைகளை நடுங்க செய்கின்றன அல்லவா!

8. அந்த என் புத்ரன் 'ஸங்கர்ஷணன்' பெரியவன் இந்த உ பிள்ளை சிறியவன், பெயரால் இருவருமே ஸமமே. ஸுகமாக கவனித்துக் கொள்.

9. நந்தகோபா! ஸமான வயதுடைய இந்த இருவரு வளர்ந்து எப்படி அந்த கோகுலத்தில் ப்ரகாசிப்பார்களோ அப்படி செய்.

10. பால்யத்தில் எல்லோரும் விளையாட்டிலேயே நோக் முடையவர். பால்யத்தில் எல்லாருமே புத்தி மயக்கம் பால்யத்தி எல்லோரும் பிடிவாதமுடையவர். அந்த விஷயத்தில் கவ முடையவனாய் இரு

11. ப்ருந்தாவனத்தில் எக்காரணத்தாலும் பசுத்தொழுவம் கட்டக்கூடாது. அங்கே வசிக்கும் பாபியான கேசிக்கு பயப்பட வேண்டும்.

12. ஸர்ப்பங்கள், புழுக்கள், பறவைகள், அப்படியே தொழுப் பசுக்கள், கன்றுக்குட்டிகள் ஆகிய இவைகளிடமிருந்து, இவ்விரு குழந்தைகளும் காக்கத்தக்கவர்.

13. நந்தகோபரே! இரவு கழிந்தது. துரிதவண்டியில் ஏறி சீக்ரம் போவீராக வலது இடது பக்கங்களிலுள்ள இப்பறவைகள், உம்மைக் கூவி அழைக்கின்றன, போலும்.

14. மஹாத்மா வஸுதேவரால் ரகஸ்யமாக விடை கொடுக்கப்பட்ட நந்தகோபர் ஸந்தோஷமடைந்தவராய் யசோதையுடன் வண்டியில் ஏறினர்.

15. பாலர், தோளில் சுமக்கக்கூடிய தொட்டிலில் ஸாவதானமாக உறங்கக்கூடிய குழந்தையை, மஹா புத்திமானன நந்தன் ஸுகமாக அமர்த்தினன்.

16. ஏகாந்தமான யமுனைக்கரைவழியாக சென்றுன் தீர்த்த ஸம்ருத்தியும், குளிர்ந்த காற்றும் இருந்தன.

17. கோவர்த்தனமலைக்கு ஸமீபத்தில் செல்லுகிற வழியில் மங்களமான தேசத்தில் கோகுலத்தைப் பார்த்தான் கோகுலம் யமுனைக்ரையில் கட்டப் பட்டுள்ளது. குளிர்ந்த காற்று ஸுகமாக வீசப்பெற்றது.

18. சப்தமிடும் காட்டு ம்ருகங்களால் அழகியது கொடி வகைகளையும், பெரிய மரங்களையும் உடையது. புல்லை விரும்பி ஸஞ்சரிக்கும் பசுக்களால் அலங்கரிக்கப்பட்டது.

19. பசுக்கள் ஸஞ்சரிக்கத்தக்க ஸமவெளி ப்ரதேசத்தையுடையது நிறைந்த தீர்த்தமுடைய நீர் நிலைகளுடையது காளைகளின் தோள்களாலும் கொம்புகளாலும் உராயப்பட்ட மரங்களையுடையது.

21. காட்டுப் பூனைகளாலும், பருந்துகளாலும், பின்தொடப்பட்ட, மாம்ஸத்தில் பேராசை கொண்ட கழுகளாலும், தசை, கொழுப்புகளை உண்கிற நரி சிறுத்தை, ஸிம்ஹங்களாலும் சூழப்பட்டது.

21. புலியின் சப்தத்நால் எங்கும் வ்யாபிக்கப்பட்டது. நாநாவித பக்ஷிகளால் நிறைந்தது. இனிய பழங்கள் நிறைந்த மரங்களையுடையது, அழகியது. ஏராளமான புல், கொடி இவைகளையுடையது.

22. பசுக்களின் சப்தமுடையது. கோபி ஸ்தீரீகளால் நிறைந்தது. எல்லா பக்கங்களிலும் கன்றுகளின் "அம்மா" என்ற சப்தம் நிறைந்தது அழகியது.

23. வண்டிகள் திரும்புவதற்கு ஏற்ப விசாலமானது. எங்கும் முட்செடி ப்ரதேசங்களை உடையது எல்லா பக்கங்களிலும் கீழே விழுந்த பெரிய காட்டு மரங்களையுடையது.

24. கன்றுகள் கட்டுமுளைகளாலும், கயிறுகளாலும் அலங்கரிக்கப்பட்டது. பசுச் சாணங்களால் நிறைந்த பூமியையுடையது. பாய்க்கூரையுடைய குடில்களையும், மடங்களையும் உடையது.

25. ஸுகமான விளையாடுமிடங்கள் நிறைந்தது. புஷ்டியுடனும், மகிழ்ச்சியுடனும் கூடிய ஜனங்கள் நிறைந்தது. மாட்டுக் கயிறுகள் மிகவுடையது. தயிர் கடையும் மத்தோசை கொண்டது.

26. மோர் ப்ரவாஹம் நிறைந்தது. தயிராடை நனைந்த மண் தரை உடையது. தயிர் கடையும் கோபிகளின் வளையல் சப்தத்தையுடையது.

27. காகபக்ஷம் (சிகாலங்காரம்) தரிக்கும் கோபாலர்களின், விளையாட்டால் நிறைந்தது. தாளுடைய கதவுகள் கொண்ட தொழுவங்களையுடையது. நடுவில் கோசாலைகளையுடையது.

28. அங்குள்ள காற்று நெய்காய்ச்சும் பரிமளம் கொண்டது. நீலம் மஞ்சள் நிற ஆடைகள் அணிந்த இளம் பெண்களால் அலங்கரிக்கப்பட்டது

29. வன புஷ்பங்களை தலையில் சூடிய கோபிகளால் நிறைந்தது. மார்பில் கச்சணிந்து, தலையில் குடங்கள் தாங்கி யமுனைக்கரை மார்க்கம் ஜலம் கொண்டு செல்லும் கோபிகளால் நிறைந்தது.

30, 31, கோபர்களின் ஒலியுடைய கோகுலத்தில சந்தோஷமாக நுழைகிற நந்தகோபர், அங்கு வயதான கோப கோபிகளால் எதிர் கொண்டு அழைக்கப்பட்டு ஸுகமான இடத்தில் தங்க விரும்பினர்.

32. அங்கு வஸுதேவர் ப்ரியை ரோஹிணி தேவி யிருக்கும் இடத்தில் பாலஸூர்ய காந்தியுடைய அந்த க்ருஷ்ணனை ரஹஸ்ய மாக இருக்கச் செய்தார்.

**ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று**

## 6ம் அத்தியாயம்

### சகடாஸுரன் பூதனை இவர்களின் வதம்

1, **வைசம்பாயனர் சொன்னார் :** அந்த கோகுலத்தில் வஸித்து கோபகர்மாக்களை செய்து கொண்டிருக்கும் நந்தகோபருக்கு பலகாலம் கழிந்தது.

2. நாமகரணம், செய்யப்பட்ட அந்த இரு குழந்தைகளும் ஸுகமாக வளர்ந்தனர். ஸங்கர்ஷணன மூத்தவன், க்ருஷ்ணன் இளையவன்.

3. அவதாரம் செய்த ஹரி, கார்மேகம் போன்றிருந்ததால், க்ருஷ்ணன் ஆனான். கடல் மத்தியில் மேகம் போல், பசுக்களின் மத்தியில் வளர்ந்தான்.

4. ஒரு ஸமயம் புத்ரவாத்ஸல்யமுடைய யசோதை, தூங்கும் க்ருஷ்ணனை வண்டியின் அடியில் விட்டு, யமுனை நதிக்குச் சென்றாள்,

5. பிறகு கைகால்களை வீசி, குழந்தை விளையாட்டைச் செய்கிற அந்த க்ருஷ்ணன், இரண்டு கால்களையும் தூக்கிக் கொண்டு இனிமையாக அழுதான்.

6. அவன் அங்கு, ஒரு காலால் வண்டியை வீசிச்சுழற்றி குப்புறத்தள்ளினான் தாய்ப்பால் விரும்பி அழவும் செய்தான்.

7. இந்த ஸமயம் ஸ்நாநம் செய்து, கட்டப்பட்ட கன்றை யுடைய பசுவைப்போல், பால் வடியும் ஸ்தனங்களையுடையளாய் யசோதை, பயத்தால் கலங்கி வந்தாள்.

8. காற்றடிக்காமல் கவிழ்ந்து கிடக்கும் வண்டியை அவள் பார்த்தாள். ''ஹா! ஹா;'' என்று கூறி விரைந்து சென்று குழந்தையை எடுத்தாள்.

9. வண்டி கவிழ்ந்த உண்மையை அவள் அறியவில்
'என்குழந்தைக்கு மங்களம் உண்டாகட்டும்' என்று, ப்ரீதியுடனு
பீதியுடனும் இருந்தாள்.

10. ''குழந்தாய்! நீ வண்டியின் கீழ் தூங்கும் போது காரம
மில்லாமல் வண்டி கவிழ்ந்ததில், பரம கோபிஷ்டரான உ
தந்தை என்ன சொல்வாரோ!

11. எனக்கு ஸ்நாநத்தால் என்ன! துஸ்நாநம் இது. நதிக்கு
போவதால் எனக்கு என்ன? வண்டி கவிழ்ந்து வெட்ட வெளியி
படுத்திருக்கும் உன்னைப் பார்க்கிறேனே! (என்று தன்னை நொந்
கொண்டாள்)

12 இந்த ஸமயத்தில், வனத்தில் ஸஞ்சரித்துக் கொண்
செவ்வாடை அணிந்திருந்த நந்தகோபன், பசுக்களுடன் கோகுல
திற்கு வந்து சேர்ந்தான்.

13. அசைந்து ஒடிந்த அச்சையுடையதும், உடைந்த
பாத்ரம், ஜாடி, குடங்களையுடையதும் சக்ரத்தை மேலே
கொண்டதுமான, தள்ளப்பட்ட வண்டியை, அவன் பார்த்தான்

14. 15. உடனே பயந்தவனாய் கண்ணீர் ததும்பும் கண்
களுடன் சீக்ரமாக வந்து, 'என் குழந்தை க்ஷேமமா?' என்று
அடிக்கடி சொல்லிக் கொண்டு தாய்ப்பால் குடிக்கும் குழந்தையை
பார்த்து ஸமாதானமடைந்து, மறுபடியும் 'காளைகளுள் சண்டை
யில்லாமல் எப்படி என் வண்டி தள்ளப்பட்டது?' என்று கூறினான்

16 17. ''வண்டி யாரால் தள்ளப்பட்டது என்று எனக்குத்
தெரியாது. ப்ரியரே! நான் புடவை துவைக்க நதிக்குச் சென்றிருந்
தேன்'' வந்ததும் பூமியில் கவிழ்ந்த வண்டியைப் பார்த்தேன்''
என்று பயந்து தழதழத்த குரலுடன் பேசுகிற யசோதை பதில்
சொன்னாள்.

18. இவ்விதம், அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போது,
அங்கு வந்த சிறுவர்கள், 'இந்த வண்டி இந்தக் குழந்தையால்
காலால் கவிழ்க்கப்பட்டது. யத்ருச்சையாக இங்கு வந்த எங்களால்
இது பார்க்கப்பட்டது.'' என்று கூறினார்கள்,

19. நந்தகோபன் அதைக் கேட்டு ஸந்தோஷமும், பயமும்
அடைந்து, ''இது என்ன!'' என்று சிந்தித்து, மிகுந்த ஆச்சர்யத்தை
அடைந்தான்.

20. 21. எல்லா கோபர்களும் (க்ருஷ்ணனை மனிதனாக நினைத்தார்கள்) ஆச்சரியத்தால் தெறிக்க விழித்த கண்களுடையவர்களாய் இதை க்ருஷ்ணன் கவிழ்த்ததாக நம்பவில்லை. வண்டியை இருக்க வேண்டிய இடத்தில் வைத்து, சக்ரங்களையும் பூட்டினார்கள்

22, 23 **வைசம்பாயனர் சொன்னார்:** சிறிது காலம் கழிந்தபின், போஜகுல கம்ஸனுடைய வளர்ப்புத் தா(தாதி)யான 'பூதனை' யென்பவள், பக்ஷி வேஷம் கொண்டு கோர ரூபத்துடன் ப்ராணிகளுக்கு பயத்தைச் செய்பவளாய், கோபத்தால் இறக்கைகளை வேகமாக அடித்துக் கொண்டு, நள்ளிரவில் கோகுலத்தை யடைந்தாள்.

24. புலிபோல் பெருமித சப்தத்தை அடிக்கடி கர்ஜித்துக் கொண்டு, நடுநிசியில் பூதனை தோன்றினாள்.

25. வண்டியின் அச்சாணியில் மறைந்திருந்தாள். பால் பெருகிற ஸ்தனங்களுடையவளாய், இரவில் எல்லோரும் உறங்கும் போது க்ருஷ்ணனுக்கு முலை கொடுத்தாள்.

26. க்ருஷ்ணன் அவளுடைய ஸ்தனத்தை ப்ராணன்களுடன் கூட குடித்தான். உடனே பறிக்கப்பட்ட ஸ்தனங்களுடைய பூதனை பெரிய கோஷத்துடன் திடீரென்று பூமியில் விழுந்தாள்.

27. அந்த சப்தத்தால் நடுங்கிய இடையர்களும், நந்த கோபரும், மிகவும் பயந்த யசோதையையும், பயத்தால் விழித்துக் கொண்டார்கள்.

28 மூர்ச்சையடைந்து ஸ்தனங்கள் பறிபட்டு வஜ்ராயுதத்தால் பிளக்கப்பட்டவள் போல் பூமியில் விழுந்திருக்கும் அந்த பூதனையை அவர்கள் பார்த்தார்கள்

29. அந்த இடையர்கள் ''இது என்ன? யாருடைய கார்யம்!'' என்று நடுங்கியவர்களாய், நந்தகோபரை முன்னிட்டுச் சுற்றி நின்றார்கள்.

30. அதற்குக் காரணத்தை அவர்கள் அப்பொழுது எப்படியும் தெரிந்து கொள்ளவில்லை ''ஆச்சர்யம்! ஆச்சர்யம்'' என்று சொல்லிக் கொண்டு அவரவர் வீட்டையடைந்தனர்.

31. ஆச்சர்யத்துடன் எலலா கோபர்களும் தங்க விட்டுக்குப் போனவுடன், நந்தகோபர் ப்ரபரப்பில்லாம யசோதையைக் கேட்டார்.

32. இது என்ன விதியோ தெரியவில்லே, இது எனக்கு பெரிய ஆச்சர்யம், என் குழந்தைக்குக் கொடிய பயம் (எல்லோரு கும்) பயம் வந்து விட்டது.

33. யசோதை பயந்தவளாய் ''ஐயா நான் ஒன்று அறியேன். குழந்தையுடன் படுத்துக் கொண்டிருந்தேன். சப்த கேட்டு எழுந்தேன்!

34. யசோதைக்கும் தெரியவில்லே, என்ற பொழுது பந்து களுடன் கூடிய நந்தகோபர் கம்ஸனிடமிருந்து கொடிய பயத்தை அறிந்தார். ஆச்சர்யத்தையும் அடைந்தார்.

**6-ம் அத்தியாயம் முற்றிற்று**

## 7-ம் அத்தியாயம்

### க்ருஷ்ணன், பலராமன், பால லீலேகள்—இரு மருதமரங்களே உரலில் கண்டுண்ட க்ருஷ்ணன், முறித்தல்

1. **வைசம்பாயனர் சொன்னர்:** காலம் கடந்து கொண்டிரு கும் போது சங்கர்ஷணன், க்ருஷ்ணன் என்று பெயரிடப்பட்ட அவ்வழகிய இருவரும் சேர்ந்து ஓடி ஆடி விளேயாட ஆரம்பி தனர்.

2. அந்யோந்ய பாவமுடைய அவ்விரு பாலர்கள், குழந்தை பர்வமிருந்தே ஒற்றுமையுடையவர்கள், ஒரே மாதிரி உருவப் மனதுக்கு இனியவர்கள் உதய சந்த்ர சூர்யர்களே யொத்த சாந் உடையவர்கள்.

3. ஒன்று பட்ட பிறப்பு; ஒரே படுக்கை; ஒரே ஆஸனப் ஒரே போஜனம்; ஒரே வித அலங்காரம் ஒரே மாதிரி குழந்தை பழக்கத்தையுடையவர்கள்.

4. ஒரே மாதிரி கார்யத்தில் ஈடுபடுபவர்கள்; இரண்டு பட்ட ஒரு சரீரத்தையுடையவர்கள் ஒரே நடத்தை; மிகுந்த வீர்யம்; ஒே பிதாவின் குழந்தைகள்.

5. லோக த்ருஷ்டிக்கு ஒரே தோற்றம்; தேவ சரிதமுடைய மனிதர்கள்; எல்லா உலகுக்கும் ரக்ஷகர்கள்; ஆயர் சிறுவர்களாய் பிறந்தவர்கள்.

6. அந்யோந்யமாக விளையாடும் விளையாட்டுாளால் ஆகாயத்தில் அந்யோந்யமாக வ்யாபித்த இரணங்களுடைய சந்த்ரசூர்யர்கள் போல் நன்கு ப்ரகாசித்தார்கள்.

7. ஸர்ப்ப உடல் போன்ற கைகளையுடைய அவ்விருவரும், எல்லா இடங்களிலும் ஓடி விளையாடு கிறவர்களாய் தூசி படிந்த உடலுடன் மதயானைகள் போல் ப்ரகாசித்தனர்.

8. ஓரிடத்தில் தூசிபூச்சுடனும், ஓரிடத்தில் உலர்ந்த சாணிப் பூச்சுடனும், அவ்விருவர், அக்னிகுமாரர்கள் (ஸ்கந்த விசாகர்கள்) போல் ஓடி விளையாடினர்.

9. சில இடங்களில் முழங்கால்கள் உராய வேகமாகச் சென்றும், கன்றுகள் இருக்கும் இடங்களில் சாணியால் பூசப்பட்ட உடலையும் தலைமயிரையும் உடையவர்களாய் விளையாடியும் ப்ரகாசித்தனர்.

10. சோபையோடு கூடிய அவர்கள் சிலவிடங்களில் பிதாவுக்கு மகிழ்ச்சி ஊட்டுபவராயும், சில இடங்களில் ஜனங்களுக்கு விரும்பாதவற்றைச் செய்து சிரித்துக் கொண்டும் விளங்கினார்கள்.

11. குழல் சுருள்களால் மறைக்கப்பட்ட கண்களையும் சந்த்ரன் போன்ற முகத்தையும் உடைய அந்த அழகிய இரு பிள்ளைகளும் அக்கோகுலத்தில் குதூஹலமுடையவர்களாய் ப்ரகாசித்தார்கள்.

12 எல்லை மீறி குறும்பு செய்து கொண்டு கோகுலம் முழுதும் திரியும் மிகுந்த மதம் கொண்ட அவர்களை, நந்தகோபர் தடுப்பதற்குச் சக்தியற்றவர் ஆனார்.

13, 14, பிறகு மிதக் யோபங்கொண்ட யசோதை, தாமரைக் கண்ணன் க்ருஷ்ணனை வரவழைத்து வண்டியின் அடியில் கயிற்றால் வயிற்றில் கட்டி உரலில் கட்டிவிட்டாள் ''சக்தியிருக்குமானால் போ'' என்று அடிக்கடி அதட்டிச் சொல்லி, வீட்டு வேலையைச் செய்தாள்.

15, 16 யசோதை வேலையில் கவனத்துடனிருக்கும்போ க்ருஷ்ணன் உரலை இழுத்துக் கொண்டு அந்த அங்கணத்திலிருந் வெளிக் கிளம்பினான். பிறகு குழந்தை விளையாட்டைச் செய்கி க்ருஷ்ணன், ஆய்பாடியை ஆச்சர்யப் படுத்திக் கொண்டு, அ விதம் வனத்தில் ஸஞ்சரித்துக் கொண்டே, மிகப் பெரிய இரட்டை அர்ஜுன (மருத) மரத்தின் நடுவிலிருந்து உரலை இழுத்து கொண்டேவெளி வந்தான்.

17. க்ருஷ்ணனால் இழுக்கப்பட்ட உரல், அந்த இரட்டை மரங்களின் குறுக்கில் அகப்பட்டது. அந்த உரலை வேரோ( கூடிய மரங்களுடன் இழுத்தான்,

18. அந்தக் குழந்தையால் வேகமாக இழுக்கப்பட்ட, அந் மரங்கள் வேருடனும், கிளையுடனும் ஒடிந்து விழுந்தன தன்னுடைய திவ்ய பலத்தை யடைந்த அவன் கோபாலர் அறியு பொருட்டு சிரித்தான்.

19, 20 அக்கயிறு அந்த குழந்தையின் பெருமையால் கெட்டி யாய் (அறுபடாமல்) இருந்தது யமுனைக்கரை வழியில் இருக்கும் ஆயர் பெண்கள், அந்தக் குழந்தையைப் பார்த்தார்கள். ஆச்சர்ய மடைந்த அப்பெண்கள் கோஷமிட்டுக் கொண்டு யசோதையிடம் சென்றார்கள்.

21, 22. பரபரத்த தோற்றமுடைய அப்பெண்கள் "ஓ! யசோதா! சீக்ரம் வா வா, ஏன் தாமதம் அந்த மருதமரங்கள் இரண்டும் உன் குழந்தை மேல் விழுந்தன. குழந்தை பிழைக்க வேண்டுமே என்று எங்கள் ப்ரார்த்தனை பலித்தது (குழந்தை பிழைத்தது.

23. பலமான கயிற்றால் கன்றுக்குட்டி போல் வயிற்றில் கட்டப்பட்ட அந்த சின்ன குழந்தையான உன் பிள்ளை மரங்களின் நடுவில் சிரித்துக் கொண்டிருக்கிறான்.

24. எழுந்திரு போ! புத்தியில்லாதவளே! முட்டாளே! கெட்டிக்காரியென்று நினைத்திருக்கிறவளே! யமன் வாயிலிருந்து தப்பி உயிரோடு இருக்கும் குழந்தையை அழைத்து வா!"

25. பயமடைந்த யசோதை "ஹா ஹா" என்று கூவி, உடனே எழுந்து அந்த இரண்டு மரங்களும் தள்ளப்பட்ட இடத் திற்கு வந்தாள்.

26. அவள் அந்த மரங்களின் நடுவில் வயிற்றில் கயிற்றால் கட்டப்பட்டு, உரலை இழுத்துக் கொண்டு செல்லும் தன் மகனான குழந்தையைப் பார்த்தாள்.

27, 28. ஆயர்பாடி கோபி கோப வ்ருத்தர்கள் "இது மிக ஆச்சர்யம்" என்று சொன்னார்கள். நிலையிலிருந்து வந்த வன ஸஞ்சாரிகளான கோபர்கள் அவரவர் இஷ்டப்படி கூறினர். இந்த ஆய்ப்பாடிக்கு கோயில் போன்ற இரண்டு மரங்களும் யாரால் தள்ளப்பட்டன.

29. காற்று, மழை, இடி, யானை உபத்ரவம் இவை இல்லாது, யாரால் இந்த மரங்கள் தள்ளப்பட்டன!

30. வேருடன் பூமியில் தள்ளப்பட்ட இவ்விரு அர்ஜுன மரங்களும், நீரற்ற மேகம் போல் சோபிக்கவில்லையே! கஷ்டம்!!

31. நந்தகோபரே ஆய்ப்பாடியிலிருக்கும் மங்களகரமான, அழகிய இந்த இரண்டு மரங்களும் இப்படியான போதிலும், பூமியில் விழுந்த இந்த மரங்களிலிருந்து உன்குழந்தை தப்பினானே.

32. சகடம், பூதனை, மருதமரங்கள். இந்த மூன்றின் விநாசங்களில், இது மூன்றாவது துர்நிமித்தமாக ஆய்ப்பாடியில் தோன்றியிருக்கிறது.

33. இந்த இடத்தில் இந்த ஆய்ப்பாடி யிருத்தல் சரியில்லை. ஏனெனில் இங்கு துர்நிமித்தங்கள் தோன்றுகின்றன. மங்களம் இல்லை என்று கூறினார்கள்.

34. நந்தகோபர் உடனே உரலிலிருந்து க்ருஷ்ணனை விடுவித்து, வெகு நேரம் மடியில் உட்கார்த்தி, இறந்து பிழைத்தவன் போன்ற தாமரைக் கண்ணனான க்ருஷ்ணனைப் பார்த்து த்ருப்தியடையவேயில்லை.

35. பிறகு, நந்தகோபர் யசோதையை நிந்தித்துக்கொண்டே வீட்டில் நுழைந்தார். அந்த எல்லா கோபர்களும் ஆய்ப்பாடியை அடைந்தனர்.

36. அந்த க்ருஷ்ணனும் கயிற்றுக்கட்டு காரணமாக அதே பெயரால், இடைச்சேரியிலுள்ள கோபிகளால் "தாமோதரன்" என்று கானம் பண்ணப்படுகிறான்.

37. ஜனமே ஜயனே! பரதச்ரேஷ்டனே! இடைச்சேரியில் வசிக்கிற பாலக்ருஷ்ணனுடைய இந்த விளையாட்டு ஆச்சர்யமல்லவா!

**7ம் அத்தியாயம் முற்றிற்று**

# 8ம் அத்தியாயம்

## க்ருஷ்ண பலராம இருவர்களும்—கோகுலத்தை ப்ருந்தாவனத்துக்கு மாற்ற—சூழ்ச்சி செய்தல்

1. வைசம்பாயனர் சொன்னார்: இவ்விதம் குழந்தைப் பர்வட நீங்கிய அந்த க்ருஷ்ண பலராமர் இருவரும், அந்த ஆய்ப்பாப யிலேயே ஏழு வயதினர் ஆனார்கள்.

2. நீல பீதாம்பரங்களை உடுத்திக் கொண்டும் மஞ்சள் வெளுப்பு, அங்கராக பூச்சுக் கொண்டும், தொங்கும் கருங்குழலைக் கொண்டுய அவ்விருவரும் கன்று காப்பாளராக இருந்தனர்.

3. அழகிய முகத்தையுடைய அவ்விருவம்,காட்டையடைந்து இலை ஊதலை, காதுக்கு இனிமையாக ஊதிக் கொண்டு (ஊதலில் இருகைகளும் முகமும் சேர்ந்து) மூன்று தலை பாம்பு போல் சோபித்தனர்.

4. மயூர் புஷ்பத்தை தோள்வளையிலும் காதிலும் சூட்டிக் கொண்டும், துளிர் இலையை தலையில் சூடிக் கொண்டும், துளசீ மாலை அசையும் தி மார்பையுடையவர்களாயும், சிறிய மரங்கள் போல் வெளிக் கிளம்பினார்கள்.

5. 6. 7. தாமரைப் பூவை சிரஸில் சூட்டி, கயிற்றுப் பூநூல் தரித்து, உரிக்கலையமும், சுரக்காய் கமண்டலும் கொண்டு, இடையர்களுக்குரிய புல்லாங்குழலை ஊதிக்கொண்டு

அந்யோந்யமாக, ஓரிடத்தில் சிரித்து, ஓரிடத்தில் விளையாடி, ஓரிடத்தில் இலைப்படுக்கைகளில் நன்கு படுத்துறங்கி, ஓரிடத்தில் விழித்த திருக்கண்களைக் கொண்டு

இவ்விதம், கன்றுகளைப் பாதுகாத்து, பெரியவனத்தை ப்ரகாசிப்பித்து, அடிக்கடி சுற்றித் திரிந்து நிலையில்லா குதிரைக் குட்டிகள் போல விளையாடினார்கள்.

8, 9. பிறகு தாமோதர ஸ்ரீமான், பலராமனை நோக்கி. "அண்ணா! இந்தக்காட்டில் ஆயர்களுடன் விளையாட முடியாது, இந்தக் காடு முழுதும் நம்மால் அனுபவிக்கப்பட்டு பழகியதே; மிகவும் குறைந்து போன கட்டை, புல், இவையுடையது ஆயர் களால் ஓடிக்கப்பட்ட மரங்களையுடையது.

10. பெரிய காடுகளும் சிறுவனங்களும் அடர்ந்து இருந்தவை இப்போது ஆகாசம் போன்ற வெளியாகக் காணப்படுகின்றன. ஸுகமாக இல்லை.

11. தாள்பாள் தொலைந்த தொழுவங்களில் நிறைந்த சோலையுடைய எல்லா மரங்களும் தொழுவ அடுப்புத்த்தீயில் நாசமாயின.

12. புற்களும் கட்டைகளும் அருகில் இருந்தனவை தூரத்து நிலங்களில் தேட வேண்டியிருக்கின்றன.

13. இந்தக் காட்டில், நீர்குறைவு உலர்ந்த புல் குறைவு பழகுமிடங்கள் இல்லை. இளைப்பாறுமிடம் தேடிப் பிடிக்க வேண்டியிருக்கிறது பயங்கரமாயிருக்கிறது. மரங்கள் மிகக் குறைவு.

14. பலனற்ற மரங்களில் முன் தங்கிய பறவைகள் இப்போது வேறிடம் சென்று விட்டன இந்தப் பெரிய இருப்பிடத்துக்காக, ஜனங்கள் மரங்களை அழித்து விட்டனர்.

15. இங்கு ஸந்தோஷத்துக்கு இடமில்லை. இனியவை இல்லை பயனற்ற காற்று பறவைகள் இல்லை சூன்ய ப்ரதேசம் இக்காடு வ்யஞ்ஜனமில்லா சாப்பாடு போன்றது.

16 பட்ட மரங்களும் காட்டுக் காய்கறிகளும் விற்கப் பட்டன. கூட்டம் கூட்டமான புற்களும் வெட்டப் பட்டன. இந்த கோகுலம் நகரம் போலாயிற்று.

17. மலைகளுக்கு ஆபரணம் கோகுலம்; கோகுலத்துக்கு ஆபரணம் காடு; காடுகளுக்கு ஆபரணம் பசுக்கள்; அவை நமக்கு மேலான கதி.

18. ஆகையால், நுனி வாடாத இளம் புற்களையும், விறகு களையும், உடைய வேறு காட்டிற்குச் செல்வோம். பசுக்களும், புதிய புற்களை மேய்வதற்கு விரும்புகின்றன.

19. ஆயர்கள் கதவு பூட்டு இல்லாதவர்கள். வீடு நிலம் அற்ற வர்கள். உலகில் கோபர்கள் சக்ரம் போல் (ஓரிடம் நில்லாமல்) சுற்றிக் கொண்டிருக்கிறவர்கள் அல்லவா! ஆகையால் புது புற் களுடைய வேறொரு காட்டிற்கு (கோ) தனிகர்களான நாம் போவோம்

20. அந்த பசுக்களின் சாணி மூத்ரங்களில் நனைந்து உப்புக் கரிக்கும் புல்லை, பசுக்கள் மேய்வதில்லை அது பாலுக்கும் நல்ல தாகாது.

21. புதிய வனங்களில், ஸமவெளியான வீதிகளில் பசுக் கூட்டங்களுடன் ஸஞ்சரிப்போம். சீக்ரம் கோகுலம் தூக்கிச் செல்லப்படட்டும்.

22 போதுமான புல்வெளிகளையுடையதும், இனிய பழ மரங்கள் தண்ணீர் உடையதும் ப்ருந்தாவனம் என்று ப்ரஸித்தி பெற்றதுமான அழகிய காடு கேட்கப் படுகிறதல்லவா?

23. அங்குத் தத்துக்கிளியும், முள்ளும் கிடையாது எல்லா வன லக்ஷணமும் பொருந்தியது. கதம்ப மரங்களை மிகுதியால் வுடையது. யமுனைக்கரையிலுள்ளது.

24. குளிர்ந்த மனோஹரமான காற்றையுடையது. ஸர்வ ருதுக்களுக்கும் இருப்பிடம் மங்களகரமானது கோபிகள் நடமாட ஸுகமானது அழகிய விசித்ரமான உள்ளிடங்களையுடையது

25. அங்கு அருகில் உயர்ந்த சிகரங்களுடையதும் (இந்த்ரனின்) நந்தனவனத்துக்கு, மந்த்ரமலை போன்றது கோவர்த்தமெனும் பெரியமலை ப்ரகாசிக்கிறது

26. இந்த வனத்தின் நடுவில் ஒரு யோஜனை உயர்ந்ததும், மிகப்பெரிய கிளைகளையுடையதுமான 'பாண்டீரம்'' எனும் ஆல மரம் ஆகாயத்தில் நீலமேகம் போல் ப்ரகாசிக்கிறது.

27 இந்த வனத்தின் மத்தியில் (தலை மயிர்) வகிர் எடுத்தால் போல் காளிந்த யமுனை) 'நந்தன வனத்தில் 'நளினி' நதிபோல் ஓடுகிறது.

28. அங்கு கோவர்த்தன மலையையும் ''பாண்டீரம்'' என்ற மேலான ஆலமரத்தையும் அழகிய யமுனை நதியையும், ஸுகமாக பார்த்துக் கொண்டும் ஸஞ்சரித்துக் கொண்டும் இருப்போம்.

29. அங்கு இந்த ஆயர்பாடி நிர்மானிக்கப்படட்டும். குண ஹீனமான வனம் விடப்படட்டும். உனக்கு மங்களம். ஒரு காரணத்தைக் கல்பித்து ஆயர்களைப் பயப்படுத்துவோம்.

30. 31, இவ்விதம் பேசிக்கொண்டிருக்கிற புத்திமானை வாஸுதேவனுடைய ரோமங்களிலிருந்து ரத்தம் மாமஸம், கொழுப்பு இவைகளை உண்ணும் கோர ரூபமுடைய பயங்கரமான ஓநாய்கள் நாலாபக்கங்களிலிருந்தும் நூற்றுக்கணக்காக வெளிக்கிளம்பின.

32. கோகுலத்தின் நாசத்திற்கு கணக்கற்ற ஓநாய்கள் வெளிக்கிளம்பின. இஷ்டப்படி ஓடுகிற இவைகளைப் பார்த்து, பசுக்கள், கன்றுகள், மனிதர்கள், கோபிகள் ஆக கோகுலம் முழுதும் பெரிய நடுக்கம் உண்டாயிற்று.

33. 34. ஸ்ரீவத்ஸ அடையாளமுடைய எல்லா ஓநாய்களும் ஐந்து, பத்து, இருபது. முப்பது, நூறு கொண்ட கூட்டங்களாக வாஸுதேவன் திருமேனியிலிருந்து வெளிக்கிளம்பின.

35. ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஓநாய்கள், கருப்பு முகங்களுடன் கோபர்களுக்குப் பயத்தையுண்டு பண்ணின கன்றுகளைத் தின்றும், பசுக்கூட்டங்களை நடுங்கச் செய்தும், இரவில் குழந்தைகளை அபஹரித்தும், அவ்வோநாய்களால், கோகுலம் நாசம் செய்யப்பட்டது.

36. காட்டுக்குள் போகவும், பசுக்களைக்காக்கவும் காட்டிலிருந்து எதையும் கொண்டு வரவும் நதியைத் தாண்டவும் முடியவில்லை.

37, 38. புலிபோன்ற பராக்ரமமுடைய பயங்கர ஓநாய்களால் நடுங்கிக் கலங்கிய மனதையுடையவர்களாக (கோபர்கள்) அந்த வனத்தில் வஸித்தார்கள். அந்தக் கோகுலம் அசைவற்று ஒரே யிடத்தில் ஸஞ்சரிக்குமதாகச் செய்யப்பட்டது,

### 8-ம் அத்தியாயம் முற்றிற்று

## 9-ம் அத்தியாயம்

### ப்ருந்தாவனம்—ஆய்க்குடி மாற்றம்

1. **வைசம்பாய சொன்னர்:** இப்படிப் பெருகி அடக்கமுடியாத அந்த ஓநாய்களைப் பார்த்து, ஆண் பெண் அடைவாக அந்தக் கோகுலம் முழுதும், அப்போது கூடி ஆலோசனைசித்தது.

2. 'இந்த இடத்தாலே நமக்கு காரியம் இல்லை மங்களகரமானதும், ஸுகமாக வஸிக்கக் கட்டியதும் பசுக்களுக்கு ஸுகம் கொடுப்பதுமானவேறொரு பெரிய காட்டுக்குச் செல்வோம்.

3. ஓநாய்களால் நம் கோகுலம் முழுதும் கொடிய நாசத்தை அடையுமுன் நாளாக்குவானேன். இன்றே! பசுக்களுடன் செல்வோம்.

4. சாம்பலும், சிகப்பும் கலந்த நிறமுடைய அங்கமு
கருப்பு முகமும், கோரைப் பற்களும் கிழிக்கும் நகங்களுமுடை
இரவில் ஊளையிடும் ஓநாய்களுக்குப் பயப்படுகிறோம்.

5. என்பிள்ளை, என் ஸஹோதரன் என் கன்று என்
இவைகள் ஓநாய்களால் கொல்லப்பட்டன' என்று ஒவ்வொ
வீட்டிலும் கூக்குரலிட்டார்கள்.

6. அந்தப் பெண்களின் அழுகைக் குரலாலும் பசுக்களி
அம்மா' சப்தத்தாலும் ஒன்று சேர்ந்த ஆய்ப்பாடிப் பெரியோ
கள் கோகுலத்தினின்று வெளியேற நிச்சயம் செய்தார்கள்

7, 8. கோகுலம் நிர்மாணத்திற்காகவும், பசுக்களின் நன்மை
காகவும் ப்ருந்தாவனம் செல்லும் அவர்களின் அபிப்ராயத்
அறிந்து, அங்கு வாஸம் செய்ய நிச்சயித்து, அவர்களைக் குறித்
நந்தகோபர் ப்ரஹஸ்பதி போல் சீரிய வார்த்தையைக் கூறினார்

9. "நீங்கள் நிச்சயம் செய்து விட்டால் நாம் இன்றே போ
வேண்டியதே கோகுலம் சீக்ரம் ஏவப்படட்டும் தயாரா
இருங்கள் தாமதம் வேண்டாம்"

10, 11. அப்போது ஸாதாரண ஜனங்களால் இடைச்சே
யில் பறை சாற்றப்பட்டது. 'சீக்ரம், பசுக்கள் (ப்ரயாணத்திற்
தயாராக்கப்படட்டும், வண்டிகள் கட்டப்படட்டும் கன்று
கூட்டங்கள் கூவி அழைக்கப்படட்டும் ஸாமான்கள் ஏற்ற
படட்டும் இந்த ஸ்தானத்திலிருந்து ப்ருந்தாவன வாஸத்திற்கு
புறப்படுங்கள்,

12. நந்தகோபருடைய அந்த அழகிய வார்த்தையைக்கேட்
புறப்பாட்டில் விருப்பங்கொண்ட அந்த கோகுலம் முழுதும் சீ
மாகக் கிளம்பியது.

13. 'புறப்படு எழுந்திரு, போவோம். ஏன் படுக்கிறா
புறப்படுக வண்டியை கட்டு'' என்று ஆயர்களின் பெரிய கோஷ
கோகுலத்தில் உண்டாயிற்று.

14. பெரிய வண்டியும், சிறியவையும் கொண்ட அந்த ஆய
பாடி, புறப்படும் போது ஸமுத்ர இரைச்சல் உடையதாய் பு
கோஷம் போன்ற பெரிய கோஷமுடையதாய் விளங்கிற்று.

15. தூலையில் அடுக்கு குடங்களுடனும் (தயிர்கடையும்) மத்து களுடனும், கோபிகளின் வரிசை ஆகாசயத்திலிருந்து நக்ஷத்ர வரிசைபோல் ஆயர்பாடியிலிருந்து புறப்பட்டது.

16. கோபிகளின், நீலம், மஞ்சள், சிகப்பு நிறம்கொண்ட மார்பு ்மலாடைகளால் ?அவர்களின் வழிநடை வரிசை, இந்த்ர வில் (வானவில்) தோற்றத்தை அளிக்கிறது.

17. வழிச்செல்லும் சில கோபர்கள், உடலில் தொங்கும் அணை கயிறு மற்ற கயிறுகளின் சுமைகளால் விழுதுகளுடைய ஆல மரங்கள் போல் தோற்றம் அளிக்கின்றனர்,

17. செல்லும் ப்ரகாசமுடைய வண்டிக் கூட்டத்தால் அந்த கோகுலம், காற்றால் தள்ளப்பட்டபடகுகள் கொண்ட கடல்போல் ப்ரகாசித்தது.

19, (அவர்கள் சென்ற பிறகு) ஒரே க்ஷணத்தில் கோகுலம் இருந்த இடம், பாலைவனம் போல ஆயிற்று. சிந்தின பல தான்யங்களுடைய அந்த இடம், காக்கைக் கூட்டங்களால் நிறைந்தது.

20. பிறகு, க்ரமமாக அந்த ஆய்க்குலம், ப்ருந்தாவனத்தை யடைந்து, அங்கு தங்களுக்கும்கோபர்களுக்கும் ஸுகமாகவிஸ்தார மான இருப்பிடத்தை அமைத்துக் கொண்டது.

21 வண்டி சுற்றி வரும் பரப்பை உடையது. நீளம் இரண்டு யோஜனை (18 மைல்) அகலம் ஒரு யோஜனை (9 மைல்) உள்ள அர்த்தசந்திர வடிவில் இருப்பிடம் அமைக்கப்பட்டது.

22. நன்கு வளர்ந்த முட்செடிகளாலும், அடிமுதல் நுனி வரை முள் அடர்ந்த மரங்களாலும், நாற்புறமும் வேலியிடப் பட்டது.

23, 30. மத்துக்கழி, நாட்டல் மத்துக்கயிறு இழுத்தல்; தண்ணீரால் மத்தைக் கழுவல்; அணைகயிறு, கட்டி நாட்டப்படும் தூண்கள், திருப்பி தூணில் கட்டப்பட்ட வண்டிகள், மத்துக்கழி உச்சியில் தொங்கவிடப்பட்ட கடை கயிறுகள், கூரை மேய பரப்பப்பட்ட புற்பாய்கள், மரக்கிளைகளால் அமைக்கப்பட்ட கூரை உச்சி, மேடுகள், சுத்தி செய்யப்படும் மாட்டுத் தொழுவங் கள், நிலை நாட்டப்படும் உரல்; ஜலம் தெளித்து (சுத்தம் செய்து)

தீமூட்டப்படும் கிழக்கு முகமான அடுப்புகள், (வண்டியிலிருந்து) இறக்கப்பட்ட கன்று குட்டி தோல் விரிப்புடன் கூடிய கட்டில்கள்; தண்ணீர் இழுப்பவர் வனத்தைப் பார்க்கிறவரும் மரக்கிளைகளை இழுக்கிறவருமான கோபிகள், கட்டைகளையும், மரங்களையும், சுறுசுறுப்புடன் கோடரிகளால் வெட்டுகிற கோப வருத்தங்கள், யுவர்கள் இனிய கிழங்குகள், பழங்கள், தண்ணீர் ஆகிய இவற்றால் காடு சூழ்ந்த அவ்வழகிய கோகுலம் மிகவும் ப்ரகாசித்தது.

31. அவர்களுடைய பசுக்கள் விரும்பிய அளவு பால் கொடுக்கக் கூடியவை, அந்த வனமோ எல்லா பக்ஷிகளின் சப்தம் நிறைந்தது (தேவேந்த்ரன்) 'நந்தன' வனம போன்ற காடுகளைக் கொண்டது. அத்தகைய ப்ருந்தாவனத்தை ஆயர்கள் அடைந்தனர்

32 முன்பே பசுக்களின் ஹிதத்தை விரும்பி வனத்தில் திரியும் க்ருஷ்ணனால் அந்தவனம் (ப்ருந்தாவனம்) மங்களகரமான அவன் மனதால் பார்க்கப்பட்டது.

33. பிறகு களங்கமற்ற கடுமையான கோடைக்கால கடைசி மாதத்தில் (ஆடி மாதம்) அம்ருதம் போல் மழை பெய்யும் போது, அங்கு புல் செழித்து வளர்ந்தது.

34. லோகக்ஷேமத்திற்காக க்ருஷ்ணன் வஸிக்கிற அங்கு கன்றுகள், பசுக்கள் மற்றும் ஜனங்கள் ஆகிய எவரும் கஷ்டப் படவில்லை.

35. அந்தப் பசுக்கள் ஆயர்குலம், யுவாவான ஸங்கர்ஷணன் (பலராமன்) ஆகிய க்ருஷ்ணனால் நிறுவப்பட்ட அந்த இடத்தில் கவலையற்று வாழ்ந்தார்கள்.

**9-ம் அத்தியாயம் முற்றிற்று**

## 10-ம் அத்தியாயம்

## வர்ஷா கால வர்ணனை

1. **வைசம்பாயனர் சொன்னார்** : ப்ருந்தாவனத்தையடைந்தநல்ல ரூபமுடைய அந்த வஸுதேவ புத்ரர்கள் இருவரும் கன்றுக் கூட்டங்களை மேய்த்துக் கொண்டு ஸஞ்சரித்தனர்

2. கோபாலர்களுடன் விளையாடியும் யமுனையில் நீராடியும் அவ்விருவரும் கோடை முழுதையும் அவ்வனத்தில் ஸுகமாகக் கழித்தனர்.

3. பிறகு, மனதுக்குக் காமத்தை வளர்க்கக் கூடிய வர்ஷா காலம் வந்தது. வானவில்லால் அலங்கரிக்கப்பட்ட மத்யபாகத்தை யுடைய கார் மேகங்கள் நன்கு வர்ஷித்தன.

4, 5. ஸூர்யன் காண முடியாதவன் ஆனான். பூமியும் புற்களால் காணமுடியாத தாயிற்று. புது நீர் முகந்து வீசும் மேகங்களின் பருவக்காற்றால் தரை சுத்தம் செய்யப்பட்ட பூமி, யௌவன பர்வத்தினள் போல் காணப்படுகிறாள்,

6. புதுமழை ஜலத்தில் மின்மினிப் பூச்சிகள் ப்ரகாசிக் கின்றன. காடுகளில் காட்டுத்தீயும் புகையும் மறைந்தன.

7. தோகையுடைய மயில்களுக்கு நடனமாடும் காலம் மத மத்தமாக இருந்த ஆடும் மயில்கள் அடிக்கடி கூவின.

8. புது வர்ஷா காலத்தில் அழகிய வண்டுகளுக்கு ஆகாரத் தைக் கொடுக்கும், யௌவன கதம்ப வ்ருக்ஷங்களின் உருவம் புது மேகங்களாக ப்ரகாசிக்கிறது.

9. குடஜ வ்ருக்ஷங்கள் (பூத்துச்) சிரித்தன. கதம்ப வ்ருக்ஷங் கள், வனத்தில் நறுமணம் வீசின மேகங்கள் உஷ்ணத்தைத் தடுத்தன. மழைநீர் பூமிக்கு மகிழ்ச்சி ஊட்டிற்று

10. சூர்யகிரணங்களால் வெப்பமூட்டப் பட்டு காட்டுத் தீக்களால் நாற்புறமும் சுடப்பட்ட பர்வதங்கள் மேகங்கள் மழை பொழிவதால், (தாபந்தணிந்து) பெருமூச்சுவிடுகின்ன போல் தோன்றுகின்றன.

11 பெருங்காற்று வீசும் ஆகாசம், பெரிய மேகங்கள் அமைக்கப் பெற்று பூமியில் மஹா ராஜாக்களின் தலைநகரம் போல் தோற்றமளித்தது.

12 ஓரிடத்தில் கதம்பம் பூ நிறைந்து சிரித்தது ஓரிடத்தில் வாழைப்பூக்கள் அழகு படுத்தின. அந்தவனம் கடப்பத்தின் (சிகப்பு) பூக்களால் தீ வைக்கப்பட்டது போல் ஜ்வலித்தது.

13. மழையால் தரை நனைந்தது, காற்று வீசியது, பூமியின் ஸுகந்தம் பரவியது உலகம் காம விகாரம் அடைந்தது.

14. (தேன் உண்டு) மதங் கொண்ட வண்டுகளின் ஒலியும் தவளைகளின் சப்தமும் மயில்களின் புதிய சப்தமும்) பூமியில் நிறைந்தது.

15. விரைவாகச் சுற்றும் சுழல்களையும், பெரிய வெள்ளப் பெருக்கையும் கொண்ட நதிகள் களாமரங்களைச் சாய்த்திழுத்து விஸ்தாரமாயின.

16. பக்ஷிகள், இடைவிடாத மழைத்தாரலால் மேல் இறக்கைகள் நனைந்து (மேல் கிளம்ப) யத்நம் பலிக்காததால் களைப்புற்றது போல் மரத்தின் நுனிக்கிளைகளைவிடாமல் முயற்சியற்று இருந்தன.

17. தண்ணீர் கனத்தால் தணிந்தும், மழை பொழிந்தும் முழங்கும் புதுமேகங்களின் நடுவில் சூரியன் முழுகியது போல் தோன்றுகிறது.

18. நீர்ப் பெருக்காலும். புல் வெளியாலும் மூடப்பட்ட பூமி, கீழே விழுந்த மரங்களால் புலப்படாத வழிசளையுடையதாய விளங்குகிறது.

19. மரங்கள் விளங்கும் மலைச்சிகரங்கள் மழைப் பெருக்கால், நாற்புறமும் அரிக்கப்பட்டு வஜ்ராயுதத்தால் வெட்டப்பட்டவை போல் கீழே விடுகின்றன

20. குட்டைகள் வழிந்து கீழ் நோக்கியோடும் நீரால் மேக வர்ஷத்தினால் போல் வனங்கள் நிறப்பபட்டன.

21. துதிக்கையால் மறைக்கப்பட்ட முகங்களையுடையனவும், மேகங்கள் போல் முழங்குகின்றனவும் அதிக மழையால் கலக்கமடைந்து திரிகின்றனவுமான யானைகள், பூமியை அடைந்த மேகங்கள் போல் தோன்றின,

22. பலராமன் மழைக்கால நடப்பைப் பார்த்து நீருண்ட மேகங்களையும் கண்டு க்ருஷ்ணனிடம் காலத்தைக் குறித்து தனிய சொன்னான்.

23. "க்ருஷ்ண! கொக்கு வரிசையாகிற ப்ரகாச ஆபரணத்தையுடையனவும் உன் உடல் நிறத்தைக் கொள்ளை கொண்டனவுமான ஆகாயத்தில் உயர்ந்து தோன்றும் கர்ர் மேகங்களைக் காண்

24. உனக்குத் தூக்கத்தையுண்டு பண்ணும் காலம் ஆகாயம் உன் உடல் போன்றது, உன்னைப் போல் சந்த்ரனும் மழைக்கான அஜ்ஞாதவாஸம் செய்கிறான்.

25 நீலமேகத்தால் கருத்து நீலோத் பலவிதழ்போல் காந்தி யுடைய இந்த ஆகாயம், மேகங்களால் மறைக்கப்பட்ட துர்த்தின் மூலம் வந்தபோது துர்த்தினம் கெட்டதினம் ஆகவே விளங்கு கிறது.

26. க்ருஷ்ணு! பார்! நீர் பொழிய, மூன் நிற்கும் ஒன்று கூடின கார் மேகங்களால் அழிய அவதரித்தவர் வதம்கோவர்த்தன மார்கவே (பசுக்களை வருத்தி செய்யுமதாகவே) ப்ரகாசிக்கிறது.

27. இந்த கருநிற மான்கள் காடுகளின் நாற்புறங்களிலும் விழுந்த ஜலத்தால் மதங்கொண்டு மகிழ்ச்சியுடன் விளங்குகின்றன

28. தாமரைக்கண்ணு! தண்ணீரால் மகிழ்ந்து பசுநிறங் கொண்ட ம்ருதுவான இந்த புற்கள்; இலைகளால் பூமியை மறைக் கின்றன.

29. வர்ஷா காலத்தில் விழும் அருவிகள் கொண்ட மலை களுக்கும் பயிர் செழித்த காடுகளுக்கும் ஆகிய சோலை இரண்டின் எல்லைகளையும் பிரித்தறிய முடியவில்லை.

30. தாமோதரா! காற்றினுல் தோன்றியவைகளும் பரதேசம் சென்ற புருஷர்களுக்கு (வீடு திரும்பும்) மகிழ்ச்சியை ஊட்டுபவை களான மேகங்கள் நன்கு கர்ஜித்து பெருமை அடைகின்றன.

31 ஹரே! த்ரிவிக்ரமா! உன்னுடைய பாதமத்யமான (இடைபாகமான) ஆகாசம் அம்பு நாண் இல்லாத மூந்நிறம் பொருந்தியவன் வில்லால் அழகுபடுத்தப்பட்டுள்ளது ஒரு குறிப்பு: திருவடி பூமியிலும் மற்றொன்றுப் ப்ரஹ்ம லோகத்திலும் இரண்டு அடிகளுக்கும் இடைபாகம் ஆகாசம் என்றபடி

32. ச்ராவண (ஆவணி) மாஸத்தில் ஆகாசக் கண் ஆகிய சூர்யன் மேகங்களால் குளிர்ந்த வெயிலை கொடுத்துக் கொண்டு கிரணங்கள் இருந்தும் அவை இல்லாதவன் போல ப்ரகாசிக்கிறுன்

33. ஆகாசத்தில் பரவிய ஸமுத்ர ப்ரஸங்கம் போன்ற இடைவிடாது பொழிகிற தாரைகளின் செறிவுடைய மேகங் களால் பூமியும் ஆகாசமும் இணைக்கப்பட்டன.

34. அதிவ்ருஷ்டியினுல் கடப்ப கதம்ப ஆர்ஜுன மரங்களுடைய நறு மணங்கொண்டு காமத்தை வளர்க்கும் காற்று பூமியில் வெகு வேகமாக வீசுகிறது.

35. பொழிகிற பெருமழையோடும் தொங்கும் பெரு மேகங்களோடு, ஆழமான அளவுகடந்த ஆகாசமும் ஸமுத்ரத் துடன் கூடியது போல் தோன்றுகிறது.

36. நிர்மலமான மழைத்தாரைகளை யுடையதும் மின்னலாகிற கவசமுடையதும், வானவில் ஆகிற ஆயுதத்தைத் தாங்கியதுமன ஆகாசம் யுத்தத்துக்கு தயாராயிருப்பது போல் தேன்றுகிறது.

37. அழகிய முகமுடைய க்ருஷ்ணா! மலைகள் காடுகள், மரங்கள், இவைகளின் உச்சிகள், கனத்த மேகங்களால் மறைக்கப்பட்டவைகளால் ப்ரகாசிக்கின்றன.

38 யானைக் கூட்டம் போன்ற நீர்சொரியும் மேகங்களால் வ்யாபிக்கப் பட்ட ஆகாசம் ஸமுத்ரத்தின் நிற ஒற்றுமையை யடைகியது.

39. ஸமுத்ரக் கொந்தளிப்பால், தோன்றி அசையும் புற்களை நடுங்கச் செய்து, நீர் துளிகளோடு விரைந்து செல்லும் குளிர்ந்த காற்று பொறுக்கமுடியாதபடி கடுமையாக வீசுகிறது.

40. ஆகாசத்தில் சூர்யன் மறைந்தும் மழைபொழியும் மேகங்களால் இரவில் சந்த்ரனும் (மறைந்து) தூங்கிய போது பத்து திசைகளும் புலப்படவில்லை.

41. எங்கும் கோஷிக்கும் ஆகாசம், ஜீவன் கொண்டு அதி பசியால் முழங்குவது போல் உள்ளது. க்ருகஷிர்கள் பகல் இரவு வேறுபாடு அறிகிறுர்கள். இல்லை.

42. க்ருஷ்ணா! இந்த ப்ருந்தாவனத்தைப் பார்! வெயில் தோஷம் இல்லாதது. மழை நீரால் அலங்கரிக்கப்பட்டது. சைத்ர ரத்வனம் (குபேரன் வனம்) போல் இருக்கிறது.''

43. இவ்விதம், க்ருஷ்ணன் தமயனை ஸ்ரீமான் பலராமன் மழைகால குணங்களை சொல்லிக் கொண்டே ஆய்ச்சேரியை அடைந்தான்.

44. பரஸ்பரம் விளையாடுகிற ராமக்ருஷ்ணர் இருவரும் தங்கள் ஸம வயது தோழர்களுடன் அப்பெரிய வனத்தில் திரிந்தனர்.

**10-ம் அத்தியாயம் முற்றிற்று**

# 11-ம் அத்தியாயம்

## ஸ்ரீக்ருஷ்ணனின் அழகு: யமுனா நதி வர்ணனை காளியன் மடு

1. **ஸ்ரீ வைசம்பாயனர் சொன்னார்**: எல்லோராலும் விரும்பக் கூடிய ரூபத்தையும், அழகிய முகத்தையுமுடைய க்ருஷ்ணன் அப்போது ஒரு ஸமயம் பலராமர் இல்லாமல், அந்த அழகிய காட்டில் ஸஞ்சரித்தான்,

2. சுருண்ட குழல்களுடையவனும், தாமரை இதழ்போன்ற கண்ணையுடையவனும் கார்மேனி கொண்டவனுமான ஸ்ரீமானுகிய க்ருஷ்ணன், ஸ்ரீவத்ஸமருவுடைய மார்பினனுகி, களங்கமுடைய சந்த்ரன்போல் ப்ரகாசித்தான்.

3. தோள் வளையணிந்த கையின் முன்பாகம் மலர்ந்த தாமரையின் காந்தி பெற்றிருந்தது. துள்ளி ஓடும் திருவடிகள். ம்ருதுவாயும் அழகாயும் இருந்தன,

4. தாமரையின் மகரந்தக்கம்பி போன்ற மஞ்சள் சோபையுடையதும், மனிதர்களுக்கு ப்ரீதி கொடுப்பதுமான மெல்லிய வஸ்த்ரங்களைத் தரித்த ஸ்ரீக்ருஷ்ணன் ஸந்த்யாகால மேகம் போல் விளங்கினுன,

5. அவனுடைய புஜங்கள் கன்றுகளைப் பாலிக்கும் தொழிலில் ஈடுபட்டும், அவைகளின் கழுத்துக் கயிறுகளைக் கவனித்துப் பிடித்தும் உருண்டு திரண்டும் தேவதைகளால் பூஜிக்கப்பட்டும், ப்ரகாசிக்கின்றன.

6. பாலனுன இவனது அழகிய (உதடுகள்) கூடிய முகம், வெண்தாமரை போன்ற காந்தியையும், செந்தாமரையின் வாஸனையையும் கொண்டு ப்ரகாசித்தது.

7. அவனது முகமாகிய தாமரை, தொங்கும் குழக்கற்றைகளால், வண்டு வரிசைகளால் சூழப்பட்ட தாமரை மண்டலம் போல் ப்ரகாசித்தது.

8. இவன் தலையில் சூடிய, அர்ஜுன, கதம்ப (வெண்) புஷ்பங்களை உட்புறமும் விளிம்பில் கடப்பப் (கிசுப்பு) பூ மொட்டுகளை கொண்ட மாலை, ஆகாயத்தில் நக்ஷத்ரமாலை போல் விளங்கிற்று.

9. கழுத்தில் அணிந்த அதே மாலையால் கார்மேக வரிசை கொண்ட புரட்டாசி மாதம் போல் ப்ரகாசித்தான்.

10. கழுத்துக் கயிற்றில் தொங்கி ம்ருதுவான காற்றால் அசைகிற ஒரு சுத்தமான மயில் பீலியால் நன்கு விளங்கினான்.

11, 12. வனத்தில் ஓரிடத்தில் பாடியும் ஓரிடத்தில் விளையாடியும் ஓரிடத்தில் சுழன்றாடியும், ஓரிடத்தில் இலைக்குழலைக் கேட்க இனிமையாக ஊதியும், ஓரிடத்தில் பசுக்களின் மகிழ்ச்சிக்காக ஆயர்க்கு உரிய புல்லாங்குழலை தன் இச்சைப்படி இனிமையாக வாசித்தும், யௌவன க்ருஷ்ணன் வனத்தையடைந்தான்.

13. கார்மேக வண்ணனான, காந்திவீசும் லோகநாதன், அந்தக் கோகுலத்தில், விசித்ரமான அழகிய வனத்தை தொடர்களில் விளையாடி அழித்தான்.

14, 15, 16, 17 மயில்களின், த்வனியால், எழுப்பப்பட்ட கோஷமுடையனவும்; காம வ்ருத்திகரமும் மேக த்வனியின் எதிரொலி கொண்டனவும் நாற்புறமும் பசும்புல் மூடிய வழியையுடையனவும், வாழைப் பூக்களால் அழகியனவும், மொட்டுகளுடன் கூடிய அழகிய இலைகளையுடையனவும், ஓடும் நீர் உடையனவுமான அழகிய வனத்தொடர்களில் அடிக்கடி ஸுகந்த பெருமூச்சு விடும் காமினிகளிடத்தில் போல், தன் மதத்தால் மூச்சு விடுவது போன்று வீசும் பூக்களின் நறுமணங்கள் அடர்ந்த மரங்களினின்று வெளிக்கிளம்பின. இளங்காற்றாலும் ஆராதிக்கப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணன் மகிழ்ச்சி அடைந்தான்.

18. அவன் ஒரு ஸமயம் அவ்வனத்தில் பசுக்களுடன் திரிகிறவனாய் மரங்களில் ச்ரேஷ்டமான மிக உயர்ந்த ஒரு மரத்தைப் பார்த்தான்.

19, 20. 21, 22, 23 அது பூமியுல் நிலை பெற்றது. மேகத்தையொத்த நிறம் இலைக் கூட்டங்களால் நெருங்கியது ஆகாயத்தின் பாதிவரை உயர்ந்தது. பர்வதம் போல் விஸ்தார மானது. நீலம் முதலிய பல வர்ணங்களால் அழகு கொண்ட பல பறவைகளுக்கு இருப்பிடம் அடர்த்தியான பழங்களாலும் தளிர்களாலும் இந்த்ர வில் [வானவில்] லோடு கூடிய மேகம் போன்றது. வீடுகள் போன்ற கிளைகளை உடையது. கொடிகளாலும் புஷ்பங்களாலும் அலங்கரிக்கப்பட்டது. விசலமான விழுதுகளால் தணிந்தது. காற்றையும் மேகத்தையும் தடுக்கிறது. அங்குள்ள எல்லா மரங்களுக்குத் தலைமை தாங்குவது போல் உள்ளது. சுபமான கார்யங்களையுடையது. மழையையும் வெயிலையும் தடுப்பது. பர்வத சிகரம்

போன்ற, 'பாண்டீரம்' என்று ப்ரஸித்திபெற்ற அந்த ஆலமரத்தை பார்த்து ப்ரபு ஸ்ரீக்ருஷ்ணன் அங்குதங்க விரும்பினான்.

24. பாபமற்ற ஜனமேஜயரே! அந்த க்ருஷ்ணன் தன்னோடொத்த வயதுடைய, கன்று மேய்க்கும் ஆயர்களுடன் முன்பு பரமபதத்தில் போல நாள்முழுதும் விளையாடி ரமித்தான்.

25, 26, அச்சமயம் பாண்டீரே மரத்தடியில் வசித்து விளையாடும் அந்த க்ருஷ்ணனைக் கோபலர்கள் வன விளையாட்டுகளால் ரமிக்கச் செய்தனர். மன மகிழ்ச்சி கொண்ட வேறு கோபர்கள் நன்றாகப்பாடினார்கள் ஸ்ரீக்ருஷ்ணன் ராஸக்ரீடைகளில் ப்ரீதிகொண்ட இதரகோபர்கள் க்ருஷ்ணனையே பாடினார்கள்,

27. அவர்கள் பாடிக்கொண்டிருக்கும் போதே வீர்யவான் க்ருஷ்ணன், அங்கே இலை ஊதல் புல்லாங்குழல் சுரக்காய் வீணை இவைகளை அவர்கள் பாட்டுக்கு அனுஸரணையாக வாசித்தான்.

28. ஒரு ஸமயம் பசுக்களை மேய்க்கும் க்ருஷ்ணன் பசுக்கள், ரிஷபங்கள் இவைகள் மேல் பார்வை சுயனம் கொண்டவனாகவே கொடிகளால் அலங்கரிக்கப்பட்ட மரங்களையுடைய யமுனைவ கரையை யுடைந்தான்.

29. அலைகளாகிற வளைந்த கடைக்கண் பார்வையும் நீர் ஸ்பர்சயத்தால் குளிர்த்த காற்றையும் தாமரை நெய்தல் பூக்களையும் உடைய அத்த யமுனை நதியை பார்த்தார்கள்.

30, 40. (யமுனைத்தாய்) தெளிந்த நீருடையவள்; ருசியான நீர் கொண்டவள். மடுக்களையுடையவள். வேகமாய்ச் செல்பவள்; நீர், காற்று, இவற்றின் வேகத்தால் வளைக்கப்பட்ட மரங்களை (கரையில்) உடையவள். ஹம்ஸம் நீர்கோழி இவைகளின் கோஷத்தையுடையவள்! ஸாரஸ; பக்ஷியின் இனிய சப்தத்தையுடையவள்; ஜோடியாக ஸஞ்சரிக்கும் சக்ரவாக முதலிய அந்யோந்ய மோகம் கொள்ளும் பறவைகளையுடையவள் ஜல ப்ராணிகளால் நிறைந்தவள், குளிர்ச்சி முதலிய குணமுடையவள்; நீரப்பூக்களால் அழகுடையவள்; ஜலத்தில் உண்டாகும் புல் போன்றவைகளால்; பசுமையாகத் தோன்றும் நீரையுடையவள்; ஓடுகிற ப்ரவாகமாகிற பாதங்களை யுடையவள், மணல் திட்டுகளாகிற ப்ருஷ்ட பாகத்தையுடையவள். சுழல்களாகிற ஆழ்ந்த தொப்புளையுடையவ்ள். தாமரைப் பூ வரிசையாகிற உரோம

வரிசையையுடையவள்; ப்ரவாகத்தால் அறுக்கப்பட்ட கரை ப்ரதேசமாகிற வயிற்றையுடையவள்; அழகியவள்; அலைகளாகிற மூன்று வயிற்று மடிப்புகளையுடையவள்; நுரைகளாகிற புன்சிரிப்புடைய முகத்தைக் கொண்டவள்; தெளிந்த தோற்றமுடையவள்' ஹம்ஸமாகிற சிரிப்பை யுடையவள்; அழகிய செந்தாமரைப் பூவாகிய உதடுகளையுடையவள்; வளைந்த ப்ரதேசங்களாகிற புருவங்களையுடையவள்: தாமரைப் பூக்களாகிற கண்களையுடையவள்; மடுக்களாகிற நீண்ட நெற்றியின் இரு புறங்களை (பொட்டுகளை) யுடையவள்; பாசிக் கொத்துக்களாகிற தலைக்கூந்தலையுடையவள்; இத்தகைய அழகு மிகுந்தவள்; சக்ரவாக பக்ஷி போன்ற கொங்கை ப்ரதேசத்தைக் கொண்டவள்; பக்கத்துக் கரைகள் போன்ற நீண்ட முகத்தையுடையவள்; ஓடுகிற ப்ரவாகமாகிற காதுகளையுடையவள்; நீர்கோழியாகிற குண்டலங்களைக் கொண்டவள்; அழகிய தாமரைகளாகிற கண்களையுடையவள்; கரை மரங்களாகிற ஆபரணங்களையுடையவள்; மீன்களாகிற ப்ரகாசிக்கும் மேகலையையுடையவள்; துள்ளும் அலைகளாகிற வெண்பட்டாடையுடையவள்; ஸாரஸ பக்ஷிகளின் இனிய குரலாகிற சிலம்பொலியுடையவள்; ஹம்ஸங்களுடன் கூடிய கோரைப் புற்களாகிற மஞ்சள் கரை ஆடையையுடுத்தியவள்; பயங்கரமான முதலையாகிற வாசனைப் பூச்சையுடையவள்; ஆமைகளாகிற அழகான அலங்காரம் கொண்டவள்; துஷ்ட ம்ருகங்களாகிற சிரோ பூஷணத்தையுடையவள் மனிதர்களால் குடிக்கப்பட்ட ஸ்தானங்களையுடையவள்; துஷ்ட ம்ருகங்களின் (குடித்த) எச்சில் நீரையுடையவள்; "ரிஷிகள் (ஸாதுக்களான) ஆச்ரமங்களால் நிறைந்தவள். இத்தகைய ஸமுத்ர மஹிஷியான யமுனை நதியைப் பார்த்துக் கொண்டு, க்ருஷ்ணன் அவளை (யமுனையை) ப்ரகாசப் படுத்திக் கொண்டு, ஸந்தோஷமாக ஸஞ்சரித்தான்.

**41-50.** அந்த ச்ரேஷ்டமான நதிதீர்த்தத்தில் ஸஞ்சரிந்துக் கொண்டு மேலான (ஒரு) மடுவைப் பார்த்தான். நீண்டது; குறுக்கே ஒரு யோஜனை (9மைல்) அகலம், தேவர்களாலும் தாண்ட முடியாதது. ஆழமானது. வற்றுத ஜலமுடையது. அசைவற்ற கடல் போன்றது நீரில் உண்டாகும் துஷ்ட ப்ராணிகளால் விடப்பட்டது. தண்ணீரில நடமாடும் பறவைகள் இல்லாதது, ஆழமான தண்ணீரால் நிறைந்தது. மேகம் நிறைந்த ஆகாசம் போன்றது. கரையில் பொந்துகளில் வசிக்கும் பாம்புகளால் (எவராலும்) நெருங்க முடியாதது. ஸர்ப்பத்தின் விஷமாகிற அரணிக்கட்டையிலிருந்து உண்டான நெருப்பின் புகையால் சூழப்பட்டது. பசுக்

களுக்கு உபயோகமற்றது. தண்ணீர் விரும்பும் ப்ராணிகளுக்கு குடிக்கத்தகாதது. மூன்று கால ஸ்நாநம் செய்யும் தேவர்களாலும் விடப்பட்டது. ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் பறவைகளாலும் ஆகாச மார்க்க மாகக் கூடப்போக முடியாதது. ஜலத்தில் புல் விழுந் தாலும் ஜ்வாலை வீசுகிறது. நாலு பக்கமும் ஒருயோஜனை (9மைல்)க்கு அதிக தூரத்துக்குள்தேவர்களாலும்போகமுடியாதது. கோரமான விஷ நெருப்பால் ஜ்வாலை விட்டெரியும் மரங்களை யுடையது. ஆய்ப்பாடிக்கு ஒரு க்ரோசம் (2¼ மைல்) வடக்கில் உள்ளதும், வ்யாதி, சோகம் அற்றதுமான அந்தப் பெரிய மடுவை க்ருஷ்ணன் பார்த்து யோசனை செய்தான் "இந்த ஆழமான ப்ரகாசமுள்ள மடு, எந்த பிராணியுடையது கருப்பு மைத்திரன் போன்ற பயங்கரமான காளியன் எனும் நாகராஜன் தானே வஸிக்கிறான். இவனை எனக்கு முன்பே தெரியும். இவன் பாம்புகளை உணவாகக் கொள்ளும் (பக்ஷிராஜன்) கருடனிடம் பயத்தால், ஸமுத்ர வாஸத்தை விட்டு இங்கு வஸிக்கிறான்"

51-54. அவனால் ஸமுத்ரத்தில் கலக்கிற இந்த யமுனை நதி முழுதும் கெடுக்கப்பட்டுள்ளது. அந்த நாகராஜன் பயத்தால், இந்த இடத்திற்கு ஒருவரும் வருவதில்லை. இந்த மடுவுள்ள காடானது, பயங்கர தோற்றமுடையது. பசும் புல் நிறைந்தது விழுதுடன் கூடிய மரங்களுடையது. பயங்கரமானது நாலுவித கொடிகள் சுற்றிய மரங்களால் நிறைந்தது. நாகராஜன் ஆப்த மந்திரிகளால் ரக்ஷிக்கப் பட்டது அந்த வனம் சூன்ய ப்ரதேசமாகத் தோற்றமது. விஷம் கலந்த அன்னம் போல் தொட முடியாதது. அந்த ஆப்தர்களால் நாற்புறமும் எப்பொழுதும் நன்கு ரக்ஷிக்கப் பட்டது.

55. இந்த மடுவின் இருகரைகள் பாசிக் கொத்துக்களாலும் தாமரைகளாலும் சிறு கொடிகள் படர்ந்த மரங்களாலும் (மறைக்கப்பட்டு) வழிதேடும் படியாய் இருக்கின்றன.

56. ஆகையால் இந்த நாகராஜனுடைய நிக்ரஹம் என்னால் செய்யத்தக்கது. அதனால் இந்த நீர் நிறைந்த யமுனா நதி மங்கள மான மடுவுடையதாக ஆகும்.

57. என்னால் இந்த நாகம் அடக்கப்பட்ட பின் (இந்த நதி) கோகுலத்தால் அனுபவிக்கக் கூடியதும் எங்கும் ஸுகமாக ஸஞ்சரிக்கத் தகுந்ததும் எங்கும் நீர் உபயோகிக்க கூடியதும் ஆகும்.

58. இந்த ஆய்க்குல வாஸமும் ஆய்க்குலம் பிறப்! இதற்காகத் தான் வரம்பு மீறித் தவறு செய்யும் இந்த துராத்ப களின் நிக்ரஹத்துக்காகவே.

59. இந்தக் கதம்ப மரத்தில் ஏறி அப்போது (முன்பே குழந்தை விளையாட்டிலேயே காளிங்கனை மடுவில் தள்ளி ந தண்டிப்பேன்,

60. இப்படி செய்யப்பட்ட போது என் புஜபராக்ர உலகில் ப்ரஸித்தியடையும்.

11ம் அத்தியாயம் முற்றிற்று

## 12ம் அத்தியாயம்

## காளியனை சிக்ஷித்தல்

**வைசம்பாயனர் சொன்னார் :** அவன் நதிக்கரையையடைந் கச்சம் இழுத்துக் கட்டி ஊக்கமுடையவனாய் ஸந்தோஷத்துட கதம்ப மரத்தின் உதசியை ஏறினான்.

2. தாமரைக் கண்ணன், கார்மேனி க்ருஷ்ணன், கதம்ப உச்சியிலிருந்து தொங்கி, மடு நடுவில் குதித்து சப்தம் செய்தா

3. அங்கு வேகமாக குதிக்கும் க்ருஷ்ணனால் யமுனை கலக்கப்க்ட்டது. பிளக்கப்பட்ட மேகம் போல் அதன் தண்ண கரை புரண்டது.

4. அந்த சப்தத்தால், ஸர்ப்பத்தின் பெரிய வீடு நன் கலக்கப்பட்டது. கோபத்தால் கலங்கிய கண்களுடைய ஸர்ப் தண்ணீரிலிருந்து மேல் கிளம்பிற்று

5. பிறகு மேகக்கூட்டம் போன்ற காந்தியுடைய நாகராஜ காளியன், கோபங்கொண்டு முற்றிலும் ரத்தச் சிவப்புடை கண்ணனாய்க் காணப்பட்டான்.

6. ஐந்து முகங்களுடையவன்; அனல் வீசும் மூச்சுடையவ அசையும் நாக்குடையவன்; தீமுகத்தன், பரந்த, பெரிய பயங் மான படங்கள் ஐந்துடையவன்,

7. அக்னி காந்தியுடைய சரீரத்தால் மடு அடைய வளைத் கோபத்தால் துடித்தும் தேஜஸ்ஸால் ஜ்வலித்தும் தோன்றினன்

8. ஜ்வலிக்கும் அவனுடைய கோபத்தால் தண்ணீர் கொதிப்பது போலாயிற்று. யமுனு நதியும் பயந்தவள் போல் திசைமாறிச் சென்றுள்.

9. அவனுடைய கோபாக்னி நிறைந்த முகங்களிலிருந்து காற்று வீசியது. மடுவை அடைந்து குழந்தை விளையாட்டு விளையாடும் க்ருஷ்ணனை நோக்கி நாகராஜனுடையமுகத்திலிருந்து புகையுடன் கூடிய அக்னி ஜ்வாலைகள் கிளம்பின.

10. யுக முடிக்கும் காலன் போல் கோபக்னி வீசும் அவனுல் பக்கத்தில் கரையிலுள்ள மரங்கள் ஒரு விநாடியில் சாம்பலாக்கப் பட்டன.

11, 12 அவனுடைய அளவற்ற காந்திகொண்ட, மனைவிகள் புத்ரர்கள் பணி செய்வோர் பருத்த நாக ஸ்ரேஷடர்கள் ஆகிய அந்தப் பாம்புகள் பயங்கர விஷாக்னியை முகத்திலிருந்து கக்கிக் கொண்டு வெளிக்கிளம்பின.

13. எல்லா பாம்புகளின் உடல் வளையத்துக்குள் சிக்கும்படி செய்யப்பட்ட க்ருஷ்ணன் அசைவற்ற மலைபோல் அசைக்காத கால் முதலிய அங்கங்கள் கொண்டவன் ஆனுன்.

14. விஷப்பெருக்கு ஜலம் கொண்ட கூரிய பற்களால் அந்த நாகத் தலைவர்கள் க்ருஷ்ணனைக் கடித்தனர். வீர்யவான் க்ருஷ்ணன் இறக்கவில்லை.

15. இச்சமயம் பயங்கொண்ட அந்த எல்லா கோபர்களும் கண்ணீரால், தழுதழுத்த குரலுடன் அலறிக் கொண்டு கோகுலத் துக்கு ஓடினுர்கள்.

16. கோபாலர்கள் சொன்னுர்கள். இந்தக்ருஷ்ணன் மூர்ச்சை யடைந்து விட்டான். காளிய மடுவில் மூழ்கி விட்டான்; நாக ராஜனுல் உண்ணப்படுகிருன். ஆகையால் வாருங்கள் தாமஸம். வேண்டாம்.

17. ''இந்த உன் க்ருஷ்ணன் பெரிய மடுவில் ஸர்ப்பத்தால் இழுக்கப்படுகிருன்'' என்று பக்கபலத்துடன் கூடிய நந்தகோபனுக் குத் தெரிவிக்க படட்டும்.

18 நந்தகோபன் இடி விழுந்தாற் போன்ற அந்த வார்த்தை யைக் கேட்டு. மன வருத்தமும் உடல் சோர்வும் அடைந்து அந்த மேலானமடுவைச் சேர்ந்தான்.

19. குழந்தைகள், பெண்கள் இவர்களுடன் கூடிய அந் யுவர் ஸங்கர்ஷணனும் ஜலத்துக்குள் இருக்கும். நாகராஜனுடை விளையாட்டு பூமியை (மடுவை) அடைந்தான்.

20. நந்தகோபன் முதலிய அந்த எல்லா ஆயர்களும்கண்ணீ நிறைந்த கண்களுடன் ''ஹா! ஹா'' என்று கூவிக் கொண் மடுவின் கரையில் நின்றனர்-

21-24. வெட்கமும், ஆச்சர்யமும், சோகமுமடைந்த சில அடிக்கடி ''ஹா! குழந்தே!'' ஹா! நாகராஜன் ஒழிக!'' என்று மற்றும் சிலர் ''நாங்கள் கொல்லப்பட்டோம்'' என்றும் மிக் துக்கமடைந்தவர்களாய் அழுதார்கள்.பெண்களும் யசோதையை பார்த்து ''நீ கொல்லப்பட்டாய்'' நாகராஜ வசப்பட்டவனு அவன் உடலால் சுற்றப்பட்டவனும் இழுக்கப்பட்டு இறந்தவ போலிருப்பவனுமாகிய இந்தப் பிள்ளையைப் பார்த்து என் உட பிளக்கப்படவில்லை உன் ஹிருதயம் நிச்சயம் கல்மயமானது என்று சொன்னார்கள்.

25. ''பிள்ளையின் முகத்தைப் பார்த்து துக்கமடைந்த தன் நினைவற்று மடுக்கரையிலிருக்கும் நந்தகோபனைப் பார்போம்.''

26. யசோதையைப் பின் தொடர்ந்து பாம்பு வாசஸ்தான மான இந்த மடுவில் இறங்குவோம் தாமோதரனில்லாமல் ஆய் பாடிக்குப்போக மாட்டோம்.

27. சூர்யனில்லாமல் பகல் என்ன? சந்தரன் இல்லாமல் இர என்ன? ரிஷபமில்லாமல் பசுகளென்ன? க்ருஷ்ணனில்லாமல் ஆய் குலம் என்ன? கன்றுகள் இல்லாத பசுக்கள் போல் க்ருஷ்ணனி லாமல் போக மாட்டோம்'' என்றனர்.

28, 29. தானும் க்ருஷ்ணனும் ஒரே பாவங்கொண்ட இரண் சரீரங்கள் என்றும் ஒரே உடல் இரண்டாகியது என்றும் அறிந் ஸங்கர்ஷணன் கோபிகள் ஆயர்கள், நந்தகோபன் இவர்களின் புலம்பலையும் யசோதையின் அழுகையையும் கேட்டு மிக்க கோப கொண்டு அறிவில்லா க்ருஷ்ணனைப் பார்த்துச் சொன்னான்.

30. ''க்ருஷ்ணு! க்ருஷ்ணு! மஹத்தான தோள்வலிமை யுடையவனே! கோபர்கள் ஆநந்தத்தைப் பெருக்குபவனே! விஷத்தை ஆயுதமாகவுடைய இந்த நாகராஜன் சீக்ரம் தண்டிக்கப்படட்டும்.

31. ப்ரிய தம்பீ! ப்ரபுவே! மனித புத்தியுடைய இந்த நம் எல்லா பந்துக்களும் உன்னை மனிதனுகவே நினைத்து எவரும் இரங்கும்படி புலம்புகிறார்கள்.''

32. குறிப்பாகக் கூறப்பட்ட பலராமனுடைய வார்த்தையைக் கேட்டு (க்ருஷ்ணன்) உத்ஸாஹத்துடன் கிளம்பி பாம்புக்கட்டை விலக்கித் தோள் தட்டினன்.

33. பிறகு, ஜலத்திலிருந்து வெளிக்கிளம்பிய பாம்பின் உடல் சுருளை தன் திருவடியால் நன்கு மிதித்தமுக்கி, தன் கையால் அதன் தலையை வளைத்துப் பிடித்தான்.

34 உடனே அதனுடைய பெரிய நடுத்தலையில் ஏறினன். அந்த க்ருஷ்ணன் அதன் தலையில் அழகிய தோள்வளைகளையுடை யனாய் நடனமாடினன்.

35. க்ருஷ்ணனால் நசுக்கப்பட்ட அப்பாம்பு படம் அடங்கி ரத்தத்தைக் கக்கும் வாய்களால் நடுங்கிக் கொண்டு வார்த்தை சொன்னன்.

36 'சுந்தர முகத்தையுடைய க்ருஷ்ணு! என்னால்அறியாமை யால் இந்தக் கோபம் நன்கு காட்டப்பட்டது. நசுக்கப்பட்ட நான் விஷமடங்கி உனக்கு வசப்பட்டேன்.

37. நான், குழந்தைகள்! பந்துக்களுடன் எப்போதும் என்ன அடிமை செய்வது, யாருக்கு வசப்படுவது என்பதை, நியமிக்க வேண்டும், எனக்கு உயிர் பிச்சை கொடுக்கப்படட்டும்''

38 ஸர்ப்ப சத்ருவை (கருடனை) கொடியாகவுடைய க்ருஷ்ண பகவான், ஐந்து தலைகளாலும் வணங்கும் நாகராஜனைப் பார்த்து, கோபங்கொள்ளாமலேயே பதில் கூறினன்,

39. 40. ''ஸர்ப்பமே உனக்கு இந்த யமுனை நீரில் இடத்தை நான் கொடுக்கவே மாட்டேன். மனைவியுடனும் பந்துக்களுடனும் ஸமுத்ர ஜலத்தைஅடைவாயாக. உன்னுடைய சேவகன், மகன்

ஆகிய எவனொருவன் மறுபடியும் இந்த இடத்திலோ ஜலத்திலோ காணப்படுவானோ அவன் என்னால் சீக்ரமே கொல்ல(ப்பட)த் தகுந்தவன் ஆவான். இந்த ஜலத்துக்கு மங்களம் உண்டாகட்டும். நீயும் ஸமுத்ரத்துக்குப் போய் சேர். இந்த இடத்திலோ உனக்கு முடிவை உண்டாக்கும் பெருங் குற்றம் உண்டாகும். ஸர்ப்பமே உன் தலைகளில் என் பாதங்களைக் (அடையாளங்களை) கண்டு நாக சத்ருவான கருடன் ஸமுத்திரத்தில் உன்னை துன்புறுத்த மாட்டான்!

நாகச்ரேஷ்டனோ க்ருஷ்ணனுடைய திருவடிகளை தலையால் தரித்து, கோபர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போது மடுவிலிருந்து சென்று மறைந்தான். ஜயிக்கப்பட்ட ஸர்ப்பம் சென்றதும், மடுவின் கீழிருக்கும் க்ருஷ்ணனைத் தூக்கி ஆச்சர்யமடைந்த கோபர்கள் துதித்தனர். வலமும் வந்தனர். கோபர்கள் எல்லோரும் மிக்க ப்ரீதியுடையதாய் நந்தகோபனைப் பார்த்துச் சொன்னார்கள், "இத்தகைய மகனைப் பெற்ற நீர் பாக்யசாலியாயும் அனுக்ரஹிக்கப்பட்டவராயும் இருக்கிறீர். பாபமற்றவரே நீண்ட கண்களுடைய க்ருஷ்ணன், இன்று முதல் கோபர்களுக்கும், பசுக்களுக்கும், ஆய்ப்பாடிக்கும், ஆபத்துகளில் புகலிடமும் ஸ்வாமியுமாவான் முனிகளால் ஸேவிக்கப்பட்ட யமுனை முழுதும் மங்களமான ஜலத்தையுடையதாயிற்று இந்த யமுனையின் கரையிலும் நம் பசுக்கள் எப்போதும் ஸஞ்சரிக்கும். ஆய்ப்பாடியில் இத்தகைய க்ருஷ்ணனை கோபர்களாகிய நாம். 'மகத்தானவன்' என்று மறைக்கப்பட்ட நெருப்பைப் போல், தெளிவாக அறியவேயில்லை.

41. இவ்விதம் ஆச்சர்ய மடைந்த அந்த எல்லா கோபர் கூட்டங்களும் அழிவற்ற க்ருஷ்ணனைத் துதித்துக்கொண்டு, தேவர்கள் சைத்ராத வனத்தைப் போல் ஆய்ப்பாடியை அடைந்தனர்,

## 12-ம் அத்தியாயம் முற்றிற்று

## 13-ம் அத்தியாயம்

## பலராமர் மூலம் தேனுகாஸுரன் வதம்

1. **வைசம்பாயனர் சொன்னார் :** க்ருஷ்ணனால் யமுனை மடுவில் நாகராஜன் அடக்கப்பட்டபின், பலராமனும் க்ருஷ்ணனும் சேர்ந்து, அந்த இடத்தில் ஸஞ்சரித்தனர்,

2. கோதனங்களுடன் ஒன்று கூடியே செல்கின்ற அந்த வஸுதேவபுத்ரர் இருவரும் அழகிய கோவர்த்தன மலையை அடைந்தனர்

3. கோவர்த்தன மலைக்கு வடக்கில் யமுனைக் கரையிலுள்ள பெரிய அழகிய பனங்காட்டை அந்த வீரர் இருவரும் கண்டனர்.

4. காளைக்கன்றுகள் போல் உற்றத் தோற்றமுடைய அவ்விருவரும் மிகுந்த ப்ரீதியுடையவர்களாய் அடர்ந்த ஓலைகளுடைய பனைகளைக் கொண்ட அழகிய பனங்காட்டில் மகிழ்ச்சியுடன் ஸஞ்சரித்தனர்.

5. அந்த இடமோ, எப்பொழுதும் குளிர்ந்து ம்ருதுவானது. கரள்கற்கள் அற்றது, பாய் விரித்தார் போல் தர்ப்ப புற்கள் பரந்துள்ள நல்ல இடம் மிக விஸ்தாரமானது கருப்பு மண் உடையது.

6. பரந்த மட்டைகளுடையதும், உயர்ந்தனவும், கருநிறக் கணுக்களுடையதும், கீழ்முனையில் பழங்களுள்ள மட்டைகளைக் கொண்ட, பனை மரங்களால், உயர்த்தப்பட்ட யானைத் துதிக்கைகளால் போல், அந்த இடம் விளங்குகிறது.

7. 8. 9. அங்கு வாக்வல்லவன் தாமோதரன், வார்த்தைகளைச் சொன்னான். ''மதிப்பிற்குரிய அண்ணா! பழுத்த பனம் பழங்களால் இந்த வனப்ரதேசம் நறுமணம் வீசுகிறது. ஆச்சர்யம். ருசியுள்ள, ரஸமுள்ள, நறுமணம் வீசும், கருநிற பனம் பழங்களை இருவரும் கட்டி ஸுலபமான வழியில் தள்ளுவோம் பழங்களுக்கு இனிமையால் மூக்கை த்ருப்தி செய்யக்கூடிய இத்தகைய வாஸனை இருக்குமேயானால் இவை அம்ருதம் போன்ற ருசியுடையதாக இருக்க வேண்டும் என்பது என் அபிப்ராயம்.'

10. தாமோதரன் வார்த்தையைக்கேட்டு பலராமன் சிரித்துக் கொண்டே, கனிந்த பழங்கள் வ்ழும்படி அந்த பனை மரங்களை அசைத்தான்.

11, 12. அந்த பனங்காடு மனிதர்கள் நெருங்க முடியாதது, தாண்ட முடியாதது. உவர் பாலைவனமாகவே ச்ருஷ்டிக்கப்பட்டது. நரமாம்ஸ பக்ஷிகளின் இருப்பிடம் போன்றது. அதில் கழுதை உருவம் பூண்ட கொடிய தேனுகன் எனும் அஸுரன், பெரீய கழுதைக் கூட்டத்தால் சூழப்பட்டு ஸ்திர வாஸம் பண்ணுகிறான்.

13 மிகவும் துர்புத்தியுள்ள அவன் கழுதை உருவம் கொண்டு மனிதர், பறவை, காட்டு ம்ருகங்களின் கூட்டங்களை நடுங்கச் செய்து, பனங்காட்டைப் பரிபாலிக்கிறான்.

14 அவன். பனம் பழம் தள்ளுவதால் நன்கு ஒலித்த பனை யின் சப்தத்தைக்கேட்டு கோபங் கொண்டான். அவன் கொட்டு சப்தம் கேட்ட யானை போல் பொறுக்கவில்லை.

15. 16. சப்தத்தை நோக்கி, கோபங் கொண்டு கர்வத்தால்; உதறின பிடரியுடைய முகத்துடனும், இமை கொட்டாத விழி யுடனும் பலமாகக் கனைத்து குளம்புகளால் தரையை வெட்டி, தூக்கின வாலுடன் மகிழ்ந்து, பிளந்த வாயுடைய யமன் போல் ஓடிவந்து கொண்டே பக்கத்திலிருக்கும் பலராமனைப் பார்த்தான்.

17. 18. பற்களை ஆயுதமாகவுடைய கொடிய துஷ்டனுன அந்த தேனுகன், பனையாகிற தன் த்வஜம் போன்ற உருவமுடைய, அழிவற்ற அந்தப் பலராமனை, பனை மரங்களின் கீழ் பார்த்துக் கடித்தான். மறுபடியும் அந்த அஸுரபதி, பின்புறம் திரும்பி, தன் இரண்டு பின் கால்களாலும், ஆயுதமற்ற பலராமனை மார்பில் உதைத்தான்.

19. அவன் (பலராமன்) வளைத்த கழுத்தையும், முகத்தையும் உடைய அந்த அஸுரக் கழுதையை, பனை உச்சியில் எறிய, அந்த (உதைத்த) இரண்டு கால்களையே பிடித்தான்.

20. ஒடிந்த துடை இடுப்பு கழுத்து முதுகு, இவைகளுடைய விகார ரூபமுள்ள கொடிய அஸுரன், பனம் பழங்களுடன் பூமி யில் விழுந்தான்.

21. உயிர் நீங்கி, அழகிழந்து கீழே விழுந்த அந்தக் கழுதை யைப் பார்த்து, அவன், அதன் பந்துகளாகிற மற்றவைகளையும் அதே மாதிரி பனை மரத்தில் வீசி எறிந்தான்.

22. அந்த பூமி, கழுதை உடல்களாலும், தள்ளப்பட்ட கனிந்த பனம் பழங்களாலும்' தனித்தனி தோன்றும், மேகங்கள் கொண்ட, தெளிவற்ற சரத்கால ஆகாசம் போன்று விளங்கியது.

23. அந்தக் கழுதை அஸுரன் பந்துக்களுடன் கொல்லப் பட்டதும், அந்த அழகிய பனங்காடு மேலும் அழகாக விளங்கிற்று

24 பயம் அடியோடு விலக்கப்பட்டு, சுத்தமானதும் மிகத் தெளிவான தோற்றமுடையதுமான அந்த உத்தம வனத்தில், பசுக்கள் ஸுகமாகத் திரிந்தன.

25. பிறகு, வன ஸஞ்சாரிகளான அந்த எல்லா ஆயர்களும் வருத்தம், பயம் களைப்பு நீங்கியவர்களாய், நாற்புறமும் சுற்றித் திரிந்தனர்.

26. பின்பு, பசுக்கள் பிரிந்து, ஸௌக்யமாக மேயும் போது, கஜராஜ பராக்ரமமுடைய அவ்விருவரும், மர இலைகளான, ஆஸனத்தில், முறைப்படி உட்கார்ந்தனர்.

**13ம் அத்தியாயம் முற்றிற்று**

## 14ம் அத்தியாயம்

## பலராமனால் ப்ரலம்பாஸுரவதமும் — பலராமனுக்கு தேவர்களால் 'பலதேவ' பட்டமும்

1. **வைசம்பாயனர் சொன்னார் :** பிறகு மகிழ்ச்சி கொண்ட அந்த வஸுதேவ குமாரர் இருவரும், அந்த பனங்காட்டை விட்டு மறுபடியும் 'பாண்டீர' ஆலமரத்திற்கு வந்தார்கள்.

2. மிக வ்ருத்தியடைந்த 'மங்களமான பசுச் செல்வங்களை மேய்த்துக் கொண்டும் நன்கு படர்ந்து வளர்ந்த பயிர்களையுடைய வனங்களைப் பார்த்துக் கொண்டும், சத்ருக்களைத் தபிக்கச் செய்யும் அவர்கள் சீட்டியடித்துக் கோஷித்துக் கொண்டும், நன்கு பாடிக் கொண்டும், மரங்களை (புஷ்பம்பழம், தழை,இலைகளுக்காக) தேடிக் கொண்டும், கன்றுகளுடன் கூடிய பசுக்களைப் பேர் சொல்லிக் கூவிக் கொண்டும் நல்ல அழகுள்ள தோள்களில், மாடு கட்டும் கயிறுகளைப் போட்டுக் கொண்டும், மார்பில் திருத்துழாய் மாலை யணிந்தும், முளைக்கும் கொம்புகளுடைய (இளம்) காளைகளை போன்றும், தங்கப்பொடி, மைப்பொடி போன்ற காந்தியுடனும் ஒருவருக்கொருவர் திருமேனிக்குத் தக்க உடை அணிந்தும், இருவரும் தோற்றத்தில் வானவில்லையொத்தும், வெண்மேகம் கரு மேகம் போன்று காட்டு வழியில் தர்பப்புல் முனைபோன்ற புஷ்பங்களை காதுகளில் நிறைத்து இனிய தோற்றம் கொண்டும் காட்டும் பொருள்களால் தங்களை அலங்கரித்தும் உலகத்திலுள்ள விளையாட்டுக்களில் (எவராலும்) ஜயிக்கப் படாதவர்களாகி ஆயர்கள் பின் தொடர கோவர்த்தனமலையின் பக்கல் ஸஞ்சரித்தனர்.

8. தேவர்களால் பூஜிக்கப்பட்ட அவ்விருவரும் இவ்விதம் மனிதத் தன்மையை வ்ரதமாகவுடையவர்களாய் அந்த மனிதஜாதி குணத்தோடு கூடிய விளையாட்டுகளுடன் வனத்தில் ஸஞ்சரித்தனர்.

9. அவர்கள் பிள்ளை விளையாட்டுகளில் ஈடுபட்டு பாண்டீரே ஆலமரத்தில் தங்கி இளைப்பாறி உயர்ந்த கிளைகள் நிறைந்த மேலான வள்ளி மரத்தையடைந்தனர்.

10. அங்கு ஊஞ்சல் விளையாட்டுகளாலும் வீசியெறியும் கறிகளாலும், போர் முறைகளில் சிறந்த அவர்கள் உடல் பயிற்சி செய்தனர்.

11. ஸிம்ஹம் போல் பராக்ரமம் வாய்ந்த அவ்விருவரும், கோபாலர்களுடன் கூடி மகிழ்ந்து பலவித போர் முறைகளால் இஷ்டப்படி விளையாடினர்.

12, 13 அவர்கள் விளையாடி கொண்டிருக்கும் போதே ஸமயம் பார்த்து, அவர்களைத் தூக்கிப் போக விரும்பி காட்டுப் பூக்களைச் சூடி கோபால வேஷம் பூண்டு, அந்த வீரர்களை, சிரிப்பூட்டியும் விளையாட்டுகளால் மகிழ்வூட்டியும் அஸுரோத்தமன் ப்ரலம்பன் வந்தான்.

14. மனிதனல்லாத அஸுரோத்தமன் ப்ரலம்பன் மனிதவுடலெடுத்து, கோபாலர் மத்தியில், ஸந்தேகிக்க இடமில்லாமல், நுழைந்தான்.

15. அந்த எல்லா கோபர்களும் கோப சரீரம் கொண்ட (ப்ரலம்பனை) தம் பந்துவாகவே நினைத்து அவ்வஸுரனுடன் நன்கு விளையாடினார்கள்.

16. கோபர் வேஷங்கொண்ட அப்ரலம்பனும், தக்க ஸமயம் எதிர்நோக்கி க்ருஷ்ணனிடத்திலும் ரோஹிணீ புத்ரனிடத்திலும், கொடிய பார்வையைச் செலுத்தினான்.

17. அஸுரசிகாமணியான ப்ரலம்பனும் ஆஸ்சர்ய பராக்ரமமுடைய க்ருஷ்ணனைத்தான் சண்டையிட முடியாதவனாகநினைத்து, பிறகு பலராமன் வதத்தில் முயற்சி செய்தான்.

18, 19. பிறகு ஹரிணாகரீடனம் (கை கால்களை ஊன்றி மான் போல துள்ளியோடி, தோற்றவன், ஜயித்தவனைச்சுமந்து ஒருதூரம் போதல்) என்கிற குழந்தை விளையாட்டை ஆடுகிற அவர்கள் எல்லோரும் இரண்டுஇரண்டு பேராகச் சேர்ந்து, ஒரே ஸமயத்தில் கிளம்பினார்கள். க்ருஷ்ணன் ஸ்ரீமாலிகளுடன் சேர்ந்து துள்ளியோடினான்.

20. பாபற்ற ஜனமே ஜரே! பலராமனே ஆய்ப்பாலன் வேடம் பூண்ட ப்ரலம்பனுடன் துள்ளியோடினன் மற்ற கோபர்களும்வேறு கோபர்களும் பரஸ்பரம் விரைவான கதியுடன் தாண்டி ஜோடி ஜோடியாக ஓடினார்கள்.

21, க்ருஷ்ணன் சீமாலிகனை ஜயித்தான் பலராமன் ப்ரலம்பனை ஜயித்தான க்ருஷ்ணன் கபசியைச் சேர்ந்தவர்கள் மற்றவர்களை ஜயித்தனர்.

22. அவர்கள் ஒருவருக்கொருவர் தோற்றவரைச் சுமக்கச் செய்து கொண்டு மிக்க மகிழ்ச்சியுடன் பண்டீரக் கிளையைக் எல்லையாகக்குறித்து ஓடி உடனே திரும்பி வந்தனர்.

23. ப்ரலம்பாஸுரனே பலராமனைத் தோளில் விரைவாக தூக்கிக் கொண்டு வேறு திசை குறித்து சந்த்ரனுடன் கூடிய மேகம் போல் வேகமாகச் சென்றான்.

24. அந்த அஸுரன், அந்த புத்திமான் பலராமனனுடைய பாரத்தைத் தாங்க முடியாமல் அதற்காக இந்த்ரனைத் தாங்கும் மேகம் போல் பெரிதாக்கிக் கொண்டான்

25 அஸுர ஶ்ரேஷ்டன் ப்ரலம்பன் காய்ச்சிச் சேர்ந்தமை மலையையொத்த ஒளியுடைய பாண்டீரே வருக்ஷம் போல் தன் உடலைத்தோற்றுவித்தான்.

26, 28 மலர்ந்த பூக்கொத்துகள் சேர்த்த சூர்யன் போல் ப்ரகசிக்கும் க்ரீடத்தினால் விளங்கும் முகத்தையுடைய அஸுரன், சூர்யனைச் சுமக்கும் மேகம் போன்றும் பெரிய முகம் பெரிய கழுத்துவுடைய பெரிய உருவத்துடன் யமனைப் போன்று பயங்கரமாயும் வண்டிச் சக்ரம் போன்ற கண்களும் கால்களால் பூமியைப் பெரிய பள்ளமாக்கி வளைத்துத் தொங்கும் சிரோ மாலையைப் பீஷணமாகக் கொண்டும்; தொங்கும் வஸ்த்ரங்களையும் ஆபரணமாகக் கொண்டும், இத்தகைய வீரன் ப்ரலம்பன் நீர் கனத்துத் தொங்கும் மேகம் போல் வேகமாகச் சென்றான்.

29 பிறகு ப்ரளயார்ணவத்தில் சிக்கித் தவிக்கும் பலராமனை அந்த மஹாஸுரன் முழு உலகத்தைக் கொள்ளும் யமன் போல் அபஹரித்து ஓடினன்.

30. ப்ரலம்பனால் அபஹரித்துச் செல்லப்படும் பலராமன் ஆகாயத்தில் கார்மேகத்தால் சுமக்கப்படும் சந்த்ரன்போல் ப்ரகாசித்தான்.

31. அஸுரன் கழுத்தின் மேலுள்ள அந்த ஸ்ரீமா- பலராமன் தன்னை ப்ராண ஸம்சயமடைந்தவனாக நினைத்தான் அப்போது க்ருஷ்ணனைப் பார்த்து இதைச் சொன்னான்.

32, 33 ''க்ருஷ்ணா! மனிதருபம் கொண்டு பெரிய மாலை மலைபோல் உயர்ந்த அஸுரனால் நான் அபஹரிக்கப் படுகிறேன் திமிரால் இரட்டித்த காந்தியையுடைய கெட்ட உள்ளங்கொண்ட மிக்க பலவானான இவனை எவ்விதம் அடக்குவது''

34. பலராமனின் சரிதத்தையும், பலத்தையுமறிந்த க்ருஷ்ணன் புன் சிரிப்புடன் மிக்க மகிழ்ச்சியுடன் கூடியஸமாதான வார்த்தைகளைச் சொன்னான்.

35, 40 ''ஆச்சர்யம்! இந்த மனிதத் தன்மை தெளிவாக உன்னால் காட்டப்படுகிறது. போதும் நீ உலக மயமான பரம ரஹஸ்யமான தேவனாயிருக்கிறாய் உலக மழியும் காலத்தில் நீ நாராயண ஸ்வருபியாயிருப்பதை நினைவு கொள் ஸமுத்ரங்கள் பொங்கி ஒன்று சேரும்போது பரமாத்மாவாகிய உன்னை நீயே என்று இப்போது தெரிந்து கொள்.

பழைய தேவர்கள், பரஹ்மா, ஜலம் உன் சரித்திரம் பெருமை இவைக்கெல்லாம் மூலகாரணமான உன் திருமேனியை நீ நன்கு நினைவு கொள் ஆகாசம் உன்தலை; ஜலம் உன் உடல் பூமி உன் பாதங்கள் அக்னி உன் முகம்; லோக ஜீவனகாரணமான வாயு உன் மூச்சு; சந்த்ரன் உன் மனது இவ்விதம் எல்லாம் உனக்கு ஆனது ஆயிரம் வாய் ஆயிரம் உடல் ஆயிரம் கைகள், ஆயிரம் கண்கள் ஆயிரம் தாமரைகள் உனது நாபியில் ஆயிரம் கிரணங் களுடைய சூர்யனை (சக்ராயுதமாக) தரித்து சத்ருக்களை வெல்பவன் நீ உன்னால் எது முன்னதாகச் சொல்லப்படவில்லையோ அதை எவன் தேடியறிய முடியும்.

41, 49 இந்த உலகில் எது அறியப்பட வேண்டியதோ அது முன்னர் உன்னால் சொல்லப்பட்டது உன் ஒருவனாலேயே எது அறியப்பட்டதோ அதைத் தேவர்களும் அறியார்கள் உனது பரமாகாசத்திலுள்ள பரமாத்ம ஸ்வரூபத்தை தேவர்கள் பார்க் கிறார்கள் இல்லை, உனது (செயற்கையான) அவதார மூர்த்தியைத் தேவர்கள் அர்ச்சிக்கின்றனர். உன்து முடிவு தேவர்களாலும் காணப்படாதது அதனால் நீ அநந்தன் (முடிவற்றவன்) என்று அறியப்படுகிறாய் நீ ஸூக்ஷ்ம ரூபி;ஒப்புயர்வற்றவனும் நீ ஸூக்ஷ்ம

மமான இந்த்ரியங்களாலும் அறியப்படாதவன். நீயே உலகுக்கு ஆதாரத்தூண் உன்னிடத்திலேயே இந்த உலகம் நிலை நிறுத்தப் பட்டுள்ளது ப்ராணிகளின் உத்பத்தி ஸ்தானமாகிற இந்த உலகை முழுதும் உன்னுல் நிரந்தரமாகத் தாங்கப்படுகிறது நான்கு ஸமுத் ரங்களும் உனது உடல் நான்கு வர்ணங்களை பிரிவை அறிந்தவன். நீ நான்கு யுகங்களிலும் உலகங்களின் சாதுர்ஹோத்ர யக்ஞ பலனை அனுபவிக்கிறவன் நீ. உலகங்களுக்கு நான் எப்படியோ நீயும் அப்படியே. அது என் கொள்கை. நாம் இருவரும் ஒரே சரீர முடையவர்கள். உலகிற்காக இரண்டாயிருக்கிறோம். நானே சாஸ்வதமான க்ருஷ்ணன் (விஷ்ணு) நீயோ பழையான சேஷன் (ஆதிசேஷன்) நீ உலகங்களுக்கு நிலையான, நிரந்தரமான ஆதர பூதன் சேஷனல்லவா! இந்த உலகம் நம்முடைய தேகத்தாலேயே இரண்டாகத் (சேதன சேதனமாக) தரிக்கப்படுகிறது. எவன் நானோ, அவன் நீ; நீ யாரோ, அவன்தான் நான். (அழிவற்றவன்); நாம் இருவருமே பெரும் பலத்தையுடைய இரண்டு தேகங்களாக ஆயிருக்கிறோம். நீ ஏன் தெரியாதவன் போல் இருக்கிறாய்? தேவ சத்ருவான அஸுரனை (மூச்சடக்க) வஜ்ராயுதம் போன்ற முஷ்டி யால் தலையில் அடித்துக் கொல்.

50. **வைசம்பாயனர் சொன்னார்:** மூவுலகுள்ளும் ஸஞ்சரிக்கிற க்ருஷ்ணனால் பழைய ரஹஸ்யத்தை நினைவூட்டப்பட்ட பலராமனும், அப்போது சக்தியால் நிரப்பப்பட்டான்.

51. பிறகு மிக்க புஜபலம் பெற்ற பலராமன் வஜ்ராயுதத் துக்கு ஸமமாக பிடிக்கப்பட்ட முஷ்டியால் இந்த அயோக்யன் ப்ரலம்பனை நன்கு கொன்றான்.

52. அஸுரனின் தலை, தன் உடலில் மண்டையோடு வரை மூழ்கியது. பலராமனின் முழங்கால்களால் அடிக்கப்பட்டு அந்த அஸுரமஹான், உயிர் நீங்கி கீழே விழுந்து கிடந்தான்.

53, 54. அப்போது, பூமியில் சிதறிக் கிடக்கும் அஸுரனின் ரூபம், ஆகாயத்தில் சிதறிக் கிடக்கும் மேகத்தின் ரூபம் போல் இருந்தது. தலை நீங்கின அஸுரனின் உடலிலிருந்து, மலை உச்சி யிலிருந்து, செம்மண் கலந்த ஜலம் போல் ரத்தம் பெருகிற்று.

55. அந்த ப்ரலம்பனைக் கொன்று தன் பலத்தையடக்கி வீரம் மிக்க பலராமன், க்ருஷ்ணனை ஆலிங்கனம் செய்து கொண்டான்.

56. க்ருஷ்ணனும் ஆயர்களும், ஆகாயத்திலுள்ள தே கணும், அஸுரன் கொல்லப்பட்டதும், மஹா பலனான பலராமனை ''ஜய! ஜய!!'' என்று ஆசீர்வதித்துத் துதித்தனர்.

57. ''இந்த அஸுரன் அனயாஸமாக, குழந்தை பலராமனு சொல்லப்பட்டான்'' என்று தேவர்ளால் சொல்லப்பட்ட அச வாக்குகள் விசேஷமாக ஒலிக்கின்றன.

58. ஆகாயத்திலிருக்கும் தேவர்களால் இவனுக்கு (இ 'பலதேவன்' எனப் பெயர் என்று சொல்லப்பட்டது. அப்போ பூமியில் பலதேவனுடைய பலத்தை ஜனங்கள் அறிந்தனர்.

59. தேவர்களாலும் அணுக முடியாத அஸுரன் கொல்ல பட்ட போது 'பலதேவன்' என்ற பெயர் அவ்வீரச் செயலா உண்டாயிற்று.

## 14-ம் அத்தியாயம் முற்றிற்று

## 15-ம் அத்தியாயம்

## இந்திர விழாவின் காரணத்தைக் கேட்ட க்ருஷ்ணனுக்கு கோப வ்ருத்தர் பதில்

1. வைசம்பாயனர் சொன்னார்: க்ருஷ்ணனும் பலதேவனு வன ஸஞ்சாரத்திலேயே காலங்கழித்துக் கொண்டிருக்கும் போ வர்ஷாகால மாதங்கள் இரண்டும் இவ்விதம் கழிந்தன.

2. அவ்விருவரும் ஆய்ச்சேரிக்கு வந்தார்கள். வீரர்களா அவர்கள் இந்த்ர விழா ஸமீபத்திருப்பதாகவும் விழாவில் கோப கள் விழாவில் உற்சாகம் கொண்டவர்களாக விருப்பதாகவுப் அப்போது ஆய்பாடியில் கேட்டறிந்தனர்.

3. க்ருஷ்ணன் கௌதூஹலத்துடன் அங்கு அவர்களை நோக் இவ்வார்த்தை சொன்னான்: 'எதனால் உங்களுக்கு ஸந்தோஷ வந்துள்ளதோ. இந்த இந்த்ர விழா என்பது என்ன?''

4. அங்கு வயது மிக முதிர்ந்த ஒரு கோபன் பதில் சொன்னா 'பிள்ளாய்! எதற்காக இந்த்ரன்கொடி பூஜிக்கப்படுகிறது என்பது கேட்கப்படட்டும்

5. சத்ருக்களை வெல்லும் க்ருஷ்ணா! இந்த்ரன் தேவர்களுக்கும், மேகங்களுக்கும் தலைவன். லோகநாதனான இந்த்ரனைக் குறித்து நடக்கும் சாஸ்வத, பழமையான (நித்த) உத்ஸவம் இது.

6. அவனால் ஏவப்பட்ட மேகங்கள், அவனுடைய ஆயுதமான வானவில்லால் அலங்கரிக்கப்பட்டு அவனது ஆஜ்ஞையையே பின்பற்றி புது நீர்களால் பயிரை உண்டு பண்ணுகின்றன.

7. தேவேந்த்ரன் 10 மகத்துக்கு ஜலத்தைக் கொடுப்பவன். மிக மகிழ்ச்சி கொண்ட பகவனாகிய தேவேந்த்ரன் உலகு முழுதையும் ப்ரியப்படுத்துகிறான்.

8. அவனால் சேர்த்துக் கொடுக்கப்பட்ட பயிரை, நாமும் மற்ற மனிதர்களும், உபயோகித்து ஜீவிக்கிறோம். தேவதைகளையும் த்ருப்தி செய்கிறோம்.

9. இந்த உலகில், மழை பெய்கிறது. அதன்பின் பயிர் செழிக்கிறது. பூமி வளம் பெற்று த்ருப்தியடைந்ததும், உலகம் அம்ருதத்துடன் கூடியது போல் காணப்படுகிறது.

10. குழந்தாய்! அதனாலே நன்கு செழித்த புற்களால் புஷ்டியான எருமைகளுடன் கூடி பசுக்களும் பால் நிரம்பியிருக்கும், கன்றுகளுடன் கூடியும் மனமுவந்து இருக்கும்.

11. மழைபொழியும் மேகங்கள், எங்கு காணப்படுகின்றனவோ, அங்கு பூமி பயிரில்லாது இருக்காது. புல்லில்லாது இருக்காது. பசியால் பீடிக்கப்பட்ட ஜனமும் இருக்காது.

12. இந்த்ரன், பால் போன்று நீர்நிறைந்த சூர்ய கிரணங்களாகிற தேவ பசுக்களைக் கறக்கிறான். அப்படி கறந்த நீராகிய பாலை; மேகங்களாகிய பாத்ரங்கள் கொள்கின்றன. அவை, புனிதமான புதிய பால் போன்ற நீரை (பூமியில்) ஒழுக விடுகின்றன.

13. வாயுவினால் உந்தப்பட்ட மேகங்களில் உள்ள நீர் பெரிய சப்தத்தைச் செய்கிறது வேகமாக சுற்றப்பட்ட அதுவே கர்ஜிக்கிறது என்று ஜனங்கள் அறிகிறார்கள்.

14. மேகங்களில் வாயுவால் தூண்டப்பட்ட, மலையை பிளக்கும் சப்தங்களே (இந்த்ரன்) வஜ்ராயுதத்தின் இடி முழக்கம் போல் கேட்கப்படுகின்றன.

15. தலைவன் இந்த்ரன், தன் இச்சைப்படி செல்லும் வேலைக்காரர்கள் போல், ஆகாசத்தையடைந்த பல மேகங்களை வஜ்ராயுதத்தால் இடித்துப் பிழிந்து பொழியச் செய்கிறான்.

16, 17 ஓரிடத்தில் ஆகாய முழுதுமே மேகங்களால் மூடப்பட்டு (துர்தினமாக) இருக்கிறது; ஓரிடத்தில் தூண்டிக்கப்பட்ட வெண் மேகங்கள் இருக்கின்றன. ஓரிடத்தில் பிளக்கப்பட்ட மைக்கட்டி போல் மேகங்கள் ப்ரகாசிக்கின்றன. ஓரிடத்தில் மேகங்கள் மழைத்துளிகளைப் பெய்கின்றன. ஓரிடத்தில் மேகம் ஆகாயத்தைத் துளிகளாகிற முத்துக்களின் ஒளியையுடையதாகச் செய்கிறது இவ்விதம் பலமேகங்கள் கொண்ட ஆகாயத்தை தேவேந்தரன் மேகங்களாலேயே அலங்கரிக்கிறான் போலும்.

18. இவ்விதம் சூர்ய கிரணங்களால் கறக்கப்பட்ட (பாலாகிற) நீரை, ப்ரஜன்ய தேவன் (இந்த்ரன்) எல்லா ஜீவன்களின் வாழ்வின் பொருட்டு, பூமியில் மேகங்களைக் கொண்டு, பொழிகிறான்.

19. க்ருஷ்ணா! எதனால் இந்த வர்ஷருது பூமியில் இந்த்ரனுக்கு ப்ரியமானவளோ, அதனாலேயே எல்லா ராஜாக்களும் மகிழ்ச்சியுடன், வர்ஷருதுவில், தேவராஜனை இந்த்ரனை விழாக்களால் பூஜிக்கிறார்கள்; (அப்படியே) நாங்களும் மற்ற மனிதர்களும்''

15-ம் அத்தியாயம் முற்றிற்று

## 16-ம் அத்தியாயம்

### சரத்கால வர்ணனை; ஸ்ரீக்ருஷ்ணன் கிரி கோ பூஜைகளுக்கு காரணம் கூறி வற்புறுத்தல்

1. **வைசம்பாயனர் சொன்னார்:** இந்த்ர விழாவை ஒப்புக் கொள்வதில் கோப வ்ருத்தனுடைய வார்த்தையைக் கேட்டு இந்த்ரன் பெருமையை அறிந்தவனாயினும் தாமோதரன் வார்த்தை சொன்னான்.

2. "நாம் வனத்தில் ஸஞ்சரிக்கும் ஆயர்கள் எப்போதும் கோதனத்தாலேயே ஜீவிக்கிறோம். பசுக்கள் நமக்குத் தெய்வம், தெரிந்து கொள். அப்படியே மலைகளும் வனங்களும்.

3. உழவர்களுக்கு உழவு தொழில் வர்த்தகனுக்கு வர்த்தகம்; (வனவாஸிகளான) நமக்கு கோரக்ஷணம் சிறந்த தொழில். (ஆக

வை ்யராகிய நமக்கு இம்மூன்று வித தொழிலும் சொல்லப் படுகிறது

4. எந்தக் கலையால் (தொழிலால்) எவன் பிழைக்கப் பட்டுள்ளானோ அவனுக்கு, அது உயர்ந்த தெய்வம் அதுவே வணங்கத் தக்கதும், பூஜை செய்யத்தக்கதும் அதுவே அவனுக்கு உதவி செய்யக்கூடியது.

5. எவன் ஒருவனுடைய பயனை அனுபவித்து வேறொருவனுக்குப் பூஜை செய்கிறானோ, அந்த மனிதன் இம்மையிலும் மறுமையிலும் இரண்டிலும் கேட்டை அனுபவிக்கிறான்.

6. (தொழிலின்) எல்லை உழவை முடிவாகவுடையது என ப்ரஸித்தம். (அந்த) உழவு நிலத்தின் (மருதத்தின்) எல்லை வனமெனக்கேட்கப்படுகிறது. எல்லா மலைகளும் வனத்தை முடிவாகவுடையன. அவை நமக்கு நிலையான கதி.

7. இந்த வனத்தில் மலைகளும் இஷ்ட ரூபத்தைக் கொள்ள வல்லனவாகக் கேட்கப்படுகின்றன. அந்தந்த சரீரங்களில் ப்ரவேசித்து, தமது தாழ்வரைகளில் விளையாடுகின்றன.

8. பிடரி மயிருடைய ஸிம்ஹங்களாயும், நகமுடையவற்றில் சிறந்த புலிகளாகவும் உருவெடுத்து, வனத்தை அழிப்பவர்களை நடுங்கச் செய்து, தம் வனங்களைக் காக்கின்றன.

9. வனவாஸிகள் எப்போது இவைகளைத் துன்புறுத்துகின்றனரோ, அப்போது கொடுமை செய்யும் அவர்களையே ஹிம்ஸைத் தொழிலாலேயே அழிக்கின்றன.

10. அந்தணர், மந்த்ரத்தையே வேள்வியாகவுடையவர். அப்படியே, ஆயர் மலையை வேள்வியாக வுடையவர். ஆக நம்மால் வனத்தில் மலைவேள்வி செய்யத் தக்கது.

11, 12. அது எனக்குப் பிடித்தமானது. ஆயர்களே! மலைவேள்வி தொடங்கப்படட்டும். மரத்தடியிலோ மலையடியிலோ நல்ல இடத்தில், வேலை செய்து, அங்கு புனிதமான ம்ருகங்களைக் கொன்று நல்ல இடத்தில் பரப்பி; எல்லா வித மங்கள கோஷங்களும் எழுப்பப்படட்டும். ஏன் யோசிக்கிறீர்கள்?

13. சரத்கால புஷ்பங்களை சிரோ பூஷணமாகக் கொண்ட எல்லா பசுக்களும், அந்த மலையை வலம் வந்து பிறகு, மறுபடியும் ஆய்ப்பாடியை அடையட்டும்.

14, சரத்காலம் வந்து விட்டதல்லவா! கோக்களுக்காக இனிய குணமுடைய நீரையும் புல்லையும் உடையது. நீர் நிலைகள், பொழியும் மேகங்கள் நீங்கி (தெளிவாக) உள்ளன. இக்காலம் அழகாகவும், மகிழ்ச்சியூட்டுவதாயும் இருக்கிறது.

15 ஓரிடத்தில் பூத்த 'ப்ரியக' மரங்களால் வெளுப்பாகவும், ஓரிடத்தில் பூத்த 'பாணஸன்' மரங்களால், நீலமாகவும், முதிர்ந்த புற்களையுடை யதாயும் மயில்களின் கேகா சப்த மற்றதாயும் வனம் விளங்குகிறது.

16. மேகங்கள் ஆகாயத்தில் நீர், களங்கம், (கருநிறம்) கொக்கு, மின்னல், இவையற்றனவாக, தந்தமற்ற யானைகள்போல் பெருகுகின்றன

17. புது நீரை இழுத்துக் கொண்டு வரும், வேகமான மேக (வாடை)க் காற்றால் இலை நிரப்பி கனத்த எல்லா மரங்களும் தெளிவாகக் காணப்படுகின்றன,

18. வெளுத்த மேகங்களாகிய, தலைப்பாகையுடையதும் அன்ன பறவையாய சாமரங்களால் வீசப்பெற்றதும் பூர்ண சந்த்ரனாய ஸூத்தமான குடை கொண்டதுமான ஆகாயம், பட்டாபிஷேகத்து (ராஜா) போல், விளங்கிற்று.

19 20 வர்ஷிக்கும் மேகம் மறைந்ததும் எல்லா (நீர் நிலை களின்) நீர்களும் மிகவும் வற்றிவிட்டன. (ஆகவே) நீர் நிலையங் களில் வஸிக்கும் ஹம்ஸங்கள் பரிஹஸித்து, அறவே வெளியேறின போதும். சக்ரவாஹ பக்ஷிகளாய ஸ்தன ப்ரதேசத்தையும் மணத் திட்டுகளாய் ப்ருஷ்ட பாகத்தையும், ஹம்ஸ பக்ஷிகளாய அழகிய புன்சிரிப்பையும் உடைய நதிகள் ஸமுத்ரமாய பதியையடை கின்றன.

21. மலர்ந்த அல்லிப்பூக்களால் அழகிய ஜலமும் நக்ஷத்ரங் களால் அழகிய ஆகாயமும் ஒன்றுக்கொன்று ஒரே மாதிரி கர்வம் கொள்கின்றன.

22. மதங்கொண்ட க்ரௌஞ்ச பறவைகளின் கோஷத்தை கொண்டதும், முதிர்ந்த நெற்கதிர்களால் வெண்மையானவை

யும் மிக்க அழகியவையுமான வனங்களில் மனம் ஸந்தோஷமடைகிறது.

23. தாமரை மலர் குளங்கள், தடாகங்கள் நடைவாபிகள் நதிகள், ஏரிகள், நீர்கொண்ட பயிர் நிலங்கள், இவை எல்லாம் லக்ஷ்மீ சோபையுடன் விளங்கின.

24. சிவந்த தாவரங்களும், அப்படியே வெளுத்த மற்ற புஷ்பங்களும் நீலோத்பலங்களும் ஜலத்திலுதித்த சோபையை பகிர்ந்து கொண்டன.

25. காற்றுகள் மதத்தை (வேகத்தை) விட்டன குளிர்ந்த கடைக்கண் பார்வையுடன் ம்ருதுவாக வீசின. ஆகாயம் வேகம் நீங்கி (நிர்மலமாக) யிருந்தது நீர் நிலைகள் அரசவற்றிருந்தன.

26. நாட்டியத்தில் உதிர்ந்தவைகளும், ருதுக்களின் மாற்றத்தால் நழுவினவையுமான மயில் தோகைகளால் பூமி பல எண்களுடையது போல் காணப்படுகிறது.

27. கோரைப்புல் பூக்களும், கொடிகளும் வ்யாபித்து தன் சேறு படிந்து, ஹம்ஸ, ஸாரஸ பக்ஷிகளின் பாதச் சுவடு பதிந்த கரைகளால் மங்களகரமான யமுனை சோபிக்கிறாள்.

28 பருத்த நெற்கதிர்களால் அழகிய வால்களிலும் நீர்களிலும் பயிர்களை உண்பவையும் மீன்களை உண்பவையுமான பறவைகள் மதங்கொண்டு கோஷித்தன.

29. வர்ஷாகால ஆரம்பத்தில் மேகங்கள், எந்த பயிர்களுக்கு நீர் ஊற்றினவோ அச்சிறு பயிர்கள் முற்றிவிட்டன,

30. அந்த சந்திரன் (வர்ஷாகால) மேகங்களாய வஸ்தரத்தை விலக்கி, சரத்கால குணங்களால் விளங்கப் பெற்று, மாசற்ற ஆகாயத்தில் மகிழ்ச்சியுடன் வஸிக்கிறான்.

31. பசுக்கள், இரண்டு பங்கு பாலை உடையன, காளைகள் இரண்டு பங்கு பெருமதம் கொண்டன. வனங்களின் சோபை இரட்டித்தது. பூமி பயிர்களால் குண பூர்ணையானாள்.

32 நக்ஷத்ரம் முதலிய ஒளிப் பொருள்கள், மேகங்களினின்று விடப்பட்டன. நீர்களும் தாமரைகளால் விளங்கின மனிதரின் மனமும் தெளிவடைந்தது.

33. மேகங்களால் விடப்பட்ட சூரிய கிரணங்கள் கொண்ட சூர்யன், நீர் நிலையங்களை வற்றடித்துக் கொண்டு ஆகாயத்தி சரத் ருதுவால் ஜ்வலிக்கச் செய்யப்பட்ட ஒளியை உண் பண்ணினன்.

34. வெற்றியை விரும்பும் அரசர்கள், பூமியைக் குறி கோளாகக் கொண்டு, ஒருவருக்கொருவர் ராஜ்யத்தை எதி நோக்கி, ஸைந்யங்களுக்கு ஆலத்தி வழித்து, புறப்படுகின்றனர்.

35. 'பந்துஜீவ' புஷ்பங்களால் நாற்புறமும் சிவப்பாகவு உலர்ந்த கெட்டிச் சேற்றையுடையனவுமான அழகிய ஆச்சர் வனக் கூட்டங்களில் மனம் ஈடுபடுகிறது.

36, 37. வேங்கை, ஏழிலை மலை அத்தி இக்ஷு சுகில, நிகும்ப ப்ரியக ஸ்வர்ண கார, ஸ்தமர பேசக கேதகி இவையாகிய வனத்தை ப்ரகாசப்படுத்தும் எல்லா மரங்களும், வனங்களின் நாலா பக்கங் களிலும் விளங்குகின்றன.

38. மத்தெழும்பும் ஓசையால் விளங்கும் ஆய்ப்பாடி மாட்டு தொழுவங்களில் சரத்கால சோபையாகிற பெண், வடிவெடுத்து விசேஷமாக பவனி வருவது போல தோன்றுகிறது

39. மழை காலத்தில் தூங்கிக் கொண்டிருக்கும் தேவர் தேவனான கருடக் கொடியோன் விஷ்ணுவை, தேவர்கள் எழுப்பு கிறார்கள் நிச்சயம்.

40. 41. 42. இவ்விதம் வர்ஷா காலம் முடிந்து, செழித்த பயிர்களையுடைய சரத்காலம் வந்தபோது, நீல நிறத்தையும் சந்த்ர ஸௌர்ய நிரங்களையுமுடைய, பறவைகளைக் கொண்டதும், பழங் கள், தளிர்கள், நிறைந்ததும் வானவில்லுடன் கூடிய மேகத்துக்கு ஒப்பானதும், வீடுகள் போன்ற மரங்களையுடையதும், கொடி களால் நன்கு அலங்கரிக்கப்பட்டதும், விசாலமான அடிவாரத்தால் தாழ்ந்ததும் பரந்து எங்கும் காற்று வீசுவதால் பரம ஸுகமானது மான கிரி தேவனையும் பசுக்களையும், விசேஷமாகப் பூஜிப்போம்

43, 44, கொம்புகளுக்கு ஆபரணம் பூட்டியும், மயில் தோகை போன்று வன புஷ்ப அலங்காரங்களாலும், தொங்கும் மணிகளா லும், சரத்கால புஷ்பங்களாலும், மங்களத்தின் பொருட்டு, பசுக்கள் பூஜிக்கப்படட்டும். கிரி பூஜை துவக்கப்படட்டும், இந்த்ரன் தேவர்களால் பூஜிக்கப்படட்டும். அப்படியே நம்மால் கிரி பூஜிக்கப்படட்டும்.

45. பலவந்தப் படுத்தியும், கோபூஜை செய்யப் போகிறேன். ஸந்தேகமில்லை. உங்களுக்கு என்னிடம் ப்ரீதியிருக்குமானால் நாம் நண்பர்களானால் எல்லோருக்கும் எப்போதும் பசுக்கள் தானே பூஜிக்கத்தக்கவை. இதில் ஸந்தேகமில்லை.

47. நல்வார்த்தையில், உங்களுக்கு (கிரி பூஜையில்) ப்ரீதி யிருக்குமானால், உங்களுக்கு பெருமையின் பொருட்டும். இந்த உண்மையான என் வார்த்தை, விசாரிக்கப்படாமலேயே செய்யப் படட்டும்'

16-ம் அத்தியாயம் முற்றிற்று

## 17-ம் அத்தியாயம்

## விமர்சையான கிரி, கோ, பூஜையும் மலைதேவன் ஆசியும்

1. **வைசம்பாயனர் சொன்னார்**: தரமோதரன். வார்த்தை யைக் கேட்டு, மகிழ்ச்சி கொண்டு, பசுக்களால் ஜீவிக்கும் அவர்கள் அவனுடைய வார்த்தைகளாகிற அம்ருதத்தை அனுபவித்து. ஸந்தேஹத்துக்கிடமில்லாமல் பதில் கூறினர்.

2, ''குழந்தாய், கோபர்களுக்கு ஹிதத்தை வ்ருந்தி செய் வதும், பசுக்களுக்கு நன்மை பெருக்குவதுமாகிய இந்த உன்னு டைய மேலான புத்திமதி எங்கள் எல்லோரையும் ஸந்தோஷப் படுத்தவே செய்கிறது.

3. நீயே கதி, நீயே ஆனந்தம், நீயே ஸர்வஜ்ஞன், நீ மேலான புகலிடதம்; பயங்களில் அபயம் கொடுப்பவன் நீ; எங்களுக்கு நன்மை கருதுபவர்களில் சிறந்தவன் நீயே.

4. க்ருஷ்ண! நீ இங்கு இருப்பதன் காரணமாகவே மகிழ்ச்சி கொண்ட பசுக்களையுடைய ஆய்ப்பாடி க்ஷேமமாயிருக்கிறது. இது ஆய்ப்பாடி முழுதும் ஸ்வர்க்கத்தையடைந்தது போன்று பகை யற்றதாக வாழ்கிறது.

5, 6, நீ பிறந்தது முதல், பூமியில் (நீ செய்த) அரிய செயல் களெல்லாம், தேவர்களாலும் செய்ய முடியாது (உன்) அபிமானத் தாலும், (உன்னிடமிருந்து) அறியத்தக்கவற்றாலும், எங்கள் மனங்

கள் ஆச்சர்ய மடைந்தன மதிக்க முடியாத பலத்தா
புகழாலும், வீரத்தாலும், தேவர்களில் இந்த்ரன் போல மனி
களில் நீயே உத்தமன்.

7, 8. சூரிய கிரணத்தாலும், ஒளியாலும், நிறைவா
தேவர்களுள் சூர்யன் போல், மனிதர்களில் நீ உத்தமன் காந்
செல்வம், தெளிவு, முகம் புன்சிரிப்பு இவை எல்லாவற்று
தேவர்களுள் சந்த்ரன் போல் நீயே மனிதர்களுள் உத்தமன்.

9, 10 பலத்தாலும், சரீரத்தாலும், பால்யத்தாலும் சரி
தாலும், உனக்கு நேரானவன் சக்திதரன் ஸுப்ரமண்ய
ஆவான். மனிதன் ஒருவனும் இல்லை. கிரியஜ்ஞத்தைக்குறித்
உன்னல் சொல்லப்பட்ட வார்த்தைகளை, ப்ரபுவே கரையை
கடல் போல் எவனும் மீற முடியாது.

11. ப்ரியனே! இந்தர விழா நிறுத்தப்பட்டதும் உன்
நியமிக்கப்பட்ட மங்களகரமான இந்த கிரி யஜ்ஞம் கோபர்களு
காகவும் பசுக்களுக்காகவும் ஆரம்பிக்கப்படட்டும்.

12, 13, 14. 15 பாத்ரங்கள் பால்நிறைந்தது, அழகியவை
களாகச் செய்யப்படட்டும் நீர்க்குடங்களில் மங்களகரமா
கும்பங்கள் வைக்கப்படட்டும். பரந்து நீண்ட மலைப்பள்ளங்க
பாலால் நிறப்பப்படட்டும். ஆறுகளாக ஓடட்டும்; கடி
துண்ணத்தக்கதும் ருசித்துண்ணத்தக்கதும், குடிக்கத் தக்கதும்
ஆகிய எல்லா உணவுகளும் (மலை) அருகில் சேர்க்கப்படட்டும்
மாம்ஸ உணவு நிறைந்த பாத்ரங்களும், சித்ரான்னமை நிறைந்
பாத்ரங்களும் வைக்கப்படட்டும் ஆய்ப்பாடி முழுதும் மூன்
நாற்கறந்த பால் எல்லாம் கொண்டு வரப்படட்டும் உணவி
குரிய எருமை முதலிய ம்ருகங்கள் பக்வம் செய்யப்படட்டும்
ஒன்று சேர்ந்த எல்லா கோபர்காலும் இந்த யஜ்ஞம் துவக்கப்
படட்டும்.

16. 17. (யஜ்ஞாரம்பத்தில் கோபர்கள் எழுப்பிய
பெருங்கோஷம், ஆய்ப்பாடியை அகமகிழ்வித்து ஆனந்தத்தை
உண்டு பண்ணியது வாத்யத்தின் கம்பீர கோஷங்களாலும்
காளைகளின் கர்ஜனைகளாம், கன்றுகளின் 'அம்பா' சப்தங்
களாலும், கோபர்களுக்கு ஆநந்தம் பிறந்தது.

18. தயிர் மடு சுழல்நெய், எங்கும் பால் ஓடைகள் மாம்ஸ
துவியல்கள் சிறந்த பொருள்கள் நிறைந்த ப்ரகாசமான அன்ன

பர்வதம், எங்கும் மகிழ்ச்சி கொண்ட கோபர்கள், எங்கும் மண மகிழும் கோபிகள், எங்கும் பசுக்கள்; இங்ஙனம் கிரிபூஜை தொடங்கியது.

19. அங்கு தின்பண்டக் குவியல்கள் நூற்றுக்கணகில் அமைக்கப்பட்டன. அப்படியே பலவித வாஸனை த்ரவ்யங்கள், பலவேறு பூமாலைகள்; உயர்தர தூபங்கள்.

20. பிறகு காய்ச்சி பக்வப்படுத்தப்பட்ட (ஹோம) த்ரவ்யங்களை நாற்புறமும் உடைய பூஜை முறை ஸித்தமானதும் நன்னாளில் அந்தணர்களுடன் கோபர்கள் கிரி பூஜை செய்தனர்.

21. கிரி யக்ஞம் முடிவில் அந்த சோறு, பால் உயர்ந்த தயிர் மாம்ஸம் முதலியவற்றை, க்ருஷ்ணன் மாயையினால் மலை ரூபியாக நன்கு புஜித்தான்,

22. ப்ராஹ்மண ச்ரேஷ்டர்கள் (அன்னபானாதிகளால்) த்ருப்தியடைந்து (தக்ஷிணையால்) ஸந்தோஷம் கொண்டு, மனம் நிறைந்து மங்கள ஆசீர்வாதம் செய்து, அகமகிழ்ந்து ஸுகமாக எழுந்து சென்றனர்.

23, யஜ்ஞ முடிவு மங்கள ஸ்நாநம் ஆனதும் க்ருஷ்ணன் திவ்ய ரூபத்துடன், இஷ்டப்படி உண்டும் பால் குடித்தும் பரம திருப்தி அடைந்தேன்' என்று சொல்லி உரக்கச் சிரித்தான்.

24. மலையுருவாகி, திவ்யமான மாலைகளையும், பூச்சுக்களையும் கொண்டு மலை உச்சியில் இருக்கும் க்ருஷ்ணனை, கோபர்கள், பரமாத்மாவாகக் கருதி தலைவனைக் கொண்டனர்.

25. ப்ரபு ஸ்ரீக்ருஷ்ணன், பகவானாயிருந்தும், (பரதத்வம்) மறைக்கப்பட்ட கோப க்ருஷ்ணனாகி, மற்ற கோபர்களுடன் தன்னைத்தானே தலைகுனிந்து வந்தனை செய்தான்.

26. சிறந்த மலையிலிருக்கும், அந்த தேவனை (க்ருஷ்ணனை) நோக்கி, ஆச்சர்யமடைந்த கோபர்கள் சொன்னார்கள். ''பகவானே! ஏவல் செய்யும் அடிமைகளாகி உன் வசப்பட்டிருக்கும் நாங்கள் என்ன செய்ய வேண்டும்?''

27. 28, 29, 30 பிறகு அவன் (மலை மேலுள்ள க்ருஷ்ணன்) மலையினுதிக்கும் சொல்களாலேயே கோபர்களை நோக்கிச்

சொன்னான். "பசுக்களிடம் உங்களுக்குத் தயை இருந்தால், இன்று முதல் நான் பூஜிக்கத் தக்கவன் நான் உங்களுக்கு ஸர்வாபீஷ்ட பூர்த்தி செய்யும் மங்களமான முதல் தேவன். என் பெருமையால் பத்தாயிரம் பசுக்களை நீங்கள் போஷிப்பீர்கள். என் பக்தர்களாகி உங்களுக்கு ஒவ்வொரு வனத்திலும் சுபமாகவிருப்பேன். திவ்ய லோகத்தையடைந்த (மலைத் தேவன்) நான், எப்படி இருப்பேனோ அப்படியே உங்களுடன் (இங்கு) ஆனந்தமாக விளையாடுவேன் ப்ரீதயடைந்த நான், நந்தகோபர் முதலான, புகழ்பெற்ற இந்த எல்லா கோபர்களுக்கும் அளவற்ற செல்வத்தைக் கொடுக்கிறேன் சீக்ரமாக கன்றுகளுடன் கூடிய எல்லா பசுக்களும், என்னை வலப் வரட்டும். இதனால் எனக்கு பரம ப்ரீதியுண்டாகும். ஸந்தேகமில்லை

32. பிறகு மங்களாலத்தி எடுப்பதற்கு, காளைகளுடன் கூடிய பசுக்கள் கூட்டம் கூட்டமாக, நாலா பக்கங்களிலும், அந்த கிரி ராஜனைச் சுற்றி வந்தனர்.

33 புஷ்பங்களை சிரோபூஷணமாகவும் கால் வளையங்களாகவும் கொண்டும், கொம்பு முனைகளில் பூமாலைகள் சூடியும். அப் பசுக்கள், நூற்றுக்கணக்கிலும் ஆயிரக் கணக்கிலும் மகிழ்ந்து ஓடின.

34, 35, 36, 37. சிகப்பு, மஞ்சள், வெள்ளை, நிற ஆடைகளை அணிந்தும் கோதனங்களை (பசுக்களை) ஓட்டிக் கொண்டும் கோபாலர்கள் பின் தொடர்ந்தனர். அப்போது மயில் தோகைகளாலாகிய தோள்வளைகளோடு, அடிக்கடி தட்டிக் கொண்ட புஜங்களோடும், மயில் தோகை நன்கு சேர்க்கப்பட்ட தலைப் பாகைகளொடும் ஆச்சர்யமான கூட்டத்தில், கோபர்கள் மிக விளங்கினார்கள். வேறு சில கோபர்கள், காளைகள் மீது ஏறிச் சென்றனர். மற்றும் சிலர் ஸந்தோஷத்தால் ஆடினர்; வேறு சிலர், வேகமாகச் செல்லும் காளைகளைப் பிடித்தனர். பசுக்களின் அந்த நீராஜன் (மங்களாலத்தி) உத்ஸவம் முறைப்படி முடிந்ததும், அந்த மலைத்தேவன் சீக்ரம் மறைந்தான்.

38, 39. க்ருஷ்ணனும், கோபர்களுடன், ஆய்ப்பாடியை அடைந்தான். கிரி பூஜையால் உண்டாகிய மிக்க ஆச்சர்யம் கொண்ட பால வ்ருத்தர்களுடன் கூடிய கோபர்கள், மதுஸூதனனைத் துதித்தனர்.

**17ம் அத்தியாயம் முற்றிற்று**

# 18ம் அத்தியாயம்

## கோவர்த்தன கிரியை தூக்கி ஸ்ரீ க்ருஷ்ணன் ஆயர்பாடியை ரக்ஷித்தல் இந்திரன் தோல்வி

1. **வைசம்பாயனர் சொன்னார்:** பிறகு இந்த்ர விழா நிறுத்தப் பட்டதும், கோபங்கொண்ட தேவர் தலைவன் இந்த்ரன் 'ஸம்வர்த்தகம்' எனும் மேக்கி கூட்டத்தை நோக்கிக் கூறினன்.

2, 3, 4. "மேக யானைகளே! ராஜ பக்தியை முன்னிட்ட என் இஷ்டம், உங்களால் செய்யப்படவேண்டுமேயானால் என் வார்த்தை கேட்கப்படட்டும். ப்ருந்தாவனத்தைச் சேர்ந்த இந்த நந்தகோபன் முதலிய கோபர்கள், தாமோதரனையே தலைவனாகக் கொண்டு, என் விழாவை வெறுக்கின்றனர். அவர்களுக்கு எது மேலான ஜீவாதாரமோ, 'கோபர்கள்' என்ற பெயர் எதனால் ஏற்பட்டதோ, அந்த பசுக்கள், ஏழு இரவு மழையாலும் காற்றாலும் துன்புறுத்தப்படட்டும். நானும் ஐராவதத்தின் மேல் ஏறி ஸ்வயமாகவே வஜ்ராயுதத்தாலாகியது போன்ற மின்னலுடன் பயங்கரமான நீரையும், மழையையும், காற்றையும் உற்பத்தி செய்வேன். கனத்த மழையாலும், வீசும் காற்றாலும், உங்களால் கொல்லப்பட்ட அந்த ஆய்ப்பாடியுடன் கூடிய பசுக்கள், பூமியில் ப்ராணனை விடப்போகின்றன."

7. க்ருஷ்ணனால் (இந்த்ர விழாவாகிய) பழைய ஒழுக்கம், அடியோடு அழிக்கப்பட்ட போது, ப்ரபு இந்தரன் எல்லா மேகங்களையும் இங்ஙனம் கட்டளையிட்டான்.

8 பிறகு, கோர சப்தமுடைய பயங்கரமான அந்த கருத்த (மலை போன்ற) மேகங்கள், ஆகாயத்தை நாற்புறமும் மறைத்தன. வானவில்லால் அழகுபடுத்தப்பட்ட அத்த மேகங்கள், அப்போது மின்னல் இடிகளுடன் ஆகாயத்தை இருள் மூடியதாகச் செய்தன.

10 11 12 சில மேகங்கள், வேறு யானைகளுடன் கூடிய யானைகள் போலும் சில முதலை போன்று காந்தியோடும், வேறு சில மலைகள் போலும், பெரிய மேகங்கள் ஆகாயத்தில் ஸஞ்சரித்தன. அவைகள் ஒன்றோடொன்று உடலால் பிணைக்கப்பட்டுச் செல்லும் பதினாயிரம் யானைக் கூட்டங்கள் போல், ஆகாயம் முழுதும் மறைத்து, 'துர்தினம்' (மேகத்தால் சூர்யன் மறைக்கப்பட்ட தினம்) ஆக்கின. அந்த மேகங்கள் மனிதனின் கை, யானையின் கை, மூங்கில்கள் இவைக்கு நேரான உருவமுடைய தாரைகளாகப் பொழிந்தன.

13. நுழைய முடியாததும், முடிவற்றதும்; ஆழமானதுமா அந்த இருள் தினத்தை ஆகாயத்தில் ஏறிய ஸமுத்ரமாக,மனிதனி கண்கள் எண்ணின.

14. மலை போன்ற மேகங்கள் ஆகாயத்தில் நாற்புறமு கர்ஜிக்கும்போது பறவைகள் வெளிக்கிளம்பவே யில்லை.

15. 16.17. ம்ருகக் கூட்டங்கள் ஓடின. ஆகாயத்தில் பயங்க மேகங்களின் பெரு மழையால், சூர்யசந்தரர் அழிந்து விட்டன போல உலகம் உரு மாறிவிட்டது. ஆகாயம் மேகக் கூடடங்களா சோபையற்ற உருவமுடையதாயும், காணமுடியாத க்ரஉ நக்ஷத்ரங்களையுடையதாயும், சந்த்ர சூர்ய கிரணங்களற்றதாயு அடியோடு ஒளியற்றதாயும் ஆயிற்று. மேகத்தால் விடப்பட்டது விடப்படுகிறதுமான ஜலத்தினுல், அங்கு நாற்புறமும், பூமி நீ மயமாகவே காணப்பட்டது.

18. 19: அங்கு மயில்கள் கூவின; பறவைகள் குஞ்சுகள் போல் (மெல்லிய) சப்தத்தையுடையனவாயின. நதிகள் மிகப் பெருகின குரங்குகள் (மரங்களுடன்) வெள்ளத்தில் அழிந்தன. மேகங்களின் கர்ஜனையாலும், பர்ஜன்ய தேவன் இந்த்ரன் சப்தத்தாலும், அதட்டப்பட்டவை போல, மரங்களோடு புற்களும் நடுங்கு கின்றன.

20. "உலகங்களுக்கு முடிவு காலம் வந்து விட்டது. தெளிவு! பூமி ஒரே ஸமுத்ரம்" என்று பயத்தால் நடுங்கும் ஆயர் கூட்டங் கள் உரையாடுகிறுர்கள்.

21-25. அந்த ஆபத்துக்குறியான மழை வர்ஷத்தால், மிகவும் தாக்கப்பட்ட பசுக்கள் "ஹம்பா" சப்தத்துடன் கத்திக் கொண்டு, ஸ்தம்பித்தவை போல் அசையாமல் இருந்தன. முழங்காலும், பாதங்களும் அசைவற்று, குளம்புகளும், முகங்களும் செயலற்று, மயிர் கூச்செடுத்து நனைந்த உடலுடன், மெலிந்த வயிறு பால்மடி யுடையவனவாக இருந்தன. சில பசுக்கள் களைப்படைந்து, உயிர் நீத்தன; சில உபத்ரவப்பட்டு கீழே விழுந்தன; சிலகுளிர் நடுங்கி கன்றுகளுடன் விழுந்தன. சில தாய் பசுக்கள் கொம்பால் கன்று களை அணைத்துக் கொண்டு நிற்கின்றன. சில முகத்தைத் திருப்பிக் கொண்டு களைத்த முழங்கால்களுடன் உணவின்றி, வயிறு மெலிந்து, மழையால் பலமாகப் பாதிக்கப்பட்டு நடுங்கி மனத் துன்பத்துடன் விழுந்தன துன்புறுத்தப்பட்ட சிறு கன்றுகள்.

முகத்தை உயரத்தூக்கி, தாமோதரனைப் பார்த்து ''காப்பாற்று'' என்று கெஞ்சும் முகத்துடன் சொல்வன போல் நின்றன.

26. துர்தின வரலால் உண்டான அந்த பசுக்களின் பெரிய துன்பத்தையும், சமீபித்த நாசத்தையுடைய கோபர்களையும் பார்த்து, க்ருஷ்ணன் கோபத்தை வரவழைத்துக் கொண்டான்.

27. ப்ரிய வார்த்தைகளுடைய க்ருஷ்ணன், கோபாவேசம் கொண்டு, ''என்னால் உபாயம் காணப்பட்டது'' என்று பின் வருமாறு தனக்குத் தானே சொன்னான்.

28. ''இப்போது (பெரிய) காடு, (சிறிய) வனங்களொடு கூடிய, இந்த தூக்கித் தாங்க முடியாத மலையை, பெயர்த்துத் தூக்கி, மழையிலிருந்து காப்பதற்காக ''கோ ஸ்தானம்'' அமைப்பேன்.

29. பூமி தேவிக்கு அமைக்கப்பட்ட வீடு போன்ற இந்த மலை, என்னால் தாங்கப்பட்டு, ஆய்ப்பாடியுடன் கூடிய பசுக்களை ரக்ஷிக்கப் போகிறது.ஏன் வசப்பட்டதும் ஆகும்?

30. 31. ஸத்ய பராக்ரமனை(நினைத்ததை செய்யவல்லவனை) அந்த க்ருஷ்ணன் இவ்விதம் ஆலோசித்து, புஜபலத்தை காண்பிப்பவனாக, மற்றொரு கருநிற மலை போல், அருகில் (நின்று) அந்த மலையைப் புஜங்களால் பெயர்த்தான். வீடு போன்ற தோற்றத்துடன். மேகங்கள் கவிந்த அம்மலை க்ருஷ்ணனின் இடது கையால் தாங்கப்பட்டு, அங்கு வீடாகவே ஆயிற்று.

32. 36. பூமியிலிருந்து பெயர்க்கப்படுகிற அந்த மலையின் தாழ்வாரைகளில் பலமாய் பிளந்த கற்கள் நடுங்கின. மரங்களும் விழுந்தன. நகராத மலை, சுழற்றப்பட்ட சிகரங்களோடும், நடுங்குகிற மரங்களொடும், மேல் நோக்கி உதறப்பட்ட உச்சி ப்ரதேசங்களோடும், ஆகாசத்தை நோக்கிச் செல்வதாயிற்று. நடுங்கி இடமாறும். அருவிகளையுடைய பக்கங்களொடும், (மலை அசைவால்) ஒன்றுகிய மேகக் கூட்டங்களோடும், உடைந்த கற்களையுடைய மலை அசைந்தது. பெருமழை பொழியும் மலையினுடையவும் கர்ஜிக்கும் வாயுவினுடையவும் உருவங்களை, அந்த ஜனங்கள் பிரித்தறியவில்லை. மலையில் நிலைபெற்று அருவிகளில் பொருத்தப்பட்ட கார் மேகங்களொடு ஒன்றுக்கப்பட்ட மலை விரித்த தோகையுடைய [மயில்] போல் காணப்பட்டது.

37. வித்யாதரர், நாகர், கந்தருவர், அப்ஸரஸ்ஸுக்கள் இவர்கள், ''இந்த மலை மேகங்களாகிய இறக்கைகள் கொண்டு பறக்கிறது'' என்று எல்லோரும் உரையாடினர்.

38. 43, பூதலத்திலிருந்து விடப்பட்ட மூலத்தையுடையதும். (க்ருஷ்ணனின்) உயர்த்திய கைத்தலத்தில் வைக்கப்பட்டதுமான அது (மலை), பொன், மை, வெள்ளிகளின், வரிசைகளை வெளிப் படுத்தியது. அம்மலையின் சில சிகரங்கள் (முழுதும்) உடைந்தன போலவும், சிலபாதி உடைந்தன போலவும் சில மேகத்தில் நுழைத்தன. போலவும் ஆயின, ஒருங்குகிற மலையால் அசைக்கப் மரங்களின் மேலான புஷ்பங்கள், பூமியில் நாற்புறமும் சிதறிப் பரவின. மலை ஆகாயத்தில் கிளம்பியதும். ஆகாயத்தில் வெளிக் கிளம்பி பாதி ஸ்வஸ்திக் அடையாளத்துடன் விளங்கு ா. பெருந் தலையுடையகளாகிற பறவைகள், கோபங்கொண்டு நாற்புறமும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பன வாயின. பறவைக் கூட்டங்கள், மழை யாலும் பயத்தாலும், மனோவேதனையடைந்தன. உயரக்கிளம்பி உயரக் கிளம்பி மறுபடியும் மறுபடியும் ஆகாயத்திலிருந்து கீழ் முகமாக விழுந்தன. மிக்க கோபங் கொண்ட ஸிம்வரங்கள் நீருண்ட மேகங்கள் போல் கர்ஜித்தன. வலிமிக்க கடையும் மத்துக் கள் போல் சப்தித்தன,

44. அதே மலை முன்னர் நடமாடத் தகுமிடங்கள் தகாதவை களாகவும், தகாதவை. தக்கவைபாகவும் தட்டுமாறி மாறுன உடலுடைய வேறொன்ருகவே காணப்படுகிறது.

45 48 மேகங்களால் பெருமழை பொழியப்பட்ட, அந்த மலையின் உருவம் ஆகாயத்தில், ருத்ரனுல் ஸ்தம்பிக்கச் செய்யப் பட்ட த்ரிபுரத்தின் உருவம் போல் இருந்தது. க்ருஷ்ணனுடைய கையாகிற காம்பினுல் நன்கு தாங்கப்பட்ட அந்த மலையாகிற குடை, கார் மேகக்கூட்டங்களால் மறைக்கப்பட்டு, அப்போது எங்கும் ப்ரகாசித்தது. மேகங்களால் மூடப்பட்ட குகைகளாகிற வாயையுடைய மலை க்ருஷ்ணனுடைய கையாகிற தலையணையில் ஆகாயத்தில் தூங்குவது போல இருக்கிறது. தன் சிகரங்களால் சூழப்பட்ட மலை பக்ஷி சப்தமற்ற மரங்களாலும், மயில் சப்தமற்ற காடுகளாலும் உணர்ச்சியற்றது போல் காணப்படுகிறது

49. இடமாறியும், சுழன்று கொண்டும், அசைந்து கொண்டுமிருக்கும் தாழ்வரைகளால், மலையின் வனங்களும், சிகரங்களும் ஜ்வரமுடையவை போல் தோன்றுகின்றன.

50. அந்த மலையின் சிகரத்தையடைந்தனவும், காற்றை வாகனமாகவுடையனவுமான மேகங்கள் மஹேந்த்ரனால் அவசரப் படுத்தப்பட்டு மிகுந்த நீரை பொழிந்தன.

51 க்ருஷ்ணனின் கைமுனையில் நேராக ஏந்தப்பட்ட மேகங்களுடன் கூடிய மலை. சத்ரு ராஜாவால் ஆக்ரமித்து ஸேனைகளால் முற்றுகையிடபட்ட தேசம்போலத்தோன்றுகிறது. அந்தமலையைச் சுற்றி அந்த மேகக் கூட்டம் நின்றது. தலைநகரைச் சுற்றி விஸ்தரிக்கும் விரிவான நாடு போல் அந்த மலையைக் கையில் வைத்து(எடை நிறுப்பது போல்) தெரியக்காட்டி, ஆயர்கள் ரக்ஷகன் 'க்ருஷ்ணன்' ப்ரஹ்மா போலிருந்து புன்சிரிப்புடன் சொன்னான்.

54. ''ஆயர்களே! இது தேவர்களால் நினைக்கவும் முடியாதது திவ்ய முறைப்படி (விஷ்ணு மாயை) என்னால் செய்யப்பட்ட மலை வீடு. காற்று புகாதது, பசுக்களுக்குப் புகலிடம்,

55, 56, 57, பசுக்கூட்டங்கள் க்ஷேமத்தின் பொருட்டு இதில் சீக்ரம் நுழையட்டும். காற்றடிக்காத விடங்களில் ஸுக குறை வில்லாமல் வஸிக்கட்டும். என்னால் மழைத் தடுப்புசெய்யப்பட்டது அந்தஸ்து, கூட்டம், மனப் பொருத்தம், ஸுகம். இவற்றுக்குத் தக்கபடி. இந்த இடம் பகிர்ந்து கொள்ளப்படட்டும். மலை பெயர்த்தெடுக்கப்பட்ட இந்தப் பெரிய இடம். என்னால் நிறுவப்பட்டது. ஐந்து க்ரோச வட்டமும், ஒரு க்ரோச குறுக்களவும் உடையது. பெரியது மூன்று லோகத்தையும் ரக்ஷிப்பதற்கு சக்தி வாய்ந்தது. ஆய்ப்பாடியை ரக்ஷிப்பதற்கு கேட்பானேன்!''

58, 59, 60, 61 பிறகு வெளியிலிருந்து ''ஹம்பர'' சப்தத்துடன் கிலகிலா சப்தமும் ஆயர்களுடைய பெரிய மேக கர்ஜனையும் உண்டாயிற்று பின்பு, ஆயர்களால். கூட்டங் கூட்டமாகப் பிரிக்கப்பட்ட பசுக்கள், ஆழமான குகையிடத்தின் நடுபாகத்தை அடைந்தன. மலையின் அடியில் மலைக்குத் தூண்போல் உயர்ந்துள்ள க்ருஷ்ணனும் ஒரு கையால் மலையை அதிதியைப் போலத் தாங்கினான். பிறகு ஆய்ப்பாடியின் குடும்ப ஸாமான்கள் [மாடு] கட்டப்பட்ட வண்டிகள், மழைக்குப் பயந்த ஆயர்கள்எல்லோரும் அந்த மலை வீட்டை நுழைந்தனர்,

62. பின்பு ப்ரபு தேவேந்தரன் க்ருஷ்ணனின் தெய்வத்தனத்தையும் மீறின அந்தச் செயலைப் பார்த்து, தன் ப்ரதிஜ்ஞை பொய்க்க, மேகங்களை [பொழியாமல்] தடுத்தான்,

63. ஏழு இரவு முடிந்ததும், பூமியில் விழா விழுந்த இந்த்ரன் மேகங்களால் சூழப்பட்டு உத்தமமான [தன் ஸ்தானமான] ஸ்வர்கத்தையடைந்தான்.

64. ஏழு இரவு கழிந்து, தேவேந்த்ரன், ப்ரயத்ன மற்றவனு னதும் ஆகாயம், மேகம் நீங்கி தெளிவடைந்ததும், சூர்யன் நன்கு ப்ரகாசிக்கும் நாளில், பசுக்கள் அந்த வழியாக வந்தது போலே திரும்பிச் சென்றன. அந்த ஆய்ப்பாடியும் மறுபடியும் தன்னிடத் தையடைந்தது.

65. அந்த பரமாத்ம ஸ்வரூபியும் [பக்தர்களுக்கு] வரமளிப் பவனும். எங்கும் வ்யாபித்தவனுமாகிய க்ருஷ்ணனும், அந்த கிரி ராஜனை, மங்களத்தின் ப்ரீதனுகி அதன் இடத்திலே வைத்தான்,

**18-ம் அத்தியாயம் முற்றிற்று**

## 19ம் அத்தியாயம்

# இந்தரனுல் க்ருஷ்ணனுக்கு கோவிந்த பட்டாபிஷேகம்

1. **வைசமபாயனுர் சொன்னுர் :** கோவர்த்தன மலை தூக்கப் பட்டதையும் ஆய்ப்பாடி நன்கு காக்கப்பட்டதையும் பார்த்து ஆச்சர்ய மடைந்த இந்த்ரன், க்ருஷ்ண தர்சனத்தை விரும்பினுன்.

2. அவ்விந்த்ரன் நீரற்ற [வெண்]மேகம் போல் உருவுடைய மதநீர் பெருகும் ஐராவத யானை மேலேறி, பூமியையடைந்தான்.

3. சத்ரு நகரங்களை அழிக்கும் அந்த இந்த்ரன் அனுயாஸ மாகக் கார்யம் செய்யவல்ல க்ருஷ்ணன், கோவர்த்தன மலையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான்.

4. பெரிய தேஜஸால் ஒளிவீசும், ஆயர் வேடங்கொண்ட குழந்தை அழிவற்ற விஷ்ணுவைப் பார்த்து இந்த்ரன் மகிழ்ச்சி யடைந்தான்.

5- அந்த இந்தரன் ஸ்ரீவத்ஸ அடையாளமுடைய நீலோத்பல இதழ் போல் நீல நிறங்கொண்ட அந்த க்ருஷ்ணனை கண் படைத்த பயன் பெற்றவனுய், எல்லாக் கண்களாலும் கண்களாரக் கண்டான்.

6. மலை முதுகில் பூமியின் தேவன் போன்று பெருமையுடன் வீற்றிருக்கும் இவனை [க்ருஷ்ணனை)ப் பார்த்து, அந்த இந்த்ரன் வெட்கமடைந்தவனுன்.

7. நன்கு வீற்றிருக்கும் அந்த க்ருஷ்ணனின் முகத்துக்கு பாம்பையுண்ணும் பக்ஷிராஜன் [கருடன்] மறைத்து நின்று நிழல் செய்தான்.

8. ஏகாந்தத்தில் வனத்தையடைந்து, இந்த்ரன், யானையை விட்டிறங்கி உலகவர்த்த மானங்களிலேயே நோக்குடைய அந்த க்ருஷ்ணன் ஸமீபத்தில் (வணக்கத்துடன்) நின்றான்.

9. திவ்யமான, மாலை, பூச்சுக்களையுடைவனும், வஜ்ராயுதத்தால் நிறைந்த கையையுடைவனுமான அந்த ப்ரபு தேவராஜன், க்ருஷ்ணன் ஸமீபத்தை யடைந்தவனாகவே சோபித்தான்.

10,11 மின்னலுக்கு ப்ரகாசம் கொடுப்பதும் சூர்யனுக்கு ஒப்பானதுமான க்ரீடதரனும் திவ்ய குண்டலங்களால் எப்போதும் சோபிக்கும் முகமுடையவனும் ஐந்து பூங்கொத்துக்கள் போன்றதை(பதக்கத்தை)யுடையஹாரத்தினால் அலங்கரிக்கப்பட்ட மார்பையுடையவனும் தாமரை போன்று உடலுக்கழகு செய்யும் மனோஹரமான கண்களாயிரத்தால் பார்ப்பவனுமான, இத்தகைய இந்த்ரன் தேவர்களைக் கட்டளையிட்டுப் பழகிய மேக தோஷம் போன்ற குரலை (அடக்கி திவ்ய ஸ்வரத்தால் இனிமையாகச் சொன்னான்:

12. **இந்திரன் சொன்னான்** : "க்ருஷ்ணா! க்ருஷ்ணா!; நீண்ட தோளா! பந்துக்களுக்கு மதிழ்ச்சியூட்டுபவனே! பசுக்களிடம் அன்புடைய உன்னால் தேவர்களுக்கும் மேலான கார்யம் செய்யப்பட்டது.

13 யுகாந்த ப்ரளயத்தை செய்யக்கூடிய மேகங்கள் என்னால் ஏவப்பட்ட போது உம்மால் பசுக்கள் காக்கப்பட்டது கொண்டு நான் மிக மகிழ்ந்தேன்.

14. உமக்கே போற்றப்பட்ட தனி சக்தியால், இந்தச் சிறந்த பர்வதம், ஆகாயத்தில் வீடு போல் தாங்கப்பட்டது.

15, 18. இதனால் யார்தான் ஆச்சர்யமடைய மாட்டான்? என் விழா, திருத்தப்பட்ட காரணங்கொண்டு கோபமடைந்த என்னால், ஏழுநாள் பேய் மழை பசுக்களுக்காக (அவைகளின் துன்பத்திற்காக) செய்யப் பட்டது. நானிருக்கும்போது, அஸுரர்களுடன் கூடிய தேவர்களாலும், தடுக்க முடியாதபொறுத்தற்கரிய அத்தகைய இந்தப் பெரு மழை உம்மால் தடுக்கப்பட்டது.

க்ருஷ்ணு! மனித வுடலெடுத்து கோபப்படுத்தப்பட்ட விஷ்ணு தேஜஸ் முழுதையும், நன்ருக மறைக்கிருய். இது எனக்கு மிகவும் ப்ரியம் ஆச்சர்யம்! விஷ்ணு தேஜஸ்ஸுடன் நீர் மனிதத் தன்மை யடைந்ததும் தேவர்களுடைய கார்யம் அழிவற்றதாகச் செய்து முடிக்கப்பட்டதல்லவா! (இப்படி) நான் நினைக்கிறேன்.

19, 30 எல்லா கார்ய பலனும் ஸித்திக்கவே போகிறது சிறிதும் குறைவுபடாது ஏனெனில் எல்லா கார்யங்களுக்கும் முழு முதல்வனுன நீர்தேவர்களுக்குத் தலைவன். தேவர்களுள் ஒப்புயர வற்றவனுய் ஒருவரே இருக்கிறீர். எல்லா உலகங்களிலும் நிரந்தர மானவர் அந்த லோகங்களுடைய பாரத்தை (யோகக்ஷேமத்தை) வகிப்பவர். உன்னைத்தவிர இரண்டாமவனை நான்பார்க்கிறேனில்லை உயர்ந்த காளை பொறுப்பேற்பதில் முதல் ஸ்தானத்தில் செலுத்தப் படுகிறது அது போல் கருடவாகனனுகிய நீர் துன்பத்தில் மூழ்கிய தேவர்களுக்கு இருக்கிறீர் க்ருஷ்ணு! பரப்ரஹ்மமான (உம்மால்) நியமிக்தப்பட்டு உம்மை (தத்வத்தை) விவரித்து, உன் திருமேனி யில் கலந்தது உலகம் மூலப்பொருள்களில் கலந்திருந்தும் தனித்து ஒட்டாது விளங்கும் ஸ்வர்ணம் போல் நீர் இருக்கிறீர் நீதான் தோன்றியாகியபகவான். ஸ்வயம்பூவெனும்ப்ரஹ்மன் புத்தியினுலே யோ வயதினுலேயோ உன்னைப்பின் தொடர்வதோடு விரைவாகச் செல்பவன் நொண்டி போல் சக்தியுள்ளவனுகிருனில்லை. மலைகளுள் ஹிமயம் சிறந்தது மடுக்களுள் ஸமுத்ரம் சிறந்தது பக்ஷிகளுள் கருடன் சிறந்தவன். நீயோ தேவருள் சிறந்தவன் கீழே 'அபாம்' ஜலயோகம்; அதற்கு மேல் பர்வதங்கள்; பர்வதங்களுக்கு மேல் பூமி; பூமிக்கு மேல் மனிதர்கள் மனிதலோகத்துக்குமேல் ஆகாசம்; ஆகாசம் பறவைகளின் இருப்பிடமென சொல்லப்படுகிறது; ஆகாசத்திற்குமேல் ஸ்வர்க்க வழியாகிற, கிரணங்களுடைய சூர்யன் அதற்குமேல் விமான போக்குச்குரிய பெரிதான தேவ லோகம். அங்கு க்ருஷ்ணு! தேவேந்த்ர பதவியில் நான் நியமிக்கப் பட்டிருத்கிறேன், ஸ்வர்க லோகத்துக்கு மேல், ப்ரஹ்ம ரிஷிக் கூட்டங்களால் ஸேவிக்கப்பட்ட ப்ரஹ்மயோகம் அங்கு சந்த்ரன் நக்ஷத்ரங்கள் முதலிய மஹாத்மாக்களான ஜோதிப் பொருள்களின் இடம் அதற்கு மேல் கோ (பசுக்களின்) லோகம்; அதை ஸாத்யர் (தேவகணங்களில் ஒன்று) காக்கின்றனர். க்ருஷ்ணு! மஹாகாசத் தில் உள்ள அது எங்கும் வ்யாபித்து மிகப் பெரியது. அதற்கு மேலே மேலே உமது தபோமயமான இருப்பிடம். அந்த இடத்தை பிதாமஹரிடம் (ப்ரஹ்மாவிடம்) கேட்டுங்கூட நாங்கள் அறிகிறோ மில்லை.

31. (பூமிக்குக்) கீழே பாபிகளுடைய உலகம் நாகலோகமே யென்றால் கொடியது. கர்ம யோகத்தில் மண்டவர்களது எல்லா தர்மத்துக்கு இடம் பூமி.

32. வாயுவுக்கு ஸமமான தொழிலையுடைய நிலையற்றவர்களுக்கு ஆகாயம் இருப்பிடம், சம (புத்தியை பரம் பொருளிடத்தில் நிலைபெறச் செய்தல்) தம, (இந்த்ரிய ஜயம்) குணங்களால் பூர்ணர்களான புண்யாத்மாக்களுக்கு ஸ்வர்க்கம் இருப்பிடம்.

33. ப்ரஹ்மாவைக் குறித்து தபஸ் செய்கிறவர்களுக்கு ப்ரஹ்ம லோகம் உயர்த்த ஸ்தானம். கோ லோகமோ வென்றால் பசுக்களுக்கே! அந்த இடம் ஏற முடியாது.

34. வீர க்ருஷ்ணா! (ஸாதுக்களை) துன்புறுத்தும்கஷ்டங்களைப் போக்கவல்ல, தைர்யமுடைய கடமை செய்து முடித்த உன்னால் துன்பப்படுகிற அந்த கோலோகம் ரக்ஷிக்கப்பட்டது.

35. ஆக கோக்களது வார்த்தையால் ஏவப்பட்டு நான் உன்னிடம் வந்துள்ளேன். பெரியோனே! ப்ரஹ்மாவினதும், உனது மான கௌரவத்தாலேயும் வந்தேன்.

36, 37 க்ருஷ்ணா! நான் ஜீவ ராசிக்குத் தலைவன், தேவர்க்கு தலைவன் இந்த்ரன், அதிதியின் (காச்யபர் பத்னியின்) கர்ப்ப க்ரமத்தில் உனக்கு முன்பிறந்தவனாகமுன்னர் (வாமனாவதாரத்தில்) செய்யப்பட்டுள்ளேன். ப்ரபுவே! நான் உன்னுடைய திவ்ய பராக்ரமத்தால் உனது கீர்த்தியை, வெளிப்படுத்தினேன். என்னுடைய எல்லாவற்றையும் (தோஷங்களையும்) பொறுத்தருள வேண்டும்.

38. யானையின் பராக்ரமம் வாய்ந்த க்ருஷ்ணா! உம்முடைய குளிர்ந்த சோபையால் திருவுள்ளத்தில் பொறுமை கொண்டு, கோக்களதும், ப்ரஹ்மாவினது வாக்யத்தை என்மூலம் கேட்டருள வேண்டும்.

39, 42 பகவான் ப்ரஹ்மாவும் ஆகாயத்திலிருக்கும் பசுக்களும் உம்மைக்குறித்து அங்கு (ஆகாயத்தில்) வார்த்தை சொன்னார்கள்! *உமக்குரிய பரஸம்ரக்ஷணம் முதலிய மேலான செயல்களால் ஸந்தோஷப்படுத்தப் பட்டோம். உம்மால் பசுக்களும் இந்தப் பெரிய கோலோகமும் ரக்ஷிக்கப்பட்டன. இதனால் நாங்கள் காளைகளுடன், ஸந்தானங்களால் அப்படியே வ்ருத்தியடைகிறோம். விரும்பியதைக் கொடுக்கும் நாங்கள் எங்களிடமிருந்து (உனக்

விருந்து; வெளிப்பட்ட ரிஷபங்களால் உழவர்களைத் த்ருப்தி செய்கிறோம். புனிதமான (பால், நெய், தயிர் முதலிய) கவ்யங்களால் ஹவிஸ்ஸால் தேவர்களைத் திருப்தி படுத்துகிறோம். பின்பாதிலிருந்து வெளிவரும் கோமூத்ர கோமயங்களால் ஸ்ரீதேவியை (லக்ஷ்மி தேவியை) த்ருப்தி செய்கிறோம், ப்ரபுவே! இன்றுமுதல் நீவிர் எங்களுக்கு குரு அல்லவா! ப்ராணனைக் கொடுக்கும் மஹாபாவர் நீவிர் எங்கள் அரசன் எங்கள் இந்த்ரனும்

43. ஆகவே, நீர் திவ்யமான பால் நிறைந்து என் கைகளால் கவிழ்க்கப்பட்ட இந்தத் தங்கக் குடங்களால் இப்போது அபிஷேகம் செய்து கொள்ளவேண்டும்.

44 நான் தேவர்களுக்கு இந்த்ரன் அல்லவா, நீர் பசுக்களுக்கு இந்த்ரனாயிருக்கும் தன்மையை அடைந்துள்ளீர் உலகில் ஜனங்கள் உம்மை 'கோவிந்தன்' என்று என்றென்றும் துதிப்பார்கள்.

45. அடியேனுக்கு மேல் இந்த்ரனாக நீர் பசுக்களால் தலைவராக ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. ஆக ஸ்வர்க்கத்தில் தேவதைகள் உம்மை உபேந்த்ரன் என்று கானம் செய்வார்கள்.

46. இந்த நான்கு மழை மாஸங்கள் எனக்காக விதிக்கப்பட்டிருக்கின்றன இவைகளுள் பிந்திய பாதியாகியாகிய சரத் காலத்தை உமக்கு ஸமர்ப்பிக்கிறேன்.

47. இன்று முதல் வர்ஷாகால முன் பாதியாகி இரண்டு மாதங்கள் எனக்குக் கொடி (ஏற்று விழா) அதற்குப் பிறகு நீர் பூஜிக்கப்படுவீர். அந்தக் காலத்தில் (சரத்காலத்தில்) மயில்கள் என்னால் ஏவப்பட்ட மேக நீரால் உண்டாகிய மதத்தை (மத அடையாளமான) நாட்யத்தை விடப்போகின்றன.

48. மேகம் போல் சப்திக்கிற மற்ற எல்லா ப்ராணிகளும், என் விழாக்காலம் கழிந்ததை விசாரித்தறிந்து மதம் அடங்கி குரல் மங்கி சாந்தமடைகின்றன.

49. ஆயிரம் கிரணங்களுடைய சூர்யன் தன் தேஜஸ்ஸால் மிக்க வெப்ப மூட்டிக்கொண்டு. த்ரிசங்கு அகஸ்தியர்களுக்கு இடமாகிய (தெற்கு) திக்கை அடையப்போகிறேன்.

55. பிறகு சரத்காலம் வந்ததும் மயில்கள், மௌனத்தை விரும்புகின்றன. பறவைகள் நீர் வீழ்ச்சிகளிலும், நீர் பெருக்கிலும் ஜலத்தை யாசித்துப்பருகுகின்றன. நதிகளின் மணல் திட்டுகளில் ஹம்ஸமும் ஸாரஸ பறவைகளும் நிலைத்துள்ளன. க்ரௌஞ்ச பறவைகள் மதங்கொண்டு திரிகின்றன. பசுக்கள் மிக மகிழ்ந்து பாலை நிறையக் கறக்கின்றன. உலகிற்கு நீரைப் பொழிந்து மேகங்கள் திரும்பின. வாள் போல் ஒளிவீசும் ஆகாயத்தில் அன்னப் பறவைகள் ஸஞ்சரிக்கின்றன. நீர்த் தேக்கங்களிலும் ஏரிகளிலும் நடைவாவிகளிலும் தடாகங்களிலும் அழகிய தெளிந்த நீர் நிலைகளிலும், முதிர்த்து வணங்கிய கருப்பு நெல் கொண்ட வயல் வரிசைகளிலும், ஓரங்கள் வற்றி நடுவில் நீர் போக்கு ஆரம்பத்தை யுடைய நதிகளிலும் தாமரைகள் தோன்றுகின்றன செழித்த பயிர்களையுடைய எல்லைப் புறங்கள் முனிவர்களின் மனதையும் கவர்கின்றன. பெரிய ராஜ்யங்களுடைய பூமி மழைக்கால முடிவில் அழகு மிக்குள்ளது. எல்லா அழகு மிக்க வழி வரிசைகளில் பழங்களும் புற்களும் நிரம்பியுள்ளன, நாடுகளில் கரும்பு பயிர்கள் செழித்துள்ளன. எங்கும் யாகங்கள் ஆரம்பிக்கப் படுகின்றன.

56. இப்படிப்பட்ட ஸமயத்தில் (விஷ்ணுவாகிய) நீர், துயில் உணர்ந்ததும், புண்யமான சரத்ருது ஆரம்பிக்கிறது.

57, 58. க்ருஷ்ணா! ஸ்வர்க்க லோகத்தில் போல் இந்த லோகத்தில் மனிதர்கள் மஹேந்தரனாகிய என்னையும் உபேந்தரனாகிய உம்மையும் உச்சியில் த்வஜ உருவங்கொண்ட த்வஜஸ்தம்பங்களில் (ப்ரதிஷ்டை செய்து) விழா கொண்டாடுவார்கள்.

59. நம்முடைய மஹேந்த்ர உபேந்தர பெயர் கொண்ட இந்த அழிவற்ற சரிதத்தில் (விச்வாஸமுள்ளவர்களாய்) எந்த மனிதர்கள் வணங்குவர்களோ அவர்களுக்கு அநீதி ஏற்படுதல் இல்லை

60. பிறகு யோகத்தை யறிந்த தேவேந்த்ரனும் திவ்யமான பால் நிரம்பிய அந்தக் குடங்களை யெடுத்து, கோவிந்தனுக்கு அபிஷேகம் செய்தான்.

61. பசுக்களும் அபிஷேகம் செய்யப்பட்ட க்ருஷ்ணனைப் பார்த்து கூட்டத்தலைவர்களாகிய காளைகளுடன் பால் தாரையோடு கூடிய ஸதனங்களால் அநந்தனை க்ருஷ்ணனை அபிஷேகம் செய்தன.

62. மேகங்களும் திவ்ய அம்ருதத்தோடு கூடிய நீர்த்தாரை களால் நித்யனான க்ருஷ்ணனை அபிஷேகம் செய்தன.

63. எல்லா வனஸ்பதிகளினுடையவும் (மரங்களுடையவும்) சந்த்ரன் போன்ற ரஸம் ஒழுகிற்று பூமாரியைப் பொழிந்தனர். ஆகாயத்திலும் வாத்யங்கள் ஒலித்தன.

64. மந்த்ரங்களையே உச்சரித்துக் கொண்டிருக்கும் எல்லா முனிவர்களும் வாயால் துதித்தனர். பூமி ப்ரளய ஸமுத்ரங்கள் தெளிந்திருந்தன. காற்றுக்கள் உலகத்துக்கு ஹிதமாக சூரியனும் தன் வழியில் நின்று விளங்கினான் சந்த்ரன் நக்ஷத்ரங்களோடு கூடி ப்ரகாசித்தான்.

65. (பேய் மழை முதலிய) ஈதி பாதைகள் அடங்கின. அரசர் பகைமையற்று இருந்தனர். மரங்கள், தளிர், இலைகள், நெருங்கி புஷ்பங்களுடன் விளங்கின

66. யானைகள் மதநீர் பொழிந்தன. ம்ருகங்கள் காட்டில் மகிழ்ச்சியடைந்தன. மலைகள் மரங்களால் அலங்கரிக்கப்பட்டு தாதுக்களால் விளங்கின.

67. அமர்ந்த ரஸங்களால் த்ருப்தியடைந்த தேவலோகம் இவ்வுலகம் இருந்தது. க்ருஷ்ண பட்டாபிஷேகம் திவ்ய ஸ்வர்க்க ரஸத்தால் நனைக்கப்பட்டது அல்லவா!

68. பசுக்களால் அபிஷேகம் பண்ணப்பட்டு திவ்யமான மாலைகளையும் ஆடைகளையும் தரித்துக் கொண்டிருக்கும் நித்யனான அந்த கோவிந்தனை நோக்கி இவ்விதம் தேவராஜன் இந்த்ரன் சொன்னான்.

69. "கோக்களின் கட்டளைப்படி உம்முடைய பட்டாபிஷேக மாகிற முக்ய கார்யம் செய்யப்பட்டது நான் வந்த காரணம் மற்றொன்று கேட்கப்படட்டும்.

70. கம்ஸனும் அயோக்யன் குதிரை உருவக்கேசியும் மதங் கொண்ட அரிஷ்டனும் சீக்ரம் வதம் செய்யப்படட்டும். ராஜாக் களை அடக்கியாள்வதைப் பிறகு செய்வீர்,

71. உமது அத்தைபிடத்தில் என் அம்சமாகப் பிறந்து என் போலவே யிருக்கிற அவன் (அர்ஜுனன்), உம்மால் காக்கத் தக்கவன். கௌரவிக்கத் தக்கவனும் கூட. நண்பனுகவும் சேர்த்துக் காள்ளப் படட்டும்.

72. உம்மால் அனுக்ரஹிக்கப்பட்டு, உமது ஒழுக்கத்தைப் பின்பற்றி, உமது வசத்திலிருந்து மிக்க கீர்த்தியடைவான்

73. பரதவம்சத்துக்குச் சிறந்த வில்லாளியும் (ஆவான்). அந்த வம்சத்திற்குத் தக்கவனும் ஆவான். நீர் இல்லாமல் ஸந்தோஷப் படவுமாட்டான்.

74. புருஷோத்தமனுன உம்மிடத்திலும், அந்த அர்ஜுன னிடத்திலும் தான் பாரத யுத்தம் அமைக்கப்பட்டுள்ளது. இருவருடைய சேர்க்கையில்எல்லா அரசர்களும்நாசமடைவார்கள்.

75. க்ருஷ்ணு! இவ்விதம் (மேல் கூறியவாறு) ரிஷிகள் நடுவிலும், தேவர்கள் நடுவிலும், என்னுல் ப்ரதிஜ்ஞை செய்யப் பட்டது. என்னுல் குலஸ்ரேஷ்டன் 'அர்ஜுனன்', என்னும் புத்ரன் குந்தியிடம் ஸ்ருஷ்டிக்கப்பட்டுள்ளான்.

76. அவன், (அர்ஜுனன் அந்தரங்களின் பரதத்வத்தை (மேலான வித்யையை) அறிந்தவன்.வில் இழுப்பதில் வல்லவன். சங்கர யுத்தம் செய்யும் எல்லா அரசர்களும் அவனிடத்தில் அடக்கு மாவார்கள்.

77. அவன் ஒருவனே போரில் வல்ல சூரர்களான அரசர் களின், அக்ஷௌஹிணி (படைகளின் பெரிய தொகை)களை போர் முறைப்படி மரணமடைவிப்பர்ன்

78. வில்லின்லாவகத்துடன் அம்பு விடும் முறையை ப்ரபுவே உம்மைத் தவிர, வேறு எந்த தேவர்களும், அரசர்களும் பின்பற்ற வல்லவரல்லர்.

79. அவன் யுத்தத்தில் மிகச் சிறந்த உடனிருப்பவனுகவும், பந்து வாகவும் ஆவான். கோவிந்தா என் பொருட்டு உம்மால் அவனுடைய நெருங்கிய சேர்க்கை ரக்ஷணம் செய்யத் தக்கது.

80. நான் எப்படியோ அப்படியே (அவனும்) உம்மால் எப்போதும் கடாக்ஷிக்கப்படவும் சீராட்டப்படவும் தக்கவன்.

நீரே லோகங்களை எப்போதும் கருத்தில் கொள்வது போல், அர்ஜுனனையும் கொள்ள வேணும்.

81. உம்மால் அவன் பெரிய யுத்தங்களில் எக்காலத்தும், நன்கு காக்கத்தக்கவன். உம்மால் ரக்ஷிக்கப்பட்ட அவன் விஷயத்தில் யமன் சக்தியுள்ளவன் ஆகான்.

82. க்ருஷ்ணா! அர்ஜுனனை அடியேனாக திருவுள்ளத்தில் கொள்ள வேணும். அடியேனை (அபராதம்) க்ஷமித்து, அந்தரங்க பூர்வமாக உமது ஆத்மாவாகவே கொள்ள வேண்டும். எப்படி அடியேன் உமக்கு நித்ய அந்தரங்கனே அப்படியே உமக்கு அந்த அர்ஜுனனும்

83. உம்மால் மஹாபலியின் கையிலிருந்து மூன்று அடிகளால் இந்த உலகங்களை ஜயித்து, தமயன் முறைகொண்டு, அடியேன் தேவர்களுக்கு அரசனாக ஆக்கப்பட்டேன்.

84. உம்மை ஸத்யமாகவும், ஸத்ய யஜ்ஞமூர்த்தியாகவும், ஸத்ய பராக்ரமனாகவும் அறிந்து தேவர்கள் ஸத்ய பாவத்தால் (மஹா விஸ்வாஸத்தோடு) உம்மை நெருங்கி சத்ரு நாச விஷய மாக சரணம் அடைகிறார்கள்.

85. உமது பிதாவின் ஸஹோதரி பிள்ளையும், என் புத்ரனு மான அந்த அர்ஜுனன் என்பான், உமது கூடவே இருப்பவனாகி உமது நட்பை அடையட்டும்.

86. க்ருஷ்ணா! போர் முனையில் யுத்தம் செய்யும் அவனைக் காக்கும் பொறுப்பு (அவன்) இருக்குமிடத்திலோ, அல்லது வீட்டிலோ, காளையினால் போல், ஸதா உம்மால் ஏற்கத்தக்கது.

87. க்ருஷ்ணா! வரப்போவதை யறிந்த உம்மால் கம்ஸன் வதமானதும், அரசர்களுடைய அந்த மஹாயுத்தம் நாற்புறமும் உண்டாகும்.

88. அந்த யுத்தத்தில் மனிதத் தன்மை மீறிய செயலுடைய வீரர்களின் வெற்றியை பெற்றனுபவிப்பவன் அர்ஜுனன், உம்மை புகழ் அடையும்.

89. க்ருஷ்ணா! அச்சுயதா! அடியேனும், தேவர்களும், ஸத்யமும் உமக்கு ப்ரியமானால் அடியேனது இந்த வார்த்தையை முழுதும் செய்தருளவேண்டும்.''

90. கோவிந்த பட்டாபிஷேகம் பெற்ற க்ருஷ்ணன், ப்ரீதி கொண்ட மனதுடையனாய் பதில் வார்த்தை சொன்னான்.

91. "சசிபதே! இந்த்ரா! தேவா! உன்னைப்பார்த்ததால் ப்ரீதி யடைந்தேன். உன்னால் சொல்லப் பட்ட இது, ஒரு சிறிதும் விடப்படமாட்டாது.

92. உன் கருத்தை யறிவேன், அர்ஜுனன், பிறப்பும், அறிவேன். மஹாத்மாவான பாண்டுவுக்கு, என் அத்தை விவாஹம் செய்து கொடுக்கப்பட்டதையும் அறிவேன்.

93. யமனால் அருளப்பட்ட குந்தி குமாரனான யுதிஷ்டரையும் அறிவேன். வாயுவால் அருளப்டட்ட (குந்தி) புத்ரன் பீமஸேனனையும், அறிவேன்.

94. அஸ்வினி தேவதைகளால் அருளப்பட்டு மாத்ரதேவி வயிற்றை யடைந்த நகுலன் ஸஹதேவன், எனும் புண்யாத்மாக்களான இரு பிள்ளைகளையும் அறிவேன்.

95. அத்தையின் கன்னிப் பருவத்திலேயே சூர்யனால் முதன் முதலில் அருளப்பட்டு தேரோட்டியின் (வளர்ப்பு) பிள்ளை கர்ணனையும் அறிவேன்.

96. த்ருதராஷ்ட்ர புத்ரர்களான துர்யோதனாதிகள் எல்லோரும் யுத்தத்தில் விருப்பமுள்ளவர்கள், என்பதையும் அறிவேன். ரிஷி சாபமாகிய இடி விழுதலால் உண்டாகிய பாண்டு மரணத்தையும் அறிவேன்.

97. ஆகையால், தேவர்களின், ஸுகத்தின் பொருட்டு ஸ்வர்கத்துக்குப் (நீ) போ. என் கண்முன் அர்ஜுனனின் சத்ரு எவனும் வல்லவனாகமாட்டான்.

98. அர்ஜுனன் பொருட்டு, பாரத மஹாயுத்தத்தில், குந்தியுடன், அந்த பாண்டவர்கள் எல்லோரையும், குறையில்லாமல் காப்பேன்.

99, இந்த்ரா! உன் பிள்ளை அர்ஜுனன், என்னை என்ன சொல்கிறானோ, அதை, உன் ஸ்னேஹத்தால் கட்டப்பட்டவனாய், (அவன்) பணியாள் போல் செய்வேன்."

100. தேவேந்த்ரன் ப்ரீதனும் ஸத்யஸந்தன் க்ருஷ்ணனின் அந்த ப்ரிய வார்த்தையை நேரில் கேட்டு ஸ்வர்கத்தை யடைந்தான்.

19ம் அத்தியாயம் முற்றும்

## 20-ம் அத்தியாயம்

## ஆயர்களால் போற்றப்பட்ட ஸ்ரீ க்ருஷ்ணன் ராஸக்ரீடை

1. **வைசம்பாயனர் சொன்னார்**: இந்தரன் சென்றதும், பிறகு கேசவர்த்தன் தாரணத்தால் ஸ்ரீமாது ஆகிய க்ருஷ்ணன் ஆயர் களால் கொண்டாடப்பட்டு ஆய்ச்சேரியையே அடைந்தான்.

2, 3 கோப வ்ருத்தர்களும் கூட விருக்கும் பந்துக்களும் கொண்டாடுகின்றனர். ''தன்யர்களானோம். உன் திவ்ய செயல் களாலும், நீதியினாலும் அனுக்ரஹிக்கப்பட்டோம். தேவர்களை யொத்த பராக்ரமம் வாய்ந்தவனே! கோவிந்தனே உன் க்ருபை யால் பசுக்கள் மழைப் பயத்திலிருந்து கரையேறின. நாங்கள் பெரும் பயத்திலிருந்து கரையேறினோம்.

4. பசுக்கள் தலைவனே! உனது அமானுஷமான செயல்களைப் பார்க்கிறோம் க்ருஷ்ணா! இந்த மலையைத் தாங்கியதால் உன்னைத் தெய்வமாக அறிகிறோம்.

5, 6 (பதினொரு) ருத்ரர்களில் நீ யார்? பலவானான நீ ம்ருத்துக்களில், அஷ்ட வஸுக்களில் யார்? கணுதிபதியான (வஸுதேவன்) நந்தன் உனக்குப் பிதாவானது எதற்காக? உன் பலமும், பாலக்ரீடையும், எங்கள் குலத்தில் நீசப் பிறப்பும், திவ்ய சேஷ்டையும், இவைகளால் எங்கள் உள்ளங்கள் ஸந்தேஹம் கொள்கின்றன.

7, 8 கோப வேஷத்தோடு எங்களுடன் ஏன் விளையாடு கிறாய்? இது தாழ்வல்லவா? உலகைக் காக்கும் லோகபால [மஹா விஷ்ணு] தேவனைப் போல் பசுக்களை நன்கு காக்கிறாய் என்ன இது? நீ தேவனா? அஸுரனா? யக்ஷனா? அல்லது கந்தர்வனே தானே? அத்தகைய நீ எங்கள் பந்துவாகப் பிறந்திருக்கிறாய்! உனக்கு வணக்கம்.

9. நீ ஏதோ ஒரு கார்யத்திற்காக உன் இச்சைப்படி இங்கு வஸிக்கிறாய். ஆதலால் நாங்கள் எல்லோரும் உன்னைப் பின்பற்று வோம். உன்னைச் சரணமாக அடைந்தோம்.

10. **வைசம்பாயனர் சொன்னார்.** தாமரைக் கண்ணன் க்ருஷ்ணன், ஆயர் சொல்லைக் கேட்டு, புன்சிரிப்பு கொண்டு கூடியிருக்கும் எல்லா பந்துக்களையும் நோக்கிச் சொன்னான்; "நீங்கள் எல்லோரும் என்னை எப்படி பயங்கர ஆற்றலுடையவனாக நினைக்கின்றீர்களோ அப்படியே நான். நம்மினத்தில் பிறந்த பந்து என நான் தாழ்வாக எண்ணத் தக்கவன் இல்லை.

11, 12 (நான் யாரென்பது சொல்லிக்) கேட்கப்பட வேண்டியது அவச்யமேயானால் [உரிய] ஸமயம் எதிர்பார்க்கப் படட்டும். பிறகு காதால் கேட்பீர்கள்.

13 உண்மையாக என்னைப் பார்க்கவும் போகிறீர்கள். தேவன் போன்ற சேஷ்டையுடைய இந்த பந்து கொண்டாடத் தக்கவனானால், இந்த அனுக்ரஹம் [ரக்ஷித்தல்] எனது ஆனால் ஆராய்ந்தறிவால் என்ன கார்யம்?

14. க்ருஷ்ணனால் இங்ஙனம் சொல்லப்பட்ட அந்த எல்லா ஆயர்களும், வாய்மூடி, திடமான மௌனமுடையவர்களாய், நாற்திசைகளில் சென்றனர்.

15. க்ருஷ்ணனும் நள்ளிரவில், சந்த்ரனுடைய யௌவன [சோலையையும்] வனத்தையும், சரத்கால அழகிய இரவையும் பார்த்து, சந்தோஷமாயிருக்க விரும்பினான்.

16. பசு சாணத்தால் மெழுகப்பட்ட ஆய்ப்பாடி வீதிகளில், வீரன் க்ருஷ்ணன் மதங்கொண்ட காளைகளின் சண்டைகளை நன்கு ஏற்பாடு செய்தான்,

17. வீரன் க்ருஷ்ணன் மிக்க பலமுள்ள ஆயர்களை சண்டையிடச்செய்தான். ப்ரபுவான அவன் காட்டில் எருதுகளை (ஓட விட்டு) முதலைபோல் (கெட்டியாகப்) பிடித்தான்.

18. ஸமயமறிந்த க்ருஷ்ணன் இரவில் (யுவதிகளான) கோப கன்னிகை, வரவழைத்து. யௌவன ப்ரவத்தை ஆதரித்து, அவர்களுடன் மகிழ்ந்தான்

19. அந்த அழகிய ஆய்பெண்டிர் இரவில், பூமியை அடைந்த சந்திரன் போல், அழகிய அவன் முகத்தை கடைக்கண்ணால் பருகினார்கள்.

20. மஞ்சள் வர்ணத்தால், நனைத்து, பொன்னிறமான பட்டாடையால், மங்கள வஸ்தரமணிந்த க்ருஷ்ணன், அழகு மிக்கவனாக விருந்தான்.

21. கட்டப்பட்ட தோள்வளைகள் கலந்து, அழகிய வனமாலையால் ப்ரகாசிக்கிறவனால், கோவிந்தன், அந்த ஆய்ப் பாடியை சோபையடையச் செய்தான்.

22. ஆய்ப்பாடியில் சோபையுள்ள அவனது விசித்ரமான செயல்களைப்பார்த்து, கோப கன்னிகைகள், அப்போது '' தாமோதரா!'' எனும் நாமத்தைச் சொன்னார்கள்.

23. அந்த உத்தம கோபிகள், ஸ்தனங்களால் நிமிர்ந்த மார்புகளால் அவனை. மிகவும் துன்புறுத்துகின்றனர். முகத்தில் சுழல்கிற கண்கள் கொண்டு ஆரப் பருகினர்.

24, க்ருஷ்ண சேர்க்கையில் ப்ரியமுடைய அந்த கோப ஸ்த்ரீகள், அன்னையர்களாலும், கணவர்களாலும், உடன் பிறந்தாராலும் தடுக்கப்பட்டு, இரவில் க்ருஷ்ணனைத் தேடுகினார்கள்,

25. அந்த கோப கன்னிகைகள் எல்லோரும், இரட்டையராக (கோபிக்கு க்ருஷ்ணனாக பாவித்து வட்ட) தரிசையாக நின்று மனோஹரமான க்ருஷ்ண சரிடுதையை (கோபிகாகீதம்) பாடிக் கொண்டு மகிழ்ந்தனர்.

26. யௌவன பாவத்திய அந்த உத்தம கோப ஸ்த்ரீகள் க்ருஷ்ண லீலைகளை, தாம் க்ருஷ்ணனாகப் பாவித்து, நடிப்பவர் களாய், க்ருஷ்ணனிடத்தில் செலுத்தப் பட்ட கண்களை யுடையராய், க்ருஷ்ணனின் நடையை அப்படியே நடிப்பவராய், ஆனார்கள்.

27. அப்படியே மற்றும் சில ஆயர்பெண்டிர், தாளம் போடும் கைகளுடன். அந்த க்ருஷ்ணனின் சரிதத்தை பாடிக் கொண்டு வனங்களில் ஸஞ்சரித்தனர்.

28. அந்த ஆயர்பெண்கள், க்ருஷ்ணனின், கூத்து, பாட்டு, விளையாட்டு, புன்சிரிப்பு, பார்வை முதலியவற்றை நடித்துக் கொண்டு ஸந்தோஷத்துடன் விளையாடுகின்றனர்.

29. தாமோதரனையே கருத்தில் கொண்ட அந்த உத்தமப் பெண்கள், (க்ருஷ்ண சரிதத்தின்) பாவத்தில் லயித்து இனிமை யாகப் பாடிக் கொண்டு ஸுகமாக ஆய்ப்பாடியை அடைந்தனர்

30. கோமயத் தூளியால் பூசப்பட்ட உடலையுடைய அப்பெண்கள், நன்கு மதங்கொண்ட ஆண்யானையைப் பெண் யானைகள் போல் க்ருஷ்ணனை மகிழ்வித்துக் கொண்டு பின் சென்றனர்.

31. கருப்பு மான் போன்ற கண்களை கொண்ட வேறு கோபிகள், நன்கு சிரித்த முகத்துடன், கருத்தை வெளிப் படுத்தும் கண்களால், அந்த க்ருஷ்ணனை த்ருப்தியடையாத பெண்களாக பருகுகின்றனர்,

32, காம தாகம் கொண்ட ஆயர் பெண்களை, இரவில் அனுபவத்துள் ஆழ்ந்தவர்களாய், இந்த க்ருஷ்ணனின் தாமரை போன்ற முகத்தை போக ரஸத்தில் மூழ்கிப் பருகினுர்.

33. "ஹா! ஹா:" என்று பெயர் கூவி யழைக்கும் அந்த க்ருஷ்ணனிடம், அந்த உத்தம பெண்டிர் மகிழ்ந்து தாமோதரனுல் சொல்லப்பட்டு வெளிவந்த வார்த்தையை ஏற்றுக் கொண்டனர்.

34. போகத்தில் இழுக்கப்பட்டு, கலைக்கப்பட்ட அந்த கோபிகளின் குழல்கள் வகிர் கலைந்து, அவிழ்ந்து, ஸ்தனங்கள் நுனியில் பரவின.

35, இவ்விதம் அந்த க்ருஷ்ணன் கோபிகளின் வட்ட வரிசை களால் அலங்கரிக்கப்பட்டு சந்த்ரனேடு கூடிய சரத்கால இரவுகளில் ஸுகமாக மகிழ்ந்தான்.

20ம் அத்தியாயம் முற்றும்

## 21-ம் அத்தியாயம்

## அரிஷ்டன் எனும் காளை அஸுரன் வதம்

1. **பைசம்பாயனர் சொன்னுர்:** ஒரு ஸமயம் க்ருஷ்ணன் ராஸக்ரீடையில் ஆழ்ந்திருக்கும் போது ஆய்ப்பாடியை நடுங்கச் செய்கிற' மதங்கொண்ட 'அரிஷ்டன், எனும் காளை (அஸுரன்) காணப்பட்டான்.

2. அணைந்த கொள்ளிக், கட்டையையும் கார்மேகத்தையும் போன்ற நிறம், கூர்மையான கொம்பு, சூர்யன் போன்ற கண்கள், கால் முனையில் கூர்மையான குளம்புகள். (இத்தகைய) கருப்பன்

(அஸுரன்) இன்னொரு யமன் போல் இருந்தான். உதடுக அசைத்துக் கொண்டும், நாக்கால் நக்கிக் கொண்டும் கர்வத்த வாலைத் தூக்கிக் கொண்டும், கடினமான திமிலுடனும், திமிய முன்பாகம் உயர்ந்தும், உடல் பரிமகணத்தால் எவராலும் வெ முடியாத படியும் சாணியாலும் மூத்ரத்தாலும் மேல் பூச்சுடனு பசுக்களுக்கு மிகவும் பயத்தைச் செய்தும், பருத்த இடுப்புடனு நடித்த முகத்துடனும், வலிய முழங்காலுடனும் பெ வயிறுடனும். கொம்புகளைத் தாழ்த்திக் கொண்ட போக்குடனு தொங்கும் கழுத்துத் தோலுடனும்; பசுக்கள் மேல் ஏற சப கொண்டும், மரத்தை முட்டி அடையாளம் செய்யப்பட்ட மு தொடும் போருக்குச் சித்தமான கொம்பு நுனியுடனும், சத் வ்ருக்ஷங்களை அழித்தும், பயங்கர ரூபத்தோடும் பசுக்களை துன்புறுத்துபவனுமாகிய 'அரிஷ்டன்' எனும் அஸுரன் வ்ருஷ ரூபத்துடன்' தொழுவங்களில் சுற்றி வேகமாக ஓடுகிறுன்.

8. பசுக்களின் கர்ப்பத்தை நழுவச் செய்து கொண் (பயங்கரமாகப்) போகிறுன். தலையீற்றுப் பசுக்களை பருவமில்லா காலத்தில் அடைகிற சபலனுய் ஸஞ்சரித்தான்.

9. கொம்பை ஆயுதமாகவுடையவனும், கொடியவனும் கெட்ட திமிர் கொண்டவாறுமான அந்த அஸுரக்காளை பசுக்கை அடிப்பவனுக (எதிர்த்து) சண்டையில்லாமல், தொழுவங்கள் ஸந்தோஷமடையவில்லை.

10. சிறிது நேரம் கழித்து, பலம் மிகுந்து யமன் வசத்தி அகப்பட்ட அந்த அஸுரக்காளை கேசவனுக்கு முன்னுல் வந்தான்

11. அந்த பலம் மிக்க அஸுரன், அங்கு பலாத்காரமா பசுக்களைத் துன்புறுத்தி காளை, காளைக்கன்றுகள். மற்ற கன்றுகள் ஒன்றும் தொழுவிலில்லாமல் (ஓடச்) செய்து விட்டான்.

12. அதே ஸமத்தில், க்ருஷ்ணன் பக்கலில் அடைந்த பசுக்கள யமன் வசத்தில் இருக்கிற, அந்த துஷ்டாத்மாவான (அவ் வஸுரன்) நடுங்கச்செய்தான்.

13 இடிகூடிய மேகம் போன்ற அம்மஹா அஸுரன், கர்ஜித்தான். க்ருஷ்ணன் தாள சப்தத்திஞலும் ஸிம்ஹகர்ஜனை களாலும் அவ்வஸுரன் மயங்கச் செய்தான்.

14. கோவிந்தன், வ்ருஷப ரூபங்கொண்ட அஸுரனைத் தொடர்ந்தோடினான் அந்த அஸுரன் க்ருஷ்ணனை நோக்கி, மகிழ்ச்சி, காட்டும் வலையும் கண்களையும் உடையவனாய், கோபங்கொண்டு குளம்பால் (மண்ணைவெட்டும்) தாள சப்தத்துடன் யுத்தத்தை விரும்பி, கர்ஜித்தான்.

15. ஓடிவரும், அயோக்யனை காளை ரூபங்கொண்ட அவ்வஸுரனைப் பார்த்து, க்ருஷ்ணன் அசைவில்லா மலைபோல் அந்த விடத்திலிருந்து நகரவேயில்லை.

16 க்ருஷ்ணனின் வயிற்றில், நோக்கை வைத்து, உயர்த்திய முகத்துடன். க்ருஷ்ணனின் நாசத்தை விரும்பி விரைவாக துள்ளிக் குதித்தான்.

17 (தன்னை) நோக்கி வேகமாக, தடுக்கமுடியாது ஓடி வரும் அந்த அஸுரக் காளையை, கருத்த நிறமுடைய காளை போன்ற க்ருஷ்ணன் எதிர்த்துப் பிடித்தான்.

18. மஹா வ்ருஷபம், சாதாரண காளையுடன் போல, க்ருஷ்ணன் (அந்த) அஸுரக் காளையை நன்கு மோதினான். பிறகு அந்த அஸுரக் காளை வாயிலிருந்தும், மூக்கிலிருந்தும், சப்தத்தோடு நுரையைச் (கக்கினான்) வெளிவிட்டான். போரில் பரஸ்பரம் தாக்கிய உடலையுடைய, க்ருஷ்ணனும், காளை அஸுரனுமாகிய அவ்விருவரும். மழைக்காலத்தில், ஒன்று சேர்ந்த மேகங்கள். போல் விளங்கினர்.

20. கொம்புகளின் நடுவில் காலை வைத்து, திமிர் பலத்தை அடக்கி, அரிஷ்டனின் கழுத்தை, நனைத்த வஸ்த்ரத்தைப் போல் நசுக்கிப் பிழிந்தான். அந்த அஸுர காளையின்
21. யமதண்டம் போன்ற, இடது கொம்பைப் பிடுங்கி மறுபடியும் அதனாலேயே முகத்தில் அடித்தான். மிகவும் அடிக்கப்பட்ட அஸுரன் இறந்தான்.

22. 23, கொம்பொடிந்து. வாய் உருக்குலைந்து, கழுத் தொடிந்த அவ்வஸுரன், ரத்தத்தைக் கக்கிக்கொண்டு, நீர்தாரையுடன் கூடிய மேகம்போல் விழுந்தான். கொழுந்த வ்ருஷபாஸுரன், க்ருஷ்ணனால் கொல்லப் பட்டதைப் பார்த்து, எல்லாப்ராணிகளும் இந்த க்ருஷ்ணனின் செயலை "நன்றுநன்று!" என்று எங்கும் துதித்தனர்.

24. தாமரை போன்ற கண்களையுடைய அந்த உபேந்திரனும் காளை அஸுரனைக் கொன்று, அழகிய சந்த்ரனுயுடைய இரவில் மறுபடியும் ராஸக்ரீடை செய்தான்.

25 எல்லா தேவர்களும் இந்தரனைப்போல், அந்த எல்லா ஆயர்களும், மகிழ்ச்சியுடன் தாமரைக்கண்ணன், க்ருஷ்ணனை உபாஸித்தனர்.

21-ம் அமுற்றிற்று

## 22-ம் அத்தியாயம்

### கம்ஸனின் மந்த்ராலோசனை: ராம க்ருஷ்ணரை அக்ரூர்மூலம் வில்விழாவிற்கு மதுரை அழைத்தல்

1. வைசம்பாயனர் சொன்னர்: ஆய்ப்பாடி அடைந்த க்ருஷ்ணனை, வ்ருத்தியடையும் நெருப்புப்போல் சொல்லக் கேட்டு அவனிடமிருந்து பயத்தை எதிர்பார்த்து கம்ஸன் மிகுந்த கலக்கத்தையடைந்தான்.

2. பூதனை கொல்லப்பட்டாள்; கோவர்த்தன மலை தூக்கித் தாங்கப்பட்டது; இந்த்ரன் கட்டளை வீணையிற்று; காளியன்தோற் கடிக்கப்பட்டான்; தேனுகன் இனத்துடன் அழிக்கப் பட்டான்: ப்ரலம்பன் வீழ்த்தப்பட்டான் உகந்து செய்ய புரிந்து பசுக்கள் காக்கப்பட்டன; திமில்கொண்ட அரிஷ்டா ஸுரக்காளை கொல்லப் பட்ட துகோபர்கள் ஆனந்தப் படுகின்றனர்; நாசமும், தோன்றி மஹாபயம் நெருங்கிய ஸமயம் (உரலுடன் பிணைக்கப்பட்ட) க்ருஷ்ணனுல் மரங்கள் இழுத்து வீழ்த்தப்பட்டன; அப்படியே சகடாஸுரனும் (தள்ளி வீழ்த்தப்பட்டான்) வ்ருத்தியடையும் சத்ருக்களிடத்தில், நினைத்தற்கரிய அச்செயல்களைக் கேட்டு, மதுரை மன்னனுகிய கம்ஸன். தன்னை, துரதிர்ஷ்டம் பிடித்தவனாகவே எண்ணினான்.

6. உணர்ச்சியற்ற. இந்த்ரியங்களை உடையவனுய், உயிரிழந்தவன் போலவே காணப்பட்டான்.

7. பிறகு மதுரை ஓசையடங்கி மௌனமாயிருக்கும் இரவி தேவர்களுக்கு ஸமமான வஸுதேவர் கங்கர், ஸத்யகன், தாருகன், கங்கர்தம்பி, போஜன், வைதரணன், மிக்க பலமுடைய

விகத்ரு, பயமூட்டும் தர்மஜ்ஞன், பெருஞ்செல்வன் விசத்ரு, கொடைவள்ளல் பூரிதேஜஸ், பூரிஸ்ரவஸ், ஆகிய எல்லா பந்துக்களையும், யாதவர்களையும், வரவழைத்து ''கேளுங்கள்'' என்று விளித்து, கடுமையான கட்டளையுடைய மதுரை மன்னன்: உக்ரஸேனன் குமரன் ராஜாகம்ஸன் சொல்லத் தொடங்கினான்.

12. ''நீங்கள் எல்லா கார்யங்களையும் அறிந்தவர், வேதங்களைக் கரை கண்டவர்; நீதி சரிதைகளில் ஸமர்த்தர்; தர்மார்த்தகாமம் (மூன்றை) அனுஷ்டிப்பவர்; செய்ய வேண்டியவற்றைச் செய்பவர்; பூமிக்குத் தேவர் போன்றவர், சிறந்த ஒழுக்கத்தில் நிலைநிற்பவர்; அசைவற்ற மலை போன்றவர்; ஆடம்பரச் செயலற்றவர்; எல்லோரும் குருகுல வாஸம் செய்தவர் ; ராஜ்யவிஷய மந்த்ராலோசனையை நன்கு அறிந்தவர் ; எல்லோரும் தனுர் வேகத்தின் கரைகண்டவர் ; உலகிற்குப் புகழ் தீபங்கள் ; வேதார்த்தங்களைச் சொல்ல ஆசைப் படுகிறவர் ; நான்கு ஆப்ரமங்களின் (ப்ரஹ்ம சர்ய க்ருஹஸ்த, வானப்ரஸ்த ஸந்யாஸ) தத்வத்தை அறிந்தவர் நான்கு வர்ணங்களுடைய க்ரமத்தை நன்கு அறிந்தவர் ; நல்ல ஏற்பாட்டைச் (சட்டத்தை) சால்பவர் ; நீதி யறிந்தவர்களுக்குத் தலைவர் ; சத்ரு ராஜ்யங்களை அழிப்பவர் ; சரண் புகுந்தவரைக் காப்பவர் ; இவ்விதம் குறைவற்ற ஒழுக்க முடையவர்களும், ஸ்ரீமான்களும் (முறைதப்பாமல்) செய்பவர்களும் ஆகிய உங்களால் ஸ்வர்க்க போகங் கூட அனுக்ரஹிக்கப் பட்டதாகும்

18. பூமியைப் பற்றி கேட்பானேன்! உங்கள் நடத்தை ரிஷிகளுடையது போன்றது ; பெருமை (ஸப்த) மருத்துகளுடையது போன்றது ; கோபம் ருத்ர்களுடையது போன்றது.

19. தேஜஸ்அக்னியைப் போன்றது எங்கும் பரவிய புகழுடைய வீரர்களாகிய உங்களால் பாரம்பர்யமாக வரும் இந்த மிகப் பெரிய யதுகுலம், சேர்ந்திருக்கும் போது, வ்ருத்தியடையும் என் கேடு, உங்களால் அலக்ஷ்யம் செய்யப் பட்டது ஏன் ?

20. ஆய்ப்பாடியில் நந்தகோபன் மகன் என்று கீர்த்தி பெற்ற இந்த க்ருஷ்ணன், பொங்கி வரும் கடல் போல் நம் வேரை அறுக்கிறான்.

21. (நல்ல) மந்த்ரியில்லாதவனையும், சூன்யனையும், செயல் பட இயலாதவனையும், நல்ல ஒற்றனில்லாமையால் குருடனுமான

னது (இந்தக்) காரணத்தாலேயே (ராஜ்யத்தில்) ஸுகமாக வஸிக்கிறான்.

23 அலக்ஷ்யம் செய்யப்பட்ட நோய் போலவும், நீர் நிறைந்த கார் மேகம் போலவும் கோடை முடிவில் கர்ஜிக்கும் மேகம் போலவும், அந்த அயோக்யன் க்ருஷ்ணன் விசேஷமாக வளர்கிறான்.

24 25 நந்தகோபன் வீட்டில் பிறந்து அற்புத கார்யங்களைச் செய்கிற அந்த க்ருஷ்ணனின் கதியோகம் பாரக்ரமம், ஆகிய இவற்றை நான் அறிகிறேன் இல்லை. அவன் தனியே தோன்றிய பூதமா? அல்லது தேவக் குழந்தையா அறியேன். தேவருக்கும் மீறின ; மனிதருக்கும் மீறின செயல்களால் ஊகிக்கப் படுகின்றன.

26. சாய்ந்த கோலத்துடன், ஸ்தன்ய பானம் செய்ய விரும்பிய இளம் குழந்தையால். நெருங்க முடியாத பறவை வடிவு கொண்ட பூதனை, உயிருடன் குடிக்கப் பட்டாள்.

27. அப்படியே யமுனை மடுவில், காளிய நாகம் அடக்கப் பட்டு ஒரு நொடியில் எவர் கண்ணுக்கும் புலப்படாமல், பாதாளத்தில் ஸஞ்சரிப்பவனாகச் செய்யப்பட்டான்.

28. மறுபடியும் பலம் வளர்ந்த நந்தன்குமாரன் (லகுக்ரம) உபாயம் செய்து, (அவனால்) தேனுகன் உயிரில்லாமல், பனைமர உச்சியிலிருந்து தள்ளப்பட்டான்,

29. எந்த ப்ரலம்பனை. தேவர்கள், போரில் வெல்ல வல்லரல்லரோ, அவன் குழந்தையான இவனால். ஸாதாரண மனிதன்போல் ஒரே குத்தில் கொல்லப்பட்டான்.

30. இந்திர விழாவை நிறுத்தி இந்திரன் கோபத்தால் உண்டாகிய மழையை வென்று பசுக்களின் வீட்டிற்காக கோவர்த்தன மலை தூக்கித் தாங்கப்பட்டது.

31. கோகுலத்தில் பலவான் அரிஷ்டன். கொல்லப்பட்டான். கொம்பில்லாதவனாகவும் செய்யப்பட்டான். உண்மையில் பாலனில்லாத அவன் (க்ருஷ்ணன்) பால்யாவஸ்தையை, யேற்று குழந்தை விளையாட்டால் மகிழ்கிறான்.

32. அய்ப்பாடியில் வஸிக்கும் அவனது (க்ருஷ்ணனது) இவ்வித செயல்களின் மொத்தம், எனக்கும் கேசிக்கும் மிக நெருங்கியிருக்கும் பயத்தை (காட்டுகிறது) நிச்சயம்.

33. அவன் (க்ருஷ்ணன்) எனக்கு முன்னரே ஏற்படுத்தப் பட்டவன் எப்போதும் பூர்வதேவரத்தையே (விஷ்ணு ஸ்வரூபத்தையே) உடையவன். அவன் யுத்தத்தை விரும்பி, என்முன்னாலே, இங்கே நிற்கிறான்போலும்.

34. ம்ருத்யுவிற்கு (சாவிற்கு) எதிர்ப்பு சக்தியற்றதும், மனிதத்தன்மையுள்ளதும், இழிவானதுமான இக்குலப் பிறப்பு எங்கே? என் இடைச்சேரியில் தேவர்களின் பெருமையோடு விளையாட்டு எங்கே?

35 தன் (திவ்ய) சரீரத்தை இழிவான தேஹத்தால் மறைத்து வாக்குக் கெட்டாத இந்தத் தேவன் (எனக்கு) சுடுகாட்டு நெருப்பு போல் இங்கு மகிழ்கிறான்.

36. முன்னொருகால் தேவதைகளின் கார்யத்திற்காக, விஷ்ணு வாமனரூபங் கொண்டு, இந்த பூமியை (மஹாபலியிடம்) அபஹரித்தானென்று) கேட்கப்படுகிறதல்லவா?

37 பெரும் சக்தி வாய்ந்த விஷ்ணுவினால், ஸிம்ஹ ரூபம் கொண்டு அஸுர மூதாதையான ஹிரண்யகசிபு கொல்லப் பட்டான்.

38 முன் காலத்தில் ஶ்வேதாசல சிகரத்தில் த்ரிபுர ஸம்ஹாரம் செய்த ருத்ர ரூபம் தரித்த விஷ்ணுவால் (அங்குள்ள) அஸுரர்கள் விரட்டப் பட்டார்கள்.

39 (ஒரு ஸமயம், ப்ரஹஸ்பதி புத்ரன் சசனால், தார்துரீ, எனும் உடர்பிச்சும்) மாயாசக்தி அடைபட்டட்டு, அக்ராஸ்யர், தன் ப்ரதிஜ்ஞையிலிருந்து நழுவும்படி செய்யப்பட்டார். அதனால் அஸுர ராஜ்யத்தில் மழையின்மை உண்டாயிற்று.

40. அந்த விஷ்ணு அநந்தன். என்றுமிருப்பான், ஆயிரம் தலைகள் உள்ளவன், அழிவற்றவன், (அவன்) வராஹரூபம் தரித்து ஸமுத்ரத்திலிருந்து பூமியை உயர தூக்கினான்.

41. முன்னர் அம்ருதம் உண்டான போது, விஷ்ணு பெண் ரூபம் தாங்கி, தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும், மிகப் பெரிய யுத்தத்தை உண்டு பண்ணினான்.

42. அம்ருதத்தின் பொருட்டு. தேவாஸுரர்கள் கூட்டத்தில் ஸமுத்ரத்தில், விஷ்ணு (ஆமையாகி) மந்த்ரமலையைத் தாங்கினான் என்பது சொல்லிக் கேட்கப்படுகிறது.

43. முன் காலத்தில், எல்லோரும் கொண்டாடத் தக்க வாமன ரூபம் தரித்து, பலியிடமிருந்து மூன்று அடிகளால், மூன்று உலகங்களையும் தேவலோக ஆட்சியாகச் செய்தான்.

44. அந்த விஷ்ணுவே; தன் தேஜஸ்ஸை நான்கு பாகமாகப் பிரித்து தசரதன் வீட்டில், ராமனாக பிறந்து, அப்போது ராவணனை கொன்றான்.

45. இப்படி இந்த விஷ்ணு வஞ்சனையாக தேவர்களின் கார்ய ஸித்தி பொருட்டு அந்தந்த ரூபமடைந்து. தன் கார்யத்தை நிறை வேற்றிக் கொள்கிறான்.

46. ஆகையால் இவன் (க்ருஷ்ணன்) நிச்சயமாக விஷ்ணுவே! ம்ருத்துகளுக்கு அதிபதியான இந்த்ரனே! எனக்கு இறுதிச் சடங்கு செய்யும் விருப்பத்தால் வந்தவன். நாரதர் இதை முன்னரே சொல்லியிருக்கிறார்.

47. இந்த விஷயத்தில் என் புத்தி வஸுதேவனைக் குறித்து ஸந்தேகப் படுகிறது நிச்சயம் இவருடைய (வஸுதேவருடைய) புத்தி விசேஷத்தால், நாம் பயத்தை அடைந்தோம்.

48. நான் 'கட்வாங்க வனத்தில் நாரதரைச் ஸந்தித்தேன். அந்த அந்தணனே மறுபடியும் இரண்டாம் முறை என்னிடம் சொன்னார்.

49. ''கம்ஸா! தேவகி கர்ப்பத்தை அழிப்பதற்கு எந்த பேரு முயற்சி உன்னால் செய்யப்பட்டதோ, அந்த உனது செயல் வஸுதேவரால் இரவில் வீணக்கப்பட்டது.

50. கம்ஸா! உன்னால எந்தப் பெண் குழந்தை இரவில் கல்லில் மோதப்பட்டதோ, அந்தக் குழந்தை யசோதையின் பெண்ணாகத் தெரிந்துகொள். க்ருஷ்ணனையும் வஸுதேவர் பிள்ளையாகத் தெரிந்துக்கொள்.

51. மித்ரவேஷம் கொண்ட சத்ருவான வஸுதேவரால், உன் வேதத்தின் பொருட்டு பிறந்த இந்த இரண்டு குழந்தைகளும் இரவில் மாற்றப்பட்டன.

52. அந்த யசோதையின் பெண்ணே, சிறந்த பர்வதமான; விந்தியத்தில்; ஆகாயத்தில் திரியும் சும்பன் நிசும்பன் எனும்

இரண்டு அஸுரர்களைக் கொன்று அபிஷேகம் செய்யப்பட்டு, வரம் கொடுப்பவளாய், பூதனர்களால் வணக்கப்பட்டு, மாமிஸம் கலந்த அன்னம், ம்ருக பலி, இவைகளில் ப்ரியம் கொண்டு மிக்க கொடிய கொள்ளைக்காரர்களால் பூஜிக்கப்படுகிறார்கள்.

54. மாம்ஸம் நிறைந்த குடங்களால் மிக விளங்குகிறவள். அழகிய மயில்(ரூப) தோகைகளாலும், தோகைக்கற்றைகளாலும், அலங்கரிக்கப்பட்டவள்.

55. மகிழ்ச்சிகொண்ட கோழிசப்தம் உடையது; காக்கை குரல் ஒலி கொண்டது; ம்ருகக் கூட்டங்களால் நிறைந்தது; அனுகூலமான பக்ஷிகளை யுடையதும் ஸிம்ஹம் புலி, பன்றி, இவைகளின் ஒலியால் எதிரொலி கொண்டது; உயர்ந்த மரங்களால் நெருக்கமானது; சுற்றிலும் நுழைய முடியாத இடமுடையதும் திவ்யமான பொன் கிண்டி, சாமரம், கண்ணாடி, இவைகளால் விளங்குவது; நூற்றுக்கணக்கான தேவ வாத்ய சப்தங்களால் எதிரொலி யுடையது. விந்த்ய மலையில் தன்னுடைய தேஜஸ்ஸால் நிறுவப்பட்ட அவளுடைய ஸ்தனம் இத்தகையது. மனதை மகிழ்விக்கும்.

58. அவ்விடத்தில் சத்ருக்களுக்கு நோக்கம் உண்டு பண்ணும் தேவதைகளாலும், பூஜிக்கப்பட்ட அவள், மிகவும் ப்ரீதி கொண்டவளாய் வஸிக்கிறாள்.

59. எந்த இவன் (க்ருஷ்ணன்) நந்தகோபன் மகன் என சொல்லப் படுகிறானோ, மிகப் பெரிய ஸாதனைகள் (பூதனை சகடாதி) வதத்துக்குக் காரணம், இவன் (இந்த க்ருஷ்ணன்) தான் என்று சொன்னார்.

60. "வஸுதேவரிடமிருந்து இரண்டாவது வாஸுதேவன் (பிள்ளை) உண்டாவான், அவனே உனக்கு இயற்கையான யமன், பந்துவும் ஆவான்."

61. வாஸுதேவ புத்ரன் பலம் வாய்த்த அந்த வாஸுதேவனே தர்மப்படி எனக்கும் பந்து (அனால்) என் ஹ்ருதயத்தால் என்னை முடிக்கும் சத்ரு,

62 காக்கை கால்களால் ஒருவன் தலையில் நிற்கிறது. அவன் கண்களையே கொத்துகிறது, அது போலவே இந்த வஸுதேவன் பிள்ளை பந்துக்களுடன் என் பக்கலிலேயே யிருந்து உண்கிறான்.

64. என் வேர்களையே அறுக்கிறான் பச்சிளம் சிசு கொலை (பாபம்) தாண்ட முடியும், பசுவதமும், பெண்வதமும் அப்படியே ஆனால் செய் நன்றி கொன்றவனுக்கு அதிலும் விசேஷமாக் பந்துவுக்கு, நல்லுலகம் கிடையாது.

65. எந்த நன்றி கொன்றவன், மனதில் பகை கொண்டுச் ப்ரீதி காட்டுகிறானோ, அவன் சுற்றத்துடன், பாப உள்ளம், படைத்த பாவி பரம்பரை (நரக) வழியை சீக்ரமே அடைகிறான்.

66, எவன் பாபமற்ற (என்) இடத்தில் பாவத்தை செய்கிறானோ, அவனால் நரகிற்குச் செல்லும் கொடிய வழி.

67, உறவை விரும்பும் உன்னால், ஒழுக்க முறையாலும் குணத்தாலும், நடத்தையாலும் உன்னால் கொண்டாடத் தக்கவன்;

69. தன் பந்துவான நானா? என்னை விட கொண்டாடத் தக்கவன் உன் பிள்ளையான அவனா? யானைகளின் கொடிய கலகத்தில், வெட்டப் பட்டும் துளிர்க்கும் கொடிகள்; நாசத்தை யடைகின்றன், கலகம் முடிந்ததும் அக்கொடிகள், தாமும் (யானைகளின்) கூடவே உண்கின்றன (துளிர்க்கின்றன). பந்துக் களும் அப்படியே கலகக் காலத்தில் தன்னை சேர்ந்தவனோ, அன்னியனோ (பந்துக்களை) ஒழிக்கும் ஸமயம் எதிர் பார்ப்பவன் கொல்லப் படுகிறான்.

70. வஸுதேவா! நீ நன்கு அறிந்த என்னால். என் நாசத்தின் பொருட்டு, யமனாக வளர்க்கப்பட்டாய். இந்த குலத்திற்கு பெரிய விரோதியானாய்.

71. மூடா! நீ பொறுமையுடையவன் விரோதத்தையே ஒழுக்கமாகவுடையவன் ஸதா பாப சிந்தை யுடையவன் நல்லவன் போல் வேஷ முடையவன் சரியான ஸமயத்தில், யது குலம் வருந்தும்படி உன்னால் செய்யப் பட்டது.

72. வஸுதேவா வயது முதிர்ந்த நீ என்னால் வீணாக கௌரவிக்கப்பட்டாய்.

73. (உலகின்) எவனுடைய யுத்தி முதிர்ந்திருக்கிறதோ அவனே பெரியோன். தலை நரைத்தாலும், நூற்றுக்கணக்கான வயதானதாலும் பெரியோனல்லன்.

74. நீ கடியன்; கேள்வி ஞானம் நிறைந்தவனல்லன் சரத்கால மேகம் போல் வயதால் மட்டும் பெரியவன்.

75. மேலும் வீண் யோசனையுடைய வஸுதேவா! நன்றாகத் தெரிந்து கொள். கம்ஸன் மரித்த பின், என் மகன் மதுரையை ஆள்வான்.

76. நீ நினைத்தது பொய். வீணாகவயதானவர், அறுக்கப்பட்ட ஆசையை யுடையவன். எனக்கு எவன் எதிரியோ. அவன் உயிருட னிருக்கும் ஆசையடையவன் அல்லன்.

77. நீ கெட்ட எண்ணத்துடன் நம்பினவனைக் கொல்ல விரும்புகிறாய் ஆகையால் உன் பிள்ளைகள் இருவரும் பார்த்துக் கொண்டிருக்கும் போது உனக்கு ப்ரதி செய்கிறேன்!

78. என்றால் இதற்கு முன், முதியோர் கொலை பெண் கொலை அந்தணர் கொலை, இவற்றில் ஒன்றும் செய்ப்படவில்லை, இனியும் செய்ய மாட்டேன்,

79. விஷேமாகப் பந்துவிடத்தில் இல்லை. நீ இங்கு பிறந்து வளர்ந்தவன். என் பிதாவால் நன்கு வளர்க்கப் பட்டவன். என் அத்தையின் புருஷன் நீ,

80. யாதவருக்கு முதல் குரு, கீர்த்தி வாய்ந்த சக்ரவர்த்தியின் பெரிய குலத்தின் புகழ் படைத்தவன். தர்ம புத்தியுடைய பெரிய ஸாதுக்களால் கௌரவமாகப் பூஜிக்கப் பட்டவன்.

81 82. நாம் எல்லோரும் என் செய்வோம்? ஸாதுக்களி டத்தில் பேச்சுக்கு ஆளானோம். யாதவ குலத்துக்கே முக்யனை உனக்கு இத்தகைய ஒழுக்கம்! வஸுதேவரின் அக்ரமங்களால், என்னைக் கொல்வதோ, ஜயிப்பதோ, பிறகு யாதவ புருஷர்கள் முட்டாக்கிட்டுக்கொண்டு (வெட்கத்துடன்) ஸாதுக்களிடத்தில் போவார்கள்

83. யுத்தத்தில், எனது வத உபாயத்தை யோசனை செய்கிற உன்னால், நன்றி கொன்ற கார்யம் செய்யப்பட்டது, யாதவர்கள் (பழி) வார்த்தை ஏற்கும்படி செய்யப் பட்டார்கள்.

84. க்ருஷ்ணன், நான், ஆகிய இருவருக்கும், தணிக்க முடியாத விரோதம் ஏற்பட்டுவிட்டது. எங்கள் இருவருள்

ஒருவர் (மரண) சாந்தியடைந்தால், யாதவர் சாந்தி(ஸொர்கயம்) அடைவர்.

85, 86. வள்ளல் அரசான தானபதி அக்ருரே! என் கட்டளையால் அந்த ராம க்ருஷ்ணர் இருவரையும், நந்த கோபரையும், கப்பம் கட்டும் மற்ற கோபர்களையும், ஆய்ப்பாடியி யிலிருந்து அழைத்து வருவதற்கு சீக்ரமாகப் போவீர்! வருஷ கப்பத்தை யெடுத்து! தொண்டு கோபர்களுடன் நகரத்துக்கு சீக்ரம் வருக'என்று நந்த கோபரிடம் சொல்வீர்.

87. வஸுதேவர் பிள்ளைகளாகிய க்ருஷ்ண பலராமர் இருவரையும், கம்ஸன் ப்ரோஹிதருடனும், ஏவலாளருடனும், பார்க்க விரும்புகிறான்

88. இவ்விருவரும் (மற்போட்டிக்) களத்தில் மற்போர் வல்லவர், வெகுகாலமாகப் பயிற்சி பெற்றவர். வலிமை வாய்ந்தவர். செய்திறன் உள்ளவர், உடல் வலிமைப் போட்டியில், ஊக்க முடையவர் என்று கேள்விப்படுகிறேன்.

89. நமக்கும் (மற்)யுத்தத்தில் ஊக்கமுடைய ஆயத்தமான இரு மல்லர் உண்டு: மல்லராகிய இவ்விருவரும்; ராமக்ருஷ்ணர் போர் செய்வர்.

90. தேவர் போன்ற ஆய்ப்பாடி வாஸிகளும், காட்டில் திரிய வரும் பாலரும், முக்யமானவருமான எனது அத்தை பிள்ளைகள்

91. என்னால் அவச்யம் காணத்தக்கவர். அரசன் ஸுகமாக வில்விழா நடத்தப் போகிறான்: என்று ஆய்ப்பாடி வாஸிகளின் பக்கல் ஆய்ப்பாடியில் சொல்லத்தக்கது

92. பக்கலிலுள்ள வனத்தில் அவர்கள் ஸுகமாக வஸிக்கட்டும். அங்கு அழைக்கப்பட்டவருக்குக் குறைவற எல்லாம் இருக்கும்.

93. பால் நெய் தயிர், மோர் முதலியவை இஷ்டப்படி கொடுப்பதற்கும் உண்பொருள் சமைப்பதற்கும் குறைவற இருக்கும்

94. அக்ருரா! சீக்ரம் புறப்படும். என் கட்டளைப்படி அவர்களை அழைத்து வாரும் பலராமனையும், க்ருஷ்ணனையும் பார்க்க என் மனம் குதூஹலமுள்ளது

95. அவர்களுடைய வரவில் பரம ப்ரீதி எனக்கு செய்யப் பட்டதாகும், மஹாவீர்ய வான்களாகிய அவர்களையும் பார்த்து எது ஹிதமோ அது செய்வேன்

96. என்னால் சொல்லப்பட்ட கட்டளையைக் கேட்டு அவ்விருவரும்குறித்த காலத்தில்வாராமல்பேனால் அவர்களும் கூட என்னால் தண்டிக்கத் தக்கவர்கள்.

97. குழந்தைகளிடத்தில் முக்கியமான முதல் நீதி; ஸமாதான வார்த்தையே, அந்த அல்பர்களை நீரே இனிமையாக அழைத்து வாரும்.

98. அக்ரூரரே! அடைவதற்கு மிக அரிய இந்த ப்ருதியை எனக்குச் செய்யும, உத்தம வ்ரதமுடையவரே! வஸுதேவரால் கலைக்கப் படாமலிருந்தால், அவர்கள் எப்படி இங்கு வந்து சேருவர்களோ அப்படி செய்ய வேண்டும்.

99, இவ்விதம், நிந்திக்கப்பட்ட போதிலும், வாஸுவைப் போன்ற வாஸுதேவர், கடல் போன்ற தன் ஆத்மாவை; கலக்க மற்றதாக தரித்தார்

100. தீர்க்க ஆலோசானையில்லாத கம்ஸனால், கடும் சொற்களால் தாக்கப்பட்ட வஸுதேவர், மனதில் பொறுமையை நிலைநிறுத்தி, பதில் கூற வில்லை.

101. பலபடியாக நிந்திக்கப்படும் வஸுதேவரை, எவர்கள் பார்த்தார்களோ, அவர்கள், குனிந்த முகத்துடன், மெதுவாக பலமுறை ' சீ! சீ!'' என்று சொன்னார்கள்.

102. மஹா தேஜஸ் வியான. அக்ரூரரும், ஞானக்கண்ணால், அறிந்து, தாகங்கொண்டவன், தண்ணீரைப் பார்த்தால் போல் (க்ருஷ்ணனிடம்) அனுப்பப் பட்டவராய். ப்ரீதி மானுனர்

103. அந்த முஹூர்த்தத்திலேயே, தானபதி அக்ரூரர் ப்ரீதிமானாய் தாமரைக் கண்ணனைப் பார்ப்பதற்கு மதுரையி லிருந்து தாமே புறப் பட்டார்.

22-ம் அத்தியாயம் முற்றிற்று

# 23-ம் அத்தியாயம்

## கம்ஸன் வஸுதேவரை நிந்தித்தல் வருத்து அந்தகன் புத்திமதி

**வைசம்பாயனார் சொன்னார்** : யதுகுல திலகர் வஸுதேவர் நிந்திக்கப்பட்டதைப் பார்த்து, அந்த எல்லா யாதவப் பெரியோரும், கைகளால், காதுகளைப் பொத்திக் கொண்டு, அந்த கம்ஸனை ஆயுள் முடிந்தவனாகவே நினைத்தனர்:

2. அந்தக் கூட்டத்தில் நாவலரில் சிறந்த அந்தகன் என்பார்' மனதில் சிறிதும் பயமின்றி, தைர்யமாக கம்ஸனைப் பார்த்து கம்பீரத்துடன் விகாரமற்ற நேர்மையான வார்த்தையைச் சொன்னார்:

3. 4 குழந்தாய்! நீ கொண்டாடத்தக்கவனில்லை யென்பது என் கொள்கை. உன்னுடைய கடுஞ்சொற்களால் ஏற்படும் ஆயாஸம் குலத்துக்குல் பொருத்தமானதில்லை. பந்துக்களால் (நீ) நிந்திக்கப் பட்டவன். ஸாதுக்களால் விசேஷமாக அப்படியே. நீ யாதவ குலத்தில் பிறந்தவனல்லன். இருந்தாலும் நான் சொல்வதைக் கேள். உன் திறனைக் கொண்டு யாதவர்கள் உன்னை யாதவனாக வைக்க வில்லை.

5. குழந்தாய்! எவர்களுக்கு நீ அரசனோ அந்த யாதவர்கள் கொண்டாடத் தக்கவர். இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்த ஓர் அரசன் (சிசுவததிற்காக) தானே ஒரே அடியாக நீக்கப்பட்டான்.

6, 7. நீ போஜனோ யாதவனோ, எப்படியோ இரு எப்படி கம்ஸனாகவேயிரு. அப்பா! உன் தலை உன்னுடன் பிறந்தது ஜடை வளர்த்துக்கொள், அல்லது மொட்டையடித்துக் கொண்டவது இரு (க்ரீடம் வேறு உனக்கு). உக்ரஸேனன் அனுதாபப்படத் தக்கவன். துரத்ரிஷ்டமுள்ள எவனால் குலத்தைக் கெடுக்கும் பிள்ளை உண்டு பண்ணப்பட்டாய்,

8. அப்பா! பெரியோர் தம் குணங்களை யெடுத்துச் சொல்ல மாட்டார். (அது தோஷமாகும்) பிறரால் சொல்லப்பட்ட குணங் களோ வேதாரித்துக் கொப்பான தன்மையையுடையனவாய் குணம் என்னும் தன்மையை அடைகின்றன.

9 பூமியில் குலத்திற்கு முடிவை (நாசம்) செய்யும் முடச் சிறுவனான உன்னை அரசனாகக் கொண்ட இந்த யதுகுலம் அரசர் களால் நிந்திக்கத்தக்கது

10. உன்னால் நல்லவை என்று எண்ணிச் சொல்லப்பட்ட துஷ்ட வார்த்தைகளால், கார்ய ஸித்தியுமில்லை. உனது உன் எண்ணம் வெளிப்படுத்தப்பட்டது.

11. அஹங்கார மற்றவன் பெரியோராலும் போற்றப்படும் பூஜ்யன், அவனது நிந்தை ப்ராஹ்மண வதம் செய்யப்பட்டது போல உளது, இதை எவன் ஸுபமாக நினைப்பான்?

12 அப்பா! சான்றோர் அக்னிகள் போன்று எதிர் கொண்டழைக்கத் தக்கவர் கௌரவிக்கவும் தக்கவர். அவர்களின் கோபம் தபோபலத்தால் ஜயிக்கப்பட்ட உலகங்களையும் எரித்து விடுமல்லவா? எப்போதும் இந்த்ரியங்களை ஜயித்து உயர்கதி நாடிச் செல்லும் மனதுடையவனால் (ஸ்வபாவிகமாகவே) தர்ம வழி பின்பற்றத் தக்கது. தண்ணீரில் மீன் கதி போல

14 நீ அக்னிக்கு ஒப்பான பெரியோர்களை திமிர்கொண்ட உள்ளத்தை வதைக்கும் வார்த்தையால் துன்புறுத்துகிறாய் மந்தரமில்லாத ஆஹுதிபோல (வீண்) புத்ரனின் பொருட்டு இந்தவஸுதேவரை நிந்திக்கிறாய். அது பொய்ப் புலம்பல் வார்த்தை பயனற்றது இதற்காக நான் உன்னை நிந்திக்கிறேன்.

16. புத்ரன் கொடியவன், இதன் பொருட்டு பிதா கொடியவன் ஆகவே மாட்டான். பிதாக்கள் புத்ரரின் பொருட்டு கொடிய கஷ்டங்களை யடைகிறார்களல்லவா?

17. வஸுதேவரால் இப்போது பிள்ளை ரக்ஷிக்க மறைக்கப் பட்டானேயானால், அதை நீ செய்யத் தகாததாக நினைத்தாயானால் அதை உன்னை ரக்ஷித்த உன் பிதாவைக் கேள்.

18. வஸுதேவரை நிந்திக்கிற உன்னால், அதனால் யாதவ வம்சத்தையும் நிந்தித்த உன்னால், யாதவ புத்ரர்களின் விரோதத்தால் உண்டாகிய விஷம் ஸம்பாதிக்கப்பட்டது.

19. வஸுதேவரால் புத்ரனுக்காகச் செய்யப்பட்டது தகாததானால் சிசுவான போது (உன் பதில்) உரஸேனனால் நீ ஏன் நாசம் செய்யப்படவில்லை.

20. 'புத்ர' எனும் நரகத்திலிருந்து எக்காரணத்தால் புத்ரன் பித்ருக்களை காக்கிறானோ அக்காரணத்தால் அப்போது, தர்மம்

யறிந்த பெரியோர்கள், புத்ரனை 'புத்ரன்' என்று சொல்லு கிறார்கள்.

21. ஜாதியில் க்ருஷ்ணன் யாதவன், வாலிபனான பல ராமனும் அப்படியே அவர்கள் இருவர் பொருட்டும், விரோதம் தோன்றிய மனதாறு நீ விசேஷமாகப் பிடிக்கப்பட்டிருக்கிறாய்.

22. வஸுதேவர் நிந்திக்கப்பட்டதாலும், வாஸுதேவன் (க்ருஷ்ணன்) கோபமூட்டப்பட்டதாலும் எல்லா யாதவர் ஹ்ருத யங்கள் துடிக்கும்படி செய்யப்பட்டன.

53. க்ருஷ்ணனைத் வேஷித்ததும், வஸுதேவரை நிந்தித்தும் இது முதலான துர் நிமித்தங்கள் உனக்கு மரண பயத்தைக் காட்டுகின்றன

54. இரவு முடிவில் துர்ஸ்வப்னங்கள் காணுதல்; ஸர்ப் பங்களைப் பார்த்தல், இவை மிகக் கொடியவை. நகரமாகிய நங்கை விதவை நிலையடைதலை சூசிவிக்கின்றன, இந்த காரணங் களால் ஊகிக்கிறோம்.

25. (உனக்கு) கொடிய ராஹுக்ரஹமே, கிரணங்களால் ஆகாயத்தில் ஸ்வாதி (துலாத்தில்) ஸடர்சம் செய்து கொண்டிருக் கிறான். பயங்கரமாகத் தோன்றும் அங்காரகக்ரஹம் வக்ர கதி யுடன், சித்ரை நக்ஷத்ரத்தில் ராசி சக்ரத்தில் இருக்கிறான்.

26, ஸாயம் ஸந்த்யாகாலம் புதன் க்ரஹத்தால். கடுமை யான ஒளியோடு வ்யாபிக்கப்பட்டுள்ளது. சுக்ர க்ரஹம் சூரியனைத் தாண்டி அதிவேகமாகச் ஸஞ்சரிககிறான்.

27. (துர்நிருத்த) தூமகேது நக்ஷத்ரங்களாகிய பாணி முதலிய பதின்மூன்றும், கேதுவால் பிரிக்கப்பட்டு சந்தரனைப் பின் தொடரவில்லை.

28. மேக வரிசைகளுடன் கூடிய விடியற்காலை ஒளியுடன் கூடிய சூர்யனை மறைக்கிறது. விலங்குகளும், பறவைகளும், சப்த மிட்டுக் கொண்டு, துர்நிமித்த திசையிலேயே செல்கின்றன

29 நரி மசானத்திலிருந்து வெளிக் கிளம்பி பெருமூச்சாகிற நெருப்பைக் கக்கிக் கொண்டி இரண்டு ஸந்திகளிலும், பலமாக ஊளையிட்டுக்கொண்டு பயங்கரமாக நகரைச் சுற்றி வருகிறது.

30. கொள்ளிக் கட்டை (ஆகாயத்திலிருந்து பெரும் சப்தத்துடன் பூமியில் விழுந்தது. எதிர் பாராமல் பூமி அசைகின்றது மலைகளின் முகங்களும் அப்படியே.

31. ராஹுவால் சூர்யன் விழுங்கப்பட்டான். (பூரண சூர்ய க்ரஹணம் நேர்ந்தது) பகலில் இரவு உண்டாயிற்று; வெள்ளிடியால் (மேகமில்லாமல் இடி விழுவதால்) அதிர்ச்சி அடைந்ததிக்குகள். புகையாலும் உத்மாதங்களாலும் வ்யாபிக்க பட்டன.

32. இடியோடு கூடிய மேகங்கள் நெருக்கியிருந்து ரத்த மழை பொழிகின்றன. தேவதைக்ளை (தங்கள்) ஸ்தானத்திலிருந்து அசைகின்றனர். பறவைகள் மலைகளை, விட்டு விலகுகின்றன.

33. அரசன் அழிவின் பொருட்டு என்னென்ன அசுப நிமித்தங்கள் சொல்கிறார்களோ அவைகள் எல்லாவற்றையும் பார்க்கிறோம்.

34. நீயும் உன் இனத்தவரை, த்வேஷிக்கிறாய் ராஜ தர்மத்தை அலக்ஷியம் செய்கிறாய் காரணமில்லாமல் கோபங்கொள்கிறாய் (ஆதலால்) மிக நெருங்கிய (மரண) பயத்தையுடையவனாய் இருக்கிறாய்.

35. துர்புத்தியுடையவனே! எந்த நீ தேவர்களையொத்த வஸுவைப் போன்ற விருத்தரான வஸுதேவரை, புத்ர மயக்கத்தால் நிந்திக்கிறாயோ. அந்த உனக்கு ஆத்ம சாந்தி எங்கிருந்து உண்டாகும்?

36. எங்களுக்கு உன்னிடத்தில் எந்த அன்பு உள்ளதோ அதை நாங்கள் இன்று, அடியோடு விட்டு விடுகிறோம். குலத்திற்கு கேடு விளைப்பவனான் உன்னுடன் ஒரு நொடிப் போதும் சேர்ந்திருக்க மாட்டோம்:

37. தாமரை யிதழ் போன்று விசாலமான கண்களை யுடையவனால் மஹத்தான கார்யங்களைச் செய்து, வனத்தில் வஸிக்கும் க்ருஷ்ணனை புண்யாத்மாவான அந்த அக்ரூரன் பார்க்கப் போகிறான் அல்லவா!

38. இந்த யதுகுலம் உன் கார்யமாக வெறுக்கப்பட்டு. அந்த க்ருஷ்ணன் பந்துக்களைக்கூட்டி ஒன்று சேர்ப்பான்,

39. இத்த புத்திமான் வஸுதேவரால் நீ செய்தது எல்லாம் பொறுக்கப்பட்டது. யமனால் மதிகெடுக்கப்பட்ட நீ இஷ்டப்படி பேசு.

40. உன் நலத்துக்காக என் விருப்பம் இது வஸுதேவர் துணையாக க்ருஷ்ணனிடத்திற்குப் போ அவனுடன் சேர்க்கை செய்து கொள்.

23 அத்தியாயம் முற்றிற்று

## 24 அத்தியாயம்
## கேசி வதமும் நாரதர் க்ருஷ்ணனிடம் தூதும்

1. வைசம் பாயனார் சொன்னார்; அந்தகனுடைய வார்த்தையைக் கேட்டு கோபத்தால் கணிகள் சிவந்து, கம்ஸன், ஒன்றும் பேசவில்லை, தன் வீட்டில் புகுந்தான்.

2. அந்த எல்லா யாதவர்களும் விஸ்தாரமாக கேட்டு கம்ஸனின் ஒழுங்கு மாறுபாட்டைப் பற்றிப் பேசிக்கொண்டு வெறுப்புற்ற மனதுடன் தங்கள் தங்கள் வீடுகளை அடைந்தனர்.

3. அக்ருரன், கட்டளையிட்டபடி க்ருஷ்ணனைத் தரிசிப்பதில் மிக்க ஆசை கொண்டவனாய். அவன் மனோ பீஷ்டத்துககு ஏற்ப (வேகமாகச்) செல்லும் சிறந்த தேரிலேறிச் சென்றான்.

4. க்ருஷ்ணனுக்கும், அங்கங்களில் தோன்றிய சுப நிமித்தங்கள், பிதாவிற்கு ஸமமான உறவினரின் சேர்க்கையை குறிப்பிடுகின்றன.

5. முன்னரே மதுராதிபதி உக்ரஸேனன் குமரன் கம்ஸனால் க்ருஷ்ண வதத்தின் பொருட்டு கேசி (அஸுரன்) இடம் தூதன் அனுப்பப்பட்டான்.

6. மனிதர்களுக்கு துன்பம் செய்யும், அடக்கமுடியாத அந்த கேசியும் தூத வார்த்தையைக் கேட்டு ப்ருந்தாவனத்திற்குச் சென்று கோபர்களைத் துன்புறுத்தினான்.

7. இந்தக் குதிரை அஸுரன் (கேசி) கோபமுற்றவன் துக்ஷ்டவீரன். எல்லோருக்கும் ஹிம்ஸகன், நரமாமிஸம் உண்பவன். இத்தகையன் மிகவும் துன்புறுத்தினான்.

8. அசுரன் கேசி பசுமாம்ஸம் உண்பவனும் கோபர்களுடன் கூடிய பசுக்களை அழித்து, துஷ்ட திமிருடன் தடையின்றி இஷ்டப் படி திரிபவனுயும் இருந்தான்.

9. துஷ்ட குணமுடைய அந்த குதிரை அஸுரன், கேசி எங்கு இருக்கிருனே அந்த வனம் மசானம் போன்றது. மனித மாம்ஸம் எலும்புகள் நாற்புறமும் சிதறிக்கிடந்தன.

10. பூமியைக் குளம்புகளால் வெட்டுகிருன். வேகத்தால் மரங்களை அழிக்கிருன், கனைத்தலால் பெரும் காற்று வீசி வாயு வுடன் போட்டியிடுகிருன் துள்ளி ஆகாசத்தைத் 'தாண்டுகிருன்

11. ஒப்புயர்வற்ற துஷ்டன். மதங்கொண்டவன் வனத்தில் திரிபவன். வீசப்படும் விடரிமயிர் உடையவன். கோர வடிவினன் கம்ஸனின் ஒழுக்கத்தைப் பின்பற்றுபவன். இத்தகைய துஷ்ட குதிரை கேசி

12. எல்லா கோபர்களையும் கொல்லும் பாபத் தொழி லுடைய அந்த குதிரை அஸுரனுல், அவ்வனமுழுதும் சூன்ய மாயிற்று.

13. கெட்ட ஒழுக்கமுடைய அவனுல் கெடுக்கப்பட்ட அந்த வனமுழுதும், வனத்தில் வாழும் மனிதர்களும் பசுச் செல்வ முடைய ஆயர்களாலும் பழகப்படுவதில்லை,

14 நர மாம்ஸங்களைச் சாப்புடுகிற, மதங்கொண்டு ஒழுங் கீனமாக நடக்கும் அவனும். அவன் இருப்பிடத்துக்கும் போகும் வழி ஸஞ்சார மற்றதாக ச்செய்யப்பட்டது,

15, மனிதக்குரல் கேட்டு கோபங் கொண்ட அவன் ஒரு ஸமயம் ,யமனுல் தூண்டப்பட்டு, காட்டின் ஆரம்பத்தில் இருக்கிற) ஆய்ப்பாடியை அடைந்தான்.

16. 17 அவனைப்பார்த்து கோபர்களும், பெண்களும் குழந்தை களுடன் கூச்குரல்லிட்டுக் கொண்டு ஜகந்நாதனுன் க்ருஷ்ணனைச் சரணடைந்தனர்.பெண்களின் அழுகைக்குரலாலும், கோபர்களின் கூக்குரலாலும், க்ருஷ்ணன் அபயமளித்து கேசியை நோக்கி வேக மாக ஓடினுன்.

18. கேசியும் தூக்கிய கழுத்துடன், நன்கு தெரியும் பற்களையும், கண்களையும் முடையனு வேகத்துடன் கோவிந்தனை எதிர்நோக்கிச் சென்ருன்.

19. ஓடி வரும் குதிரை அஸுரனான அந்த கேசியைப் பார்த்து, மேகம் சந்த்ரனைப் போல (க்ருஷ்ணனும்) எதிர் நோக்கிச் சென்றான்.

20. கேசியின் ஸமீபத்தில் இருக்கும் அந்த க்ருஷ்ணனைப் பார்த்து, க்ருஷ்ணனை மனிதனாக நினைக்கும் கோபர்கள் அவனுக்கு நன்மையைக் கருதி அவனிடம் சொன்னார்கள்:

21 "அப்பா! க்ருஷ்ணா! இந்த அதமனான குதிரை சிந்திக்காமல் சட்டென்று நெருங்கத் தக்கவனல்லன். நீ குழந்தை இவன் நெருங்க முடியாத பாபி.

22. அப்பா! இவன் கம்ஸனின் கூடப்பிறந்து வெளியே ஸஞ்சரிக்கும் உயிர். உயர்ந்த குதிரைகளில் சிறந்தவன். போரில் ஒப்பற்ற அஸுரன்.

23. எல்லா ப்ராணிகளையும் நடுங்கச் செய்பவன். குதிரைகளுள் மிக்க பலசாலி ப்ராணிகளெல்லாவற்றிலும் கொல்ல முடியாத ப்ராணி. பாபிகளுள் முதல்வன்".

24. சத்ருக்களை நாசம் செய்யும் மதுஸூதனனாகிய க்ருஷ்ணன், சொல்லும் கோபர்களின் அந்த (அன்புச்) சொல்லை கேட்டு, கேசியுடன் யுத்தம் செய்ய எண்ணம் கொண்டான்.

25. பிறகு குதிரை அஸுரன் (முன்) இரண்டு கால்களாலும் இடமும் வலமும் வட்டம் போட்டு, கோபத்தால் மரங்களை அழிக்கிறான்.

26. இவனது தொங்கும் மயிர்கற்றையுடைய முகத்திற்கு நெருங்கிய (பிடரி) மயிருடைய கழுத்திலும் நீர் அலைகள் போன்ற தோல் மடிப்புகள் கோப ஜலத்தைப் பொழிந்தன.

27. பனிகாலத்தில் சந்த்ரன் ஆகாயத்திலிருந்து பனியைப் பொழிவது போல, (கேசி) அவன் புழுதி கலந்த வாயிலிருந்து வரும் நுரையையும் பொழிந்தான்.

28. பாரத! ஜனமே ஜயரே! அந்த கேசி கனைத்தலால் வெளி வரும் ஜலத்துளிகளாலும், வாயிலிருந்து வரும் நுரைகளாலும், தாமரைக் கண்ணன் கோவிந்தனை ப்ரோக்ஷித்தான்.

29. குளம்புகள் (பூமியை) வெட்டுவதால் உண்டான தேன் நிறப் பொருள் தூள்கள் போல (மங்கிய) வெளுத்த தூசியால்,

க்ருஷ்ணனை, அந்தக் குதிரை அஸுரன், சிவந்த தலைமயிருடையவனாகச் செய்தான்.

30. கேஸி அஸுரன், துள்ளிக் குதிக்கும் காலோடு, பூமியைக் குளம்புகளால் வெட்டி, பற்களைக் கடித்துக் கொண்டு க்ருஷ்ணனை நோக்கி ஓடினான்.

31. அந்தக்குதிரை ஸ்ரேஷ்டன்கேசி, க்ருஷ்ணனுடன் சேர்ந்து முன்கால் களால் கிருஷ்ணனை மார்பில் உதைத்தான்.

32. அந்தப் பலகவான அஸுரன், கேசி, அளவற்ற தேஜஸ்ஸுடைய க்ருஷ்ணனை குளம்புகளால் அடிக்கடி பக்கங்களில் அடித்தான்.

33. அந்தக் கோபங்கொண்ட குதிரை அஸுரன், கூறிய, பற்கள் கொண்ட பயங்கர வாயால் க்ருஷ்ணனின் தோளைக் கடித்தான்,

34. தொங்கும் பிடரி மயிர் கொண்ட அந்தக் கேசி க்ருஷ்ணனுடன் சண்டையில் நன்கு சேர்ந்து ஆகாயத்தில் மேகத்துட நன்கு சேந்தசூர்யன் போல் ப்ரகாசித்தான்.

35. அந்தப் பலவானுன குதிரை அஸுரன், க்ருஷ்ணனின் கோபத்தால், இரண்டு பங்கு அதிக வீர்யத்துடன் அந்த க்ருஷ்ணனது மார்பைத் தன் மார்பினுல் வேகமாகத் தாக்கிக் கொல்லவிரும்பினுன்,

36. அளவற்ற வீர்யங் கொண்ட பலவான் க்ருஷ்ணனும் கோபங்கொண்டு கர்வத்துடன் வந்த அந்த அஸுரனது வாயில் கையை முழுதும் நீட்டி நன்கு நுழைத்தான்.

37. அந்த அஸுரன் அந்தக் கையை கடிப்பதற்க்கும், பிளப்பதற்கும் சக்தியற்றவனாய், வேருடன் கழன்ற பற்களோடு நுரையுடன் ரத்தத்தை க் கக்கினுன்.

38. நன்கு பிளக்கப்பட்டு கிழிக்கப்பட்ட உதடுகளுடன் அந்த அஸுரன் கண்களை, மலரவிழித்து வெளியே பிதுங்கியதாகச் செய்யப்பட்டான்.

39. அந்த கேசி கிழிக்கப்பட்ட தாடைகளுடன் ரத்தம் பூசின கண்களையுடையனாய், காதுகள் நிமிர்ந்து, மனமுடைந்து மிகத் துடித்தான் .

40. துள்ளும் கால்களுடன், ஒருமுறை மலமூத்ரங்களைக் கழித்து, படிந்த உடல் ரோமங்களையுடையனும், இளைத்து அசை வற்ற கால்களுடையவனுமானன்.

41. கேசி வாயில் புகுத்தப்பட்ட க்ருஷ்ணனது வளைந்து தோன்றும் கை கோடை முடிவில் அர்த்த சந்திரனின் இரணங் களால் மேகம் போல் சோபித்தது.

42. க்ருஷ்ணனுல் நன்கு அடக்கப்பட்ட கேசி உடல் அசை வற்று விடியற்காலையில் மறையும் சந்திரன் மேருமலை மேல் படிந்தாற்போல் ப்ரகாசித்தான்.

43. க்ருஷ்ணனது கையால் முகத்திலிருந்து உதிர்க்கப்பட்ட கேசியின் பற்கள், சரத்கால நீரற்றவெண்மேகத் துண்டங்கள் போல் விழுந்தன.

44. எளிதில் செயல் புரியும், க்ருஷ்ணனுல் தன்கை நன்கு நீட்டி (நீட்டின மாத்ரத்தில்) பலமாகப்பிளக்கப்பட்ட கேசி அப்போது முற்றிலும் சாந்தம் அடைந்தான்.

45. போரில் க்ருஷ்ணன் கையால் பிளக்கப்பட்டு விகார மான முகமுடைய அஸுரன் கேசி பெரிய சப்தம் போட்டு கொண்டு துன்பப்பட்டான்.

46. பெரிய சப்தம்போட்டுகொண்டும், உடல் நடுங்கிக் கொண்டும் வாயிலிருந்து ரத்தம் கக்கிக்கிக் கொண்டும், அவயவங் கள் கோண வலித்துக் கொண்டும் பாதி அறுக்கப்பட்ட மலை போல் இருந்தான்.

47. மிகக் கொடிய அந்த அஸுரன் க்ருஷ்ணன் கையால் வாய் பிளக்கப்பட்டு, இரண்டாகப் பிளக்கப்பட்ட யானை போல் அறுக்கப்பட்டு வீழ்ந்தான்.

48. க்ருஷ்ணன் கையால் அறுக்கப்பட்ட உடலையுடைய கேசியின் உருவம், பரமசிவனுல் கொல்லப்பட்ட பசுவின் ரூபம் போல் மஹா கோரமாக விளங்கிற்று

49. முன்பின் இரண்டு கால்கள் பாத முதுகு பாதி வால் ஒரு காது, ஒரு கண், ஒரு மூக்கு, இப்படி இரண்டாக ஆக்கப்பட்ட கேசியின் இரண்டு பாதியும் பூமியில் விளங்கின.

50. கேசி பல்லால் கடிக்கப்பட்ட க்ருஷ்ணனின் தோளோ, காட்டில் சிறந்த யானையின் தந்தத்தால் அடையாளம் பண்ணப் பட்ட முதிர்ந்த ஆலமரம் (கிளை) போல் விளங்கியது.

51. தாமரைக்கண்ணன் க்ருஷ்ணன் அந்தக் கேசியைப் போரில் கொன்று இரண்டாக்கி, சிரித்துக் கொண்டு அங்கேயே யிருந்தான்.

52. கொல்லப்பட்ட அந்தக்கேசியைப் பார்த்து, எல்லா கோபர்களும் கோபிகளும் இடையூறுகள் களையப்பட்டு கஷ்டம் நீங்கினர்.

53. ஸ்ரீமான் தாமோதரனை, அடிக்கடி பாராட்டி இடத்துக் கும் வயதுக்கும் தக்கபடி ப்ரிய வார்த்தைகளால் கொண்டாடி னார்கள்.

54. கோபர்கள் கூறினர்: ''குழந்தாய்! க்ருஷ்ணா! ஆஶ்சர்யம்! செய்ய வேண்டியது செய்யப்பட்டது குதிரை ரூபம் தடுத்து பூமியில் திரியும் உலகைத்துன்புறுத்தும் இந்த அஸுரன் கொல்லப்பட்டான்.

55. அப்பா! இந்தக் குதிரை அஸுரன் கேசியைக் கொன்ற, உன்னால் ப்ருந்தாவனம், மனிதர், ம்ருகம், பறவை, இவையின் பழக்கத்துக்கும் ஸுகத்துக்கும், உரியதாகச் செய்யப்பட்டது.

56. இந்த துராத்மாவால். பல கோபர்களும் கன்றுகளிடம் ப்ரியமுள்ள பசுக்களும், ஜனங்கள் பழகும் மற்ற இடங்களும் அழிக்கப்பட்டன.

57. இந்தப் பாபி மனித உலகை மனிதரற்றதாகச் செய்து இஷ்டப்படி திரிய விரும்பி ப்ரளயம் ஆக்க முயன்றவனல்லவா?

58. இவன் எதிர் நிற்பதற்கு உயிரோடிருக்க ஆசை கொண்ட ஒருவனும் தேவர்கணங்களில் கூட இல்லை பூமியில் (இருப்பார் பற்றி) கேட்பானேன்?''

59. ஸ்ரீ வைசம்பாயனர் சொன்னார். பிறகு ஆகாயத்தில் செல்கிற அந்தண நாரதமுனி, மறைந்திருந்து ''விஷ்ணோ! தேவேசா! க்ருஷ்ணா! க்ருஷ்ணா! நான் ப்ரீதனானேன்'' என்று மேலும் மேலும்சொன்னார்.

60. நாரதர் மேலும் சொன்னார் கேசியைக் கொல்லும் இச்சையுடன், செய்யப்பட்ட துஷ்கரம் (பிறர் செய்ய முடியாத) கார்யம்: உன்னிடத்திலேயே பொருந்தும். தேவலோகத்தில் சிவனுக்காவது பொருந்தலாம்.

61. அப்பா! நான் உன்னை என்னில் இருத்தி, போரில் பார்க்க ஆவலுடை.ய நான், இந்த குதிரைக்கும் மனிதனுக்கும் நடக்கும் போரைப் பார்க்க ஸ்வர்க்கத்திலிருந்து வந்தேன்.

62. பூதனை மரணம் முதலிய உன் கார்யங்களைப் பார்த்தேன். கோவிந்தா! இந்தக் கார்யத்தாலேயோ நான் பரம ஸந்தோஷ மடைந்தேன்.

63 64. கொடிய ரூபம்கொண்ட கெட்ட எண்ணம் படைத்த இந்தக் கேசியிடம் பாலாஸுரனைக் கொன்ற தேவேந்த்ரனும், இந்தக் கேசியின் உடல் நீண்ட அணுக்கள் கொண்ட உன்கை யால் பிளக்கப்பட்டது. இது ப்ரஹ்மாவால் இவன் முடிவுகாக ஏற்படுத்தப் பட்ட பயன்.

65. கேசி உன்னால் கொல்லப்பட்ட காரணத்தால் இனி நீ, கேசவன்' என்ற பெயரால், உலகில் போற்றப்பட்டு விளங்குவாய் இது எனது உறுதிபத்ரம் கேள்! உலகில் உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

66. உன்னால் செய்யப்பட வேண்டிய கார்யம் பாக்கி உள்ளது. நீஸர்வசக்தன் காலதாமதம் வேண்டாம். நான் சீக்ரம் சென்று வருகிறேன்,

67 நீ ஏதோ கார்யங்களுக்காக அவதரிக்கும் போது, தேவர்களும், உனது பலத்தை அண்டி மனிதர் போல் வேஷம் பூண்டு விளையாடுகின்றனர்.

68. பாரத யுத்தஸமுத்ரத்துக்கு ஸமயம் அருகில் உள்ளது (வீர) ஸ்வர்க்கம் செல்லும் அரசர்களது போர்கள் கை புகுந்தன.

69. ஆகாயத்தில் விமானமேறி மேல் செல்லும் பாதைகள் பழுது பார்க்கப்பட்டன. ஸ்வர்க்கலோகத்தில் அரசர்களுக்கு இடங்கள் பங்கீடு செய்யப்படுகின்றன.

70. கேசவா! உக்ரஸேனன் குமாரன் கம்ஸன் மரித்து, நீ ஸ்தானத்திலிருக்கும் போது, அந்தப்பெரிய அரசர்களுள் நாற் புறமும் யுத்தம் உண்டாகும்.

71 பாண்டவர்களும் ஒப்பற்ற செயலுடைய உன்னை ஆஶ்ரயிப்பார்கள் அரசர்களின் பிளவின் போது பாண்டவர் பக்ஷத்தில் நீ இருப்பாய்.

72. நீ அரச பதவியிலிருக்கும் போது உயர்ந்த மக்களமான ராஜலக்ஷ்மியை அரசர்கள் உன் பெருமையால் விடப்போ கின்றனர் ஸந்தேஹமில்லை.

73. இது ஸ்வர்கத்தில் தேவர்களாலும் உலகத்தினதும்' எனதுமான தூது வார்ந்தை ஜகந்நாதனே! மறைகளால் கீர்த்தியடைவாய்.

74. உனது (வீரச்) செயல் என்னுல் பார்க்கப்பட்டது ப்ரபுவே! நீயும் பார்க்கப்பட்டாய். கம்ஸன் கொல்லப்பட்டதும் மீண்டும் வருவேன் நான் நல்ல விதமாகப் போய் வருகிறேன்.

75. அந்த நாரதர் இவ்விதம் கூறி ஆகாயத்தில் சென்றுர். தேவ ஸங்கீதத்துக்கு உத்பத்தி ஸ்தானமான நாரதரின் வார்த்தை யைக் கேட்டு ''அப்படியே'' என்று மறுமொழி கூறி அக்கேசவன் மீண்டும் கோபர்களிடம் சேர்ந்தான்.

76. கோபர்களும் க்ருஷ்ணனுடன் சேர்ந்து ஆய்ப்பாடி யையே அடைந்தனர்.

24ம் அத்தியாயம் முற்றும்

## 25 அத்தியாயம்

## அக்ரூர் கோகுலத்தில் க்ருஷ்ணனைப் பார்த்தல்

1. **வைசம்பாயனர் சொன்னுர்** : பிறகு மந்த கிரணங் களுடைய சூர்யன், அஸ்தமித்து, ஸந்த்யா காலத்தால் சிவந்த ஆகாயத்தில், சந்த்ரன் வெண்ணிற பூர்ணமண்டலமாக உதித்தான்.

2. பக்ஷிகள் கூடுகளையடைந்து இளைப்பாறுகின்றன. (க்ருஹ) அக்னிகள் கொழுந்து விட்டெரிகின்றன. எல்லா திசைகளிலும் சிறிது சிறிதாக முழுதும் இருட்டு சூழ்கிறது.

3. ஆயர்கள் உறங்க ஏற்பாடு செய்கின்றனர். நரிகள் ஊளையிடுகின்றன. மாம்ஸ உணவை விரும்பி இரவில் திரியும் ப்ராணிகள் மகிழ்கின்றன.

4. இந்திரகோப (மின்மினி) பூச்சிகள், களிக்கின்றன. வேத மோதலை நிறுத்தும் (ஸாயம் ஸந்தியா) ப்ரதோஷ காலம் வந்தது. சூர்யன் ஸந்த்யை [அந்திப்போது] ஆகிற குகையில் நுழைத்தான்.

5. க்ரஹஸ்தர் ஒளபாஸன வேளை வந்தது. வைகானஸ மந்த்ரங்களால் வானப்ரஸ்தர் ஹோமம் செய்யும் வேளை வந்தது. வனத்தில் மேய்ந்து வீடு திரும்பிய பசுக்களை பால்கறக்கும் வேளை வந்தது

6. கட்டப்பட்ட கன்றுகளையுடைய பசுக்கள் அடிக்கடி கத்துகின்றன. கத்தியழைக்கின்ற பசுக்களிடம் கன்றுகள், கயிறுகள் சிதற [அறுத்துக் கொண்டு தாயிடம்] ஓடின

7. ஆயர் பெரும் சப்தம் செய்து பசுக்களைக் [கட்டுவதற்கு] அழைக்கின்றனர். எங்கும் உயர்ந்த கோமயக்குவியல்கள், ப்ரகாசிக்கின்றன.

8. விறகுச் சுமையால் வளைந்த கழுத்துடன் கோபர்கள் வருகின்றனர். சந்திரன் சிறிது தோன்ற மந்தமான கிரணங்களுடன் விளங்குகின்றான்.

9. பகல் கழிந்து இரவு சிறிது புகுந்தது. பகல் முழுதும் போயிற்று. இரவின் முகம்தோன்றிற்று. சூர்யன் ஒளி மறைந்தது. சந்த்ரன் ஒளி அருகில்வந்தது.

10. அக்நிஹோத்ரம் செய்யும் காலம். அழகிய சந்த்ரன் உதிக்கிறான். அக்நீஷோம [அக்னிக்கும் சந்த்ரனுக்கும் சேர்ந்து செய்யும் ஹோமம்] காலம்.

11. மேற்கில் வானம் அக்னி [சிவப்பு] நிறம். கிழக்கில்-தாமரை புஷ்ப [சந்தரன்] நிறம். ஆகாயம் கிழக்கிலும், மேற்கிலும் எரியும் மலை போல் ஒளி.சிறிது சிறிது நக்ஷத்ரக் கூட்டங்கள் தோற்றம்

12, 13. பக்ஷிகள் இருப்பிடத்தை அடைகின்றன. (வெளியே சென்றவர் திரும்பி வந்து) பந்துக்களை [வீட்டை] சேர்கின்றனர் இத்தகைய காலத்தில் தானபதியான அக்ரூவர், தேரூர்ந்து சீக்ர மாக ஆய்ப்பாடியை அடைந்தார்.

14. அந்த அக்ரூரர் [ஆய்ப்பாடியில்] நுழைந்து கொண்டே, கேசவன் பலராமன், நந்தகோபன் இவர்களைக் காண விரும்பி இவர்களின் இருப்பிடத்தை அடிக்கடி வினவினார்.

15. பிறகு அந்த மஹாபலம் பொருந்திய, தேவர்களுக்கு ஒப்பான அக்ரூரர், தேரிலிருந்து இறங்கி தங்கும் பொருட்டு நந்த கோபர் வீட்டில் புகுந்தார்.

16. ஆனந்தம் பூரித்த முகத்துடனும், ஆனந்தக் கண்ணீர் ததும்பும் கண்களுடனும், வாசலில் புகுந்துகொண்டே பசுக்கள் பால் கறக்கும் இடத்தில் கன்றுகள் நடுவிலிருக்கும் க்ருஷ்ணனை, கன்றுடன் கூடிய காளையைப் போலிருக்கக் கண்டான்.

17. தர்மமறிந்த அக்ரூரர், மகிழ்ச்சி பொங்கும் தழதழந்த குரலுடன் ''அப்பா! கேசவா! வா!''

18. அன்பு ததும்ப அழைத்தார். வெகுகால முன் சிசு பர்வத்தில் பார்த்து, மறுபடியும் [அப்போது] மிக்க சோபையுடன் விளங்கும் முதிராத யௌவனமுடைய க்ருஷ்ணனை பார்த்து அக்ரூரர் பலவாறு புகழ்ந்தார்.

19. 'இவன் (வேதம் கூறும்) தாமரைக்கண்ணன் ஸிம்ஹம் போன்றும், புலி போன்றும, மிடுக்கு நடையுடையவன். பூரண நீர் நிறைந்த மேகம்போன்ற காந்தியுடையவன்.

20. உயர்ந்த மலை போல் (கம்பீரத்) தோற்றமுடையவன். போரில் தாக்க முடியாததும் ஸ்ரீவத்ஸத்தோடு கூடிய மார்பினு லும், சத்ருக்களை நாசம் செய்வதில், வல்லமையுடைய புஜங்களா லும் நன்கு அலங்கரிக்கப்பட்டவன்

21, வேதம் கூறும் பரம்பொருள், மூர்த்திகளித்து வந்துள்ள வன் இவன் உலகின் முதல் பூஜைக்குரியவன். ஆயர் வேஷம் பூண்ட விஷ்ணு.

22. நிமிர்ந்த அழகிய ரோமங்களையுடையவன். குடை போன்ற காந்தியுடைய மகுடு சூடும் தகுதி வாய்ந்த காதுகளா லும் அலங்கரிக்கப்பட்டவன்.

23. உயர்ந்த [ரத்ன முத்து முதலிய] மாலை பூணத் தக்க [பருத்த நன்கு பரந்த] உருண்டு, திரண்டு, நீண்ட, இரண்டு கை களாலும் நன்கு விளங்குகிறவன்

24. காமாசு கலக்கத்தால் ஆயிரம் ஸ்த்ரீகளால் உபசரிக்கத் தக்க திருமேனி அழகுடையவன் மஞ்சள் வஸ்த்ரம் தரித்து இவன் என்றும் நிலைத்திருக்கும் அந்த விஷ்ணுவே.

25. இவன் திருவடிகள் பூமிக்குப் புகலிடமானவை. மூன்று உலகங்களையும் ஆட்கொள்ள வல்லவை, சத்ருக்களை வெல்ல வல்லவன். இப்பூமியில் [அவதரித்து] க்ருஷ்ணனாக இருக்கிறான்.

26. இந்த க்ருஷ்ணனின் அழகிய ஒரு கையின் முனை, சக்கரத் தால் அடையாளம் கொண்டது போல் இருக்கிறது, மற்றொரு கை உயர்த்தப்பட்டு கதாயுதத்தின் சேர்க்கையை விரும்புகிறது.

27. தேவர்களின் [ரக்ஷாபாரத்தை] வஹிக்கும் தேவதேவன் பரமாத்மாவின் முதல் ஸ்தானமானபரமபதநாதன் [நாராயணன்] நம் க்ஷேமத்துக்கு இப்புவியில் அவதரித்து க்ருஷ்ணனாக ப்ரகாசிக் கிறான்.

28. க்ஷீணித்த யாதவ வம்ஸத்தை கோபாலனான க்ருஷ்ணன் பெருகச்செய்வான் என்ற இந்த விஷயம் எதிர்காலமறிந்த தீர்க்க தர்சிகளான மனிதர்களால் முன்னரே கூறப்பட்டுள்ளது.

29. இவனது திவ்ய ஆதாரசக்தி கொண்டு, யாதவர்கள் நூற்றுக்கணக்கிலும் ஆயிரக்கணக்கிலும் [நதிகளின்] வெள்ளம் மஹாஸமுத்ரத்தை போல வம்ஸத்தைப் பெருக்குவார்கள்.

30. இந்த நிலையான முழு உலகம், [பாயக்கரப்பற்ற] க்ருத யுகத்தில் போல, சத்ருக்கள் அழிக்கப்பட்டு அமைதியும் வளமும் பொருந்தியதாகச் செய்யப்படும்.

31. இவன் புவியில் இருந்து உலகை தன் வசத்தில் நிறுத்தி, எல்லா அரசர்களுக்கும் மேலாவான். தான் ராஜாவாக மாட்டான்.

32. முன்னர், மூன்று அடிகளால் [உலகளந்து பலியை] வென்று. ஸ்வர்க்க லோகத்தில் தேவேந்தர தேவர் தலைவனாகவும் அரசனாகவும், இவனால் செய்யப்பட்டான்-

33. நிச்சயமா மூவடிகளால், முன் ஜபித்து பூமியை (இருட் சித்து) ஜபித்து, உக்ரசேனனை (இந்த்ரசேனனுக்குப் போன்று) அப்படியே அரசனாக நிறுத்துவான் சந்தேகமில்லை,

34. பகை வென்று கெடுத்த இவன், [கேநோப நிஷத் போன்ற] பல கேள்விகளால் விசாரித்தறியப் பட்டதாக நாம் சொல்லிக் கேட்கிறோம். பரமஹம்சனர்களாலும், வேத வாதங் களாலும், அநாதியாக இவன் புகழ் பாடப்படுகிறான் அல்லவா?

35 கேசவன் உலகத்தாரால், விரும்பத்தக்கவனாவான் அல்லவா? அதனால்தான், மனிதத் தன்மை யேற்க இவனுக்கு எண்ணம் உண்டாயிற்று

36. நானும் இவனுடைய இந்த [ஆய்ப்பாடி] வாஸத்தை முறைப்படி பூஜிப்பேன். மனதினாலும் விஷ்ணுதத்வத்தை மந்த்ரத் துடன் பூஜிப்பேன்.

37. கோபர்கள் பந்துவாக இவனது எண்ணமும், மனிதப் பிறப்பும், மனிதத் தன்மையற்றதாக [தேவத்தன்மையாக] நான் நினைக்கிறேன். இப்படியே இவனை திவ்ய ஞானிகளும் நினைக் கின்றனர்.

38. அப்படி எண்ணும் நான், எல்லாம் அறிந்த க்ருஷ்ண னோடு, இரவில் ஆலோசித்து, இவன் ஸம்மதப்பட்டால், இவனுட னும் ஆயர்களுடனும் போவேன்''

39. இவ்விதம் [கீழ்க்கூறிய] பொருத்தமான காரணங் களால் வேரு விதமாக க்ருஷ்ணனைப் பார்த்து, க்ருஷ்ணனுடன், நந்தகோபன் இடத்தை அடைந்தான்.

**25ம் அத்தியாயம் முற்றிற்று**

## 26ம் அத்தியாயம்

### அக்ரூரர் கோகுலஞ் சேர்ந்து உரையாடல்

**கோபர் மதுரைக்குப் புறப்பாடு அக்ரூரர் க்ருஷ்ணன் பலராமனுடன் நேரில் செல்லுதல் காளிங்கன் மடுவில் ஸ்நானஞ்செய்யும் அக்ரூரருக்கு விஸ்வரூபம்**

1. **வைசம்பாயனர் சொன்னார்:** கேசவனுடன், நந்தகோபன் இடத்தையடைந்த அளவற்ற தக்ஷிணை கொடுக்கும் [தானபதி] அக்ரூரர், ஆயர் பெரியோரைதம் பலராமனுடன் கூடிய க்ருஷ்ணனையும் ஒன்று கூட்டி, அன்புடன் [க்ருஷணனை] நோக்கி

2. "அப்பா, நாளை மதுராபுரிக்கு ஸுகத்திற்காகப் போவோம்" என்று சொன்னார்,

3. ஆய்ப்பாடியில் எல்லா ஆயர்களும் பரிவாரங்களுடன் கம்ஸன் கட்டளைப்படி தக்க வருஷ கப்பத்தை எடுத்து கொண்டு போவார்கள்.

4. அங்கு கம்ஸனது விமர்சையான வில்விழா நடக்கும், விமர்சையான அதைக் காண்பீர்கள், பந்துக்களுடன் சேர்வீர்கள்

5, 6, 7, எப்போதும துக்க கொள்கலமும் மெலிந்தவரும், புத்ரவதத்தால் களைத்தவரும், துர்புத்தியுடைய கம்ஸனால் ஸதா பீடிக்கப்படுகிற வரும், கஷ்டத்தசையால் உடைய வற்றியவரும், துக்கங்களால் மனம், உடல், ஒடிந்தவரும், வயதானவரும், கம்ஸ பயத்தால் நடுங்குகிறவரும், உங்களிடமிருந்தும் பிரிந்தே வாழ்பவரும்;இரவும் பகலும் [உங்களைப் பார்க்கும்] ஆவலாய் தபித்துக் கொண்டிருப்பவருமான பிதா வஸுதேவனை நீங்கள் இனிது சேர்வீர்கள்.

8, 9, 10, 11. கோவிந்தா! பெற்ற குழந்தைகளால் பால் உண்ணப்படாத ஸ்தானங்களையுடையவள்; தேவர்களுக்கு கொப்பானவள்; ஒளிமங்கியவள்; புத்ர சோகத்தால் உலர்ந்தவள்; உன்னைக்காண்பதிலேயே நோக்குடையவள்; உன்னைப் பிரிந்த சோகத்தால் மிகத் தபிக்கிறவள்; கன்று பிரிந்த சோகத்தால் மிகத் தபிக்கிறவள்; கன்று பிரிந்த பசு போன்றவள்; சோகம் ததும்பும் கண்ணுடையவள்; மெலிந்தவள்; [மனவருத்தத்தால்] அழுக்காடை எப்போதும் உடையவள்; ராகுமுகத்தால் விழுங்கப்பட்ட சந்த்ர ஒளி போன்றவள்; ஸர்வதா உன்னையே காணவிரும்பு

பவன்; எப்போதும் உன் வரவையே எதிர்பார்ப்பவள்; உன் பிரிவால் உண்டான துக்கத்தால் வருந்துபவள்; உன்னைப்பற்றி புலம்பிச் சொல்லத் தெரியாதவள் [மனத்திலுள்ளேயே மறுகுகிறவள்]; சிசுவிலேயே உன்னைப் பிரிந்தவள்; ப்ரபோ!

12, சந்த்ர ஒளியையுடைய உன் தேகத்தின் அழகை அறியாதவள்; இப்படி வருந்தியிருக்கும் உன் தாய் அந்தத் தேவகியையும் நீ காண்பாய்

13. அப்பா! உன்னைப் பெற்று அந்தத்தேவகி தபிக்கிறாளேயானால் பிள்ளைப் பேற்றின் பயன் என்ன?

14. பிள்ளைபெறாமல் இருப்பதே மேல். பிள்ளைப் பேரில்லா பெண்களுக்கு துக்கம் ஒன்றா, பிள்ளை பெற்றவளோ, பிள்ளை பெற்ற பயன் கிட்டாதபோது சீ! சீ! குழந்தையால் வருந்துகிறாள்;

15. தேவகிக்கு நீ இந்த்ரனுக்கொப்பான பிள்ளை; குணங்களால் உனக்கு ஒப்பு ஒருவருமில்லை. நீ பிறருக்கும் அபயம் கொடுப்பவன்;

16 17. [ஆகையால்] அந்தத்தேவகி துக்கத்துக்குஉரியவளல்லள் உன் மாதா பிதாக்கள் வயோதிகர்; பிறருக்கு அடிமைகள். கெட்ட புத்தியுடைய கம்ஸனால், உன் பொருட்டு ஸதா அதட்டப்படுகிறார்கள்; பூமிபோல் பொறுமை கொண்டு உயிர் தரித்திருக்கும் தேவகீ உன்னால் போற்றத் தக்கவள்; ஆனால் சோகக் கடலில் மூழ்கியிருக்கும் அவளை நீ கரையேற்ற வேண்டும்.

18. ஸுகப்படவேண்டிய வ்ருத்தரும் ப்ரியமான பிள்ளையையுடையவருமான அந்த வஸுதேவரை பிள்ளையோடு இனிது சேர்த்து, தாமம் [அதன் பயனை] அடைவாய்

19. யமுனை மடுவில் மிக அயோக்யன் நாகம் காளியன் அடக்கப்பட்டான்; கோவர்த்தன மலை வேரற செய்யப்பட்டது, திமிர் கொண்ட பலவான் காளை அரிஷ்டன் கொல்லப்பட்டான்;

20, 21, 22, பிறர் ப்ராணனை அபஹரிக்கும்கொடியன் குதிரை கேசிகொல்லப்பட்டான்; இத்தகைய ப்ரயத்னத்தாலேயே, துக்கித்திருக்கும் [மாதாபிதாக்கள் தேவகீ வஸுதேவர்களான] வ்ருத்தர்களை கரையேற்றி எப்படி தர்மத்தை யடைவாயோ அப்படி நன்கு யோசிக்கப்படட்டும், கம்ஸன் ஸபையில் வசைமாரி பொழியப்

பட்ட உன் பிதா [வஸுதேவர்], எவர்களால் பார்க்கப் பட்டாரோ அவர்கள் எல்லோரும் மிகவும் துக்கங்கொண்ட வராய் கண்ணீர் வடித்தனர்.

23. கம்ஸனால் செய்யப்பட்ட சிசு ஹத்தி முதலிய மிகப்பல துக்கங்களையும் உனது தாய் தேவகி செயலற்று ஸஹிக்கிருள்

24. பிறந்த ஒவ்வொரு குழந்தையாலும் மாதா பிதாக் களுக்கு முறைப்படி ப்ரதி உபகாரம் செய்யப்பட வேண்டுமென்று தர்ம சரஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

25. மாயமற்றவனே! க்ருஷ்ணு! இப்படி செய்கிற உனக்கு மாதா பிதாக்கள் அனுக்ரஹம் உண்டாகும். அவர்களும் துக்கத்தை விடுவார்கள். இது உனக்கு தர்மம் (கடமை)''

26. **வைசம்பாயனர் சொன்னுர்** செய்ய வேண்டியன நன்கு அறிந்த தேஜஸ்வீ க்ருஷ்ணன் அளவற்ற பராக்ரமருடைய அக்ரூரரை நோக்கி ''பாடம்'' (அப்படியே'') என்று ஒப்புக் கொண்டான்.

27. கோபம் கொள்ளவில்லை. நந்தகோபர் முன்னிட்ட அந்த ஆயர்கள் அக்ரூரர் வார்த்தையைக் கேட்டு கம்ஸன் கட்டளைப்படி புறப்பட்டார்கள்.

28, ஆய்ப்பாடி வாஸிகளான அவர்கள் புறப்பட ஆயத்த மானுர்கள்; கோப வ்ருத்தர்கள், காணிக்கை சேகரித்து புறப் பட்டனர்.

29,30. கப்பம், எருதுகள் நெய் தயிர், பால் முதலிய காணிக்கை பொருள்களை சக்திக்கும் குழுவுக்கும் தக்கபடி, ஆயத்தம் செய்து, அந்த எல்லா கோபத் தலைவர்களும், புறப் பட்டனர்

31. க்ருஷ்ணன் பலராமனோடு மூன்றுமவரும் க்ருஷ்ண ளோடு கண் விழித்திருப்பவருமான அக்ரூரரின் கதைகளுடன் அவ்விரவு கழிந்தது.

32. பிறகு பொழுது விடிந்தது; பக்ஷிகளின் குரல் எங்கும் பரவியது. இரவு கழிந்ததால் நக்ஷத்ர க்ரகணங்கள் மறைந்தன. ஆகாயத்தில் அருணன் ஒளி பரவிற்று

33. நக்ஷத்ரங்கள் ஒளி மங்கிற்று; விடியற்காலைஈரக்காற்றின்; வீச்சால் பூமி நனைந்தது; சிறு வடிவுள்ள நக்ஷத்திரங்கள் உறங்குவது போல் ஒளி மங்கின;

34, 35, 36, 37. சூர்யன் மேல் எழுந்தான்; இரவின் உருவம் மறைந்தது. சந்த்ரன் கிரணங்கள் அடங்கி ஒளியற்றவன் ஆனான்; ஒருவன் உருவத்தை மறைத்துக் கொள்கிறான். ஒருவன் உருவத்தை வளர்த்துக் கொள்கிறான். ஆயர்பாடியிலிருந்து வெளிச் செல்லும் இடங்களில் பசுக்கள் பரவி நிற்கின்றன.

38. (ஆயப்பாடியில்) தயிர் கடையும் மத்தோசை நிரம்பியிருக்கின்றன. இளங்கன்றுகள் தாம்பால் கட்டப்படுகின்றன, ஆயப்பாடி வீதிகளில் கோபர்கள் எங்கும் நிரம்பியிருக்குன்றனர்; ஸாமான்கள் நிரம்ப ஏற்றின வண்டிகளை பின்வரச்செய்து கோபர்கள் வேகமான வாகனங்களில் ஏறிச் செல்கின்றனர்.

39. பிறகு; க்ருஷ்ணன், பலராமன், அந்த தானபதி அக்ரூரர் ஆகிய மூவரும் (ஒரே) தேரில் ஏறி மூன்று ராஜாக்கள் போலச் சென்றனர்,

40. பிறகு யமுனைக்கரையை யடைந்த அக்ரூரர் க்ருஷ்ணனைப் பார்த்து "அப்பா! நிறுத்திய தேரைப் பார்த்துக் கொள். குதிரைகளைக் கவனித்துக் கொள்.

41. குதிரைகளுக்கு இளம்புற்களைக் கொடுத்து, குதிரை ஜேன ஸாமான்களிலும் தேரிலும் விசேஷ கவனம் செலுத்திஒரு க்ஷணத்தில் என்னை எதிர் பார்" என்று சொன்னார்.

42. "இந்த யமுனை மடுவில் ஸர்வலோக ப்ரபுவான [ஆதி சேஷனாகிய] நாகராஜனை மேலான பாகவதரை [பக்தரை]ப் போற்றும் மந்த்ரங்களால் துதிப்பேன்.

43. பரம ரஹஸ்யமானவனும், பக்தனும் எல்லா உலகங்களையும், தாங்கும் தேவனும், ஸ்வஸ்திக் அடையாளத்தை தலையில் உடையவனும், நீல வஸ்த்ரம் தரித்தவனுமான அந்தனை தேவனை வணங்குவேன்

44. பிறகு, ஸ்வஸ்திக் அடையாளமுள்ள, சோபையுடன் கூடிய அந்த ஸர்பத்தைப் பார்த்து அந்த அனந்தனிடம் எந்த விஷம் உண்டாகுமோ அம்ருதத்துக்குச் சமமமாக எண்ணி அது

முழு வதையும் தேவர் போல் உண்பேன், அங்கு அமைதியி பொருட்டு பாம்புகளின் கூட்டம் இருக்கும்.

46. நாகராஜனுடைய உத்தம மடுவிலிருந்து திரும்பும் வல நீங்கள் இருவரும் சேர்ந்து என்னை வழி பார்த்திருங்கள்.

47. மிக மகிழ்ந்த க்ருஷ்ணன் அக்ரூரருக்குச் சொன்ன 'தர்மிஷ்டரே! தாமதம் வேண்டாம் நீர் இல்லாமல் (தனித்து இருக்க நாங்கள் சக்தர் இல்லையல்லவா?''

48, 49. தானபதி அக்ரூரர் யமுனை மடுவில் மூழ்கினார். அவ பாதாள உலகில் நாகலோகத்தை, இந்த (பூ) லோகத்தைப் போல் பார்த்தார். அந்த லோகத்தின் நடுவில் ஆயிரம் வாயுடையவன்

50, 51, 52. தங்க மயமான பணையடையாளங் கொண்ட உயர்த்தப்பட்ட கொடியுடையவன்; (உலக்கை போன்ற உட லுடையவன்); கலப்பை போன்ற கைநுனியுடையவன் நீல ஆடை யுடுத்தவன்; வெண்ணிறமுடையவன்; வெண்ணிற ஆஸநம் உடை யவன்; மதங்கொண்டு உறங்குபவன்; தாமரைக் கண்ணன்; தன் உடலை ஆற்றின் உயர்ந்த வெண்மை ஆஸநத்தில் ஸுகமாக வீற் றிருப்பவன்; பன்றி சின்னத்தாலும், ஸ்வஸ்திக் சின்னத்தாலும் அலங்கரிக்கப்பட்டவன்;

53. 54. பூமியைத் தாங்குபவன்; சிறிது இடப்பக்கம் திருப்பிய தங்கக் கிரீடம் சூடியவன்; ஸ்வர்ணமய தாமரை மாலை யரல் மறைந்த மார்பையுடையவன்; செஞ்சந்தனக் குழம்பு பூசப் பட்டவன்; நீண்ட கைகளையுடையவன்; சத்ருக்களை வெல்பவன், பத்மநாபன் (விஷ்ணு) போல வெண்மேகக் காந்தியுடையவன்; ஒளி வீசும் தேஜஸ்ஸுடையவன்; ப்ரளயத்தில் தனித்திருக்கும் கடவுள் வாஸுகி முதலிய நாகஸ்ரேஷ்டர்களால் பூஜிக்கப்பட் டவன்; இத்தகைய ப்ரபு ஆதிசேஷனைப் பார்த்தார்.

55. தர்மாஸனத்தில் வீற்றிருக்கும் அந்தத் தேவனை, ப்ரபுவை "அம்பள அய்வதர," என இரண்டு நாகர்கள் சாமரத்தை கையி லேந்தி வீசி உபசரித்தனர்;

56. [நாகத் தலைவன் வாஸுகி கார்கோடகன் முதலிய ஸர்ப மந்த்ரிகளால், சூழப்பட்டு; அநந்தன் பக்கல் நின்று வணங்கு கிறான்.

57. ப்ரளய ஸமுத்ரத்தில் ஸ்நாநம் செய்த அநந்தனே, தாமரைப் பூக்களால் மூடிய திவ்ய தங்கக் குடங்களால் அபிஷேகம் செய்வித்தனர்.

58. அநந்தன மடியில் மேகம் போல் கறுத்தும் ஸ்ரீவத்ஸத்தால் மறைக்கப்பட்ட மார்பை கொண்டும் பீதாம்பரம் தரித்தும் ஸுகவாக வீற்றிருக்கும் விஷ்ணுவைப் பார்த்தார்.

59. சந்த்ரன் போன்ற சரீரமுடைய திவ்யாஸன மில்லாத சங்கர்ஷணன் [பலராமன்] போல் உட்கார்ந்திருக்கும் வேறொருவனைப் பார்த்தார்.

60. அங்கு அக்ரூரர் க்ருஷ்ணனைப் பார்த்து உடனே பேச ஆரம்பித்தார். க்ருஷ்ணனே தன் தேஜஸ்ஸால் அக்ரூரர் வாக்கை நன்கு ஸ்தம்பிக்கச் செய்து விட்டான்.

61. அந்த தானபதி அக்ரூரர் அநாதியான, பகவத் பக்தன அநந்தனைக் [கண்டு போற்றி] அனுபவித்து, ஆச்சர்யம் அடைந்து மறுபடியும் [தண்ணீரிலிருந்து] வெளியேறினர்.

62. அந்த அக்ரூரர் அங்கு ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருக்கும் ஆச்சர்ய ரூபத்தையுடைய பலராம கேசவர்களை தேரிலேயே வீற்றிருப்பவராகப் பார்த்தார்.

63. பிறகு அப்போதே குதூகலத்துடன் அக்ரூரர் அங்கு மறுபடி [தண்ணீரில்] மூழ்கினர். அங்கே நீலாடை யுடுத்து வெண் முகத்துடன் அந்தந் தேவன் பூஜிக்கப்படுகிறன்,

64. அதே போல் ஆயிரம் வாய் அநந்த தேவனது மடியில் அமர்ந்து பூஜிக்கப்படும் ப்ரபு க்ருஷ்ணனையும் அக்ரூரர் பார்த்தார்

65. மறுபடியும் உடனே [நீரிலிருந்து வெளி) எழுந்து அந்த மந்ரத்தை மனதால் ஜபித்துக் கொண்டு அதே வழியாக தானபதி அக்ரூரர் தேரையடைந்தார்.

66. மகிழ்ச்சியடைந்த கேசவன் வந்து நிற்கும் அக்ரூரரைப் பார்த்துச் சொன்னன் "அநந்தனுடைய பகவத் பக்தன் மடுவில் நாக லோகத்தின் விஷயம் எத்தகையது? உம்மால் மேலும் கீழும் சென்று வெகு காலம் தாமதமாக்கப்பட்டது. உம்மால் ஆச்சர்யம் காணப்பட்டதென்று எண்ணுகிறேன். உமது ஹ்ருதயம் (த்யானத்தால்) அசையாத மலைபோன்றது?"

67. அக்ரூரர் க்ருஷ்ணனை நோக்கிப் பதில் கூறினார்: உன்னைத் தவிர லோகங்களில் ஸ்தாவரங்களில் ஜங்கமங்களில் ஆச்சர்யம் என்ன இருக்கும்?

68. பூமியில் எது அடைய முடியாததோ அந்த ஆச்சர்யம், அங்கு என்னால் காணப்பட்டது.

69 அங்கு எப்படியோ அதையே இங்கு கூட பார்க்கவும் மகிழவும் செய்கிறேன்.

70. இங்கு உலகுக்கெல்லாம் ஆச்சர்யமான உருவெடுத்து உன்னோடு நன்கு சேரவும் செய்தேன். க்ருஷ்ண! இதற்கு மேலான ஆச்சர்யத்தைக் காண விருப்பமில்லை.

71. ப்ரபுவே! வா! கம்ஸ ராஜன் நகரை அடைவோம் நாள் முடிவில் இந்த சூர்யன் மறைவதற்குள் நகரைப் போய் சேர்வோம்.

26ம் அத்தியாயம் முற்றிற்று

## 27ம் அத்தியாயம்

## ராம க்ருஷ்ணர் மதுரையில் ப்ரவேசம்

**வண்ணான் வதம்; மாலாகார வாதாமை கம்ஸன் பூஜை வில்லை ஒடித்தல் கூனியிடம் க்ருபை**

1. **வைசம்பாயனர் சொன்னார்** : நிறைந்த தேஜஸ்ஸை யுடைய அந்த ஸங்கர்ஷணனுடனும், க்ருஷ்ணனுடனும் சேர்த்த எல்லாரும் சிறந்த தேரைப் பூட்டி புறப்பட்டு, கம்ஸனால் ஆளப் பட்ட, அழகிய மதுராபுரியை அப்படியே அடைந்தனர்.

2, 3 சிவந்த சூர்யனின் மாலைக்காலம், அம்மூவரும் அழகிய நகரில் புகுந்தனர்; புத்திமான் அக்ரூராம், சூர்யன் போன்ற காந்தியுடைய அந்த வீரர் க்ருஷ்ண பலராமர் இருவரும் (அக்ரூரர்) தம் க்ருஹத்தையே அடைவிக்கப்பட்டனர்.

4 பயங்கொண்ட தானபதி அக்ரூரர் அப்போது உத்தம காந்தியுடைய அவர்களை நோக்கிச் சொன்னார் "அப்பா! பலராமா! கிருஷ்ண! வஸுதேவர் க்ருஹத்துக்குப் போகும் ஆசை தற்போது விடத்தக்கது.

5, 6. உங்களுக்காகத் தானே அக்கிழவர் கம்ஸனால் ஹிம்ஸிக்கப் படுகிறார். இங்கு இருக்கவும் கூடாதென்று இரவும் பகலும் அதட்டப்படுகிறார். ஆகையால் பிதாவுக்கு உங்கள் இருவராலும் மேலான ஸுகந்தானே செய்யப்பட வேண்டும். எப்படி ஸுகமடைகிறாரோ, ப்ரீதத்துடன் கூடிய அதுவே செய்யப் படவேண்டும்.

7. பிறகு க்ருஷ்ணன் அக்ரூரரைப் பார்த்துச் சொன்னான், பெரியோய்! நாங்களிருவரும், மதுரையையும், ராஜபாட்டையையும் பார்த்துக் கொண்டு, வீரரே, தர்மசீலரே, பெரியோரே, உமது எண்ணம் அதுவானால், (கம்ஸன்) அவனது வீட்டையே, திடீரென்று (எதிர்பார்க்காதபடி) அடைவோம்.

8. **வைசம்பாயனர் சொன்னார்;** அக்ரூரரும், குறைவற்ற க்ருஷ்ணனை, மனதால் வணங்கி, மிக மகிழ்ந்த உத்ஸாஹத்துடன், கம்ஸன் பக்கல் சென்றார்.

9. அக்ரூரரால் அனுமதிக்கப்பட்ட அவ்வீரர் இருவரும் கருத்தறியிலிருந்து விடப்பட்ட, யுத்தம் விரும்பும் யானைகள் போல், நகரைப் பார்த்துக் கொண்டே புறப்பட்டனர்.

10, 11. பிறகு அவ்விருவரும், வழிச்செல்லும், சாயம் தோய்க்கும் வண்ணானைப் பார்த்து மனோஹரமான ஆடைகளை யாசித்தனர். அந்த வண்ணானும் அவர்களை நோக்கிச் சொன்னான் "நீங்கள் இருவரும் யாரைச் சேர்ந்தவர்கள் காட்டான்கள்!; நீங்கள் யாரடா! பயமற்று ராஜாவின் வஸ்தரங்களை, முட்டாள் தனத்தால் கேட்கிறீர்கள்"

12 நான், நானா தேசங்களிலுண்டான வஸ்த்ரங்களைக் கம்ஸனுக்காக, அவனிஷ்டப்பட்ட சாயங்கள் தோய்த்து நூற்றுக் கணக்கில் விசேஷமாகச் சாயமேற்றுவேன்.

13, 14. காட்டில் பிறந்தவர்; மிருகங்களுடன் வளர்ந்தவர். இந்த நல்ல சிவந்த ஆடையைப் பார்த்து ஆசை கொண்டவர் நீங்கள் யாருடையவர்? அஹோ! உங்கள் உயிர் விடப்பட்டது, நீங்சள் அற்ப அறிவுடையவர் முட்டாள்கள்; வஸ்த்ரத்தை யாசிக்க விரும்புகிறீர்கள்.

15. அல்ப புத்தியுடைய துக்கம் நெருங்கிய வாக்காகிற விஷத்தைக் கக்கும் அந்த வண்ணான் பொருட்டு க்ருஷ்ணன் கோபங் கொண்டான்.

16. க்ருஷ்ணன், அந்த வண்ணானை வஜ்ராயுதம் போல் உள்ளங்கையால் தலையில் ஓங்கி யடித்தான். அந்த வண்ணா மண்டை பிளங்கப்பட்டு உயிர் நீங்கி பூமியில் விழுந்தான்.

17. கொல்லப்பட்ட வண்ணானைப் பற்றி அவனது மனைவிய கூக்குரலிட்டு அழுதனர், தலைவிரி கோலமாக கம்ஸன் வீட்டுக் விரைந்தனர்.

18. க்ருஷ்ணன், பலராமன், அவ்விருவரும் நல்ல ஆடை களணிந்து பூக்கடை வீதிகளில் புஷ்பம் வேண்டி, வாஸனையறிய யானைகள் போல் சென்றனர்

19. அங்கு ஏராள மாலைகள் கொண்ட கடையுடைய, மா கட்டும் தொழிலுள்ள, ப்ரிய தோற்றம் கொண்ட, இனிதாக பேசும் 'குணகன்' எனப் பெயருள்ள, லக்ஷ்மீ கடாக்ஷம் பொருந்தி ஒருவன் இருந்தான்.

20. பயமில்லாத அந்த மாலை கட்டுபவனிடம், அப்போது மாலையை வேண்டிதக்க இனிய சொற்களுடன் 'தேஹி' என் சொன்னான்.

21. அவர்களிடம் ப்ரீதி கொண்ட மாலாகாரன், நிறை மாலைகளைக் கொடுத்தான். இனிய தோற்றமுடைய அவர்களிட "இது உங்கள் உடைமை" என்றும் சொன்னான்.

22. ப்ரீதி யடைந்த க்ருஷ்ணன் 'ப்ரியமானவனே! என லக்ஷ்மீ தேவி, செல்வக் கட்டங்களுடன் உன்னை அடைவாள் என்று குணகனுக்கு இனிய மனதுடன் வரம் கொடுத்தான்.

23. அந்த மாலாகாரன், சாந்தனாய், குனிந்த முகத்துடன் க்ருஷ்ணனைத் தலையால் வணங்கி, அந்தச் சிறந்த வரத்தை ஏற்று கொண்டான்.

24. அப்போது அந்த மாலாகாரன் 'இவர்கள் யக்ஷர்கள் என்று எண்ணினான். (கம்ஸ) பயத்தால் மிக நடுங்கிய அவ பதில் சொல்லவில்லை.

25. ராஜ பாட்டையில் செல்லும் அந்த வஸுதேவகுமார இருவரும், மேலும், வாஸனை பூச்சு ஸாமன்கள் கொண்ட பாத்ரங்களையுடைய கூனியைக் கண்டனர்.

26. க்ருஷ்ணன் அவளை நோக்கி இவ்வாறு சொன்னான் "கூனியே இந்த வாஸனைப் பூச்சை யாருக்குக் கொண்டுபோகிறாய் தாமரைக் கண்ணியே! சீக்ரம் சொல்வாய்."

28 மின்னல் போல் வளைந்து செல்லும் அவள் க்ருஷ்ணனைப் பார்த்து நின்று புன்சிரிப்புடன், மேகம் போல் கம்பீரமான தாமரைக்கண்ணன் க்ருஷ்ணனிடம் பதில் சொன்னாள்.

28, 29. அரசனது அந்த ஸ்நாந க்ருஹந்துக்குப் போகிறேன் வாஸனைப் பொருளை எடுத்துக்கொள். தாமரைக் கண்ணனே! அழகுமிக்க முகமுடையவனே! உன்னைப் பார்த்தவுடன். ஆச்சர்ய மடைந்தேன். வீர! நீ இந்தப் பூச்சை இஷ்டப்படி எடுத்துக்கொள் நான் அடியையாகியிருக்கிறேன் வா! உனக்கு மங்களம். என் உள்ளத்துக்கு உகந்தவன் நீ!

30. நீ! சுந்தரமூர்த்தி எங்கிருந்து வருகிறீர்? என்னை (என் மனதை) நன்கு தெரிந்துகொள்ளவில்லையே! ராஜாவுக்கு வாஸனைப் பூச்சு விஷயமாக நியமிக்கப்மட்டு அவருக்கு வேண்டியவள்.

31 க்ருஷ்ணன் சிரித்துக்கொண்டு நிற்கும் அந்தக் கூனியை நோக்கிச் சொன்னான்:

32. எங்கள் உடலுக்கு ஏற்ற வாசனைப் பூச்சு கொடுக்கப் படட்டும். ஸுமுகியே; நாங்கள் தேசத்துக்குப் புதிய விருந்தாளிகள். ராஜ்யத்திலேயே மிக மேன்மை வாய்ந்த அந்த திவ்ய தனுஸ்ஸை பார்க்க வந்த மல்வீரர்

33. அவள் பிறகு கருஷ்ணனுக்குப் பதில் உரைத்தாள் "என்னைப் பார்ப்பதில் ப்ரியமுள்ளவனுயிருக்கிறாய். ஆதலால், அரசனுக்கேற்ற இந்த பூச்சுக்களை ஸுக மனதுடன்ஏற்றுக்கொள்.

34. அவ்விருவரும் சந்தனப்பூச்சு கொண்ட அங்கங்களுடன் அழகிய திருமேனி கொண்டு யமுநா தீரத்தில் இறங்கி சேறுபூசப் பட்ட உடலையுடைய காளைகள் போல் விசேஷமாக ப்ரகாசித்தனர்

35. விளையாட்டு விதிகளை யறிந்த க்ருஷ்ணன் அந்தக் கூனியை கூன் முதுகு 'மத்தியில் இரண்டங்குலம் கை நுனியால் மெள்ள அழுத்தினான்.

36. புன் சிரிப்பு கொண்டு அந்தக் கூனையும் கூன் அழுங்கி யதையழிந்து இரண்டு ஸ்தானங்களுடைய நேர் கொடிபோல் நிமிர்ந்த தேஹத்துடன் உரக்கச் சிரித்தாள்.

37. அவள் மிக்க ஸந்தோஷத்தால் ப்ரகாசித்து க்ருஷ்ணனை நோக்கி, காமக் கலக்கம் தோன்றப் பேசினாள் "ப்ரியனே! எங்கே போவாய்? என்னால் தடுக்கப்பட்டிருக்கிறாய்" நில். என்னை உடைமையாக்கிக் கொள்!"

38 வார்த்தையைக் கேட்டு ஒருவருக்கொருவர் சிரித்துக் கொண்டு, குறைவற்ற அவ்விருவரும் அவளைப் பார்த்து கைதட்டி சிரித்தார்கள்.

39. க்ருஷ்ணனும், காமத்துடன் கூடிய கூனியை (தன்; புன் சிரிப்பால், (த்ருப்திசெய்து) விடை பெற்றான்.

40. பிறகு இருவரும் கூனியால் விடப்பட்டு, ராஜஸபையை அடைந்தனர். ஆயப்பாடியில் வளர்த்து ஆயர்வேஷம் கொண்ட அவ்விருவரும் மறைந்த விஷ'ம பார்வையுடன் அரசனின்இடத்தை அடைந்தனர்.

41. அங்கு எதிர்பார்க்கப்படாமல் தனஸ் மாலையை அடைந்த அந்த பாலர்கள் ஹிமயமலைக் காட்டில் பிறந்த ஸிம்ஹங்கள்போல் மதமிகுந்து விளங்கினர்

42. அங்கு அப்போது புஷ்பாலங்காரம் செய்யப்பட்ட அந்தப் பெரிய வில்லைப் பார்க்க ஆசை கொண்டு அவ்வீரர் ராம க்ருஷ்ணர் இருவரும் ஆயுத சாலைக் காப்போனைக் கேட்டார்கள்

43 ''வணக்கம் அய்யா' கம்ஸன் விற்களைக் காப்பவரே! எங்கள் வார்த்தை கேட்கப்படட்டும் ப்ரியரே! எதற்காக இவ்வில் விழா ஆரம்பிக்கப்புடுகிறதோ அந்த வில் எது? உமக்கு இஷ்ட மிருந்தால் இந்த கம்ஸனின் விழாவுக்கு முக்யமான அந்த வில்லைக் காட்ட வேண்டும்,

44. அந்த ஆயுத சாலைக் காப்பாளன், தூண் போன்றதும் அந்தரனோடு கூடிய ' தேவர்களாலும் நாணேற்ற முடியாததும் ஒடிக்க முடியாததுமான அரிய வில்லை அவர்களுக்குக் காட்டினான்.

45. தாமரைக் கண்ணன், வீர்யமுடைய அந்த க்ருஷ்ணன் அப்போது, உவந்த உள்ளத்தனாய்; அந்த வில்லை கைகளால்எடுத்து தூக்கிப் பார்த்தான்.

46, 47. பலவான் க்ருஷ்ணன் அஸுரர்களால் பூஜிக்கப் பட்ட அந்த வில்லைத் தூக்கி, பலமுறை வளைத்து விருப்பப்படி நாணேற்றவும் செய்தான். பூச்சூட்டி தூபம் போடப்பட்ட மென் மையால், பாம்பு போன்ற (பிறராலும்) வளைக்கப்படாத அந்த வில் க்ருஷ்ணனல் இரண்டாகத் துண்டிக்கப்பட்டது.

48. அந்த வில்லை ஒடித்து க்ருஷ்ணன் பராக்ரமசாலியாக வேகமாக வெளிக்கிளம்பினான். அந்த யுவா பலராமனும் மிக்க வேகத்துடன் புறப்பட்டான்.

49. வில்லொடித்த சண்ட மாருதம் போன்ற சப்தத்தால் அந்தப்புறம் முழுதும் நடுங்கிற்று.

50. திக்குகளும் அந்த சப்தத்தால் நிரப்பப்பட்டன. ஆயுத சாலையிலிருந்து வெளிக்கிளம்பி கோபர்கள் முன்னிலையில் அவர்கள் சென்றனர். ஆயுத காப்பாளனும் பரபரப்பு கொண்டு வேகமாகச் சென்று அரசன் பக்கல் அடைந்து காக்கை போல் மூச்சு விட்டுக் கொண்டு சொன்னான்:

51. "கேட்கப்பட்டும் என்னால் விஜ்ஞாபிக்கப்படுகிறது. விற்சாலையில் இப்போது நடந்த ஆச்சர்யம்!

52. உலகுக்கே பரபரப்பு ஊட்ட வல்லது எவர்க்கும் ஒப்பில்லா இருமனிதர்; முடிச்சிடப்பட்ட தலைமயிர் கொண்டவர்;

53, 54, நீலாடை ஒருவரும் மஞ்சளாடை ஒருவரும் அணிந்தவர்; ஒருவனுக்கு மஞ்சள் பூச்சு மற்றவருக்கு வெள்ளை; எவரும் விரும்பும் தோற்றமுடைய அவ்விருவரும் முன் அறியப்படாதவர். உட்புறம் வந்தனர்; தேவக் குழந்தைகள் போன்றவர்; வீரர்; தீச்சுடர் போன்ற குழந்தைகள்; திடீரென ஆகாயத்திலிருந்து வந்தவர் போன்றவர்; மனோஹரமான உடைகளையும் மாலைகளையும் அணிந்தவர்; ப்ரிய தோற்றமுடையவர்; ஆயுதசாலையில் இருக்கும் இவர் இருவர் என்னால் நன்றாகப் பார்க்கப்பட்டனர்;

55 நன்றாகப் பார்க்கப்பட்டனர்; அவ்விருவரில் மஞ்சள் ஆடை, மாலை அணிந்து நீல நிறமுடைய தாமரைக் கண்ணனாகிய ஒருவர்; தேவர்களாலும் தூக்க முடியாத அந்த வில்லை எடுத்தார்.

56, அந்தப் பாலன் இரும்பு யந்த்ரம் போன்ற (கனமான) பெரிய வில்லை, வேகமாக நாணேற்றி, விளையாட்டாகவே வளைத்தான்.

57. தோள்வலியுடைய அவரால், அம்பில்லாமல் இழுத்து வளைக்கப்பட்ட அது கைப்பிடியால் பிடிக்கப்பட்டு இரண்டாக ஒடிக்கப்பட்டது.

58. பிறகு பூமி நடுங்கிற்று. ஆர்யனும் ப்ரகாசிக்கவில்லை வில்லொடித்த சப்தத்தால் ஆகாயம் சுழல்வது போலிருக்கிறது.

59. அந்த மகத்தான ஆச்சர்யத்தைப் பார்த்து மிகத்திகைப்படைந்தேன் பயமூட்டும் சத்ருக்னர்களிடமிருந்து பயத்தால் சொல்வதற்கு இங்கு வந்தேன்.

60. மஹாராஜா! மிக்க பராக்ரமம் வாய்ந்த அவர்கள் யாரென்று அறிகிறேனில்லை. ஒருவர் சாகவாச மலை போன்றவர்' மற்றொருவர் அஞ்சனகிரி போன்றவர்.

61. அவரோ, அந்தச் சிறந்த வில்ரத்னத்தை, யானை, கட்டுத் தறியைப் போல் ஒடித்து அளவற்ற வீரத்துடன் தன்பின் வருமவருடன் வாயு வேகமாகக் கிளம்பினார். அரசே! அதை (வில்லை) இரண்டாக்கிச் சென்றான் இன்னானென்றறியேன்.

62. தனுர் பங்கத்தைக் கேட்டதும் எல்லாம் (யோசித்து) அறிந்த கம்ஸன்; ஆயுத காப்பாளனைப் போகச் சொல்லி, சிறந்த தன் வீட்டுள் புகுந்தான்.

27ம அத்தியாயம் முற்றிற்று

## 28ம் அத்தியாயம்

## யானைப்பாகனுக்குக் கம்ஸன் நாரதரால் சொல்லப்பட்ட பிறப்பு விஷயத்தை சொல்லிப் பெருமைப்படல்

1. **வைசம்பாயனர் சொன்னார்** : போஜ திலகனான அந்த, கம்ஸன், தனுர் பங்கத்தை நன்கு ஆலோசித்து மனமுடைந்து அதே கவலையாக மிக்க துக்கங் கொண்டவனானான்.

2, ' சிறு பிள்ளை, காவல்காரரால் பார்க்கப்பட்டவனாகவே மிக்க வலிமையுள்ள வில்லை பயமில்லாமல், அலக்ஷியமாக (விளையாட்டாகவே) ஒடித்து எப்படி வெளியேறினான்?

3. இவனுக்காக லோகம் நிந்திக்கும்படியான பயங்கர கார்யம் என்னால் செய்யப்பட்டது அத்தை (தேவகி) வீரபுத்ரர் (சிசுக்கள்) அறுவரையும் கல்லில் மோதிக் கொள்கிறேன்.

4. (தன்) முயற்சியால் தெய்வத்தை மீற முடியாது. நாரதரால் சொல்லப்பட்ட வார்த்தை என்னை நெருங்கிவிட்டது நிச்சயம்''

5. அரசன் இவ்விதம் ஆலோசித்து பிறகு தன் மாளிகையிலிருந்து வெளியேறி, ஆஸனங்கள் அமைப்பு(ஏற்பாடுகளை)பார்க்க சீக்ரம் காட்சிமண்டபத்தையடைந்தான்.

6 அந்தச் சிறந்த அரசன் எல்லாவிதத்தாலும் நிறைந்த காட்சி மண்டபத்தைப் பார்த்தான் திடமாக அமைக்கப்பட்ட சாய்வாஸனங்கள் வரிசையால் நிறைந்தது.

7. மேலான மாடி வீடுகள் கொண்டது; மேல் கூரை அழகாக அலங்கரிக்கப்பட்டது ஒரே தூண்மேல் அமைக்கப்பட்ட (இடை போன்ற) மேல் கட்டிகள் அமைந்தது.

8. நாற்புறமும் ஸாரமான அமைப்புகள் கொண்டது; வெகு விஸ்தாரமான இடம்; ஸ்திரமாக அமைக்கப்பட்டது; உயர்ந்து ஸுகமாக ஏறி இனிது அமர்தலுக்கானபடிகளையுடையது; மிக மேலானது.

9. அரசர்களுக்குரிய ஆஸனங்கள் நன்கு அமைக்கப்பட்டது; நாற்புறம் போய்வர வழிகள் அமைக்கப்பட்டது; திண்ணைகள் அமைக்கப்பட்டது: ஜனக்கூட்டங்களைத் தாங்கத் தக்கது.

10, 11. அந்த அலங்காரமுள்ள அரங்கத்தைப் பார்த்து, புத்திமான் கம்ஸன் ஆஜ்ஞாபித்தான்: "சாய்வாஸனங்கள், மேல் கட்டிகள், தெருக்கள், இவை சித்ரம் எழுதப்பட்டவைகளாகவும்: மாலை சூட்டப்பட்டவைகளாகவும், நறுமணம் கொண்டவைகளாகவும் நல்ல தோற்றமுடையவைகளாகவும் (ஆஸனங்கள் மீது) தாழ அமைக்கப்பட்டு அலங்காரமான மேல் கட்டுகளுடையனவாகவும், செய்யப்படட்டும். மற்களத்தில் குறைவற்ற சாணக் குவியல்கள் குவிக்கப்படட்டும்.

12. கூரையோரங்கள் தக்கபடி வர்ணத்துணிகளால் அலங்கரிக்கப்படட்டும்;

13. ஆழமான பெரிய குடிநீர் நிறைந்த கனமான மன்சால்களும் பொன்னாலானவையும்; முறைப்படி வைக்கப்படட்டும்.

14. உபஹாரமான தின்பண்டங்கள் கிட்டத்தில் வைக்கப்படட்டும். கஷாய ரஸங்கள், குடம் குடமாக வைக்கப்படட்டும், போட்டி முடிவு கூறும் மத்யஸ்தர்கள் ஏற்பாடு செய்யப்படட்டும்; (ஏவலாளர்) வரிசை வரிசையாக தலைவர்களுடன் நியமிக்கப்படட்டும்.

15. மல்வீரர்களும், மத்யஸ்தர்களும், கட்டளையிடப்படட்டும்; கூட்ட நடுவில் சாய்வாஸனங்கள், சோபையுடன் அமைக்கப்படட்டும்?"

16. அந்த அரசன் விழாக் கூட்டத்திற்கான சட்ட திட்டங்களை, இப்படி கட்டளையிட்டு, காட்சி அரங்கிலிருந்து வெளிக் கிளம்பி தன் மாளிகையை அடைந்தான்.

17. அங்கு, அளவற்ற பலமுடைய சாணூரன், மூஷ்டிகன் எனும் இருமல்லர்களையும் அழைத்து வரச் செய்தான்.

18. மஹாவீரர்களும், பலமுள்ளவரும் தோள்வலி கொண்டவருமான அவ்விரு மல்லர்களும், கம்ஸனின் ஆஜ்ஞைப்படி (மாளிகையை) ஸந்தோஷத்துடன் நுழைந்தனர்.

19,20. அரசன் கம்ஸன், அருகில் வந்த உலகப்புகழ் பெற்ற அந்த மல்லர்களை நோக்கி, விரிவாக, பொருத்தமான வார்த்தைகளைச் சொன்னான்: "நீங்கள் க்யாதி பெற்றவர்; வீரக்கொடி நாட்டியவர்; எனது மல்லர் முறைப்படி கௌரவிக்கப்பட்டவர்.

21. விசேஷமாக பஹுமானம் செய்யப்பட்டவர். ஆகையால் நான் செய்த ஸத்காரியங்களும். நற்செயல்களும், உங்கள் மனதில் கொண்டீர்களானால், உங்களால் சொந்த பராக்ரமத்தைக் கொண்டு பெரிய கார்யம் எனக்குச் செய்யப் படவேண்டும்

22,23. பலராமன் க்ருஷ்ணன்என்றஇரு ஆயர்பிள்ளைகள்என் ஆய்ப்பாடியில் நன்கு வளர்ந்தவர். குழந்தைகளாயினும் ஸ்ரமத்தை ஜயித்தவர் (அரியன) எளிதில் செய்ய வல்லவர். வனத்தில்திரிபவர் மற்களத்தை யடைந்து நன்கு யுத்தம் செய்யும் இவர்கள், கீழே விழுந்தவுடன் சீக்ரம் கொல்லத் தக்கவர். இதில் ஸந்தேஹமில்லை

24. இவ்விருவரும் சிறுவர் மின்னல் போல் மெலிந்தவர், பயிற்சியற்றவர் என்று இவர் விஷயத்தில் ஒரு விதத்திலும் அலக்ஷ்யம் செய்யப்பட வேண்டாம்.

25, மற்களத்தில் போரில் தோற்கடிக்கப்பட்ட அந்த ஆயர்களால், எனக்கு எப்போதும், எதிர்காலத்திலும் மேன்மையுண்டாகும்"

26. அரசனின் ஸ்நேகத்தோடு கூடிய வார்த்தைகளால், மகிழ்ந்த மனதுடன், போரில் மதங் கொண்ட சாணூர மூஷ்டகரெனும் இரு மல்லர்களும் சொன்னார்கள்;

27, ''உனக்குக் கஷ்டங் கொடுக்கும் அவ்விரு ஆயர்பாடிகள் எங்கள் எதிரில் வந்ததும் கொல்லப்பட்டு ப்ரேதமானவர் என்றே நினைக்க வேண்டும்.

28. வனசாரிகளான அவ்விருவர், எங்கள் நேரில்ப்ரதியுத்தம் பண்ணினால், கோபங் கொண்ட எங்களால் அவர் அரிஷ்ட க்ரஹத்தால் பீடிக்கப்பட்டவராவார்.''

29. இவ்விதம் வாக விஷத்தைக் கக்கிவிட்டு அரசனால் அனுமதிக்கப்பட்ட அவ்விருமல் வீரரும் தங்கள் வீட்டையடைந்தனர்,

30. பிறகு கம்ஸன், ''யானையைக் கொண்டு ஜீவிக்கும் யானை பாகனைப் பார்த்துச் சொன்னான்: ''இவ்வாலய பீடம்'' எனும் யானை சபை வாசலில் நிற்கட்டும். பலமுடையது, மதத்தால் அசையும் கண்களையுடையது; நிற்காமல்அசைவது மனிதரிடத்தில் கோபமுடையது; மதத் தாரையால் மிக வரம்பு மீறியது; பயங்கரமானது; மற்றொரு யானையைப் பார்த்து கோபங்கொள்வது; அத்தகைய யானை வனவாஸிகளான (ராமக்ருஷ்ணர்) அவர்களைக் குறித்து உன்னால் தூண்டப்படத்தக்கது.

31,32,33. வீரராகிய அந்த வஸுதேவ புத்ரர் ஆயுள் நீங்கியவராக எப்படியாவரோ, அப்படி (யானை) தூண்டப்பட வேண்டும் உன்னாலேயும், கஜேந்திரனாலேயும் வரம்பு மீறிய அந்த ஆயரிருவரும் மற்களத்தில் விழுந்தவர்களாக ஆக வேண்டும்.

34. நான் பார்க்க வேண்டும். பிறகு கீழே விழுந்தவர்களைப் பார்த்து மனைவிகளுடனும், பந்துக்களுடனும் கூடிய வஸுதேவர். வேரறுக்கப்பட்டு ஆதரவில்லாமல் அழிவார்.

35. க்ருஷ்ணனையே கதியாகவுடைய இந்த மூர்க்கர்களான எல்லா யாதவர்களும், கீழே தள்ளப்பட்ட க்ருஷ்ணனைக் கண்டு அழிக்கப்பட்ட ஆசையுள்ளவராய் நாசமடைவர்கள்

36. இவ்விருவரையும் மல்லர்களைக் கொண்டோ, கஜேந்திரனைக் கொண்டோ கொன்று, இந்த நகரையாதவப் பூண்டில்லாமல் செய்து நான் ஸுகமாக ஸஞ்சரிப்பேன். யாதவகுலதிலகனான என் தந்தை அடியோடு கைவிடப்பட்டான். க்ருஷ்ணனைச் சேர்ந்த மற்ற யாதவர்களும், என்னால் விடப்பட்டவர்கள்.

37,38 நான், சொல் உக்ரஸேனனால்,மகப்பேறுவிரும்பிஉண்டானவன் இல்லையல்லவா? நாரதர அப்படி எனக்குச் சொன்னார்

39. யானைப் பாகன் சொன்னான் ''ராஜா! முன்பு தேவரி
நாரதரால் எப்படி சொல்லப்பட்டது?சொல்லப்பட்டஇது ஆச்ச
யம். சத்ருக்களை வெல்பவனே!

40. உம்மிடமிருந்தே கேட்கப்படட்டும். ராஜா! பிதாவா
உக்ரஸேனனைத் தவிர நீர் வேறொருவனால் எப்படி பிறந்தீர்? உம
தாயால் இத்தகைய இந்தக் கார்யம் செய்யப்பட்டது?

41. ஸாதாரண வேறு பெண் கூட இத்தகைய வெறுக்க
தக்க கார்யம் செய்ய மாட்டாள். இதை விஸ்தாரமாகக் கேட்
விரும்புகிறேன். எனக்கு உத்ஸகமாகவே யிருக்கிறது.

42. ''உனக்கு கேட்க விருப்பமிருக்குமாகில் ப்ரபு அந்த
முனி நாரதர் எப்படி சொன்னாரோ அப்படியே நன்கு விரிவாக
சொல்கிறேன்.

43,44,45.இந்தர லோகத்திலிருந்து இந்த்ரன் நண்பர் நாதமுன
சந்க்ரன் போன்ற வெண்ணிற ஆடையுடையவர் மான் தோலை
உத்தரீயமாகவுடையவர்; ஸ்வர்ணத்தால் பூணூல் தரித்தவ
தண்டம் ஏந்தியவர்; கமண்டலம் கையில் வைத்தவர்; இரண்
டாவது ப்ரஹ்மா போன்றவர்; நாலு வேதமும் கானம் செய்பவ
ப்ரஹ்மவித்; ஸங்கீத வித்தையில் நிபுணர்; அந்த நாரதர் தேவ
முனிவர் ப்ரஹ்மலோகத்தில் ஸஞ்சரிப்பவர்; அநாதியானவ
இத்தகைய முனிவர் வந்தார்.

46. அப்படி வந்த அவரைப் பார்த்து முறைப்படி பூஜித்து
அர்க்ய பாத்ய ஆஸனங்களைக் கொடுத்து அழைத்து அமரும்படி
செய்தேன்.

47. பிறகு ஸுகமாக அமர்ந்த முனிவர் என்னை க்ஷேமம்
விசாரித்தார்; சாந்தமான உள்ளமுடைய அத்தேவரிஷி ப்ரீதி
குணமுடையவராய் கூறினர்.

48. நாரதர் சொன்னர்! ''வீர சாஸ்திர முறைப்படி உன்னால்
நான் பூஜிக்கப்பட்டேன் எனது இந்த ஒரு வார்த்தை கேட்கப்
படட்டும், மனதில் வைத்துக் கொள்ளவும் படட்டும்.

49. தேவர்களிருக்கும் ஸ்வர்ணமயமான மேரு பர்வதத்தை
நான் அடைந்தேன்.

50. அப்படி அடைந்த நான் ஒரு ஸமயம் மேரு சிகரத்தில் தேவர் கூட்டத்தில், அங்கு மந்த்ராலோசனை செய்கிற தேவர்கள் நடுவில் உன்னைச் சார்ந்தவருடன் கூடிய உனது பயங்கர வதோபாயம் என்னால் கேட்கப்பட்டது;

51. லோகம் வணங்கும் விஷ்ணு, தேவகியின் எட்டாவது சிசு.

52. அந்த சிசு உனக்கு யமன் ஆவான். அவன் (விஷ்ணு) தேவர்களுக்கு எல்லாமும் ஆவான். தேவலோகத்துக்கும் புகலிடம் அவனே. தேவர்களும் (அறிய முடியாத) பரமாஹஸ்யம் அவன்.

53. உனக்கு யமன் ஆவான். கர்ப்பங்கள் (சிசுக்கள்) அழிவு பற்றி முயற்சி செய்யப்படட்டும். சத்ருவின்விஷயத்தில்அலக்ஷியம் செய்யக்கூடாது. துர்பாலனை (சிசு) பந்துவிடத்திலும் கூட அப்படியே அலக்ஷியம் செய்யக்கூடாது.

54. அந்த உக்ரஸேனன் உன் பிதா இல்லை. மஹாபலம் வாய்ந்த, பராக்ரமமுடைய (ஆகாயத்தில்) இருக்கும் ஸௌபதேச அரசன் த்ருமிலன் என்பான் உண்மையான பிதா''

55. நான் அவரது அந்த வார்த்தையைக் கேட்டு சிறிது கோபங் கொண்டு மறுபடியும் கேட்டேன்:

56. 'த்ருமிலன்' என்பான் அஸுரன். அவனுக்கு என் தாயொடு எப்படி சேர்க்கை? அந்தணரே! கூறும் தபோதனரே இதை விஸ்தாரமாகக் கேட்பதற்கு நான் விரும்புகிறேன்!

57. ராஜன்! கேள் உண்மையான த்ருமிலனுக்கு உன் தாயுடன் ஸம்வாதத்தையும் ஸமாகமத்தையும் சொல்கிறேன்.

58. ரஜஸ்வலையான உன் தாய் ஸ்திரீகளுடன் உத்சாஹத்தால் 'ஸுயாமுனம்' எனும் மலையைப் பார்க்கச் சென்றாள்,

59. அவள் அம்மலையில் அழகிய மரங்களுடைய தாழ்வறைகளிலும், மலைச்சிகரங்களிலும், குளங்களிலும் ஆறுகளிலும் ஸஞ்சரித்தாள்.

60. கின்னரர்களால் பாடப்பட்டு காதுகளுக்கு ஸுகம் கொடுக்கும், காமவேட்கை உண்டு பண்ணும் எதிரொலியால் நாற்புறமும் கேட்கப்பட்ட இனிய வார்த்தைகளைக் கேட்டாள்

61. மயில்களின் சப்தத்தையும் பறவைகளின் குரல்களையும், அடிக்கடி கேட்டு ஸ்த்ரீதர்மத்தை விரும்பினாள்.

62. இச்சமயம் புஷ்பவாஸனை நிரம்பிய வன வருக்ஷங்களின் ஊடுவந்த காம வேட்கை தூண்டும் மனோஹரமான காற்று வீசியது. வண்டுகளை அணியாகவுடைய கதம்பமரங்கள் காற்றால் மோதப்பட்டும் இடைவிடாத நீர்த்துளிகளால் ஸ்தம்பிக்கப்பட்டு மிகுந்த வாஸனையை வெளிவிட்டன.

63,64. புஷ்ப மரங்கள்மதமூட்டுபவைகளாய்பூமாரிபொழிந்தன. கடப்ப மரங்கள் (சிவப்பு) முட்பூக்களைத் தரித்து தீபங்கள் போல் விளங்கின.

65. புத்திளம் புற்களால் மறைக்கப்பட்டு, மின்மினிப்பூச்சிகளால் நன்கு அலங்கரிக்கப்பட்ட பூமி யௌவனப் பெண் போல் தன் பர்வம் தோற்றும் உடலைத் தரித்தாள்.

66. பிறகு ஸௌப விமானத்தலைவன் மென்மையுடைய த்ருமிலனெனும் அஸுரன், தெய்வ எதிர்காலதிட்டப்படி, ப்ரஹ்மாவால் அங்கு சேர்க்கப்படுகிறான்.

67, 68, 69. பிறகு மனதைக் காட்டிலும் வேகமாகச் செல்லக்கூடியதும். சத்ருக்கள் ரதத்தையழிக்கக் கூடியதும். இளஞ்சூர்யன் காந்தியுடையதும், விரும்பியபடி செல்லுமதுமான தன் தேரிலேறி, ஆகாய மார்க்கம், இஷ்டப்படி போகுமவன் ஸுயாமுனை மலையைப் பார்க்கும் ஆசை கொண்டு, அச்சிறந்த பர்வதத்தை யடைந்து மலையருகிலுள்ள வனத்தில் தேரை நிறுத்தி உத்தம ரதத்திலிருந்து இறங்கி, தேர்பாகனுடன் எவரும் எதிர்பாராமல் திரிந்தான்.

70. பிறகு பல பெரிய வனங்களையும் சிறியனவற்றையும் பார்த்தனன், அந்த சிகரத்திலிருந்து வனம் இந்த்ரனது 'நந்தன்' வனம் போல் எல்லா ருதுக்களின் குளமும் கூடிப்பொருந்தியிருந்தது.

71, 72, 73. நானாவித தாதுப் பொருள்கள் செறிந்துள்ள உயர்ந்த பல மலை முடிகள் கொண்டதும் நானாவித ஆஸ்சர்யமான ரத்னங்களால் சிகப்பு. கருப்பு, வெண்மை நிறமுடையவைகளும் நானாபுஷ்ப மணம் நிறைந்தனவும் பலவித ப்ராணிக் கூட்டங்களின் கோஷம் நிறைந்ததும் பலவித புஷ்ப,

பழ மரங்கள் கொண்டதும், ரிஷிகளாலும் ஸித்தர்களாலும், பழக்கப்பட்டதுமான இத்தகைய மலைச் சிகரங்களிலும், குகைகளிலும் நதிகளிலும் ஸஞ்சரித்தான்.

74. வித்யாதரர், கிம்புருஷராகிய தேவகானங்கள், கரடிகள் குரங்குகள், ராக்ஷஸர்கள், ஸிம்ஹங்கள், புலிகள் பன்றிகள்எருமைகள் சர்பப்பறவைகள், முயல்கள், புள்ளிமான் கலைமான்; சாமரமான் வகைகள், யானைகள், யக்ஷராக்ஷர்கள், ஆக பலவித ப்ராணிகளைப் பார்த்துச் சிறந்த மலையில் சஞ்சரிக்கிறவனாய்.

75, 76. தேவப் பெண் போன்று தோழிகளுடன் விளையாடி புஷ்பம் கொய்து கொண்டிருக்கும் ராஜபத்னியைத்தூரத்திலிருந்து பார்த்தான்.

77 பிறகு தோழிகளால் சூழப்பட்டு ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும் அழகிய பின் பாகங்களுடைய அவளைப் பார்த்துஸௌப அரசன் தூரத்திலிருந்தே ஆச்சர்யப்பட்டு தன் தேர்ப்பாகனை நோக்கிச் சொன்னான்.

78. வன மத்தியில் திரியும் மான்விழியாள் யாருடையவள் ரூப ஔதார்ய குணமுடையவள் மன்மதனுக்கு ரதிபோன்றவள்?

79 80 இந்திரன் மனைவி இந்த்ராணியோ! அல்லது தியோத்தமையோ? நாராயண ரிஷியின் துடையில் கடையப்பட்டு அவதரித்து, புரூரவஸ அரசனுக்கு ப்ரிய மனைவி, பெண் ரத்னம் ஊர்வசியோ? இவர்கள் போன்றவள் இவள் அம்ருத்துக்காக தேவராஜ கூட்டங்களுடன், மந்த்ர மலையை மத்தாகச் செய்து பாற்கடல் கடையப் படும்போது. அம்ரத்திலிருந்து உலகம் வணங்கும் திருமகள் அவதரித்தாள்

81, 82, 83. நாராயணன் திருமார்பையடைந்த அத்திருவுருவோ இந்த அழகிய பெண். அவ்வனத்தில், பெண்கள் கூட்டத்தின் மத்தியில் இருந்து தன் சோபையை பேசும், அப்பெண், கார் மேகங்கள் இடையில் ஒளி வீசும் மின்னல் போன்றவள். அதி சுந்தரங்கி மிளிர் முழுமதி முகத்தினள், குற்றமற்ற உடலுடைய இவள், அழகைப் பார்த்து, இந்த்ரியங்கள் கலங்கி மதிமயக்கமடைகிறேன்.

84, 85. காமன் வசப்பட்டேன். மனது மிகக் கலங்குகிறது. மன்மதன் பாணங்களால் என் அங்கங்களை அறுக்கிறான். என்

மூனதைப் பிளந்து ஹ்ருதயத்தில் ஐந்து புஷ்பபாணங்களையும், இரக்கமில்லாமல் எய்து கொல்கிறான். நெய் பெய்த அக்னி போல் என் ஹ்ருதய அக்னி (கொழுந்து விட்டு வளர்கிறது, காமாக்னியை சமனம் செய்யத் தக்கதாகும்.

86. இவ்விதம் வெகுவாக ஆலோசித்து உபாயம் ஒன்றும் அறியாமல், அஸுரன் தேர்பாகனைக் குறித்துச் சொன்னான்.

87. ''பாபமற்றவனே! நீ இங்கு முஹூர்த்த காலம்(3¾நாழி) இரு. நான் இப்பெண் யாருடையவள் எனப்பார்க்கச் செல்கிறேன்

88 நான் வரும் வரை எதிர்பார்த்திரு'' அவன் வார்த்தையைக் கேட்டு ''அப்படியே'' என்று [தேர்ப்பாகன்] சொன்னான்.

89. அஸுரத் தலைவன் இவ்விதம் கூறி, போக மனம் கொண்டான். நீரைத் தொட்டு சுத்தம் செய்து கொண்டு பலவானான அவன் சிந்தையை த்யானத்தில் செலுத்தினான்.

90. ஒரு முஹூர்த்தம் தியான மாத்ரத்தால் ஞான பலங் கொண்டு அறியப்பட்டது.

91, பிறகு உக்ரஸேனனின் பத்னியென்றறிந்து மகிழ்ச்சி கொண்டான், தனரூபத்தை மாற்றி உக்ரஸேனன் ரூபம் கொண்டு சிரித்துக் கொண்டு நீண்ட கைகளையுடைய அவ்வஸுரத் தலைவன் நெருங்கினான்.

92. அளவற்ற வீரமுடைய அவன் புன்சிரிப்புடன், மெதுவாகக் கைப்பிடித்தான் (உக்ரசேனன் ரூபங் கொண்டு) உனது தாயைக் கலந்தான்

93 பதியினிடம் மிக்க ப்ரியங் கொண்ட அவள் அவனை பூர்ண மனதுடன் நெருங்கினாள் பிறகு மென்மையின் மாறுபாடு கண்டு ஸந்தேஹம் கொண்டாள்.

94. பயந்த அவள் எழுந்து அவனை நோக்கிச் சொன்னாள் ''நீ என் கணவனில்லை நிச்சயம்! விகார ஒழுக்கமுடைய நீ யாரைச் சேர்ந்தவன்?

95. உன்னால் நான் தோஷமுள்ளாக்கப்பட்டேன்? கீழ் மகனே! (என் பதியின் ரூபமெடுத்தா உனது நனத் தொழிலால்

எனது ஏகபத்நி வ்ரதம் பாழாக்கப்பட்டது, கோபங் கொண்ட பந்துக்கள் குலத்தைக் கெடுத்த என்னை என்ன சொல்வார்கள் பதியைச் சேர்ந்தவரால் நீராக்கப்பட்டு அருவருப்புடனேயே வாழ்வேன்.

97. சீ! சீ! நீ கெட்டாய் இத்தகைய நீ க்ஷமிக்கமுடியாத தீய ஒழுக்கமுடையவன் கீழ் குலமகன் இந்த்ரியங்களுக்கு அடிமை நம்பத்தகாதவன், ஒழுங்கீனன் பிறர் மனைவியை விரும்புபவனும் (கூட) கோபங் கொண்ட அஸுரன்,

98. தன்னை திட்டும் அவளை நோக்கிச் சொன்னான்: "என் பெயர் 'த்ருமிலன்' ஸௌபவிமான பதி, பராக்ரமமுடையவன்.

99. பண்டிதையாக நினைக்கிறவளே! முட்டாளே! கோபத்தால் ஏன் என்னைத் திட்டுகிறாய். யமன் வசப்பட்ட நீசனான மனிதன் உன் கணவன்.

100. ஸ்த்ரீகளுக்கே உரிய குணத்தால் கொண்டவளே! பெண்கள் விபசாரத்தால் தோஷமடைவதில்லை, இவர்கள் புத்தி நிலையற்றதல்லவா? மனிதப் பெண்களுக்கு விசேஷமாக அப்படி,

101. அநேக பெண்கள் விபசார தோஷங்களால், நிலையான பராக்ரமம் வாய்ந்த தேவர்களையொத்த பிள்ளைகளைப் பெற்றார்களென்று கேட்கப்படுகிறதல்லவா!

102. நீ பெண் உலகிலேயே மிக உயர்ந்த பதிதர்மம் உடையவள்! கற்புக்கரசி! சுத்தமானவள்! தலையசைத்துக் கொண்டு இஷ்டப்படி பேசுகிறாய்.

103. உத்தம ஸ்த்ரீயே! "கஸ்யத்வம்" நீயாரைச் சேர்ந்தவன் என்று நீ கேட்ட காரணத்தால் 'கம்ஸன்' என்ற பெயருடைய சத்ருக்களை அழிக்கவல்ல பிள்ளை பிறப்பான்?"

104. அந்த தேவி மறுபடியும் கோபங்கொண்டு அவனுடைய அந்த வரத்தை நிந்தித்து வெட்கமின்றி அதட்டிப் பேசும் அஸுரனைப் பார்த்து துக்கத்துடன் சொன்னாள்

105. அயோக்ய சிகாமணியே சீ! சீ! உனது சரிதத்தைச் சுடு, நீ எல்லாப் பெண்களையும் நிந்திக்கிறாய்.

106. ஒழுங்கீனைகளான பெண்கள் உண்டு. பதிவிரதைகளு மிருக்கிறார்கள். கீழ்க்குலத்தவனே! அருந்ததி முதலிய ஸ்த்ரீகள் ஒப் பற்ற பதிவ்ரதைகள் என்று சொல்லக் கேட்கிறோம். அவர்களால் எல்லா ஜனங்களும் ரக்ஷிக்கப்பட்டார்கள்.

107. எல்லா வுலகங்களுங்கூட, உன்னால் கொடுக்க பட்டு எனது ஒழுக்கமழியப் பிறந்த இந்தப் பிள்ளை என்னால் மதிக்கப் பட்டவனில்லை. மேலும் சொல்லப்படுவதைக்கேள்,

108. நீசனே! என் பதியின் வம்சத்தால் உன்னாலேகொடுக்கப் பட்ட புருஷப்பிள்ளை எவன் பிறப்பானே அவன் உனக்கு யமனாக வும் ஆவான்,

109. இவ்விதம் சொல்லப்பட்ட த்ருமிலனும் வேகமாகச் செல்லும் தேவசக்தி வாய்ந்த சிறந்த அந்த ரதத்தின் மூலம் ஆகா சத்தையேயடைந்தான்.

110. துன்புற்ற உன் மாதா அன்றே நகரையடைந்தாள்'' முனிபுங்கவரான நாரத பகவான் தவமஹிமையால் அக்னியே போல் ஒளிவீசி ப்ரகாசித்து ஏழூஸ்வரங்களும் எழுப்பப்பட்ட அவர் வீணையை வாசித்துப் பாடிக்கொண்டே [எல்லோருக்கும்] தெரியும்படி ப்ரஹ்மாவின் பக்கல் சென்றார்.

112. யானைப்பாகனே! இந்த என் வார்த்தையைக் கேள். நன்கு தெரிந்து கொள். மூன்றுலகறிந்த புத்திமான் நாரதரால் உண்மையே சொல்லப்பட்டது.

113, 114, 115. போதும் பலம், வீர்யம், நீதி, வணக்கம் சட்டத்தின் எல்லை. தேஜஸ், பராக்ரமம், ஸத்யம்தானம், இவை களில் எனக்கு ஒப்பு எவருமில்லை யானைப்பாகனே! என்னை நானே யறிந்து நாரதர் வசனம் எல்லாவற்றையும் நம்புகிறேன்.

116, 117, 118 அந்த உக்ரஸேனனுடைய பார்யைக்கே பிறந்தவன். அவனுக்கல்ல. மாதா பிதாக்களால் அடியோடு விடப் பட்டவன். தன் வீர்யத்தாலேயே நிலைப்பெற்றவன். மாதாபிதாக் கள் இருவராலும் விசேஷமாக த்வேஷிக்கப்பட்டவன் பந்துக் களாலும் (அப்படியே) த்வேஷிக்கப்பட்டவன். ஆகையால் ஆயர் பாபிகளிருவரையும் (பலராம க்ருஷ்ணர்களை) யானையால் கொல்வித்து, க்ருஷ்ணனைச் சேர்ந்த இந்த யாதவர்களையும் கொல்வேன்; ஆதலால் பாகனே! ஈட்டி, தோரட்டி; தடி இவை

களுடன் யானை மீதேறி போ அரங்கு வாசலில் நிலையாய் இரு தாமதம் வேண்டாம்

28-ம் அத்தியாயம் முற்றிற்று

## 29-ம் அத்தியாயம்

## ராம க்ருஷ்ணர்கள் குவலாய பீட யானையைக் கொன்று மற்களத்தைப் ப்ரவேசித்தல்

**வைசம்பாயனர் சொன்னார்:** 1, 2, 3. அன்று கழிந்து மறுதினம் வந்ததும், மற்போர் காணவிரும்பிய நகர மக்களால் பெரிய அரங்கு நிறைந்தது (அந்த அரங்கில்) சாய்வாஸனங்கள் சித்ரங்கள் கூடிய எட்டு காலுடையன சில, மூன்று காலுடையன சில; கிழக்கு நோக்கிய வீடுகள். திண்ணைகளும், தாழ்பாளுடன் கூடிய கதவுகளும் கொண்டன. அர்த்த சந்தர ஜன்னல்கள் அனமந்தவை மேலான அழகிய படுக்கைகள் வைக்கப்பட்டிருந்தன.

4. நன்கு தொங்கும் மாலைகள், சிறியனவும் பெரியனவும் விளங்கின; அலங்காரங்களால் சரத்கால மேகங்கள் போல் ப்ரகாசித்தன. போட்டிகளுக்கான களங்கள் நன்கு அமைக்கப்படும் அலங்கரிக்கப்பட்டும். சுற்றி வியங்கும் சாய்வாஸனங்கள் கொண்ட இருப்பு இடங்களுடன் சேர்ந்து, காட்சியரங்கு முழுதும், மேகக் கூட்டங்களுடன் கூடிய ஸமுத்ரம் போல் ப்ரகாசித்தன

5. வந்த ஜனங்களின் தகுதி, தொழில், இவைகளுக்கு ஏற்ப ஆஸன வரிசைகளிலும் கூடங்களிலும், தனித்தனி கொடிகள் அமைக்கப்பட்டிருந்தன.

6. அந்தப்புரஸ்த்ரீகளுக்கான காட்சியிடங்கள் தங்கச்சித்ரங் களுடனும்; ரத்னங்களின் ப்ரகாசத்தால் சோபிக்கின்றனவாயும் பலவிதமாக விளங்கின

7. அவைகள் மேலே ரத்னங்களால் நிறைந்து கீழே, நகரத்து மூடும், திறக்கும், திரைச்சீலைகள் அமைக்கப்பட்டு ஆகாயத்தில் இறக்கையுடன் கூடிய மலைகள் போல் விளங்கின.

8. அங்கு சாமரங்கள் ஆபரணங்கள், இவைகளின் (அசைவு) சப்தங்களாலும் விசித்ரமான ரத்னங்களின் விசித்ரமான (பற்பல வர்ண ஒளிகளாலும் விளங்கின.

9. பணிப்பெண்களுக்கான தனிஇருப்பிடங்கள், மங்களமான மேல் விரி ஆடைகளால் விளங்கின. மேலான பணிப் பெண்களால் அந்த இடங்கள், விமானம் போன்ற காந்தி வீசின.

10, 11, 12, அங்கு சிறந்த ஆஸனங்கள், தங்க மயக்கூடடில் கள் புஷ்ப சிங்காரம் பொருந்தித் கீழ்விரிப்புகள் இருந்தன. தங்கக் குடிக்கும் பாத்ரங்களும், குடிக்கும் இடங்களும் விளங்கின பானத்துக்கான பழங்கள் நிறைந்த கூடைகளும், ஊறுகாய்கள் நிறைந்தவையும் இருந்தன. கட்டைகள் கொண்டு கட்டப்பட்ட வேறு பல காட்சியிடங்களும் விளங்கின. மற்றும் பல படுக்கு மிடங்களும் நூற்றுக்கணக்கிலும் ஆயிரக்கணக்கிலும் விளங்கின

13. ஸ்த்ரீகள் காட்சியிடங்களில் சிறு த்வாரங்கள் மூலம் காட்சிகாணக்கூடிய மேல் மாடிகள் கொண்ட உத்தம வீடுகள் ஆகாயத்தில் ராஜஹம்ஸங்கள் போல் ப்ரகாசிக்கின்றன.

14. கிழக்கு நோக்கியது; அழகிய நெஞ்சங்கள் உடையது. மேருவின் சிகரம் போன்ற காந்தியுடையது. ஸ்வர்ணத் தகடுகள் பொதிந்தது போன்ற தூண்கள் உடையது சித்ரவேலைப்பாட்டால் ப்ரகாசிப்பது; பூமாலைகளால் சோபிக்கிறது.

15. வாஸம் செய்ய நல்ல லக்ஷணங்களையுடையது; கம்ஸனின் இத்தகைய காட்சி'இடம் அழகால் மிக விளங்கிற்று.

16 நானுவித ஜனங்கள் நிறைந்தது; கூட்டங்களின் சப்தத்தின் எதிரொலி கொண்டது; அலைகடல் போன்றது இத்தகைய காட்சி அரங்கு அரசன் வரவால் நிச்சப்தமாயிற்று.

17,18,19. அரசன் ''குவலயா பீடயானை வாசலில் நிற்கட்டும்'' என்று உறுதியான கட்டளையிட்டு காட்சி அரங்கை நுழைந்தான். அவன் வெண்ணிற ஆடையுடுத்து வெண் க்ரீடம் தரித்து, வெண் சாமரம் விசிறி வீச வெண் மேகங்களிடையே சந்த்ரன் போல நன்கு ப்ரகாசித்தான் ஸிம்ஹாஸனத்தில் ஸுகமாக வீற்றிருக்கும் புத்திமானை அவனது ஒப்பற்ற ரூபத்தைப் பார்த்து ''ஜய ஜய!' என நகரமக்கள் ஆசி கூறினர்

20, 21. பிறகு சுற்றிக் கட்டிய வஸ்த்ரமுடையவரால் மல்லர்கள் அரங்கையடைந்தனர்; மிக்க பலமுடைய அவர்கள் மூன்று பிரிவாக நுழைந்தனர். பிறகு வாத்ய சப்தத்தாலும் மல்லர்களின் கர்ஜனையாலும் தோள்தட்டலாலும் ஸந்தோஷ

மடைந்தவ ஸுதேவ புத்ரர் இருவரும் அரங்கின் வாயிலே யடைந்தனர்.

22, 23. நல்லாடையணிந்து தேவ சந்தன பூச்சுக்கொண்டு தலையில் மேல் நோக்கிய பூங்கொத்து வைத்து மாலையணிந்து கையில் ஆயுதமேந்தி தாழ்ப்பாள் போன்ற [நீண்ட] கைகளை ஒருவருக்கொருவர் தட்டிக் கொண்டுள்ள ப்ரிய தோற்றமுடைய, அழகிய முகத்துடன் வேகமாக வரும் இரட்டையர் இருவரும் மிக தூண்டப்பட்ட அந்த மதங்கொண்ட யானையால் தடுக்கப் பட்டனர்.

24, 25. துஷ்டாத்மாவான அந்த மதயானை தூண்டப்பட்டு கையை வளைத்து ராமக்ருஷ்ணர்களை கொல்ல முயன்றது பிறகு அந்த க்ருஷ்ணன் யானையால் அசைக்க முயன்று. விலவறச்சிரித்து துராத்மா கம்ஸனின் அந்த கொள்கையையே பழித்தான்.

26, 27. "இவன் என்னை இந்த யானையைக் கொண்டு தாக்க விரும்புகிறான் இந்த கம்ஸன் யமலோகம் போகத் துடிக்கிறு னல்லவா? பிறகு, யானை அணுகி, மேகம் போல் கர்ஜிக்கும் போது ப்ரபு கோவிந்தன், திடீரெனத் துள்ளியெழுந்து, கை கொட்டினான்.

28, 29. யானையின் முன் நின்று தோள் தட்டி யானையின் நீர்த்துளியுடன் கூடிய கையை, மார்பில் இறுக அணைத்துக் கொண்டான். க்ருஷ்ணன் கொம்புகளின் இடையிலிருந்து, மீண்டும் கால்கள் நடுவில் வந்து, மேகத்தை (அலைக்கும்) காற்று போல் துன்புறுத்தினான்.

30. அந்த க்ருஷ்ணன் யானையின் கையின் முனையிலிருந்தும் தந்தங்கள் முனையிலிருந்தும், வெளிக்கிளம்பி, கால்கள் நடுவிலிருந் தும் விட்டு வந்து யானையைப் பின்பக்கத்திலிருந்து இழுத்தான்.

31. பெரிய சரீரத்தையுடைய அந்த யானை மயக்கமடைந்து. க்ருஷ்ணனைக் கொல்ல முடியாமல் தன்னுடலையே வருத்துவதாய் சப்தம் போட்டது.

32. பூமியில் முழந்தாள்களால் விழுந்து இரண்டு தந்தங் களாலும் பூமியில் குத்திற்று. கோபத்தால் மதஜலத்தை (கோடை மழை போல்) கோடை முடிவில் மேகம் போல் வடித்தது.

33. க்ருஷ்ணனும், அந்த யானையுடன் குழந்தை விளையாட்டாக விளையாடி, கம்ஸனிடத்து த்வேஷமுடைய மனதால், அதைக் கொல்ல எண்ணம் கொண்டான்.

34. பிறகு அந்த க்ருஷ்ணன் யானையின் மத்தகத்தின் முன்னால் பாதம் வைத்து, கைகளால் கொம்பைப் பிடுங்கி அந்தக் கொம்பாலேயே நன்றாக அடித்தான்

35. வஜ்ராயுதம் போன்ற அந்த தனது தந்தாலேயே கொல்லப்பட்ட அந்த யானை மல மூத்ரங்களை விட்டது மிகத் துன்புற்று சப்தமிட்டது.

36. க்ருஷ்ணனால் நசுக்கப்பட்ட உடலுடையதும் மன முடைந்துமான யானையின் கன்னங்களிலிருந்து நிரம்ப ரத்தம் வேகமாக ஒழுகிற்று.

37. மலையில், தலை மறைந்த ஸர்ப்பத்தின் பின் பாகத்தை கருடன் இழுப்பது போல் பலராமன் யானையின் வாலை வேகமாக இழுத்தான்,

38. க்ருஷ்ணன் அந்த யானை தந்தத்தாலேயே அந்த யானையைக் கொன்று, துஷ்டனான யானைப்பாகனை ஒரே அடியால் கொன்றான்.

39, 40. அந்தச்சிறந்த யானை கொம்பற்று, பெரிய கூக்குர லிட்டு, வஜ்ராயுதத்தால் பிளக்கப்பட்ட மலைபோல் பாகனுடன் விழுந்தது, பிறகு யுத்த வீரர்களான அந்தப் புருஷஸ்ரேஷ்டர்கள் யானைப்பாகக் காவலர்களையும், கொன்றனர்.

41. அவர்களையும் கொன்று, அவ்விருவரும், ஸ்வர்க்கத்திலிருந்து தன் இஷ்டத்தால் இறங்கி வந்த அழகான அஸ்வினி குமாரர்கள் போல, அரங்கு மத்தியில் புகுந்தனர்.

42. யாதவர்களைச் சேர்ந்த, வ்ருஷ்ணிகள் அந்ததர்கள், போஜர்கள், எல்லோரும், வனமாலை தரித்த இருவரையும் பார்த்தனர், அவ்விருவரும் கர்ஜித்துக் கொண்டும், இரைந்து திட்டிக் கொண்டும் தோள்தட்டிக் கொண்டும், ஸிம்ஹநாதம் செய்தும். கைதட்டியும் ஜனங்களை ஸந்தோஷப் படுத்தினர்.

43, போஜ ராஜன் கம்ஸனும், அவ்விருவரையும் பார்த்து, அவர்களிடம் நகர மக்களின் ப்ரீதியையும் ஸந்தோஷத்தையும் பார்த்து "ஜனமேஜயரே" எண்ணம் பழுதாகி மிக வருந்தினான்.

44. தாமரைக்கண்ணன் கர்ஜிக்கும் சிறந்த யானையைக் கொன்று தமயனுடன் கடல் போன்ற அரங்கில் இறக்கினுன்.

**29ம் அத்தியாயம் முற்றிற்று**

## 30ம் அத்தியாயம்

## கம்ஸ வதம்

1. **வைசம்பாயனர் சொன்னுர்:** அண்ணன் பலராமனை முன்னிட்டு, தாமரைக் கண்ணன் வேகமாக அரங்கில் புகுந்தான். அவன் ஆடை, காற்று வேகத்தால் அசைந்தது.

2, 3. கஜ தந்தத்தை அலங்காரமாக ஏந்திய புஜம் அழகாயிருந்தது. யானையின் ரத்தத்தாலும் மதநீராலும், பூசப்பட்ட தோள்கள், விளையாட்டாக தோள்வளை பூண்டது போல் தோன்றின அப்படியே அவன் அங்கு திரியும் வீர ஸிம்ஹம் போல் தோன்றினுன்

4. அவன் வருகை அரங்கின் மீது நாற்புறமும் சூழ்ந்து கவியும், மேகம் போல் தோன்றிற்று அவன் தோள்தட்டு மொலி பூமியை நடுங்கச் செய்தது இங்ஙனம் வரும் தேவபுத்ரன் க்ருஷ்ணனை மிக விரிந்த முகமுடைய கம்ஸன் கோபத்துடன் கடுமையாகப்பார்த்தான்.

5. ஒரே சிகரமுடைய மலை மேல் அர்த்த சந்த்ரன் அமைந்தாப் போல் தோளில் சாத்திய கஜதந்தத்துடன், கூடிய கேசவன் நன்கு விளங்கினுன்.

6 கோவிந்தன் சுற்றி வரும்போது, அந்த அரங்காகிற கடல் முழுதும், ஜனக் கூட்டங்களின் (இவன்) தோள்தட்டி அறை கூவலுக்கு) எதிரொலியால் நிறைந்தது போலாயிற்று.

7. பிறகு, மிகக் கோபங்கொண்டு கோபத்தால் மிகச் சிவந்த கண்களுடைய கம்ஸன், மிக்க பலங்கொண்ட, கபடனுன ஆந்த்ர மல்ல சாணூரனை க்ருஷ்ணனுடன் போர் செய்யக் கட்டளையிட்டான்.

8, 9. மலைக்கூட்டம் போன்று மஹாபலவானுன முஷ்டிகனையும் பலதேவன் பொருட்டு, கோபத்துடன் கட்டளையிட்டான் முன்னரே சாணூர மல்லனும் "உன்னுல் முழுமூச்சுடன் க்ருஷ்ணனுடன் சண்டை செய்யத்தக்கது? என்று கம்ஸனுலும் உறுதியாகக் கட்டளையிடப்பட்டவனல்லவா?

10. அந்த சாணூரனும் கோபத்தால் செந்நிறக் கண் கொண்டவனாய், நீர் நிறைந்த மேகம்போல், போர் செய்ய முன் வந்தான்,

11. கோஷமிட்டுக் கோண்டிருக்கும் கூட்டம், [ராஜ ஆஜ்ஞையால்] நிச்சப்தமாக்கப் பட்டதும், அங்கு ஒன்று கூடி யிருந்த யாதவர்கள் இந்த வார்த்தை சொன்னார்கள்.

12 மல்லரங்கில் இந்த மற்போர் மத்யஸ்தரோடு கூடியதாக வேண்டும் போட்டியிடுபவர் பயந்தவர்களாகாது செய்கை பலத் தாலும், ஒத்தவர்களாயிருத்தல் வேண்டும் ஆயுதங்களை விலக்க வேண்டும் இப்படி முன்னால் விதிக்கப் பட்டுள்ளது.

13. எப்போதும் மல்லர் களைப்படைந்த மையம் பார்த்து, பணியாட்களால் தண்ணீர் கொண்டு களைப்பு நீக்க வேண்டும் கோமய ஆர்ணங் கொண்டு காயமடைந்த மல்லருக்கு [பூச்சான] உதவி செய்ய வேண்டும்.

14. மல் அரங்கு பூமியில் வந்தவன் எவனோ, எப்படி எந்த முறையிலிருக்கிறானோ நன்கு அறிந்து மத்யஸ்தர்கள் தக்க முறைப் படி மாற்றியமைக்க வேண்டும்.

15. பாலனுக்கு பாலன் வ்ருத்தனுக்கு வ்ருத்தன், மெலிந்தவ னுக்கு மெலிந்தவன், பலவானுக்குப் பலவானாக இப்படி கக்ஷி [ஜோடி] அமைத்தல் வேண்டும்

16. பலத்துக்கும் செய்திறனுக்கும் தக்கபடி விதியுள்ளது. அறிவாளியால் [ஒருவன்] கீழே விழுந்தபிறகு ஒன்றும் செய்யப் செய்யப்படலாகாது.

17. தற்போது க்ருஷ்ணனுக்கும் ஆந்தரமல்ல சாணூரனுக் கும் போர் ஏற்படவுள்ளது. க்ருஷ்ணன் பாலன்; ஆந்திரன் மிகப் பெரியவன் இதுபற்றி விசாரணை ஏன் இல்லை?''

18. பிறகு கலகலப்பு சப்தம் ஏற்பட்டது. கோவிந்தனும் துள்ளிக் குதித்தான். இந்த வார்த்தையையும் சொன்னான்.

19. ''நான் பாலன் ஆந்த்ரனோ மிகப்பெரியவன் உடலால் மலை போன்றவன் வீரனை இவனுடன் போரை நான் விரும்பு கிறேன்,

20. என்னுல் [விரும்பிச்] செய்யப்பட்ட இதுயுத்த விதி மீறுதல் ஒன்றும் ஆகாது, மல் வீரரின் கொள்கையை நான் மீற மாட்டேன்.

21. கோமயப் பூச்சு தர்மம் கஷாய பானம் கொடுத்தல் இவை மல்லர் விதிகளாய் ஏற்பட்டவை.

22. உடல்கட்டு நிலைத்திருத்தல் சூரத்தனம் தேகப்பயிற்சி நற்செயல் பலம் மங்களத்தில் வெற்றி மன வுறுதி இவை மற்போர் அறிந்தவர் கோட்பாடுகள்.

23. இந்த விரோதத்துடன் கூடியதாக ஆக்க [கம்ஸன்] ஏற் பாடு செய்துள்ளான் இந்த விஷயத்தில் கொல்வதே கருமம் இதால் உலகத்தையே ஸந்தோஷப்படுத்துவேன்;

24. இந்தச் சாணூரன் கருஷதேசத்தில், பிறந்தவன் சரீரத் தாலும் செயலாலும் மல்வீரன், இந்த விஷயத்தில் யோசிக்கப் படட்டும்

25. இவனுல் அநேக மல்லர் கீழே விழுந்த பிறகு கொல்லப் பட்டனர் மல் அரங்கு கீர்த்தியை விரும்பிய, இவனுல் மற்போர் முறையே தோஷமடைந்தது.

26. ஆயுதப்போர் வீரருக்கு எதிரியின் உயிர் நீசதலை, கார்ய ஸித்தி ஆனுல் மற்போரில், எதிர் மல்லன் கீழே வீழ்ச்சியே, கார்யஸித்தி.

27. ஆயுதப்போரில் வென்றவனுக்கு, நிலைபெற்ற கீர்த்தி உண்டாகிறது ஆயுதங்களால் கொல்லப்பட்டவனுக்கு ஸ்வர்க்க லோகம் கிடைக்கிறது.

28.29. போரில் வென்றவனுக்கும், கொல்லப்பட்டவனுக்கும். கார்யஸித்தியே. அந்த யுத்த கார்யம் போர் முடிவையுடையது, மஹான்களால் பெரிதும் கொண்டாடப் பட்டது. இந்த மற்போர் முறையோ, பலத்தாலும் செயலாலும், வெளித்தோன்றுவது. மல் அரங்கில் உயிரிழந்தவனுக்கு ஸ்வர்க்கம் எங்கே? வென்றவனும் ஸுகம் ஏது?

30. 34 ஸ்வதோஷத்தால் பண்டிதனுகத் தன்னை நினைத்த ராஜாவின், கீர்த்திக்காக, எவரோ சிலமல்லர் கொல்லப்பட்டனர்.

கொன்ற மல்லருக்கு அதே கொலைதான் [முடிவு ஆயுதப் போர் போல்)'' இப்படி பேசிக் கொண்டிருக்கும் போது, அவ்விரு வருக்கும் வனத்தில் யானைகளிடையே போல் பயங்கரமான,மிக்க கொடிய போர் துவங்கிற்று. விசித்ர செயலுக்கு ப்ரதி செயல்; முஷ்டி முள்ளால் குத்தல் கீழ் வீழ்த்தல், உதறி வீசுதல், எறிதல் சுற்றுதல், முஷ்டியால் தள்ளுதல், பன்றி மூச்சுபோல் உறுமுதல், அப்படியே இடிபோன்ற மணிக்கட்டுத்தல் நகத்தைப்பதித்தல்; காலால் பயங்கரமாக உதைத்தல்கல்லெறி போன்றுமுழந்தாளால் குத்தல், தலையால் முட்டுதல் இவைகளால் அவ்விருவரும் மலைகள் போல் ஒன்று சேர்ந்தனர்.

35, 36 இப்படி ஆயுதமற்ற போர் கைவலிமை கொண்டு நடந்தது. சூரரின் முழு பலத்துடன் நடக்கும் மற்போர் விழாவில் ஜனங்கள் உத்ஸாஹத்தால் பெருமுழக்கம் எழுப்பி ஸந்தோஷித் தனர்.

37, 38. மற்ற ஜனங்கள் சாய்வாஸனங்களில் (இருந்து) பலே பலே!' என்று நல்வார்த்தைகள் கூறினர்.பிறகுக்ருஷ்ணனையே நோக்கிய கண்களுடைய கம்ஸன் முகம் வியர்த்து இடது கையால் வாத்யங்களை நிறுத்தினான். ம்ருதங்கம் முதலிய அந்த வாத்யங்களை (இங்கு) நிறுத்தியவுடன் ஆகாயத்தில் தேவ வாத்யங்கள் சேர்ந் தாற்போல பலவாக முழங்கின.

39, 40. தாமரைக் கண்ணன், ஹ்ருஷீகேசன், போர் புரியும் போது, நாலா பக்கங்களிலும் வாத்ய கோஷங்கள் தாமாகவே எழுந்தன. அழகிய ரூபமுடைய விமானங்களுடன் தேவர்கள் க்ருஷ்ணன் வெற்றியை விரும்பி வித்யாதரருடன் மறைந்திருந்து ஸஞ்சரித்தனர்.

41, 42. ஆகாயத்திலிருந்த ஸப்த ரிஷிகளும் மற்றவரும் ''க்ருஷ்ணா! மல்லரூபியான அஸுர சாணூரனை வெற்றி கொள் வாயாக? என்று சொன்னார்கள். கம்ஸனது மறைவைக் காட்டும், தேவகி புத்ரன் க்ருஷ்ணன் சாணூரடன் வெகுகாலம் விளையாடி பலத்தை வரவழைத்துக் கொண்டான்.

43, 44. பிறகு பூமி நடுங்கிற்று ஆஸனங்கள் ஆடினகம்ஸனது க்ரீடத்திலிருந்து உயர்ந்த ரத்னம் விழுந்தது. க்ருஷ்ணனும் மெலிந்த ப்ராணனையுடைய சாணூரனைக்கைகளாலிழுத்து வணக்கி முழந்தாளால் மார்பில் உதைத்து முஷ்டியால் தலையிலடித்தான்

45, 46, 47, அவனது கண்கள் கட்டுவிட்டு கணணீரும் ரத்தமும் கலந்து பிதுங்கி வெளிவந்தன. அவனது அக்குள்கள் மேல் தொங்கும் இரண்டு தங்க மணிகள் போல் தோன்றின. சாணூரன் விழி பிதுங்கி ப்ராணன் வெளியேறி வாழ்வு முடிவில் மல்லரங்கு நடுவில் பூமியில் விழுந்தான். ஆயுள் முடிந்த அந்த சாணூர மல்லனது தேகத்தால் நிறைந்த அந்த அரங்கு உட்புக முடியாது தடுக்கப்பட்டு மலையோடு கூடியது போல் காணப்பட்டது.

48, 49 பலத்தால் கர்வங்கொண்ட அந்த சாணூரன்கொல்லப் பட்டதும், அரங்கில் பலராமன் முஷ்டிக மல்லனைப் பிடித்தான். க்ருஷ்ணன் மறுபடியும் தோசலகன் எனும் மல்லனைப் பிடித்தான் அந்த இரு மல்லரும் முதல் வீழ்ச்சியில் கோபங்கொண்டு யமன் வசப்பட்டு ராமக்ருஷ்ணரை அணுகினர்; அடிவாங்கி வணங்கி அரங்க நடுவில் துள்ளிக்குதித்தனர்.

50, 51 பலவான் க்ருஷ்ணன் மலைச்சிகரம் போன்ற தோசலனைத் தூக்கி நூறுமுறை சுற்றி பூமியில் அடித்துப்பிழிந் தான் க்ருஷ்ணனுல் அடிக்கப்பட்டு, துன்புறுத்தப்பட்டு மரண தசையிலிருக்கும் பலவான் அந்த தோசவகன் வாயிலிருந்து ரத்த வெள்ளம் பெருகிற்று.

52, 53, மஹா பலவானும். மஹாமல்லனுமான ஸங்கர்ஷண ஆந்த்ர மல்லனுன முஷ்டிகனை வெகுநேரம் சண்டை செய்ய இட மளித்து பாய்ச்சுக்காட்டி இங்குமங்கும் சுற்றி குதித்தான்தேஜஸ்வீ வீரன் பலராமன் ஒரு மலையை வஜ்ராயுதத்தால் பேகல இடியுடன் கூடிய மேகம் போன்ற முஷ்டியால் தலையில் அதிர அடித்தான்.

54, 55 முஷ்டிகன் ஒடிந்து தொங்கிய தலையுடனும் பிதுங்கிய விழியுடனும் பலராமனுல் கொல்லப்பட்டு பூமியில் விழுந்தான். பிறகு பேரொலி முழங்கிற்று. க்ருஷ்ணன் பலராமன் இருவரும் முஷ்டிகனையும் தோசலகனையும் கொன்று கோபத்தால் மிகச் சிவந்த கண்களை கொண்டவராய் அரங்க மத்தியில் துள்ளிக் குதித்தனர்.

56, 57 ஆந்த்ர மல்லர்களான சாணூர முஷ்டிகர் கொல்லப் பட்டதும், காட்சி அரங்கு மல்லர்களற்றதாகி பயங்கர தோற்ற முள்ளதாயிற்று. காணவந்த நந்தகோபர் முதலிய எல்லா ஆயர் களும் பயத்தால் கலங்கிய எல்லா அங்கங்களையுமுடையவர் களாய், அங்கு இருந்தனர்.

58, 59 நடுங்கிய தேவகி தேவி இதைப் பார்த்து ஆனந் கண்ணீர் வடித்து, பால் சுரந்த ஸ்தனங்களையுடையளா க்ருஷ்ணனைக் கண்ணாரக் கண்டாள். க்ருஷ்ண தர்சனத்தா உண்டான ஆனந்த பாஷ்யத்தால், கண்கள் மறைக்கப்பட்ட வஸ தேவர், புத்ர வாத்ஸய்யத்தால் முதுமை நீங்கி இளையவராக தோன்றினர்.

60, 61. அந்த எல்லா ஸ்ரேஷ்டமான மங்கையர் கூட்டங்க (வெற்றி பெற்ற) க்ருஷ்ணனது முகாரவிந்தத்தை தங்கள் நேத்ரா களாகிற வண்டுகளால் இமைப்போதும் விடாது பருகினர்,

61, 62 பிறகு (வெற்றி பெற்ற) க்ருஷ்ணனைப் பார்த்து உண்டான கோபத்தால் கம்ஸனனின் புருவங்கள் இடையி வியர்வை தோன்றிற்று. கோபத்தாலான பெருமூச்சுக் காற்று கம்ஸனின் மனதிலுள்ள கேசவனைப் பற்றிய கோபாக்னி தூண்ட பட்டு அவனது ஹ்ருதயத்தில் புகையுடன் கூடி ஜ்வாலைவிட்டெரி தது. கம்ஸனின் முகத்தில் கோபந்தோன்றி உதடுதுடித்து நெற்றி வியர்த்தது அவனது உடல் சிவப்பு சூர்ணம் போல் தோன்றிற்று

63, 67 கோபத்தால் சிவந்த அவன் முகத்திலிருந்து வியர்வைத் தூளிகள் சூர்யகிரணங்கள் தொடப்பட்ட மரங்களின் பனித்துளிகள் போல் வெளிக்கிளம்பின. அந்த கம்ஸன் மிகக் கோபங் கொண்டு பல காலாட்படை ஆட்களை ''இந்தக்காட்டான் ராமக்ருஷ்ணன் இரண்டு ஆயர்களும் அரங்குக் குழுவிலிருந்து வெளியேற்றப்படட்டும்'' எனக் கட்டளையிட்டான் ''இந்த பாப தோற்றமுடைய விகார ரூபிகளான இந்த ராமக்ருஷ்ணர்களை நான் பார்க்க விரும்பவில்லை. ஆயர்கள் ஒருவர் கூட என் ராஜ்யத்தில் இருக்கத் தக்கவரில்லை. எனக்குதீமை செய்வதிலேயே நோக்கம் கொண்ட, துர்புத்தியுள்ள நந்தகோபனும் இரும்புச் சங்கிலி தளை களால் பூட்டப்படட்டும்.

68, 69 எனக்கு ஸதா விரோதம் செய்யும் ஒழுங்கீனன் வஸு தேவனும் வயோதிகனெனப் பார்க்காமல் இன்றே இப்போதே தண்டனையால் அடக்கப்படட்டும். இந்த நாகரீகமற்ற ஆயர்கள் தாமோதரனையே (ஆய்ச்சியால் கட்டுண்ட பயலையே) கதியாக வுடையவர்கள் இவர்களின் பசுக்களும் மற்ற உடைமைகளும் அபஹரிக்கப் படட்டும்''

70, 71, 72, 73. இப்படி கட்டளையிடும் கடுஞ்சொற் கூறும் அந்த கம்ஸனை, ஸத்ய பராக்ரமன் க்ருஷ்ணன் கண்கள் விழித்துப்

பார்த்தான். நந்தகோபரும், பிதா வஸுதேவரும் தூற்றப்பட்ட போது, பந்துக்களின் துக்கத்தையும் மூர்ச்சையடைந்த தேவகியையும் பார்த்து, இந்தக்கேசவன் ஸிம்ஹம் போல் தோற்றும் வீரம் கொண்டு தோள்வலியுடன், கம்ஸனை அழிப்பதற்கு விரைந்து [கம்ஸன் ஸிம்ஹாஸனம்] ஏற விரும்பும் அச்சுதன் அரங்கு நடுவிலிருந்து வேகமாகஉயரப் பாய்ந்தான் ஆகாயத்தில் காற்றினல் உந்தப்பட்ட கருமேகம்போல் ஸிம்ஹாஸனத்தின் பக்கல் அணுகினன்,

74. நகர ஜனங்கள் எல்லோரும் அரங்கு நடுவிலிருந்து தாவிப் போகும் அவனைக் காணவில்லை, கம்ஸன் பக்கத்தில் அவன் இருக்குமதை மட்டும் கண்டனர்.

75. கம்ஸனும் கூட அப்படியே ஆயாஸமடைந்து யமனல் சூழப்பட்டு, ப்ரபு கோவிந்தனை ஆகாயத்திலிருந்து வந்தவனுவே நினைத்தான்.

76. ஸபை நடுவில் க்ருஷ்ணன் கதவுதாள் போன்ற தன் கையை நீட்டி, அந்த கம்ஸன் சிகையைப் பிடித்தான்.

77. க்ருஷ்ணன் கையால் பிடிக்கப்பட்ட கம்ஸன் சிரஸ்விருந்து, வைரக்கற்கள் பதிக்கப்பெற்ற அவனது தங்கக்ரீடம் கீழே விழுந்தது.

78. க்ரஹத்தால் பிடிக்கப்பட்ட கேசத்தையுடைய அக்கம்ஸன், செயலற்றவனுனன். அப்படியே செய்வதறியாத மூடனுக வ்யாகூலமடைந்தான்.

79. சிகை நன்கு பிடிக்கப்பட்டு உயிரிழப்பவன் போல் பெருமூச்சுவிட்டான். அப்போது, க்ருஷ்ணனின் முகத்தைப் பார்ப்பதற்கு இயலாதவனுனன்.

80, 81. காதுகளில் குண்டலங்களில்லை; மார்பில் ஹாரங்கள் அறுந்து விழுந்தன; கைகளிரண்டும் [வலிமையற்று] தொங்கின; உடலிலிருந்த ஆபரணங்கள் சிதறுண்டன; மேலாடை நழுவிற்று; தலை ஆடிப்போனது; க்ருஷ்ணனது பலத்தால் நன்கு இழுக்கப்பட்ட கம்ஸன் [இவ்விதம்] ஆனுன்.

82 துக்கத்துக்காளான அந்த கம்ஸனை, கேசவன், தன்பலத்துடன் பிடித்து ஆஸனத்திலிருந்து வெளிக்கிளப்பி பெரிய அரங்கிடத்திலும் இழுத்து வந்தான்.

83. க்ருஷ்ணனால் இழுக்கப்பட்ட பெருங்கீர்த்தி பொருந்திய போஜபதி கம்ஸன், உடலால் ஸபைச்களத்தில், நீண்ட அகழி ஏற்பட்டது.

84. க்ருஷ்ணன் ஆயுள் முடிந்த கம்ஸனை [உடலை] வேகமாக இழுத்து அரங்கில் விளையாடி, கம்ஸன் தேஹத்தை பக்கத்தில் விட்டான்.

85. ஸூகத்துக்கு உரிய கம்ஸனது தேஹம், தரையில் நசுக்கப் பட்டதாய்க் கிடந்தது, முறைதப்பி, புழுதியால் மலின மாக்க பட்டது.

86. அவனது முகம் கருத்து கண்கள் மூடி க்ரீடமின்றி தள்ளப்பட்டிருந்தது, இதழில்லா தாமரை போல் சோபை யற்றிருந்தது

87. அந்த கம்ஸன், போரில் கொல்லப்படவில்லை அம்பு களால் காயப்படவில்லை சிகை பிடித்திழுக்கப்பட்டதால் உயிர் நீங்கியவன், [ஆதலால்] வீர ஸ்வர்க்கத்துக்கு தகுதியற்றவன் ஆனான்

88. கம்ஸனது தேஹத்தில், உயிரைப் பிரித்த கேசவனால், தசைகள் அறுக்கப்பட்ட, நக அடையாளங்கள் ப்ராகாசித்தன.

89. தாமரைக்கண்ணன் [கம்ஸனைக் கொன்ற] மகிழ்ச்சியால் சோபை இரட்டித்து, விரோதி முட்கள் களைந்தவனாய், வஸுதேவருடைய பாதங்களை வணங்கினான்.

90. யதுகுலதிலகன் க்ருஷ்ணன் தாய் தேவகியாரின் பாதங்களையும் [கரங்களால்] பிடித்தும் சிரஸால்தொட்டும் வணங்கினான் அந்த தேவகி யாரும், ஆனந்தக் காரணமாக ஸ்தனங்களினின்று பெருகும் பாலால் க்ருஷ்ணனை நனைத்தாள்.

91. க்ருஷ்ணன் [பரம் பொருளாகிய] தனதேயான தேஜஸால் ப்ரகாசித்து அங்குள்ள எல்லா யாதவர்களையும் வயதுக்கும், தகுதிக்கும் ஒக்குமாறு க்ஷேமம் விசாரித்தான்.

92. தர்மாத்மாவான பலராமனும், கம்ஸனின் பலமுற்ற ஸஹோதர 'ஸுநாமாவை' கைகளாலேயே விரைவில் கொன்றான்,

93. வீரரான ராமக்ருஷ்ணர் இருவரும் சத்ருக்களைவென்று [அப்படியே] கோபத்தையும் ஒழித்து, [மதுரைக்கு வெகுதூரமுள்ள] ஆய்ப்பாடியில் வெகுகாலம் வஸித்து [தற்போது] மன மகிழ்ச்சியுடன், தவது பிதாவின் வீட்டை அடைந்தனர்.

**30-ம் அத்தியாயம் முற்றிற்று**

# 31-ம் அத்தியாயம்

# மரித்த கம்ஸனுக்காக ரோதனம்

1. **வைசம்பாயனர் சொன்னர்** : கொல்லப்பட்டு புண்யம் கழிந்த க்ரஹம் போல் விழுந்திருக்கும் பர்த்தாவான கம்ஸனைப் பார்த்து, கம்ஸனின் தேவிகள் நாற்புறமும் சூழ்ந்து கொண்டனர்

2. ஆயுள் முடிந்து பூமியாகிற படுக்கையில் கொல்லப்பட்டுக் கிடந்து உறங்கும் அரசன் கம்ஸனைப் பார்த்து, மான் தலைவனைப் பார்த்த பெண்மான்களைப் போல்ராஜபத்னிகள் வருந்தினர்கள்.

3. 'வீர வ்ரதத்தில் ப்ரியமுடைய வீரனை நீ கொல்லப்பட்ட போது சிறந்த தோள்வலி படைத்தவனே! எங்கள் ஆசைகள் நாச மாயின. பந்துவை இழந்தோம் நாங்களும் பாழானோம்

4. வேந்தர் வேங்கயே! உனது மனித இயல்பான இந்தமரண முடிவு நிலையைப் பார்க்கும் நாங்கள் பந்துக்களுடன் அனதையாய் புலம்புகிறோம்,

5. எங்களுக்கு தக்க பலவானை நாதனாகிய நீ மரணமடைந் தாய் அதனுல் ப்ரபோ! உன்னுல் அறவே விடப்பட்ட நாங்கள் வேரறுபட்டவராகஆனோம்.

6. கலவியாசையால் ப்ரணய கோபத்துடன் கொடி போல் அலையும் எங்களை எவன் படுக்கைக்கு அழைத்துப் போவான்.

7. சூர்யன் நீரற்ற குளத்தில் தாமரையை வாட்டுகிருன் அழகனே! மனோரதத்தைத் தோற்றுவிக்கும் மூச்சுக் கொண்ட உனது இனிய முகத்தை [காலன்] வாடச் செய்கிருன்.

8. இது உனக்குப் பொருத்தமில்லாதது. எப்போதும் குண்ட லங்கங்களில் ப்ரியமுடைய கழுத்துவரை தொங்கும் உனது இந்தக் காதுகள்.

9. குண்டலமின்றி சூன்ய மாக சோவையற்றிருக்கின்றன சூர்யனைப்போன்ற காந்தியுடையதும் உனது சிரஸுக்கு மிக்க மங்களமானதும் எல்லா ரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்டது மானஅந்த உனது க்ரீடம் வீரனே! எங்கே?

10 பரலோகம் சென்றபின் உனது அந்தப்புரத்துக்கு சோபை செய்யும் அபலைகளான மஹிஷிகளால் வாழ்வது எப்படி

11. ப்ரிய போகங்களில் ஏமாற்றப்படாத பதிவ்ரதையான பெண்கள் கணவர்களால் கைவிடத் தகாதவரல்லவா? அத்தகைய நீ எங்களை விட்டுச் செல்கிருய்.

12. ஐயோ! யமன் மிக்க சக்தி வாய்ந்தவன்! சத்ருக்களுக்கு யமனான நீ முறைதப்பிய செயலுடைய அவனால் சீக்ரமாக அழைத்துச் செல்லப்படுகிறாய்.

13. நாதனே! நாங்கள் துக்கங்களுக்குத் தகுதியற்றவர். உன்னால் ஸுகங்களிலேயே வளர்க்கப்பட்டவர். பரிதாபமடைந்த விதவைகளான நாங்கள் எப்படி வஸிப்போம்?

14. ஒழுக்கத்தில் மிக்க விருப்பங்கொண்ட மங்கையருக்குக் கணவன் ஒருவனே மேலான கதி. அந்த உயர்ந்த கதியான நீ பலவானான யமனால் துண்டிக்கப்பட்டாய்.

15 வைதவ்யத்தால் கைப்பற்றப்பட்ட நாங்கள் சோகத்தால் தபிக்கும் மனதைக் கொண்டுள்ளோம், அழுகையாகிற மடுவில் மூழ்கினோம். நீ இல்லாமல் எங்கு போவோம்?

16. உன் மடியில் விளையாடினோம் அந்தக் காலம் உன்னுடன் போய்விட்டது. ஒரு விநாடியில் அதிலிருந்து (விளையாட்டுக் காலத்திலிருந்து)விடுபட்டோம். மனிதன் வாழ்க்கைநிலையற்றதுதானே!

17. கௌரவம் கொடுப்பவனே! நீ காலமானதும் பல மற்றவர் ஆனோம் ஐயோ! வைதவ்யத்தையடைந்த நாங்கள் எல்லோரும் ஒரேபாபத்தைச் செய்தவர்,

18. இன்பத்தில் விருப்பங் கொண்டு உன்னிடம் காமவசப்பட்ட எல்லோரும் உன்னால் ஸ்வர்க்க இன்பம் அடையுமாறு பாராட்டி வளர்க்கப்பட்டோம். அத்தகைய நீ எங்கே செல்கிறாய்?

19. எங்கள் உலக பதியே? தேவர்போன்றவனே! நாதனற்ற எங்களுக்கு நீயே நாதன், அன்றில் பறவை போல் புலம்பும் இவர்களுக்கு, கௌரவம் கொடுப்பவனே! ப்ரபோ! பதில் அருள்வாய்.

20. இவ்விதம் பந்துக்கள் அழும்போது, மனம் வருந்தும் மஹிஷிகளையுடைய உனது பரலோகம் போதல் எங்களுக்கு மிகவும் கொடூரமாகத் தோன்றுகிறது.

21. ப்ரியனே பரலோகத்தில் மேலான ஸ்திரீகள் [உனக்கு மிகப்ப்ரியர்கள், ஏனெனில் வீர. நீ இந்த ஜனங்களை வீட்டில்விட்டு புறப்பட்டுவிட்டாய்.

22. வீர! கொடை வள்ளலே! இந்த மனைவிகள் அழுது கொண்டிருக்கும்போது, இந்த அழுகைக் குரலை, மயக்கத்தால் அறிகிறாயில்லை. என்ன காரணம்?

23. ஐயோ! மனிதர்களின் பரலோக யாத்ரை கருணையற்ற யற்றது: தன் மனைவிகளை அறவே நீக்கி அபேக்ஷயற்றுப் போகிறார் களல்லவா!

24. பெண்களுக்குப் பதியில்லாதிருப்பது நல்லது. பெண்களுக்குச் சூரனான பதிவேண்டாம். சூரர்கள் ஸ்வர்க்க ஸ்த்ரீகளுக்கு ப்ரியமானவர். அந்தச் சூரர்களுக்கும் அந்த ஸ்வர்க்க ஸ்த்ரீகளே ப்ரியமானவர்கள்.

25. யுத்தப்ரியனான உன்னை யழைத்துச் செல்கிறகண்ணுக்குப் புலப்படாத யமனால், எங்கள் எல்லோர் ஹ்ருதயத்திலும் நன்றாக அடிக்கப்பட்டது.

26 யுத்தத்தில் ஜராஸந்தன் சேனையையழித்து யக்ஷர்களை வென்று, இந்த உலகில், கேவலம் மனிதனால் எப்படி நீ கொல்லப் பட்டாய்.

27. இந்த்ரனுடன் விற்போர் செய்து தேவர்களால் போரில் ஜெயிக்கப்படாத நீ எப்படி மனிதனால் கொல்லப்பட்டாய்?

28. உன்னால் அம்பு மழை பெய்வித்து கலக்க முடியாத கடல் கலக்கப்பட்டு, வருணனைவென்று எல்லா ரத்னங்களும் அபகரிக்கப்பட்டன.

29. உன்னால் இந்த்ரன் மெதுவாக மழைபொழிய, நாட்டு மக்களின் பொருட்டு அம்புகளால் மேகங்களை வென்று பலத்தால் மழை பெய்விக்கப்பட்டது.

30. எல்லா மன்னர்களும், உனது கீர்த்தியைக் கேட்டு வணங்கி, சிறந்த ரத்னங்களையும் வஸ்த்ரங்களையும் (கப்பமாக) அனுப்பிக் கொண்டிருந்தனர்.

31, சத்ருக்களால் காணப்பட்ட வீர்யத்தையுடைய, தேவர்களையொத்த உனக்கு, இத்தகைய உயிரை முடிக்கும் கோரமான பயம், எப்படி வந்தது

32. நாதனுன நீ கொல்லப்பட்டதும் பலவானுன யமனு
நிராகரிக்கப்பட்ட அபலைகளான நாங்கள் விதவையென்
பெயரையடைந்தோம்.

33. நாத இப்படி (பிரிந்து) போக வேண்டுமேயானு
வாயினுலாவது, "நான் போகிறேன்" என்று சொல்வதில் என்ன
ஶ்ரமம்.

34. நாத! க்ருபை செய்க, பயந்துள்ளோம்; தலைகளால் உன்
பாதங்களை அடைகிறேம் வெகுதூரம் போனது போதும் அரசே
திரும்பும்.

35. ஐயோ வீர! புற்களிலும், தூசியிலும் எப்படி படுத்திரு
கிருய்? பூமியில் படுத்திருக்கும் உன் உடல் ஏன் நோவு படவில்லை

36 எவனுல் தூங்கும் போது திடீரென அடித்துக் கொல்லப்
பட்டது? எல்லாப் பெண்களிடத்தும், இந்த மிக்க கொடுமையான
அடி கொடுக்கப்பட்டது.

37. உயிருடனிருக்கும் (விதவை) பெண்ணின் அழுகை
தொடர்ந்து முடிவற்ற அழுகை, பர்த்தாவுடன் செல்ல வேண்டி
யிருக்க அழுது கொண்டிருப்பதேன்?

38. இச்சமயம் வருந்திய கம்ஸனின் மாதா நடுங்கி 'என்
குழந்தையெங்கே? என் பிள்ளையெங்கே?' யென அதிகமாக
அழுதாள்.

39 அவள் கொல்லப்பட்ட பிள்ளையை, பிளந்த ஹ்ருதயத்
தால் மயங்கி, காந்தியில்லா சந்த்ரனைப் போன்ற பிள்ளையை அடிக்
கடி பார்த்தாள்.

40 பிள்ளையைப் பார்த்துப் பார்த்து "ஹா கொல்லப்
பட்டேன்!" என்று கூவிக் கொண்டு, நாட்டுப் பெண்களின்
அழுகைக் குரலுடன் (சேர்ந்து) புலம்பினுள் அழவும் செய்தாள்.

41. புத்ர வாத்ஸல்யமுடைய அவள், கம்ஸனின் வாடிய
முகத்தை மடியில் வைத்து "பிள்ளாய்!" என்று துக்கத்துடன்
கூடிய வார்த்தையால் (பிறர்) அனுதாபப்படும்படி புலம்பினுள்.

42. 'பிள்ளாய்! சூரவ்ரதம் கொண்டவனே! பந்துக்களுக்கு
ஸந்தோஷத்தை வளர்ப்பவனே! குழந்தாய்! இந்த விரைவான
புயப்பாட்டைஏன் செய்தாய்?

43. "பிள்ளாய்! முறை தப்பி வெட்ட வெளியில் ஏன் படுத்திருக்கிறுய்? குழந்தாய் சுபலக்ஷணம் பொருந்திய இப்படிப் பட்டவர்கள் (உன்னைப் போன்றவர்கள்) பூமியில் படுக்க மாட்டார்கள்,

44. உலகிலேயே பலத்தில் சிறந்த ராவணனுல், ஸாதுக்கள் ஏற்றுக் கொள்ளக் கூடிய இந்த ஸ்லோகம் முன்னெரு கால், ராக்ஷஸர் கூட்டத்தில் கானம் செய்யப்பட்டது.

45. "இவ்விதம் சிறந்த பலவானும், தேவர்களை அழிக்க உல்லவனுமான, எனக்கு பந்துக்களிடயிருந்து கோரமான பயம் தடுக்க முடியாததாகும்"

46. அப்படியே பந்துக்களிடம் பேராசை கொண்ட புத்தி மான் என் பிள்ளைக்கு அப்படியே (ராவணன் வார்த்தைப்படியே) பந்துக்களிடமிருந்து தேஹத்தை முடிக்கும் இப்பேராபத்து உண்டாயிற்று.

47. கம்ஸன் தாயார், பூபதியும், தனக்குப் பதியும் மூர்ச்சை யடைந்தவனும், வ்ருத்தனுமான உக்ரஸேனனைக் குறித்து, குட்டி யிழந்த பெண் மான் போல் அழுது கொண்டு சொன்னுள்:

48. "அரசே! சுத்தாதியாவே! வாரும்; வாரும்! வஜ்ராயுதத் தால் பிளக்கப்பட்ட மலைபோல், வீர சயனத்தில் படுத்திருக்கும் ஜனங்களுக்கு ஈசனை புத்ரனைப் பாரும்!

49. மஹாராஜா! ப்ரேதத்தன்மையடைந்த யமலோகம் சென்ற இவனுக்கு பரலோக யாத்ரைக்குரிய கார்யத்தைச் செய்வோம்.

50, 51, ராஜ்யங்கள் வீரர்களால் அனுபவிக்கத்தக்கவை. நாமோ, தோற்கடிக்கப்பட்டோம். விரோதங்கள் மரணத்தை முடிவாகவுடையன. [சத்ருகம்ஸன்] சாந்தனைதும் (இறந்ததும்) எதிரி (க்ருஷ்ணன்) கோபம் சாந்தியடையும். (இறந்து) போனவன் என்ன குற்றம் பண்ணினுன்? ஆகையால் ப்ரேத கார்யங்கள் செய்யத் தக்கவை போங்கள் கம்ஸனது உத்தரக்ரியை பொருட்டு க்ருஷ்ணனிடம் விஜ்ஞாபித்துக் கொள்ளுங்கள்"

52, 53 போஜராஜனை தன் கணவனிடம் சொல்லி, அந்தக் கம்ஸனின் மாதா துக்கமடைந்து, தலை விரித்து பிள்ளையின்

முகத்தையே பார்த்து மிகவும அழுதாள்: ''அரசே (கம்ஸனே!) இந்த உனது மஹிஷிகள் நல்ல நாயகனுன உன்னே தங்கள் பதியாக அடைந்து ஸுகமாக வாழ்ந்தவர். இவர்கள் மனோரதங்கள் பாழாகி என்செய்வார்கள்?

54, 55 இந்த உனது வயதான பிதா உக்ரஸேனர், க்ருஷ்ணன் வசப்பட்டிருக்கிறார். வற்றும் ஓடை நீர் போல் (வாடி) இருக்கும் அவரை எப்படி பார்ப்பேன். 'பிள்ளாய்! நான் உன் தாய். ஏன் பேசுகிறாயில்லே? ப்ரிய ஜனங்களே விட்டு நீண்ட மீளா வழியைக் குறித்து புறப்பட்டா. .

56, 57 நியாய ஸமர்த்தா? வீரா குறைந்தபாக்யத்தையுடைய என் செல்வமான நீ சூழ்ந்து நிற்கும் யமனுல் இழுத்துச் செல்லப் படுகிறாய். குலத்தலேவா! கொடையாலும் கௌரவத்தாலும் வசீகரிக்கம்பட்ட அந்த குணங்களால் த்ருப்தியடைந்த இந்த உனது சேவகக் கூட்டங்கள், அழுகிறார்தள்.

58. மனிதப் புலியே! நீண்ட கையா! மஹா பலா! எழுந்திரு. வருந்தும் எல்லா ஜனங்களேயும் நகரத்தையும் அந்தப்புரத்தைப் போல் காப்பாற்று.

59. கம்ஸன் ஸ்த்ரீகள் மிகவும் வருந்தி மிக விரிவாக அழுது கொண்டிருக்க, மாலேச் சிவப்புடன் அழகான தினகரன் அஸ்தமித்தான்

31-ம் அத்தியாயம் முற்றிற்று

## 32-ம் அத்தியாயம்

## உக்ரஸேன பட்டாபிஷேகம்

1. **வைசம்பாயனர் சொன்னூர்** உக்ரஸேனனும் புத்ர சோகத்தால் மிக வருந்தி, விஷத்தைக் குடித்தவன் போல், பெருமூச்சு விட்டுக் கொண்டு துக்கத்துடன் க்ருஷ்ணன் அருகில் சென்றான்.

2, 3, யாதவர்களால் சூழப்பட்டு, கம்ஸன் மரணத்தால் மனங்கலங்கி யோசனேயில் ஆழ்ந்திருக்கும் க்ருஷ்ணனே அந்த உக்ரஸேனன் பார்த்தான். கம்ஸன் மஹிஷிகளின் கருணே காட்டத்தக்க பல புலம்பல்களேக் கேட்டு க்ருஷ்ணன் யாதவர் கூட்டத்தில் தன்னேத் தானே நிந்தித்துக் கொண்டான்:

**4, 5.** ''ஐயோ! என்றால் அவினேக தோஷங்கொண்ட அதி பால்யம் காரணமாக கோபமடைந்து (நேரிட்ட) கம்ஸவதத்தால் ஆயிரக்கணக்கான ஸ்த்ரீகளின் விதவைத் தன்மை செய்யப்பட்டது ஸாதாரண மனிதனுக்கும் பெண்களிடத்தில் காருண்யம் உண்டு. இவ்விதம் என்றால் ஸ்த்ரீகளின் பர்த்தா கம்ஸன் கொல்லப் பட்டதும் அவர்கள் மனவருத்தத்துடன் புலம்பும் மாத்ரத்தா லேயே அவர்களுக்கு சோகந்தானே உண்டு பண்ணப் படுகிறது.

*6, 7* அறிவொன்னில்லாப் பெண்கள் விஷயத்தில்யமனுக்கும் கருணை உண்டாகும் கம்ஸனது வதம் ஸ்லாக்யந்நான் முன்னரே இது நான் உகந்ததேயாகும்.

*8, 9,* ஸாதுக்களைத் துன்புறுத்துவனும் உலகில் இழிந்த ஒழுக்கம் உள்ளவனும் அல்ப புத்தியுடைவனுமான வெறுக்கப் பட்டவனது துன்ப மில்லா மரணம் மேலானதே. உயிரோடிருத் தல் மேலானதில்லை கம்ஸன் பாபத்திலேயே நோக்குடையவன், ஸாதுக்களுக்குங்கூட வேண்டாதவன். சீ! சீ! என்று (அவர்களால்) இகழப்பட்டவன் இவன் ஜீவித்திருப்பதிலுங்கூட என்னதயை தபஸ்விகளுக்கு நல்வினைப்பயன், மேலான ஸ்வர்க்க வாஸம்.

*10, 11* ஸ்வர்க்க வாஸிகளால் இந்த பூலோக வாஸங்கூட புகழோடுகூடியதாக நிச்சயிக்கப்படுகிறது உலகம் நிம்மதியாக இருக்க வேண்டுமேயானால் ஜனங்கள் தர்மநோக்குடனிருக்க வேண்டுமேயானால் தர்மச் செயல் புரியவேண்டுமேயானால் அரசனிடம் ஒழுங்கீனங்கூடாது

*12.* தர்வருத்தியுடையவர்களை சிக்ஷித்தல் யமதர்மராஜா கொடுக்கும் பலன் இஷ்ட தர்மங்களுடைய உலகங்களில் மறு மைக்கு உரியதைச் செய்ய வேண்டும்.

*13.* ஸத் கார்யங்களைச் செய்யும் மனிதனை தேவர்கள் நன்கு ரஷிக்கிறார்கள்அஸத்கர்மங்கள் செய்யும் மக்கள் உலகில் அதிகம்.

**14.** அஸத்தர்ம்ங்களைச் செய்த இந்த கம்ஸன் என்றால் கொல்லப்பட்டான். இது நல்ல தென்று மனதில் கொள்ளப்படட் டும். அவனது அஸத்தர்மத்தின் வேர் அறுக்கப்பட்டது-

*15.* ஆகவே துக்கத்தால் வருந்தும் எல்லா அந்தப்புர ஸ்த்ரீ களும் ஸமாதானம் செய்யப்படட்டும் எல்லா நகர ஜனங்களும் வ்யாபாரிகளும், ஸமாதானம் செய்யப்படட்டும் இவ்விதம் கோவிந்தன் சொல்லும் போது உக்ரசேனன் புத்ரன் கம்ஸன்)

ளால் பயங்கொண்டு குனிந்த முகமுடையனாய் ஆயர்களுடன் கூட புகுந்தான்.

17. அந்த உக்ரசேனன் யாதவர்கள் முன்னிலையில் கண்ணீரால் தழதழத்த தணிந்த அவஸ்யம் வேண்டிய சில வார்த்தைகளை தாமரைக் கண்ணன் க்ருஷ்ணனைக் குறித்துச் சொன்னான்:

18. என் புத்ரன் உன் கோபத்தால் கொல்லப்பட்டான். உனது சத்ரு (கம்ஸன்) யமன் திசைக்கு அனுப்பப்பட்டான். உனது ஸ்வதர்மத்தால் கீர்த்தியடையப்பட்டது உனது பெயர் பூமி முழுதும் ப்ரசித்தியாக்கப்பட்டது.

19. ஸாதுக்களிடம் உனது மஹாத்ம்யம் நிலைநிறுத்தப் பட்டது. சத்ருக்கள் பயமுடையவராகச் செய்யப்பட்டது. நல்ல ஹ்ருதயமுடையவர்கள் பெருமையடைத்தவராக்கப் பட்டனர்.

20. சுற்றுமுள்ள அரசர்களிடத்தில் உன்பராக்ரமம்ப்ரகாசப் படுத்தப்பட்டது நண்பர்கள் உன்னையடைந்து துதிப்பார்கள். அரசர் உன்னை யண்டிப் பிழைப்பார்கள்

21. ஜனங்கள் உன்னை யனுஸரிப்பார்கள். ப்ராஹ்மணர் உன்னை துதிப்பர், ஸமாதானத்திலும், போரிலும் வல்ல மந்திரிகள் உன்னை வணங்குவார்கள்

22. க்ருஷ்ண யானை குதிரை ரதம் நிறைந்ததும், காலாட் படை மிகுந்ததுமான இந்த கம்ஸனின் அழிவற்ற வேலையை அங்கீகாரம் செய்ய வேண்டும்,

23. க்ருஷ்ண! தனம், தான்யம், ரதனங்கள் ஆடைகள் பெண்கள் ஸ்வர்ணம் வாகனங்கள். இன்னும் எந்தெந்த செல்வம் உண்டோ இவ்வணைத்தையும்உன்னால் நியமிக்கப்பட்ட ஆட்கள் ஏற்றுக் கொள்ளட்டும்.

24. சத்ருவையழிக்கும் க்ருஷ்ண! இப்படி செய்ய வேண்டிய விரிவான நன்முறைச் செயல்கள் செய்யப்பட்டு முடிந்ததும் யாதவர்களுக்கு ராஜ்யம் ஸ்தாபிக்கப்பட்டதும்

25, யாதவருக்கு ஸந்தோஷவளிப்பவனே: நீ யாதவர்களுக்கு ரக்ஷகனும் சிக்ஷகனுமாக இருக்கிறாய்.

26. வீரா! ஏழைகளாகிய நாங்கள் சொல்லும் இந்த வார்த்தையைக் கேட்க வேணும் உன் கோபத்தால் எரிக்கப்பட்ட பாபச்

செயலுடைய இக் கம்ஸனுக்கு கோவிந்தா உனது அனுமதியால் அபர காரியம் செய்யப்படட்டும்,

27. மரித்த அரசனுடைய அபாரகார்யங்களைச் செய்து நாட்டுப் பெண்களுடனும் மனைவியுடனும் நான் ம்ருகங்களோடு கூட (வனத்தில்) ஸஞ்சரிக்கிறேன்.

28. கிருஷ்ணா! ப்ரேத தஹன கார்ய மந்த்ரத்தாலேயே, பந்து கார்யம் செய்யப்பட்டதும் லௌகிக கடமை முடித்தலை அடைந்த வர்களாக (பந்துக்கள்) ஆகிறார்களல்லவா?

29. கம்ஸனுக்கு முறைப்படி சிதையில் கடைசி அக்னி கார்யம் செய்து ஜலதான மாத்ரத்தாலேயே கம்ஸனுக்கு கடன் தீர்த்தலையடைவேன் க்ருஷ்ணா!

30. இது உன்னிடம் விண்ணப்பிக்கத் தக்கது. இதில் என் னிடம் அன்பு காட்டப்படட்டும் அதில் ஏழை கம்ஸன் கடைசி நல்ல கதிக்கான செயலை அடைகின்றான்.

31, க்ருஷ்ணன் உக்ரஸேனனுடைய இந்த வசனத்தைக் கேட்டு, மிக்க ஆச்சர்யமடைந்தான் உக்ரஸேனனைப் பார்த்து ஸமாதான முறையில் இந்த வார்த்தை சொன்னான்

32. பெரியவரே! உம்முடைய இந்த வார்த்தை, காலத்துக்குப் பொருத்தமானது வேந்தர் வேங்கையே! இந்த வார்த்தை உமது குலத்துக்கும் ஒழுக்கத்துக்கும் தக்கது.

33. இந்த மீற முடியாது நடந்த (தெய்வீக) கார்யத்தில் நீர் இவ்விதம் சொல்வதால், ப்ரேதனாயிருக்கும் கம்ஸனும் மன்னர்க்கேற்ற மரியாதையைப் பெறுவான்.

34 உமது பிறப்பு மேலான குலத்தில்; வேதங்களை நன்கறிந் துள்ளீர்; பெரியவரே! ஊழ்வினை மீறமுடியாததென்பது ஏன் அறியப்படவில்லை.

35. அரசே! அசையும் பொருள்கட்கும் அசையாப் பொருள் கட்கும் முற்பிறப்பில் செய்த (புண்ய பாபரூபமான) கர்மங்கள் காலத்தால் பக்வமாக்கப் படுகின்றன

36. அரசரில் சிறந்தோரே! பெரியோய் வேதமறிந்தவர்கள், தன்வான்கள், வள்ளல்கள் ப்ரிய தோற்றமுடையவர், ப்ராஹ் மண விஸ்வாஸ்திகள் நீதியொழுக்கத்தில் மிகச் சிறந்தோர்.

37 ஏழைக்கு இரங்குமவர், திக்பாலகர் போன்றவர் இந்த்ரனைப் போன்ற வீரமுடையவர்; இத்தகைய [குண ஸம்பந்தரான] அரசர்கள் யமனால் அழைத்துச் செல்லப்படுகிறார்கள்.

38. தார்மிகர்யாவர் மனத்தத்வத்தையும்மறிந்தவர். தன் நாட்டு மக்களைக் காப்பதே நோக்குடையவர் க்ஷத்ரிய தர்மத்தைக் கடைப்பற்றியவர், இந்த்ரிய ஜயமான அடக்கமுடையவர். இத்தகையரும் யமனால் அழைக்கப்பட்டனர்.

39. தன்னால் செய்யப்பட்ட சுபகர்மாவோ, அசுபகர்மாகவோ, காலம் வந்த போது, எல்லா ப்ராணிகளுக்கும் அந்தக் கர்மா தானாகவே [காலக்ரமத்தில் தேடி வந்து] காட்சியளிக்கும்;

40. இது மறைந்துள்ள மாயையே! தேவராலும் அறிய முடியாதது ஏனெனில் இந்த லோகம் [மாயையால்] மயக்கமடைகிறது. இந்த விஷயத்தில் கர்மமே மயக்கத்துக்கும் காரணம்.

41. 42 பூர்வ கர்மத்தால் தூண்டப்பட்ட கம்ஸன் காலத்தால் கொல்லப்பட்டான். அதில் நான் காரணமேயில்லை. காலமும், கர்மமும் காரணங்கள் பெரியோய்! சூர்யன் சந்த்ரன் இவை இரண்டாலானது ஸ்தாவரஜங்கம் ரூபமான இந்த உலக முழுதும் காலத்தாலே அழிக்கப்பட்டு காலத்தாலே உண்டாகிறது.

43. அந்தக் காலம் எல்லா ப்ராணிகளுக்கும், சிக்ஷண ரக்ஷணங்களில் கருத்துடையது. ஆதலால் எல்லா ப்ராணிகளும் காலத்துக்கு வசப்பட்டவை;

44. தானே! அரசே! தன் தோஷத்தாலேயே எரிக்கப்பட்ட உன் பிள்ளையின் அந்த விஷயத்தில் நான் காரணமில்லை, காலமே காரணம்:

45, 46 அப்படியில்லாவிடில் நான் காரணமாவேன் இதில் ஸந்தேஹமில்லை. பிறரையே காரணமாக்க நோக்கங்கொண்ட காலம், காரணமில்லாமல் என்ன செய்யும். அரசே! காலம் பலம் பொருத்தியது உயர்வு தாழ்வு அறிந்த பகுத்தறிவுடையோர் எந்த கதியடைகிறார்களோ! அந்த கதி (ஸ்தானம்) எவராலும் அறிய முடியாதது அது காலத்தின் போக்கு எல்லாம்காலத்துக்கே புலப்படக்கூடியது.

47, 48, பெரியோய்! நான்சொல்வதைக் கேட்டு அதன்படி நடக்கவேணும். எனக்கு ராஜ்யத்தில் கார்யம் ஒன்றுமில்லை. நான் ராஜ்யத்தை ஆசப்படவுமில்லை என்றால் கம்ஸன் ராஜ்ய ஆசை கொண்டு கொல்லப்படவில்லை

49. ஆனால் உலக நன்மைக்காகவும் புகழுக்காகவும் குலத்துக்கே தோஷமாயிருந்த உமது பிள்ளை அவன் தம்பியுடன் கொல்லப் பட்டான்.

50, 51 நான் அந்த ஆய்க்குலத்தவனுக்காகவே பசுக்களின் இடையில் ஆயருடன் கூடி வனத்தில் திரிபவனாய் ப்ரீதியுடன் இஷ்டப்படி திரியும் யானைபோல் ஸஞ்சரிப்பேன் இவ்வளவே நூறு தரம் இப்படி ஸத்யமாக உனக்குச் சொல்கிறேன் அரசனாகயிருப் பதில் எனக்குக் கார்யமில்லை.

52. அரசஸ்ரேஷ்டனே! யாதவர் தலைவரும் ப்ரபுவும் கௌர விக்கத் தக்கவருமான நீர் ராஜாவாக இருக்க வேண்டும். வெற்றி யின் பொருட்டு உமது ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்து கொள்ளும்.

53, எனக்கு ப்ரியமானது உம்மால் செய்யப்படவேண்டு மானால் உமக்கு கஷ்டமில்லையானால் என்றால் கொடுக்கப்பட்ட உமது ராஜ்யம் வெகுகாலம் பரிபாலிக்கப்படட்டும்''

54. வைசம்பாயனர் சொன்னார் : இந்த வார்த்தையைக் கேட்டு பதில் சொல்லவில்லை. வெட்கத்தால் தலைகுனிந்திருக்கும் அந்த ராஜா உக்ரஸேனனை ராஜதர்மமறிந்த கோவிந்தனும் யாதவர் சபையில் அபிஷேகம் செய்து வைத்தான்.

55; அந்த அரசனாகிய உக்ரஸேனனின் எல்லா யாதவர் களும் நகர வழியில் தேவர்கள் இந்த்ரனைப் போல் பின் சென்றனர்

56.57 அந்தக் க்ரீடம் தரித்த தேஜஸ்வியும் திருவுடையனுமான உக்ரஸேனனும், க்ருஷ்ணனுடன் கூட கம்ஸனது அபரகார்யத்தை செய்தான் ' பிறகு இரவு கழிந்து சூர்யன் தோன்றியதும் அந்த யாதவ ஸ்ரேஷ்டர் கம்ஸனின் ஈமச் சடங்கைச் செய்தனர்.

58. பிறகு கம்ஸன் உடல் பல்லக்கில் ஏற்றி முறைப்படி அவனது இறுதிச் சடங்கு மரியாதை செய்தனர்.

59. அந்த அரச குமாரன் மேலான யமுனைக் கரைக்கு எடுத்துச் செல்லப்பட்டு இறுதிச் சிதைநெருப்பால் விதிப்படியே மரியாதை செய்யப் பட்டான்.

60. அப்படியே யாதவர்கள் க்ருஷ்ணனுடன் கூட தோள் வலியுடைய 'ஸீநாம' என்ற கம்ஸனின் தம்பியையும் ஸம்ஸ்காரம் செய்தனர்.

61,62. வ்ருஷ்ணிகள் அந்தகர் முதலிய(எல்லா) யாதவர்களும் அவ்விருவருக்கும் (ஆந்மாக்கள்) அழிவற்ற லோகத்தையே அடையட்டும்' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டு நீர்க்கடன் செய்தனர், ஹரியான க்ருஷ்ணனும் கம்ஸனை உத்தேசித்து

63. ப்ரகாசிக்கும் பத்துகோடி பொன்னையும் பசுக்களையும், ரத்னங்களையும், ஆடைகளையும், நகரம் போன்ற பெரிய க்ராமங்களையும், ப்ராஹ்மணர்களுக்கு குறைவில்லாமலிருக்கட்டும் என்று அடிக்கடி சொல்லிக்கொண்டு, த்ருப்தியாகும் வரை கொடுத்தனர்.

64. அந்த யாதவர்கள், அந்த இருவருக்கும் நீர்கடன், செலுத்தி, நலிந்த மனதுடன், உக்ரஸேனனை முன்னிட்டு, மதுரா நகரையே யடைந்தனர்.

### 32-ம் அத்தியாயம் முற்றிற்று

## 33-ம் அத்தியாயம்

**ராம க்ருஷ்ணர், ஸாந்தீப முனியிடம் குரு குல வாசம் — குருதக்ஷிணையாக மரித்த குரு புத்ரனை மீட்டுக் கொடுத்தல்,**

1. **வைசம்மாயனர் சொன்னர் :** அந்த பலவான் க்ருஷ்ணனும் பலராமனுடன் சேர்ந்து, யாதவர்களால் நிறைந்த, அந்த மதுரா நகரில் ஸுகமாக வஸித்தான்.

2. யௌவனம் மிளிரும் தேஹத்துடன் அந்த வீரன் க்ருஷ்ணன் ராஜஸ்ரீயுடன் கூடிய சோபையுள்ளவனாய், மிகச் சிறந்த பொருள்களின் கூட்டங்களை ஆபரணமாகவுடைய மதுரையில் ஸஞ்சரித்தான்.

3. சிறிது காலங்கழிந்ததும், ராமகேசவர் இருவரும் சேர்ந்து தநுர் வேதம் கற்க, காசியில் பிறந்து அவந்தியில் வஸிக்கும்

'ஸாந்தீபனி' யெனும் குருவை தம் கோத்ரத்தை தெரிவித்துக் கொண்டும்.

4. தாம் முன் கற்ற வித்தைகளே, தம் அனுஷ்டனத்தால் விளங்கச் செய்து கொண்டும் அடைந்தனர்.

5; குரு பணிவிடையில் ஆசை கொண்டும், கர்வ மில்லாதவ ரான ராமஜனார்த்தனர் இருவரையும் காசிதேசசாந்தீபனிமுனிவர் ஏற்றுக்கொண்டார். [வேதம் தவிர மற்ற] எல்லா [64] கலேகளே மட்டிலும் உபதேசித்தார்.

6. முன்னரே வேதம் பயின்ற அந்த இரண்டு வீரரும் முறைப் படி குருவைப் பணிந்தடைந்து அறுபத்துநான்கு நாட்களில் அங் கங்களுடன் கூடிய வேதக்தைப் பயின்றார்கள்.

7. நான்கு பாதங்களோடு கூடிய தனுர் வேதத்தையும் எய்வ தும் மீட்பதும் சேர்ந்த அஸ்த்ர வித்தையையும் [பூர்ணமாக] குறுகிய காலத்தில் குரு அவ்விருவரையும் பயிற்றுவித்தார்.

8. குரு சாந்தீபனி அவ்விருவரின் மனிதர்கு மேற்பட்ட சிறந்த பேரறிவை சிந்தித்து அவ்வீரர்களே ஆகாயத்திலிருந்து வந்த சந்த்ர சூர்யர்களாகவே நினேத்தார்.

9. தகுந்த காலங்களில் [ஆசார்யனுகிய தன்னே] வணங்கும் மஹாத்மாக்கலாகிற அவ்விருவரையும், ஸாக்ஷாத் மஹாதேவன் [பலராமர்] ஆகவும் ஸர்வவ்யாபியான [க்ருஷ்ணன்) ஆகவும் கண்டார்.

10. ''ஜனமேஜயரே! 'பாரதா! அப்யாஸம் முடித்த க்ருஷ் ணன் பலராமனுடன் சாந்தீபணி குருவை நோக்கி ஆச்சார்யனுக் காக என்ன கொடுக்கச் கடவேன்?

11. என வேண்டிக் கொண்டான், அந்த ஆசாரியன் அவர் கள் பெருமையையறிந்து ' உப்பு ஸமுத்ரத்தில் இறந்த புத்ரனேக் கொடுக்கப்பட்டவனுக வேண்டுகிறேன்.

12. ஒரே பிள்ளே பிறந்தான். அந்த ஒருவனும் தீர்த்தயாத்ரை போது ப்ராபாஸ க்ஷேத்ரத்தில் பெரிய மீனுல் கொல்லப்பட்டான். அவனே நீ என்னிடம் அழைத்துவா'' என மகிழ்ச்சியுடன் கூறினுன்.

13,14. பலராமன் அனுமதியுடன் க்ருஷ்ணன் அப்படியே [ஆகட்டும்] என்று சொன்னான். தேஜஸ்வியான ஹரி [க்ருஷ்ணன்) ஸமுத்ரத்தையடைந்து ஜலத்திற்குள் சென்றான், அப்போது ஸமுத்ரன், அஞ்சலி செய்து தன்னைக் காட்டினான. க்ருஷ்ணன் "பெரியோய்' ஸாந்தீபனியின் இறந்தபுத்ரன் எங்கே?" என அவனைக் கேட்டான்.

15. லஷ்மீபதியே பஞ்சனன் எனும் பெரிய அஸுரன் பெரிய மீனுருவாய் கொண்டு, அந்த பாலனை விழுங்கினான் என இந்த வார்த்தையைப் பதில் கூறினான் அந்தப்புருஷார்த்தமன்க்ருஷ்ணன் பஞ்சனனையடைந்து அவனைக் கொன்றான். அப்போது அச்சுதன் அந்தக் குழந்தை குருபுத்ரனையடையவில்லை.

17. அந்த ஜனார்த்தனனும் பஞ்சஜனனைக் கொன்று சங்கை அடைந்தான், அது தேவர்களிடத்தும் மனிதர்களிடத்தும் பான்சு ஜன்யம் எனப்புகழ்பெற்றது;

18. பிறகு புருஷோத்தமன் யமலோகம் சென்றான். பின்பு. யமன் அருகில்வந்து அந்த கதாதரனை வணங்கி வணங்கினான்.

19. அங்கு அப்போது புத்ரன் கொடுக்கப்படட்டும் என்று சொன்னான் அங்கு அப்போதுஅவ்விருவரிடையே மிகக் கோர மான பெரிய போர் நடந்தது.

20. பிறகு புருஷோத்தமன் க்ருஷ்ணன் பயங்கரமான யமனை ஜயித்து அப்போதே குரு புத்ரனை அந்தக் குழந்தையையும் அடைந்தான்.

21. வெகு கால முன்பே மறைந்த குரு புத்ரனை யமலோகத்தி லிருந்து அழைத்து வந்தபின் பிறகு வெகு காலமுன் இறந்தஸாந்தீ பனி புத்ரன் அளவற்ற சக்தி வாய்ந்த க்ருஷ்ணனின் பெருமை யால் மறுபடியும் உடலுடன் கூடினவனானான்.

22. எவராலும் செய்ய முடியாததும் நினைக்கவு முடியாதது தான். அந்த மிகப்பெரிய ஆஸ்சர்யத்தை பார்த்து ப்ரஹ்மா முதல் புழுவரை எல்லா ப்ராணிகளுக்கும் வியப்பு உண்டாயிற்று.

23. அந்த ஜகத்ப்ரபு மாதவன் ஆசார்ய புத்ரனையும் பாஞ்ச ஜன்ய சங்கையும் மதிப்பில்லா மாணிக்கங்களையும் எடுத்துக் கொண்டு திரும்பி வந்தான்,

24,25. உபயேந்திரனை க்ருஷ்ணன் யமனது மதிப்பில்லா ஏராள ரத்னம் முதலிய சிறந்த பொருள்களை ராக்ஷஸர்களைக் கொண்டு எடுத்து வரச் செய்து குருவிடம் வணக்கமாகத் தெரிவித்தான் ராமக்ருஷ்ணர் இருவரும் கதை, தடி, போரிலும் ஸர்வாஸ்தரங்களிலும், எல்லா லோகங்களிலுமுள்ள வில் வீரர்களுள் தலைமையை சீக்ரமே அடைந்தனர்.

26. க்ருஷ்ணன் அப்போது தெளிந்த மனதுடன் பெருவள்ளலாய் சிறந்த பொருள்களுடன் அதே ரூபத்தையும் வயதையும் உடையபிள்ளையை சாந்தீபனிக்குக் கொடுத்தான்.

27. 'ஜனமேஜயரே!' காசி தேச சாந்தீபனி முனிவர் அப்போது வெகுகாலமுன் மறைந்த புத்ரனோடுசேர்ந்துராமக்ருஷ்ணர்களைப் பாராட்டி மகிழ்ந்தார்.

28. அஸ்த்ரவித்தையைக் கற்று முடித்த வீரரும் நல்லொழுக்கமுடையவருமான அவ்விருவரும் ஆசார்யன் அனுமதி பெற்று, அவ்விரு வஸுதேவகுமாரர்களும் மீண்டும் மதுரையை யடைந்தனர்.

29. பிறகு எல்லா யாதவரும், உக்ரஸேனனை முன்னிட்டுக் கொண்டு மனமகிழ்ந்து ஸைன்யங்களுடன், யதுகுல திலகரான ராமக்ருஷ்ணர்களை எதிர் கொண்டழைத்தனர்.

30. வ்யாபாரக் கூட்டங்கள், ப்ரஜைகள் புரோஹிதருடன் கூடின மந்த்ரிகள், பாலர், வ்ருதத்துடன் கூடின நகரே எதிர் கொண்டழைத்தது.

31. ஆனந்த வாத்யங்கள் முழங்கின, எல்லோரும் ஜனார்தனனை ஸ்தோத்ரம் செய்தனர். நாற்புறமும் வீதிகள் கொடி வரிசைகள் கொண்டு விளங்கின. அந்தப்புரமுழுதும் மிக மிக மகிழ்ச்சியுடன் ப்ரகாசித்தது. இந்த்ர விழாவில் போய் கோவிந்தன் வரவில் மிக மிக மகிழ்ந்தது.

32, 33. ராஜவீதிகளில் பாடகர்கள் ஸந்தோஷமாகப் பாடுகின்றனர், பிறகு அங்கு யாதவர்களுக்கு ப்ரியத்தைச் செய்யும் கீர்த்தி கீதம் காணம் செய்யப்பட்டது.

34. கோவிந்த ராமர்களை நாம் ஸுகமாக அடைந்தோம்' உலகப் புகழ் பெற்ற ப்ராதாக்கள் நும்மூரில்எல்லோரும் பயமற்று விளையாடுங்கள் பாடியாடி மகிழுங்கள்.

35. ஜனமேஜய ராஜனும் கோவிந்தன் நகரில் வந்ததும் மதுரையில் எளியவன் ஒருவருமில்லை; ஒருவனும் பாபியில்லை?

36 அறிவிலி ஒருவனுமில்லை. பறவைகள் நல்ல சொற்களை உடையன பசுக்கள் குதிரைகள் 'யானைகள் மிக மகிழ்ந்திருந்தன ஆடவர் பெண்டிர் கூட்டங்கள் முழுவதும் மனோஸுகத்தை யடைந்தனர்.

37. காற்று மங்களகரமாக வீசிற்று. பத்து திக்குகளும் தூசியற்று தெளிந்திருந்தன. எல்லா கோவில்களிலும் தெய்வங்கள் மகிழ்ந்திருந்தன.

38. ஜனார்த்தனன் நகரம் சேர்ந்ததும் முன் க்ருத யுகத்தில் உலகத்தில் என்ன அடையாளங்கள் இருந்தனவோ அவையெல்லாம் காணப்பட்டன,

39. பிறகு புண்யமான மங்கள காலத்தில் சத்ருக்களையழிக்கும் கோவிந்தன் குதிரை பூட்டிய ரதத்தில் மதுரை நகரில் புகுந்தான்.

40. அழகிய மதுரை நகரில் புகும், சத்ருநாசன் உபேந்திரன் க்ருஷ்ணனை தேவகணங்கள் இந்த்ரனைப் போல் யாதவக் கூட்டம் பின் தொடர்ந்தது.

41. பிறகு அவ்விரு யதுகுலதிலகரும் சந்த்ர சூர்யர்கள் மலையை யடைவது போல் வஸுதேவர் மாளிகையை மகிழ்ந்த முகத்துடன் அடைந்தனர்.

42. மேலான தேஜஸ்ஸுடன் கூடி வடிவெடுத்த தேவஸ்ரேஷ்டர்கள் பேன்ற அவ்விருவரும் தங்கள் தங்கள் வீட்டில ஆயுதங்களை வைத்து விட்டு இஷ்டப்படி ஸஞ்சரித்தனர்,

43. வஸுதேவ புத்ரர் இருவரும் பழங்களாலும் புஷ்பங்களாலும் வளைந்த மரங்களையுடைய விசித்ரமான தோட்டங்களில் மகிழ்ந்திருந்தனர்.

44. யாதவர்களால் சூழப்பட்ட நல்ல மஹாத்மாக்களான அவ்விருவரும் ரைவத மலையின் அருகிலுள்ள தாமரை இலைகள் நிறைந்தும், காரண்டவ பக்ஷிகள் நிறைந்துமுள்ள தெளிந்த நதிகளில் விளையாடினர்.

45. ஒரே தோற்றங் கொண்டு மங்களமான முகமுடைய அவ்விருவரும் இவ்விதம் உக்ரஸேனனைப் பின்பற்றி சிறிதுகாலம் மதுரையில் மகிழ்ந்தனர்.

**33ம் அத்யாயம் முற்றிற்று**

## 34ம் அத்தியாயம்

## கம்ஸன் மாமனார் ஜராசந்தன் நண்பர்களுடன் மதுரையை முற்றுகையிடல்

**வைசம்பாயனர்** : அங்குயாதவர்கள் நிறைந்த அந்த மதுரா நகரில், பலராமனுடன் இணைபிரியாமல் அந்த க்ருஷ்ணன் ஸுகமாக வஸித்தான்,

2. யௌவனம் ப்ரகாசிக்கும் தேஹமுடைய அந்த க்ருஷ்ணன் ராஜஸ்ரீயுடன் கூடி சோபையுள்ளவனாய், உத்யான வனங்கள் விளங்கும் மதுரையில் ஸந்தோஷத்துடன் ஸஞ்சரித்தான்.

3. சிறிது காலம் கழிந்ததும், அரசர்களுள் மேலானவனும் பூபதியுமான ஜராஸந்த அரசன், கம்ஸன் கொல்லப்பட்டதை தன் பெண்கள் மூலம் அறிந்தான்.

4. 5. பிறகு பராக்ரமம் வாய்ந்த ஜராஸந்தன். கம்ஸனின் மரணத்தை நினைத்து கோபங்கொண்டு கால தாமதமின்றி சீக்ரமே ஆறங்கங்கூடிய ஸைன்ய பலத்துடன் கூடி யாதவர்களைக் கொல்ல விரும்பி வந்தான். ''ஜனமே ஜயராஜனே; மத்த அரசன் அரசன் ஜராஸந்தனுக்கு மங்களகரமான 'அஸ்தி ப்ராஸ்தி'' என இரண்டு பெண்கள் அவர்கள் பருத்த மார்பையும் பின்பாகத்தையு முடையவர்கள்.

6. அவ்விரு பெண்களையும் ப்ரஹத்ரதன் புத்ரனானஜராஸந்த அரசன் கம்ஸனுக்கு மனைவிகளாகக் கொடுத்தான்.

7. சூரஸேன தேச அரசனான கம்ஸராஜா பிதா உக்ரஸேனனை சிறையிலிட்டு, ஜராஸந்தனையண்டியாதவர்களை அனாதரவு செய்து அந்த இரண்டு மனைவிகளுடன்மகிழ்த்திருந்தான். என்பது உன்னால் பலமுறை கேட்கப்பட்டுள்ளது.

8. வஸுதேவர் பந்துக்களின் கார்ய ஸித்திக்காகஎப்போதும் உக்ரஸேனன் ஹிதத்தில் நாட்டமுடையவராயிருந்தார்.

9. கம்ஸன் அவரைப் பெறுக்காவில்லை, துராத்மா கம்ஸன் கொல்லப்பட்டதும், போஜர், வ்ருஷ்ணிகள் அந்தகர்கள் இவர் சூழப்பாட்டு, ராமக்ருஷ்ணரையண்டி உக்ரஸேனன் அரசனுனுன்

10, 19 பிறகு ப்ரியத்துக்குரிய வீரப்பத்னிகளான பெண்களால் எல்லா வித முயற்சிகளையும் செய்து கோபத்தால் அக்னி போல் ஜ்வலித்துக் கொண்டு ஸேனைகளுடன் மதுரைக்கு வந்தான். ஜராஸந்தனின் பராக்ரமத்தால் பயந்து வணங்கிய மற்ற அரசரும் நண்பரும் பந்துக்களும் அந்தரங்கர் எல்லோரும் அப்படியே அவரவர் ஸேனைகள் சூழ ஒன்று சேர்ந்து ஜராஸந்தனையே பின் தொடர்ந்தனர். பெரிய வில்லாளிகள் மஹாவீரர்கள் ஜராஸந் தனது ப்ரியத்தை விரும்புபவர் காருஷன், தந்தவக்தரன் வீரன் சிசு பாலன் கலிங்க ராஜன் சிறந்த பலவான் பௌண்டான், ஸாங்க்ருதி கேசிகன், ராஜா பீஷ்மகன் பிள்ளை சிறந்த வில்லாளி ருக்மி க்ருஷ்ணார்ஜுனரிடப் போகும் மஹாபாரதப்போரில் அவர்களை எதிர்க்கப்போகும் வேணுதாரி சருதர்வா; க்ரதன் அம்சுமான். பலவான் அங்கராஜன்; அப்படியே வங்க ராஜன் கோசல அரசன் காசிராஜன் தசார்ண அரசன்; வீரன் சுகேச்வரன் விதேக ராஜா மத்ர ராஜா; பலவான் திரிகர்த ராஜன் வீரன் சால்வராஜன் மஹா பலன் தரதன் யவன் அரசன் வீரன் பகதத்தன் ஸௌவீர ராஜன் சைப்யன்; பலவான் பாண்ட்யன்; காந்தார அரசன்; ஸுபலன்; மஹாபலவான் நக்ரஜித் காச்மீராஜா கோனர்த்தன்; தரதராஜன்; த்ருதராஷ்டர குமாரர் பலவான்கள் துர்யோதனாதிகள் இவர் களும் மற்ற பலவான்களான மஹாரதர்களும் ஜனார்னனை த்வே ஷித்துக்கொண்டு, அந்த ஜராஸந்தனைப் பின் தொடர்ந்தனர்.

20, 21, 22. அப்போது அபபோது அவர்கள் ஏராளமான புல் வைக்கோல், உடைய ஆரஸௌ தேசத்தையடைந்து, ஸைன்யத்தை வைத்து மதுரா நகரை முற்றுகையிட்டு வஸித்தனர்.

**34-ம் அத்தியாயம் முற்றிற்று**

## 35-ம் அத்தியாயம்

## ஜராசந்தனுடன் அணிவகுப்பும் போரும்:

1. **வைசம்பாயனர் சொன்னார்**: எல்லா வ்ருஷ்ணிகளும் ஜனார்தனனை முன்னிட்டுச் சென்று மதுரையை முற்றுகையிடும் அந்த அரசர்களைப் பார்த்தார்கள்.

2. க்ருஷ்ணன் மன மகிழ்ச்சியுடன் பலராமனைப் பார்த்துச் சொன்னான். "தேவர்களது கார்யத்தின் ப்ரயோஜனம் வேகமாக்கபடுகிறது ஸந்தேஹமில்லை.

3. இந்த ஜராஸந்த ராஜா நெருங்கிவிட்டான். வாயுவேகத்தில் வரும் ரதங்களின கொடிமுனைகள் காணப்படுகின்றனவே!

4. அண்ணா! ஜயத்தை விரும்பும் ராஜாக்களின் உயர்த்தி விரிக்கப்பட்ட சந்தரனைப் போன்ற வெண்மையான குடைகள் ப்ரகாசிக்கின்றன.

5. ஆஸ்சர்யம்! தேர்மேல் உயர்ந்துள்ள அழுக்கற்றுவிளங்கும் குடை வரிசைகள் ஆகாயத்தில் வெண்மை ஹம்ஸ வரிசைகள் போல, நம்மைநோக்கி வருகின்றன.

6. மஹீபதி ஜராஸந்த ராஜா நல்ல ஸமயத்தில் வந்துள்ளான். வரப்போகும் நமது மஹாபாரதப் போருக்கு உரைகல்.

7. முதல் போர் விருந்தாளி அண்ணா! ஒன்று சேர்ந்திருப்போம். ஜரஸந்த ராஜா அருகில் வந்ததும் யுத்தாரம்பம் செய்யப்பட வேண்டும்.

8 எதிரி ஸைன்ய பலம் ஆராயப்படட்டும்." க்ருஷ்ணன் இப்படிச் சொல்லி பிறகு நிம்மதியுடன் போரில் ஆசை கொண்டு ஜராஸந்த சக்தியை அறிய விரும்பி அவன் ஸேனையை பார்வையிட்டான்.

9. யதுஸ்ரேஷ்டன் அழிவற்ற க்ருஷ்ணன் அந்த எல்லா அரசர்களையும் பார்த்துக்கொண்டு ஆலோசனையில் சிறந்தவன் தனக்குத்தானே மனதிற்குள் வார்த்தை சொன்னான்.

10. "இங்கும் அங்கும் இருக்கும் அரசர்கள் அரசதர்மத்தில் (போர் செய்வதில்) இருக்கிறார்கள் சாஸ்த்ரத்தில் சொல்லியபடி [க்ஷத்ரிய தர்மப்படி] அழியப் போகின்றனர்.

11. இந்த அரச ஸ்ரேஷ்டர்களை, யாகத்துக்கு சுத்தம் செய்யப்பட்டவை போல் யமனால் ஜலந்தெளிக்கப்பட்டவர்களாய் நினைக்கிறேன்,

12. இவரது தேஹங்கள் ஸ்வர்க்கம் போகுபவை போல் ப்ரகாசிக்கின்றன. இந்த முக்ய அரசர் ஸைன்யக் கூட்டங்களால், மிக துன்புறுத்தப்பட்டு, சுமையால் களைப்படைந்த இந்தப் பூமி தேவி [முறையிட] ஸ்வர்க்கம் சென்றாள்.

13 இது யுக்தமானதே ராஜ ஸைன்யங்களால் எங்கும் வியாபிக்கப்பட்ட இந்த பூமி எங்கும் [காலி] யிடமற்றிருக்கிறது நூற்றுக் கணக்கில் சொல்லப்பட்ட அரசக் கூட்டங்களால் மிகக் குறுகிய காலத்திலேயே பூமண்டலம் (முழுவதும்) காலியாகப் போகிறது.

14: வைசம்பாயனர் சொன்னார்: பிறகு அரசத் தலைவனும் மஹாதேஜஸ்வி ஜராஸந்தந்ரன் கோபங் கொண்டு ஆயிரக்கணக்கான அரசர் கூட்டங்களால் பின் தொடரப்பட்டு வந்தான்.

15. ஓரிடத்தில் ஸுகமாகச் செல்லக் கூடியவையும் யுத்தப் பொருள் நிறைந்தவையும் யுத்தப் பயிற்சிபெற்றவையுமானநீண்டு உயர்ந்த குதிர்களோடு பிணைத்தவைகளாய்தடையின்றிச்செல்லும் உயர்ந்த குதிர்களோடு பிணைத்தவைகளாய் தடையின்றி செல்லும் ரதங்கள். இருந்தன.

16. ஓரிடத்தில் ஸ்வர்ணக் கழுத்துக் கயிறுடனும் பெரிய மணிகள் கொண்டுசிறந்த யானைப்பாகர்களால் ஏறப்பட்டும் யுத்த வலிமை கொண்டுமுள்ள மேகம் போன்ற யானைகள் இருந்தன.

17. ஓரிடத்தில் நன்கு அமர்ந்துள்ள வீரர்கள் தம்மேல் கொண்டவையும் தாவிக்குதிக்கின்றனவும் வாயுபோன்ற வேகமுடையனவும் பறக்கும் பக்ஷி போன்ற குதிரைகளிருந்தன.

18. ஓரிடத்தில் கத்திகேடயம் தரித்தும் மிக்க பலம் பொருந்தியும் துள்ளி விழும் பாம்புகள் போன்ற ஆயிரக்கணக்கான வீரர் படைகளிருந்தன.

19. இவ்விதம் அசையும் மேகங்கள் போன்ற சதுர்வித [ரத, கஜ, துரக, பதாதி] ஸைன்யங்களுடன் பலவான் ஜராசந்தராஜா உறுதியான வீர வரதத்துடன் வந்தான்.

20. மேக முழக்கங் கொண்ட ரதங்களொடும் மதமொழுகும் யானைகளொடும் கனைக்கும் குதிரைகளொடும் கர்ஜிக்கும் காலாட் படைகளொடும் எல்லா திசைகளையும் கோஷிக்கச் செய்து

கொண்டு நகர உபவனங்களில் கடல் போன்ற ஸேனையுடன் கூடி அந்தஜராஸந்த ராஜா காணப்பட்டான் போரில் மகிழும்வீரர்கள் நிறைந்த ராஜாக்களின் அந்த ஸேனை போர் முழக்கத்துடன் மேக முழக்கங்கொண்ட ரதங்களொடும் மேகம் போன்ற யானைகளொடும்மிக்க வேகங் கொண்ட குதிரைகளொடும் பறவைகள் போன்றகாலாட்படையொடும்,

21 22, 23. எல்லாப் பக்கங்களிலும் கலந்து, நீர் ஒழுகும் யானைகள் நிறைந்து கோடை முடிவில், கடலையடைந்த வெண் மேகக் கூட்டம் போன்று விளங்குகிறது.

24, 25. ஜஹராஸத்தனை முன்னிட்ட ஸேனைகளுடன் கூடிய அந்த எல்லா அரசர்களும் நகரைச் சுற்றி தங்க ஏற்பாடு செய்தனர்.

26. தங்கியிருந்த அந்தப்படை வீட்டின் ஸைன்ய சோமை சுற்றி வெண்ணிறமுள்ள கடலின் உருவம் போல் விளங்கிற்று.

27. பிறகு இரவு கழிந்ததும், காலையில் அந்த அரசர்கள் விழிந்தெழுந்தனர். போர் விருப்பங்கொண்டு, நகர (மதிள்) ஏறுவதற்கு முனைந்தனர்.

28 அந்த எல்லா அரசர்களும் ஒன்று கூட்ட யமுனையருகில் உட்கார்ந்து, யுத்தகால 'உத்ஸாஹத்து'-ன் ஆலோசித்தனர் அந்த அரசர்களது மிகப்பெரிய சப்தம், யுக முடிவில், கரைபுரண்ட கடலின் பேரொலி போல் கேட்கப்பட்டது

30, 31, அவ்வரசர்களின் வயதான பணி ஆட்கள், கவசம், தலைப்பாகை, தரித்து, கையில் பிரம்பு பிடித்தவராய்; 'சப்தம் கூடாது!'' என்று சொல்லிக் கொண்டு, அரசன் கட்டளையால் அங்குமிங்கும் சென்றனர். சப்தமற்று அடங்கியிருக்கும் அந்த, ஸேனையின் தோற்றம் (தன்னுள்) மறைந்துள்ள மீன்கள், முதலைகளின், சப்தமில்லா நீர் நிலைபோலிருந்தது.

32, 33. அந்த ஸைன்ய ஸமுத்ரம் யோகத்தால் போல் நிச்சப்தமாய அடங்கினதும ஜராஸந்தன் ப்ரஹஸ்பதி போல் பேருறையாற்றினன்; ''ராஜாக்களின் ஸேனைகள் சீக்ரம் கூடட்டும் இந்த நகரமும் நாற்புறமும் படைகளால் சூழப்படட்டும்.

34. கல்வீசும் யந்தரங்கள் இணைக்கப்படட்டும்எறிவதற்கான இருப்புலக்கைகள் தயாராக்கப் படட்டும்; தரை முழுதும் மலை

மாக்கப்படட்டும் நீர்த் தேக்கங்கள் நீரால் நிரப்பப்படட்டு மேலே விற்கள் (தயாராக) வைக்கப்படட்டும்; ஈட்டிகளும்சலா களும் தயாராக்கப் படட்டும்.

44. இந்நகரம் (மதில்கள்) மண்வெட்டிகளாலும், கட பாரைகளாலும், பிளக்கப்படட்டும். போர் முறையறிந்த அர களும் கூட அருகில் நிறுத்தப்படட்டும். இன்று முதல், இந்த வ தேவ புத்ரர் ராமக்ருஷ்ணரான இரு இடையர்களையும்கூரிய அம் களால் நான் கொல்லும் வரை என் ஸேனைகளால் நகர முற்று நடக்கட்டும்: ஆகாயத்தைக் கூடபாணக் கூட்டங்கள் இ விடாது நிரப்பட்டும்.

நகர இடங்களில், அரசர், என் ஆஜ்ஞைப்படி இருக்கட்டு அந்தந்த இடங்களில் நகரம் ஆக்ரமிக்கப்படட்டும்: மத்ரராஜ கலிங்கராஜன், கேகிதானன், பாஹ்லிகன், காஷ்மீர் ராஜ கோநந்தன், கருஷராஜன் தருமன் திம்புருஷன், பர்வதீயன், அ மயன், இவர்கள் நகரின் மேற்கு வாசலை முற்றிகையிடட்டும்.

பௌரவன், வேணுதாரி வைதர்பன். ஸோமகன் போஜராஜ ருக்மீ, மாலவதேச சூர்யாக்ஷன்; அவந்தி தேசத்து விந்தன் அனுவிந்தன், வீரன் தந்தவக்தரன்; சாகலி, புரமித்ரன் விராட ராஜா குருவம்சத்து மாலவன், சததந்வா. விதூரதன் பூரிஶ்ரவன் த்ரிகந்தன், பாணன், பஞ்சநதன் கோட்டை பிடிக்க வல்லவரு வஜ்ராயுதம் போன்ற வலிமை வாய்ந்தவருமான இவ்வரசர்கள் நகர வடக்கு வாயிலை ஏறி தகர்கட்டும்

45, 47 உலூகன், தைதவன், அம்ஸுமான்மகன் வீரன் ஏக வ்யன், ப்ரஹத்க்ஷத்ரன், க்ஷத்ரதரமா, ஜயத்ரதன், உத்தமாஜன் சல்யன், கௌரவர்கள் கேகயர்கள் வைதிசன், வாமதேவர், ஸாங் க்ருதி ஸினிபதி இவர்களிடத்தில் கிழக்குபடையமைப்பின் பொறுப்பு வைக்கப்படட்டும், இவர்கள் காற்று மேகங்களை (அடிப்பது) போல் நகரைப் பிளந்து கொண்டு ஓடட்டும்.

48, 49 நானும், தரதனும் வீரன் சேதிராஜனும் நன்குகவசம் பூண்டு நகர தெற்கு வாயிலைக் காப்போம். இவ்விதம் இந்த நகரம் சீக்ரம் ஸேனைகளால் சூழப்பட்டு இடி விழுந்தாற் போன்ற கொடிய பயத்தை அடையட்டும்.

50, 51, 52 கதையுடையவர்கள், கதையாலும், உலக்கை தாலும் மற்றவர் பலவித ஆயுதங்களாலும், இந்த நகரைப் பிளக்

கட்டும். இன்றே இந்த நகரம் மேடுபள்ளமாக்கப்பட்டு அரசராகிய உங்களால், தரைமட்டமாக்கப்படட்டும்.

நான்கு வித படைகளாலும் அணிவகுத்து முறை செய்த ஜராஸந்தன், பிறகு, கோபங்கொண்ட எல்லா அரசருடன் கூட யாதவர்களை நோக்கி வந்தான்.

53. 54 தசார்ஹ யாதவர்கள் அணிவகுத்த படைகளுடன். ஆயுதமேந்தி எதிர்த்துச் சென்றனர். அவர்களிடையே தேவாஸுர யுத்தம் போன்ற கோரமான யுத்தம் மூண்டது. ரதம், யானைப் படைகள் கொண்டபோர், சிலரேயான [யாதவர்க்கும்] பலர் கொண்ட எதிரிகளுக்கும் நடத்தது. நகரிலிருந்து வெளிக்கிளம்பிய வஸுதேவ புத்ரர் இருவருரையும், பார்த்து அரசச்ரேஷ்டர்களின் ஸேனை நடுங்கி மயங்கிய வாஹனங்களையுடையதாய் கலங்கிற்று.

55, 56 தேரிலேறி கவசம் பூண்ட அவ்விரு யாதவர்களும் ஸமுத்ரத்தைக் கலக்கும் இரண்டு முதலைகள் போல் தலை நிமிர்ந்து ஸஞ்சரித்தனர். போர் புரியும் மஹாத்மாக்களான அவ்விருவருக்கும் தங்களுக்கே உரிய பழய ஆயுதங்களைக் கொள்ள வேணு மெனும் எண்ணம் உண்டாயிற்று.

57, 60 பிறகு போரில் மிக ப்ரகாசமுள்ள பெரிய மிக வலிய, தெய்வத்தன்மை வாய்ந்த [ஆயுதங்கள்] ஆகாயத்திலிருந்து லேலிஹா நாநிபாம்புபோல் வளைந்து வளைந்து மிதந்து இறங்கின. இந்த ஆயுதங்கள் ராக்ஷஸர்கள் மற்றும் மாம்ஸ பக்ஷிணிகளால் பின் தொடரப்பட்டவை நல்லுருவங்கொண்டவை மிகப் பெரியவை, போரில் அரசர் உடல் மாம்சத்தை வண்ண மிகவும் ஆசை கொண்டவை திவ்ய பூமாலைகள் சூடியவை ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் ப்ராணிகளை நடுங்கச் செல்பவை மிக்க ஒளியால் சோலை வீசுபவை, ஆகாயத்திலிருந்து இறங்குபவை.

61. ஸம்வத்ஸரம்' எனும் கலப்பையும் 'ஸௌநந்தம்' எனும் உலக்கையும் 'சார்ங்கம்' எனும் சிறந்த வில்லும், கௌமோதகீ' எனும் கதையும். அந்த நான்கு ஒளிவீசும் விஷ்ணு ஆயுதங்கள் அவ்விரு யாதவர்களின் பொருட்டு மஹாயுத்தத்தில் நன்கு இறங்கின.

62, 63 முதலில் பலராமன் வளைந்து போகும் நாகராஜனைப் போன்றதும் மாலை போன்றதுமுள்ள திவ்ய பூமாலை சூட்டப்பட்ட கலப்பையை போரில் கைக் கொண்டான். யாதவ ச்ரேஷ்டன் ஸ்ரீமான் பலதேவன் பிறகு சத்ருக்களுக்கு துக்கந்தரும் 'ஸௌநந்தம்' எனும் மேலான உலக்கையை இடது கையால் பிடித்தான்.

64, வீரன் க்ருஷ்ணன் மேகசப்தமுடைய உலகங்களிலேயே அழகு மிகுந்த 'சார்ங்கம்' பெயரால் புகழ்பெற்றவில்லைப்பிடித்துக் கொண்டான்.

65 தேவர்களால் ப்ரார்த்திக்கப்பட்ட கார்யத்தையுடைய, தாமரைக் கண்ணன், மற்றொரு கையில் 'கௌமோதகீ' எனும் பெயருள்ள கதாயுதம் வந்து பொருத்தியது.

66. ஸாக்ஷாத் விஷ்ணுவின் திருமேனியைப்போன்ற தோற்றமுடையவரும் ஆயுதங்கள் தரித்தவருமான அவ்வீரர் ராம கோவிந்தர் போரில், சத்ருக்களுக்கு பதில்யுத்தம் செய்தனர்

67 ஒருவரையொருவர் அனுஸரித்து ஆயுதங்கொண்டு அண்ணன் தம்பி எனக்குறிக்கப் படுபவரும் ராமன் கோவிந்தன் எனத் தனிப் பெயருடையவருமான அவ்விரு வீரரும் சத்ருக்களுக்கு தக்க பதில் போர் செய்து ஈஸ்வரனைப் போல் ப்ராக்ரமத்தைக் காண்பித்தனர். வஸுதேவ புத்ரர் அவ்விருவரும் தேவர்கள் போல ஸஞ்சரித்தனர்.

69, 70 கோபமூட்டப்பட்ட வீர ராமன் நாகராஜன் போன்ற கலப்பையைத் தூக்கி சத்ருக்களுக்கு யமன்போல்,போரில் ஸஞ்சரித்தான். மஹாத்மாககளான க்ஷத்ரியர்களது தேர்க்கூட்டங்களை இழுத்து யானைகளிடத்தும் குதிரைகளிடத்தும் தன் கோபத்தைப் பயனடையச் செய்தான்.

72 மலைகளைப் போன்ற யானைகளைக் கலப்பையால் இழுத்து உலக்கையால் அடித்து ஒளிவீசும் ராமன் போரில் கலக்கினான். போரில் ராமனால் தாக்கப்படுகிற க்ஷத்ரிய ஸ்ரேஷ்டர்கள்; பயந்து போர்க்களத்திலிருந்து ஜராஸந்தன் பக்கத்தையடைந்தனர்.

73. க்ஷத்ரிய தர்மத்தில் நிலை நிற்கும் ஜராஸந்தன் அவர்களை நோக்கிச் சொன்னான். போரில் பயந்த உங்கள்க்ஷத்ரியவ்ருத்தியை சீ! சீ! எடு'

74. போரில் தேரில்லாமல் முதுகு காட்டி ஓடுகிறவனுக்கு பொறுக்க முடியாத சிசு ஹத்தி (பாபத்தை) தர்மமறிந்தோர் சொல்கிறார்கள்.

75—77 ஏன் பயந்து திரும்புகிறீர்கள்? இந்தக்ஷத்ரிய வ்ருத்தியை சீ!சீ!சுடு! என் வார்த்தையால் தூண்டப்பட்டு சீக்ரம் (போருக்கு) திரும்பிப் போங்கள் இல்லாவிடில் நான் இந்த ஆயர்களை யம லோகம் அனுப்பும் வரை ரதங்களோடு இங்கு ஒன்றாயிருந்து பார்த்துக் கொண்டிருங்கள்

ஜராஸந்தனுல் தூண்டப்பட்ட எல்லா க்ஷத்திரியர்களும் மகிழ்ந்து அம்புகளைப் போட்டுக் கொண்டு போர் செய்ய முன் வந்தனர்,

78. 79 தங்க ஜேணம் கொண்ட குதிரைகளோடும் மேகசப்தங் கொண்டதேரொடும் பாகர்களால் தூண்டப்பட்ட மேகம் போன்ற யானைகளொடும் கவசம் பூண்டும், வாள்ஏந்தியும், கொடி களொடும், அடையாளங்கள் பொறித்த ஆயுதங்களொடும் நாணேற்றப்பட்ட விற்களொடும் அம்புருத் தூணிகளொடும் கேடயங்களொடும், குடைகளொடும்.

80. வீசப்படும் அழகிய சாமரங்களொடும் போர் களத்தில் வந்து சேர்ந்த அரசர்கள் தேரோட்டியுடன் தேரிலிந்துவிளங்கினர்

81. அந்த போரில் ப்ரியங்கொண்டு ஸ்ரேஷ்டருமான தேர்ப் படையினர் கனத்த கதைகளொடும் எறியக்கூடிய சூலங்கலோடும் [போரில்] புகுந்தனர்,

82, 83 இச்சமயம் அங்கு தேவர்களுக்கு ஆனந்தத்தை வளர்க்கும், க்ருஷ்ணனும் கருடக்கொடியுடைய மேலான தேரில் ஏறி வந்தான். ஜராஸந்தனை எட்டு அம்புகளால் அடித்தான். ஜராஸந்தனின் ஸாரதியையும் ஐந்து கூரிய அம்புகளால் அடித் தான்.

84 வீரன் க்ருஷ்ணன் பதில் [போர் செய்ய] முயலும் ஜராஸந்தனின் குதிரைகளைக் கொல்லவும்செய்தான். ஜராஸந்தனை ஆபத்தில் சிக்கினவனுக அறிந்து மஹாரதன் சித்ரஸேனனும் ஸேனுதிபதி கைசிகனும் க்ருஷ்ணனை அம்புகளால் அடித்தனர்.

85, 86, 87 அங்கு வந்த பலராமனையும் கைசிகன் மூன்று அம்புகளால் அடித்தான். பலராமன் போரில் கைசிகன் வில்லை அம்பினுல் இரண்டாகத் துண்டித்தான். அம்பு மழைகளால் சத்ருக் களை வேகமாகத் துன்புறுத்தவும் செய்தான். நாற்புறமும் [சத்ரு] வீரர்களை பலராமன் [தன்னைச் சேர்ந்தவருடன்] பலருடன் பலபடி யாக அடித்தான். சித்ரஸேனன் பரபரப்புடன் அந்த பலராமனை ஒன்பது பாணங்களால் அடித்தான். கைசிகனும் ஐந்து பாணங் களால் அடித்தான்.

88. க்ருஷ்ணன் அவர்களை மூன்று மூன்று பாணங்களாலும் பலராமன் ஐந்தைந்து கூரிய பாணங்களாலும் அடித்தனர்.

89. வீரன் பலதேவனும் இந்த சித்ரஸேனனின் தேரை வெட்டத் துணிந்தான். வில்லையும் இரண்டாக உடைத்தான்,

90. 92 அந்த வீரன் சித்ரஸேனன் வில்லுடைந்து தேரின்றிப் போனபின் கதையைக் கொண்டு மிக வேகத்துடன் பலராமனைக் கொல்ல ஓடினான். அம்புகளைப் புதிது புதிதாய்ச் செலுத்தி சித்ர ஸேனனைக் கொல்லவிரும்பும் ராமனுடையவில்லை மஹாபலவான் ஜராஸந்தன் ஒடித்தான் மகத தேச ராஜாவும் வீரனும் மஹா பலவானுமான ஜராஸந்தன் கதை கொண்டு பலராமன் குதிரை களைக் கோபத்தால் கொன்றான் ராமனையும் நோக்கி (அடிக்க) ஓடினான்.

93. பலராமனும் உலக்கையைக் கொண்டு ஜராஸந்தனை நோக்கி ஓடினான். ஒருவரையொருவர் கொல்ல விரும்பும் அவ் விருவருள் அத்தகைய பெரிய போர் மூண்டது.

94, பலராமனால் அருகில் நெருங்கி தாக்கப்படும் ஜராஸந்த னைச் சித்ரஸேனனும் அன்ய தேரிலேறி ஜராசந்தனைக் காப்பாற்றி னான். பிறகு ஸேனைகளுடனும் யானைப்படையுடனும் அவ்விருவர் இடையில் கத்ரஸேனன் புகுந்து பிறகு குழப்பம் செய்தான்.

95, 96. பிறகு பெரிய ஸேனையால் நாற்புறமும் சூழப்பட்ட மஹா பலவான் ஜராஸந்தன் ராமக்ருஷ்ணருக்கு முன்னால் உள்ள போஜர்களை நெருங்கித் தாக்கினான்.

97. பிறகு, இரு ஸேனைகளிலும் பொங்கியெழும் ஸமுத்ரம் போல் பெரிய சப்தம் எழுந்தது,

98. ஜனமேஜய ராஜனே! இருஸேனைகளிலும் ஆயிரக்கணக் கில் வேணுபேரி.ம்ருதங்கம், சங்கு இவைகளின் பேரொலி எழுந்தது

99. துள்ளல். தோள்தட்டல் உரக்கக் கூவல் இவைகளின் குழப்பம் எழுந்தது குதிரைக் குளம்புகளாலும் தேர்ச் சக்கரங்களா லும் எழும்பின தூசியும் உயரக் கிளம்பியது.

100. அங்கு சூரர்கள் உயரத்தூக்கப்பட்ட பெரியஆயுதங்கள் நன்கு பிடிக்கப்பட்ட விற்களொடும், ஒருவருக் கொருவர் கர்ஜித் கொண்டும் வீரர்கள் நிமிர்ந்து நின்றனர்.

*101.* தேர்ப்பாகர், குதிரைப்பாகர், காலாட்படை, மிகப் பயங் கொண்ட யானைகள் இவை அந்தப் போரில் ஆயிரக்கணக் கில் அங்குமிங்கும் விரைந்தோடின.

*102.* ஜராஸந்தனது மிக நெருங்கிய பயங்கரப் படைக் கூட்டம் ப்ராணனை விட்டு (முனைந்து) வ்ருஷ்னிகளுடன (போரில்) கலந்தது,

*103, 104.* பிறகு ஜனமேஜயரே! சனி, அனுத்ருஷ்டி பப்ரு விப்ருதுஆஹுகன் இவர்கள் பாதி படையுடன் கூடிய பலராமனை முன்னிட்டு சேதிராஜனாலும், காக்கப்பட்ட சத்ருபடையின் வலது பக்கத்தையடைந்தனர்.

*105.* பாரதா! ப்ரபோ; இடப் பக்கத்திலிருக்கும் மஹாவீரர் களான சல்ய சால்வன் முதலியவர்களால் அம்பு மழை பெய்து, கொல்ல யத்னம் செய்யப்பட்டவர்களான அவகாஹன்! ப்ருது, சங்கன், சத்தியும்னன், விதூரதன் ஆகிய இவர் க்ருஷ்ணனை முன் னிட்டு (மிகுதியான பாதி படையுடன் சேர்ந்தனர்,

*106, 107* பீஷ்மகராஜன், மஹாத்மா ருக்மீ, தேவகன். மத் ரேச்வரன் இவர்களாலும் தக்ஷன் தேசத்து கிழக்கு தேசத்து அரச ராலும் (சேர்ந்து) உயிரை விட்டு (முனைந்து), சக்தி ஹ்ரஷ்டி, ப்ராசம், பாணம், இவ்வாயுதங்களைக் கொண்டு போர் நடந்தது

*108, 109.* சத்யசித்ரகன், ஸ்யாமன், வீரன் யுததானன் அரசர் தலைவன், ம்ருதுரன், மஹாரதன், ஸ்வபல்கன், ஸத்ராஜின் ப்ரஸேனன், இவர்கள் எல்லோரும். பேரிய தம் ஸைன்யத்தால் சூழப்பட்டு சத்ருக்களுடன், போரில் அணி வகுப்பின் கடை பாகத் தையடைந்தனர்.

*110,111.* வேணுதாரி முதலான பல அரசர்களுடன் இதனால் நன்குரக்ஷிக்கப்பட்டு, அணி வகுப்பின் மத்யபாகத்தையடைந்தனர்

**35-ம் அத்தியாயம் முற்றிற்று**

## 36-ம் அத்தியாயம்

## மதுரை முற்றுகை இரு சேனைகளிடையே போர்:

### ஜராஸந்தனுக்கும் பலராமனுக்கும் கதாயுதம் ஜராஸந்தன் தோற்றுத் திரும்புதல்

1. **வைசம்பாயனர் சொன்னார்:** பிறகு வ்ருஷ்ணியாதவர்கள், மகததேச ஜராஸந்தனைப் பின் பற்றிய அரசர்களுடன், மிக பெரிய போர் புரிந்தனர்.

2—4 ருக்மியுடன் க்ருஷ்ணனும்: பீஷ்மகனுடன் ஆஹுகனும்; க்ரதனுடன் வஸுதேவரும் கைசிகனுடன் பப்ருவும்: சேதி ராஜனுடன் கதனும், தந்தவக்தரனுடன் சங்குவும் அப்படியே மற்ற அரசர்களுடன் யாதவர்களும் படைகளுடன் படைகளும் ஜனமே ஜயரே! இருபத்தேழு நாட்கள், கொடிய போர் நடந்தது. ஜனமே கூச்செறியும் போரில் மோதல் உண்டாயிற்று.

5, 6, ஜனமே ஜயராஜனே! யானைகளுடன் யானைகளும் குதிரைகளுடன் குதிரைகளும் காலாட்களுடன் காலாட்களும் தேர்களுடன் தேர்களும் கலந்தும் வீரர்கள் போர் புரிந்தனர். ஜனமே ஜயரே! ஜராஸந்தனுக்கு வ்ருத ராக்ஷனுடன் போர் பயங்கரமாக மயிர் கூச்செறியும் போரில் மோதல் உண்டாயிற்று.

7. க்ருஷ்ணன் ருக்மிணி தேவியின் பொருட்டு ருக்மியைக் கொல்லவில்லை ருக்மியால் விடப்பட்ட அக்னி சூர்யன், இவையின் காந்தியோடும் ஸர்ப்ப விஷத்தொடும் கூடிய அம்புகளை தன் பயிற்சியின் பலத்தால் க்ருஷ்ணன் தடுத்தான்.

8. ஜனமே ஜயராஜனே! இவ்விதம் இந்த இரண்டு ஸேனைகளின் பல்படைக் கூட்டங்களுக்கும் மாம்ஸம் ரக்தம் இவையால் எங்கும் சேறாக பெரும் நாசம் விளைந்தது.

9. அந்தப் போரில், எண்ண முடியாத போர் வீரர்களில் மிக அதிக தலையற்ற முண்டங்கள் நாற்புறமும் உயரக்குதித்தன.

10, 11, பலராமன் தேரிலேறி ஸர்ப்பங்கள் போன்ற பாணங்களால் ஜராஸந்தனைச் சுற்றி எய்து கொண்டு வேகமாகச் சென்றான் அந்த மகத ராஜாவும் விரைவாகப் போகும் தேரேறி வேகமாக ராமனை வளைத்தான்.

12. ஒருவருக்கொருவர் பலவித அஸ்த்ரங்களால் அடித்தடித்து கர்ஜித்தனர் அஸ்தரங்கள் குறைந்து தோற்று குதிரைகளும் ஸாரதிகளும் கொல்லப்பட்டு அவர்கள் கதாயுதங்களை யடுத்து பராக்ரமத்துடன் ஒருவரை நோக்கியொருவர் ஓடினர்

13. உயர்த்தப்பட்ட கதாயுதங்களையுடைய அவ்விருவரும் பூமியை நடுங்கச் செய்து சிகரங்கள் கொண்ட மலைகள் போல உத்ஸாஹத்துடன் காணப்பட்டனர் கதாயுதத்தில் கீர்த்தி பெற்று தோல்வியை கொண்டு பரபரப்புடன் ஓடும்.

15. லோகத்திலேயே சிறந்த கதாயுத வல்லவரும் கிர்த்தி வாய்ந்தவருமான அவ்விருவரும் மதங்கொண்ட யானைகள் போல் போர்களத்தில் ஒருவரையொருவர் தாக்கினர்.

16 பிறகு தேவரும், கந்தருவரும், சித்தரும், மஹர்ஷிகளும், அப்ஸரஸ்ஸுக்களும், ஆயிரக்கணக்கில் எல்லாப் பக்கங்களிலும் (பார்க்கக் கூடினர்.

17. தேவ, யக்ஷ, கந்தர்வ, மஹர்ஷி, இவர்களால் அலங் கரிக்கப்பட்ட போர்க்களம் 'ஜனமே ஜயரே; நக்ஷத்ரக்கூட்டங் களால் ஆகாயம் போல் மிகமிக சோபையுடன் விளங்கியது.

18 மஹாபலவான் ஜராஸந்தன், இடது பக்கமாகச் சுற்றி ராமனை நோக்கி ஓடினான். பலராமனே வலப்பக்கமாகச் சுற்றி ஜராஸந்தனை நோக்கி ஓடினான்.

19. பிறகு, கதாயுத்த வல்லவர் அவ்விருவரும் ஒருவரை யொருவர் தந்தங்கள் கொண்ட யானைகள் போல் அடித்து, பத்து திக்குகளையும் நடுங்கச் செய்தனர்.

20. ராமனது கதையின் வீழ்ச்சி இடி ஒலி போல் கேட்டது ஜராஸந்தனை பிளக்கப்பட்ட மலையொலிபோல் கேட்டது

21. ஜராஸந்தன் கையால் வீசப்பட்ட கதை கதாயுத்த வல்லப ஸ்ரேஷ்டன் ராமனை காற்று விந்த்ய மலையைப்போல் அசைக்கவில்லை.

22. ராமனுடைய கதை வேகத்தையோ, மகதராஜன் வீரத் தாலும், மஹா தைர்யத்தாலும் தாங்கிக் கொண்டு தம் பயிற்சித் திறனால் பலனற்றதாகச் செய்தான்.

23. இவ்விதம் அந்தப் போரில் ஸஞ்சரிக்கிற சத்ருக்களை அடக்கவல்லவரான மஹாபலர்கள் அவ்விருவரும் ஆஸ்சர்யமான சுற்று நடைகளைச் செய்தனர்.

24, வெகு நேரம் போர் பயின்று, ஓய்வு வேண்டியவராகவும் இருந்தனர். ஒரு முஹூர்த்த காலம் இளைப்பாறி, மறுபடியும் ஒரு வருக்கொருவர் போர் செய்தனர்.

25. இவ்விதம் யுத்த முக்ய வீரரிருவரும் ஸமமாகவே வெ
காலம் போரிட்டனர். வரும் போரில் தாழ்வு அடையவில்லை.

26. பிறகு வீரன் ராமன், ஜராஸந்தனின் கதைப்போ
திறமையைப் பார்த்தான் கோபங்கொண்டு கதையை விட்
சிறந்த உலக்கையைப் பிடித்தான்.

27—29அப்போது பெரும் போரில் கோபங் கொண்ட
பலராமனால் பயங்கர தோற்றமுடைய உயர்த்திய வீணுகாந அந்
உலக்கையை, தேவர்கள் பார்த்து, பிறகு ஆகாயத்தில் இனிய ஒலி
யுடைய அசரீரி வாக்கு யாவரும் கேட்க உண்டாயிற்று.உயர்த்திய
கலப்பை ஆயுதத்தையுடைய ராமனைக்குறித்துச் சொல்லிற்று.

"கௌரவம் கொண்ட ராமா! இந்த ஜராஸந்தன் உன்னல்
கொல்லத் தக்கவனில்லை. வருத்தம் வேண்டாம். இவன் மரணப்
என்னுல் அறியப்பட்டது ஆகையால் நல்லவிதமாக [போரை
நிறுத்து ஜராஸந்தன் சீக்ரமே ப்ராணனை விடுவான்.

30, 31 ஜராஸந்தனும் அதைக்கேட்டு மனமுடைந்தான்
ஜனமேஜய மஹாராஜா! போரை அவ்விருவரும் நிறுத்தினர்
வ்ருஷ யாதவர்களும் அரக்கர்களும் அப்படியே இவ்விதம் வெ
காலம் ஒருவரையொருவர் அடித்துக் கொல்லும்மிகக் கொடிய
போர் அடங்கி விட்டது.

32. ஜராஸந்த ராஜா தோற்றடிக்கப்பட்டு திரும்பியதுப்
சூர்யன் மேற்கு திக்கில் மறைந்தான். அப்போதுஇரவில் [யாதவர்
களும்] அவனைப் பின் துரத்தவில்லை.

33, லக்ஷயம் கைகூடிய மஹாபல யாதவர்கள் தங்கள்
ஸேனையை அழைத்துக் கொண்டு கேசவனுல் காக்கப்பட்டு
மகிழ்ந்து நகரைப் புகுந்தனர்.

34,35. ஆகாயத்திலிருந்து இறங்கியஅந்தஆயுதங்களும் இவ்
விதம் அப்போது மறைந்தன. ஜராஸந்த ராஜாவும் மனமுடைந்து
தந்நகருக்குச் [திரும்பிச்] சென்ருன் இவனைப் பின் தொடர்ந்து
வந்த அரசர்களும் தங்கள் தங்கள் ராஜ்யங்களையடைந்தனர்.

36. கௌரவர் வேங்கை ஜனமே ஜயரே! யாதவர்கள்,
ஜராஸந்தனை ஜயித்தும், ஜயிக்கப்பட்டவனுக நினைக்கவில்லை

37—40 அந்த ஜராஸந்தன் மிக்க பலம் வாய்ந்தவனல்லவா! மஹாபலம் வாய்ந்த யாதவர்களும் ஜராஸந்தனுக்கு பதினெட்டு முறை போர் மோதல்கள் கொடுத்தனர். இவனைப்போரில் கொல்ல சக்தியுடையவர்களாகவில்லை. அந்த ஜராஸந்தராஜனுக்கு போருக்காக வந்த அந்தப் படைகள், மஹாமேதை ஜனமே ஜயரே! இருபது அக்ஷௌஹிணி கணக்கில் இருந்தனர். ராஜேந்தரா! பரதரிஷபா! ராஜாக்களுடன் கூடிய ஜராஸந்தனல் யாதவர்களோ எண்ணிக்கைக் குறைவால் அலக்ஷயம் செய்யப்பட்டனர். மஹா ரதரான யாதவஸிம்ஹவகன், போரில் மஹா ராஜா ஜராஸந்தனை ஜயித்து ஸுகமாக விளையாடினர்.

### 36-ம் அத்தியாயம் முற்றிற்று

## 37-ம் அத்தியாயம்

## யதூ யாதுவர், சரித்ரம் ஜராஸந்தனிடம் பயமும் நிவர்த்தி வழியும்

1. **வைசம்பாயனர் சொன்னார்** : பலராமனுடன் சேர்ந்த பலவான் க்ருஷ்ணன், யாதவர்கள் நிறைந்த அந்த மதுரா நகரில், ஸுகமாக வஸித்தான்,

2, 3. ராஜஸ்ரீயோடு கூடின யௌவன தேஹக கட்டுடமைந்த ப்ரபு க்ருஷ்ணன், நீர் நிலைகளைப் பூஷணமாயுடைய மதுரையில் மன மகிழ்ந்து ஸஞ்சரித்தான் சிறிது காலங்கழிந்ததும், ராஜாதி ராஜன். வீரன் ஜராஸந்தன் கம்ஸன் கொல்லப்பட்டதை நினைத்தான்.

4. போரின் பொருட்டு, மறுபடியும் பெண்களால் தூண்டப் பட்டான். மஹாரதரான யாதவர்கள். ஜராஸந்தனுக்கு பதினேழு முறை போர் கொடுத்தனர். போரில் இந்தஜராஸந்தனைக் கொல்ல அவர்கள் சக்தி பெறவில்லை.

5. ஸ்ரீமான் மகதராஜா சதுரங்க படையுடன் திரும்ப பதினெட்டாவது முறை போர் செய்ய முனைந்தான்.

6, 7. அந்த இந்தரன் போன்ற வீரனும் அரசர் தலைவனும் பலவானும், ப்ரஹத்ரதனது மகனுமான ஸ்ரீமான் ஜராஸத்தன், க்ருஷ்ண வதத்தை விரும்பி, மனங்கலங்கி, பெரிய ஸேனையுடன் திரும்ப மதுரைக்கு வந்தான்.

8, 9. எல்லா யாதவர்களும் மகத ராஜன் திரும்பி வந்ததைக் கேட்டு ஜராஸந்தனைக் குறித்து பயத்தால் பீடிக்கப்பட்டு (ஸபை

கூட்டி) ஆலோசனை செய்தனர். நீதியில் சிறந்த அறிவாளி, மஹா தேஜஸ்ஸுடைய (யாதவ) விகத்ரு உக்ரஸேனராஜன் செவிசாய்க்க தாமரைக் கண்ணன் க்ருஷ்ணனை நோக்கிச் சொன்னான்

10—12 ''ப்ரியனே! கோவிந்தா! இந்தக் குலத்தினது உத்பத்தி கேட்கப்படட்டும் சொல்கிறேன் கேள். பிறகு, தக்க காலம் வரும்போது, மனதில் யுக்தமாகப்பட்டால், ப்ரியனே! என் வார்த்தைப்படி செய்வாய், முன் ஆத்ம ஞானியான வ்யாஸரால் எனக்கு, சொல்லப்பட்ட விதமே இந்த வம்சத்தின் உத்பத்தி முழுவதையும் கேள், மனுவம்சத்தில் இக்ஷ்வாகு பிறந்து, இந்த்ரன் போன்ற வீரத்துடன் 'ஹரியச்வன்' எனும்ராஜா இருந்தான்.

13—15 அவனுக்கு, மதுவஸுரன்பெண் ''மதுமதி'' என்பாள் இந்தரனுக்கு சசிதேவீபோல் ப்ரிய பார்யையாக விருந்தாள். அவள்யௌவனகுணமுடையவள்; உலகில் ரூபத்தால் ஒப்பற்றவள் அரசன் மன மறிந்து நடப்பவள். உயிரினும் மேலானவள்; அஸுர ச்ரேஷ்ட குலத்தில் பிறந்தவள்; அழகிய பின்பாகத்தையுடையவள்: விரும்பும் ரூபமுள்ளவள்; ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவள்.

16, 17, ரோஹிணி (சந்தரன் மஹிஷி) போல் ஒரே பதிவ்ரதமுடையவள்; அந்த அழகி இந்த இக்ஷ்வாகு ச்ரேஷ்டனை விரும்பினாள். அந்த [ராஜகுமாரன்] தமையனால் ராஜ்யத்திலிருந்து விலக்கப்பட்டு அயோத்யயைவிட்டே வெளியேறினான்; அன்புடைய தாமரைக் கண்ணனான, அவன் ஸொல்ப பரிவாரத்துடனும் ப்ரியை 'மதுமதி'யுடனும் வனத்தில் காலமறிந்து மகிழ்ந்திருந்தான்:

18—20 ஸஹோதரனால் ராஜ்யத்திலிருந்து விலக்கப்பட்ட அவனைக்குறித்து, தாமரை கண்ணி 'மதுமதி' சொன்னாள். ராஜனே! வா! வா! ராஜ்யத்தைப் பற்றி ஆசையை விடு; வீர! நாமிருவரும் சேர்ந்து, எனது பிதா 'மது'வின் வீட்டிற்குப் போவோம். விரும்பும், புஷ்ப, பழங்களையுடையது அழகிய மதுவனம்' என்பது. அங்கு தேவலோகத்தையடைந்தவர்கள் போல் கூடி விளையாடுவோம்.

21. நீர்என் பிதாவுக்கு ப்ரியமானவர், ராஜனே என் மாதாவுக்கும் அப்படியே. என ப்ரியத்துக்காக என் ஸஹோதரன் லவணனுக்கும் ப்ரியமானவர்.

22. அங்கு நாமிருவர் சேர்ந்து ராஜ்யத்திலிருப்பது போலவே இஷ்டப்படி ஸஞ்சரித்து மகிழ்ந்திருப்போம் அங்கு சென்று

ராஜனே! உமக்கு மங்களம். ஸ்வர்கத்தில் 'நந்தன வனத்தில் போல் களித்திருப்போம்.

23 மஹாராஜனே! கர்வங்கொண்டு நம்மை த்வேஷிக்கும், ராஜ்யக்கொழுப்பால் எப்போதும் மதங்கொண்டிருக்கும் உன் தமயனுன அவனே அறவே விடுவோம்.

24. பணியாள் போல் பிறரைஅண்டியிருப்பதான, நிந்திக்கத்தக்க இந்த (அயோத்யா) வாஸத்தை சீ! சீ! விடு. எனது பிதாவின் வீட்டண்டை போவோம்.

25. தமயனேக் குறித்து நன்கு தெரிந்து கொண்டு மதுமதி யிடம் ப்ரேமை கொண்ட அந்த ராஜனுக்கு பத்நியின் சொல் ருசி யாக விருந்தது.

26. பிறகு புருஷஶ்ரேஷ்டனும் தோழியுமான அந்த ஹரியஶ்வராஜா ப்ரியையுமான பார்யையோடு மதுநகரை அடைந்தான்.

27,28. அந்த ஹரியஶ்வன் அஸுரபதிமதுவினுல் இனிய சொற் களால் வரவேற்கப்பட்டனர். குழந்தை ஹரியஶ்வா! நல்வரவு' உன்னேக் காண்பதால் மகிழ்ச்சியடைந்தேன் மது வனம் தவிர எனது ராஜ்யமுழுதும் உனக்குக் கொடுக்கிறேன். வாஸஸ்தான மாக ஏற்றுக் கொள்ளப்படட்டும்.

29, 30 இந்த மது வனத்தில் இந்த லவணனும் உனக்கு உதவி யாயிருப்பான். சத்ருக்களே யொழிப்பதிலும் பொறுப்பாளியா யிருப்பான். ஆயர்கள் போன்ற ஜனங்களேயுடையதும் ஸமுத்ரம் போன்ற பரந்த நீர் நிலேகள். கொண்டதும் ஆநிறை மிகுந்ததும் மாற்றம் செல்வம் மிகுந்ததுமான இப்படி மங்களகரமாயுள்ள ராஜ்யத்தைப் பரிபாலனம் செய்;

31 குழந்தாய்! இங்கு வஸிக்கும் உனக்கு, பெரிய மலே ப்ரதேச அரண் உண்டு ஸௌராஷ்ட்ர தேச ராஜா வஸிக்கும் தலேநகராகும் ஸமுத்ரம் பக்கத்திலுள்ள நீர் நிலே மிகுந்ததேசமாகையால் வ்யாதி யற்றது மாகும்.

32. [வருங்காலத்தில்] இது பெரிய நீண்ட 'ஆநர்த்தம்' எனப்பெயர் கொண்டராஜ்யமாகும்.

33,34. ராஜனே! காலக்ரமத்தில் இ[illegible]ாகுமென என் எண்ணம். ராஜாக்களின் உத்தம ஒழுக்கத்தைப பின்பற்றி காலத்

துக்கேற்ப இங்கு இரு. உனது வம்சதி யராதிவம்சம் வழிவந்த யாதவ வம்சமாகப் போகிறது. உனது வம்சம் சந்தர வம்சம் போல்கீர்த்தி வாய்ந்ததாகும்.

35. குழந்தாய்! இது என் செல்வம் இந்த மேலான தேசத்தை உனக்குக் கொடுத்து நான் தபஸின் பொருட்டு உப்பு ஸமுத்ரத்தை யடைவேன்.

36. குழந்தாய்! நீ லவணனுடன் சேர்ந்து இந்த மேலான தேசத்தை [முழுவதையும்] தம் வம்ஸ பெருக்கின் பொருட்டு பரிபாலிப்பாயாக"

37, ஹரியஸ்வன் "அப்படியே" என்று சொல்லி அந்த நகரத்தை ஏற்றுக்கொண்டான். அந்த மது அஸுரனும் ஸமுத்ரத்தைத் தவத்துக்காக அடைந்தான்

38, 39 தேவருக்கொப்பான மஹாதேஜஸ்ஸுடைய ஹரியஸ்வனும் உயர்ந்த திவ்ய 'கிரிவா'த்தில் வஸிப்பதற்காக நகர நிர்மணம் செய்தான் 'ஆநாத்தம்! எனும் அந்தத்தேசம் நல்ல ராஜ்யமாகவும் பசுச் செல்வம் கூடியதும் குறுகிய காலத்திலேயே செழிப்புள்ளதாயுமாயிற்று.

40, 41. பயிர் நிலம் நிரம்பியதும் நீர்நிலையுள்ள வனத்தை எல்லையாகயுடையதும், சுற்றிலும் க்ராமங்களையுடையதும், ஆஸ்சர்யமானதும் பரந்ததுமான ராஜ்யத்தை ப்ரஜைகளுக்கு ஆநந்தத்தை மூட்டியும், ராஜ்யத்தை வளர்க்கும் ராஜ தாமத்துடனும் புகழ்பெறப் போற்றி அந்த ராஜா வளர்த்தான்.

42. அந்த மஹாத்மா ஹர்யயவனுடைய நல்லொழுக்கத்தால், அநத தேசம் ராஜ்ய நற்குணம் பொருந்தியதும், சத்ருக்களால் கலக்க முடிடாததாய் ஓங்கி வளர்ந்தது.

43. அந்த ராஜா, ராஜ்யத்திலிருந்துகொண்டு ராஜ ஒழுக்கத்துடன் விளங்குபவனும், நடத்தையாலும், நீதியாலும் குலத்துக்குரிய செல்வம் பெற்றான்.

44. மகப்பேற்றை விரும்பும் தீமானுன நல்லொழுக்கமுடைய அவனுக்கு மதுமதியிடம் 'யது' எனும் பெரும்புகழ் வாய்ந்த பிள்ளை பிறந்தான்.

45. அந்த மஹாதேஜஸ்ஸுள்ள துந்துபியின் (இனிய) குரலு டைய 'யது' ராஜ லக்ஷணம் பொருந்தினவனுகவும். சத்ருக்களால் வெல்ல முடியாதவனுகவும் வளர்ந்தான்.

46. இவனது முன் தோன்றலான பூருஹூராஜா எப்படி பெரிய கீர்த்தியுடனிருந்தாஞே, அப்படியே 'யது' யெனும் புத்ரன் ராஜ லக்ஷணங்களால் கௌரவிக்கப்பட்டவன் ஆனுன்.

47. மஹாத்மா ஹரியச்வனுக்கும் பரம மங்களமானவனும் பலவானும் பூமி நாயகனுமான 'யது' ஒரே புத்ரன் இருந்தான்.

48. அந்த ஹரியச்வன், பூமியில் தர்மத்தால் ஒப்பற்றவனுக பத்தாயிரம் வருஷங்கள் ராஜ்யம் குறைவற நடத்தி, பரலோக மடைந்தான்.

49. பிறகு வள்ளல்தன்மை மிக்க யது பிரஜைகளால் ராஜா வாக அபிஷேகம் செய்யப்பட்டான். ராஜஸ்ரீயை அடைந்த யது பிதா பரலோகம் சென்றதும், முறைப்படி சூர்யன் போல் ப்ரகா சித்தான்.

50. இந்த்ரனுக்கு ஒப்பான யது ராஜன் இந்தப் பூமியை, தீ அளவு, முதலான எல்லா பயங்களும் நீங்க ஆண்டான்.

51. அவனுல் நாம் யாதவர் எனப்படுகிருேம் அந்த யது ராஜா ஒரு ஸமயம் நற்குணங்கள் நிறைந்த மனைவிகளுடன் ரோஹிணி நக்ஷத்ரங்கூடிய சந்த்ரன் போல் ஸமுத்ரத்தில் ஜலக் ரீடை செய்தான்.

52. அக்கரை செல்ல ஆசைகொண்ட அந்த ராஜா திடீரென்று ஸர்ப்பராஜன் "தூம்ரவர்ண"னுல் இழுக்கப்பட்டான் அரஜனை அவன் வேகமாக ஜலத்தில் ஸர்ப்ப நகரத்திற்கு இழுத்துச் செல்லப்பட்டான்.

53—56, ரத்னத்தூண் நாட்டப்பட்ட வீட்டு வாயிலுடைய தும், முத்து மாலைகளால் அலங்கரிக்கப்பட்டதும், வெண்சங்கு தொகுதிகளால், நிறைந்ததும், ரத்னக் குவியல்களால் சோபை கொண்டதும், பவளம் போன்ற தளிறுடன் கூடிய இலைகள் நிறைந்த மரங்களால் விளங்குவதும், கடலுள் வஸிக்கும் நாகப் பெண்கள் கூட்டங்களால் நிறைந்ததும், ஸ்வர்ண நிறமும், சந்த்ர ஒளியுமுடைய ஸ்வஸ்திக் அடையாளங்களால், ப்ரகாசிப்பதும்

பூமியில் நிர்மிக்கப்பட்டது போல, நீரிலுள்ளதுமான பன்ன கேந்த்ர நகரத்தை நிர்மலமான கடல் நீரில் அரசர் தலைவன் யது' பார்த்தான்.

57. ஸர்ப்பப் பெண்கூட்டங்கள் நிறைந்ததும், மேகத் தோற்றமுடையதும் மிக ஆழமரனதும் மிகத் தெளிவான சோலை யுடையதுமான அந்த நகரத்தை அங்கு யது அரசன், புகுந்தான்.

58. ரத்னமயமான தாமரை இலைகளால் நன்கு பரப்பப் பட்டு, தாமரை நூல்களாகிய மேல்விரிப்புடையதுமான ஜலத்தி லுண்டாகிய சிறந்த ஆஸனம் அவனுக்கு அளிக்கப்பட்டது.

59. அந்த உயர்ந்த பந்நகாஸனத்தில் அமர்ந்த யது அரசனைக் குறித்து ஸர்ப்ப ராஜா தூமரவர்ணன் சாந்தமாகப் பேசினான்.

60. 'உம்முடைய பிதா இந்த 'யது' வம்சத்தைப் பெரிதாக்கி தேஜஸ்ஸோடு கூடிய உம்மை அரசராக்கி ஸ்வர்க்கம் அடைந் தான்.

61. ஶ்ரேஷ்டனை யதுவே யாதவரதுஇந்தவம்சம். அரசர்க் கெல்லாம் களஞ்சியமாக. உன் பிதாவால், மங்களத்தின் பொருட்டு, உன் பெயரால் ஸ்தாபிக்கப்பட்டது.

62. ப்ரபுவே? இந்த உன் வம்சத்தில் ரிஷிகள், தேவர்கள், நாகர்கள், இவர்களின் அழிவற்ற புத்ரர்கள், மனிதப் பிறவியராக உண்டாவார்கள்.

63. ராஜஸ்ரேஷ்டனே? எனது இந்த ஐந்து கன்னிப் பெண் கள் ஒழுக்கத்தால் மேலானவர். யௌவனாஸ்வன் தங்கையிடம் உண்டானவர்கள்;

64. இந்தப் பெண்களை (ப்ரஜா பத்யேன கர்மணா) உமது விவாஹ விதிப்படி முறையாக ஏற்றுக் கொள்ளுங்கள், உமக்கு வரத்தையும் கொடுப்பேன். நீர் வரத்துக்குத் தக்கவரென்பது என் கொள்கை.

65. 'பைமர்,' குகுரர்; போஜர்; அந்தகர், யாதவர்; தாசார் ஹர், வ்ருஷ்ணி என அந்த ஏழு குலங்கள் கீர்த்தியடைவார்கள்.

66. அந்த தூம்ரவர்ணன் இந்தரனையொத்த அவனுக்கு கன்யா வ்ரதத்திலிருந்த பெண்களை தாரைவார்த்துக் கொடுத் தான்.

67. அந்த ஸர்ப்ப ராஜன், மகிழ்ந்து எல்லாப் பெண்களும் கேட்கும்படி முறையாக வள்ளல் போல் இவனுக்கு வரத்தையும் கொடுத்தான்.

68. இந்த எனது ஐந்து பெண்களிடத்தும் பிதா, மாதா இருவர் தேஜஸ்ஸையும் கொண்டு ஐந்து பிள்ளைகள் பிறப்பர்.

69. எங்கள் கொள்கை கொண்டு நீருள் ஸஞ்சரிக்கும் இஷ்ட ரூபங் கொள்ள வல்ல அரசர் உனது வம்ஸத்தில் உண்டாவர்''

70. அந்த ஸ்ரேஷ்டனை யது அப்போது வரத்தையும் பெண்களையும் கொண்டு சந்த்ரன் போல்.ஜலத்திலிருந்து வேகமாகமேலே கிளம்பினன்.

71, ஐந்து கன்னிகைகள் மத்தியிலிருக்கும் அரசன் ஐந்து நக்ஷத்ரங்கள் நடுவிலிருக்கும் சந்த்ரன் போல் அங்கு காணப் பட்டான்.

72. அந்த அரசச்ரேஷ்டன் திவ்யமான மாலைகள் பூச்சுகள் உடையனாய், கல்யாண கோலத்துடன் எல்லா அந்தப்புரத்தையும் பார்த்தான்,

73, அந்த ராஜா. நெருப்புப் போன்ற மஹிஷிகளையும் ஸமாதானப்படுத்தி பரமப்ரீதியுடன் தன் நகரை யடைந்தான்.

### 37-ம் அத்தியாயம் முற்றிற்று

## 38-ம் அத்தியாயம்

## ஹிகத்ரு மூலம் யது ஸந்ததி வர்ணனை

1. **வைசம்பாயனர் சொன்னார்:** அந்த அரசன் அந்த நாக மங்கையரிடம்,குலத்தை விளக்கும்மஹா பாஹு முசுகுந்தன பத்ம வர்ணன்,ஸாரஸன், ஹரிதன என ஐந்து வீர ராஜபுத்ரரை உண்டு பண்ணினன்.

2, 3. பூமியில் ஒப்பற்ற வீரன் யதுராஜா பஞ்ச பூதங்களுக்கு [ப்ருத்வி, அப்பு, தேயு, வாயு ஆகாசம்] ஒப்பான இந்த ஐந்து பிள்ளைகளையும் பார்த்துக் கொண்டு மகிழ்ந்திருந்தான்.

4. அந்த மலைகள் போன்ற !எல்லோரும் வயதடைந்து பலத்தால் மதத்தால் சோபிக்கிறவர்கள் பிதா முன்னிலையில் கூறினர்.

5. "அப்பா! நாங்கள் வயது வந்தவராளுேம் பெரிய பல
வாய்ந்தவர்களாக இருக்கிறேம், தங்கள் கட்டளையால் என்
செய்வோம்! சீக்ரம் தாங்கள் கட்டளையிட விரும்புகிறேம்."

6. அந்த மன்னர் புலி, வேகம் கொண்ட புலிபோலுள்
அப்பிள்ளைகளைப் பார்த்து அவர்கள் வீர்யத்தில் உத்ஸாஹ
கொண்டு மிக்க ப்ரீதியுடன் சொன்னுள்.

7, எனது பையன் முசுகுந்தன் விந்த்ய ரிக்ஷவான் எனு
இரண்டு மலைகளின் பக்கலில் மலையை யடுத்து இரண்டு நகரங்களை
முயன்று நிர்மாணிக்கட்டும்.

8. என் பையன் பத்மவர்ணனும் ஸஹ்ய மலையின் மேல்
தெற்கு திக்கையடைந்து ஒரு நகரை நிர்மாணிக்கட்டும்.

9. என்பிள்ளை ஸாரஸன் அந்த மலையின் மேலேயே சம்ப
புஷ்பங்களால் விளங்கும் அழகிய இடத்தில் நேர்த்தியான நகை
நிர்மாணிக்கட்டும்.

10. மஹாபாஹுவான ஹரிதன் எனும் பிள்ளை பச்சை நி
நீருடைய கடலிலுள்ள நாகராஜன் [கொடுத்த] தீவைப் பரிபாலி
பான்.

11. மஹாபாஹுவும் தர்மம் அறிந்தவனுமான என்மூத்
பிள்ளை மாதவன் யுவராஜாவாக யிருந்து தன் ராஜ்யத்தையே ப
பாலிப்பான்.

12. திக்பாலகர்களுக்கொப்பான நான்கு அரசர்கள் எ
லோரும் பிதாவால் அனுமதிக்கப்பட்டுராஜ்ய ஸம்பத்தையடைந்
சாமரம் வீசப்பெற்று அபிஷேகம் செய்து கொண்டு தங்க
தங்கள் இருப்பிடத்தை அடைந்தனர்.

13,14. முறைப்படி அழகுபடுத்த பிற நகரங்களையும்தேடின
முசுகுந்தராஜரிஷி நர்மதைக்கரையில் பயங்கரமான கற்களா
[பகைவர்] நெருங்கமுடியாத கஷ்டங் கொண்ட விந்த்யம
இடைப்பிரதேசத்தை தன் ஸ்தானமாக விரும்பினுன்.

15. அந்த முசுகுந்தனும் அந்த இடத்தை சுத்தம் செய்தான்
ஏகாந்தமாகவும் செய்தான். நர்மதைக்கு நல்ல ஸமமான பால
தையும் கட்டினுன். அளவற்ற நீருள்ள அகிழ்களையும் அமைத்தான்

16. பல பாகங்களில், தேவாலயங்களையும் நிர்மாணித்தான் நராடு வீதிகளையும் மற்றும் தெருக்களையும், மனிதற்கான தனி ஏகளையும்நாற்சந்திகளையும் உத்யானவனங்களையும்அமைத்தான்

17. அரசஸ்ரேஷ்டன் குறுகிய காலத்திலேயே, அந்த நகரை ந்த்ர நகர் போன்ற சோபை கொண்டதாகவும் செல்வம் மிக்க தவும் செய்தான்.

18. தேவஸ்ரேஷ்ட வீரமுடைய ராஜஸ்ரேஷ்டன், இந்த ருக்கு தனது ப்ரபாவத்தைக் கொண்டே மங்களமான பெயரை திட்டான்.

19. அந்த நகருக்கு விந்த்ய மலைத் தாழ்வரையில் பெரிய ற்குவியல்கள் சேர்ந்திருப்பதால் ''மாஹிஷ்தி'' நகர் என்றபுகழ்ப் பயர் பொருந்தும் விந்தியமலைசிகரத்தின் [இரண்டு]பாதத்தின் டையில் மேலானசெல்வம் வாய்ந்த இத்த மாநகரையமைத்தான்.

20, 21. தர்மாத்மா முசுகுந்தன் தேவநகர் போன்ற 'புரிக' னும் நகரையும் நிர்மாணித்தான்.

22, 23. அதில் நூறு உத்யானவனங்கள் இருந்தன 'புரிகை' யெனும் அந்நகர் நோயில்லா ப்ரதேசமான, ரிக்ஷவான மலையைச் சுற்றியுள்ள நதிக்கரையில் நிர்மிக்கப்பட்டது தர்மத்தில்நிலைநிற் தம், தர்மாத்மா அந்தராஜா, தேவர்களால் அனுபவிக்கத் தக்கது' போன்ற மங்களமான அந்த பரந்த நகரங்களையும் பரிபாலித்தான்,

24. ராஜர்ஷி பத்ம வர்ணனும் ஸஹ்ய மலையின் பின்பக்கத் தில் மரங்கொடிகளால் நிறைந்த வேணு நதிக்கரையில் மேலான நகரை நிர்மாணித்தான்

25 நாடு குறுகியிருப்பதைத் தெரிந்து ராஜ்ய முழுதையும் மேலான ஒரே அரண் வாய்ந்ததாகவே அவ்வரசன் அமைத்தான்

26. பத்ம வர்ணனல் அந்த தேசம் 'பத்மாவதம்' என்றும் அந்த நகர் கரவீரம் என்றும் பெயரிடப்பட்டது. பாரத முறைப்படி நிர்மாணிக்கப்பட்டவை அவை. நாட்டு

27. ஸாரஸனுனும் சம்பக அசோக மரங்கள் நிறைந்து செம் மண்ணையுடைய பரந்த அழகிய க்ரௌஞ்ச' நகர் நிர்மாணிக்கப் பட்டது.

28. அந்த நகரைத் தலைநகராகக் கொண்ட செழித்த பெரிய தேசம் வனவாசி யெனப் புகழ்பெற்றது. செல்வம் மிக்கது. எல்லா ருதுக்களின் பலன் கொடுக்கும் மரங்கள் நிறைந்தது.

29. ஹரிதனும் ரத்ன குவியல்கள் நிறைந்ததும்மங்கையர்க்கு மனோஹரமானதுமான ஸமுத்ரத்தீவை நன்கு பரிபாலித்தான் அந்தத் தீவின்மத்குரர் எனும் மீனவர் நீரில் மூழ்கி ஸமுத்திரத்திற்குள் சஞ்சரிக்கும் பங்குகளை எப்போதும் கொண்டு வருகின்றனர்.

31—34 அங்குள்ள மற்ற 'தாஸர்' மீனவர் கூடிக்கூடி நீரில் உண்டாகும் பவழங்களையும், புதிய முத்தையும், எக்காலத்தும் சேகரிக்கின்றனர். படகுகளில் வெகு தூரம் செல்கிற அங்குள்ள 'நிஷாதர்' எனும் மீனவர் கூடிக்கூடி ஜலத்திலுள்ள ரத்னங்களைத் தேடுகின்றனர். ரத்னத்தீவில் வஸிக்கும் அந்த மனிதர் எல்லோரும் எல்லா (ரத்னம் முதலிய சிறந்த பொருள்களை எக்காலமும் சேகரித்துக் கொண்டு, மத்ஸ்ய மாம்ஸத்தையுண்டு ஜீவிக்கின்றனர். வெகுதூரம் செல்லும் (ரத்ன) வியாபாரிகள் வெகு தூரம் (தேசம்) சென்று சேகரித்த தனத்தால் குபேரனை [யக்ஷர்போல்] ஹரிதனையே த்ருப்தி செய்தனர்.

35; இவ்விதம் இக்ஷ்வாகு வம்சத்திலிருந்தே யது வம்சம் பிரிந்தது. மறுபடியும் நான்கு யது புத்ரர்களால், நான்கு கிளைகளாகப் பிரிந்தது

36. அந்த யதுராஜன், யது ஶ்ரேஷ்டன் மாதவனிடத்தில் ராஜ்யத்தை ஒப்படைத்து, பூமியில் சரீரத்தை விட்டு ஸ்வர்க்கம் சேர்ந்தான்.

37. மாதவன் மகன் 'ஸத்பதன்' என்பவன். வீர்யமுடையவன் அரசர்குரிய குணங்கள் பொருந்தியவன்.

38. அவன் அரசனானை ஸத்பதன் மகன் பீமன் என்பவன். மேன்மையுடையவன். பின்பு அரசனானன். இவனால் [வம்சஸதர்கள்] பீமர்கள் எனப்பெயர் பெற்றனர். ஸத்வதனைக் கொண்டு, ஸாத்வதர் எனவும் பெயர் பெற்றனர்,

39. பீமன் ராஜாவாகயிருக்கும் போது; [அயோத்யையில்] ராமன் ராஜாவாக இருந்தான். அப்போது சத்ருகனன் லவணனைக் கொன்று மதுவனத்தையழிந்தான்.

40,41. முன்னாள் அந்த மதுவன இடத்தில் ஸௌமித்ரைமகன் ப்ரபு சத்ருகனன் மதுராபுரியை நிறுவினான். ராமன் பரதன்

ஸுமித்ரை குமாரர், லக்ஷ்மணன், ஸத்ருகனன் இவர்களது காலம் கடந்ததும், [சத்ருக்னல் ஆளப்பட்டு வைஷ்ணவ ஸ்தானமான] மதுவனம் பீமனால் அடையப் பட்டது.

42. இந்த நகர், ராஜாங்க நடவடிக்கை காரணமாக, தன் வஸத்திலேயே நிறுவப்பட்டு தன்னாலேயே நேரில் ஆளப்பட்டது

43. பிறகு குசன் [ராமன் மகன்] ராஜாவாகவும், லவன் யுவ ராஜாவாகவும் இருந்த ஸமயம், பீமன் புத்ரன் அந்தகன் மதுரையில் அரசாண்டான்.

44. அந்தகனுக்கு 'ரேவதன்' எனும் அரசகுமாரன் உண்டானான். ரேவதனுக்கு அழகிய மலைசிகரத்தில் ரிக்ஷகன் எனும் 'ரைவதன்' பிறந்தான்.

45—47 பிறகு ஸமுத்ரக் கரையில் ஒரு பர்வதம் உண்டாயிற்று. அதை 'ரைவத' மலையெனப் பூமியில் சொல்லப்படுகிறது. ரைவதனின் மகன் பெருங்கீர்த்தி வாய்ந்த விஸ்வகர்பன்' அந்த ப்ரபு பூமியில் ப்ரஸித்தி பெற்ற மிகச் சிறந்த அரசனாயிருந்தான். அவனது தேவமங்கையர் போன்ற அழகிய மூன்று மனைவிகளிடம் கேசரா! லோக பாலகர் போன்ற மங்களகரமான நான்கு பிள்ளைகள் பிறந்தனர்.

48—50 வீர்யமுள்ள வஸு பப்ரு, ஸுஷேணன் ஸபாக்ஷன் என யது வீரர்கள், லோக பாலகர் போன்று விளங்கினர். அந்த அரசர்களால், இந்த யாதவ வம்சம் பெருகிற்று க்ருஷ்ணா! அவர்களால் இவ்வுலகில், அரசர் மக்கட்செல்வம் மிகப் பெற்றனர். மகள்குந்தி தேசத்தில்வஸுவிற்குப்ரபுவஸிதேவன்பிறந்தான்பிறகு அந்த வஸு நல்லகாந்தியுடைய இரண்டு பெண்களைப் பெற்றாள்

51, 52 அவர்களுள் ஒருத்தி, பூமியில் ஸஞ்சரிக்கும் தேவதை போன்ற பாண்டு மஹிஷி குந்தீ; மற்றொருத்தி சேதிராஜனின் 'தம கோஷனின் மனைவி க்ருஷ்ணா! உன்தன் வம்ஸசத்துப் பெருமை நன்கு விவரிக்கப் பட்டது என்னால் இது வ்யாஸரிடமிருந்து முன் கேட்கப்பட்டது

53. வம்ஸப் பெரியோருள் சிறந்தவனே! இப்போது மிக மெலிந்த இந்த வம்ஸத்தில் வம்சவ்ருத்தி'யின் பொருட்டு தானாகத் தோன்றியவன் போல அவதரித்தாய்.

54. தேவர்கள் அறியாத ரஹஸ்யங்களையும் அறிந்த ஸர்வஜ்ஞன் நீ எல்லோரையும் வாழ்விப்பனும் நீ ஆக உன்னை நாங்கள்

எல்லோரையும் வாழ்விப்பவனும் நீ ஆக உன்னை இந்நகரவாசியாக மட்டும் மறைத்துச் சொல்ல நாங்கள் சக்தரல்ல.

55. ப்ரபுவே! ஜராஸந்த அரசனை போரில் வெல்ல நீ சக்தியுடையவனும் கூட, நாங்கள் எல்லோரும் உன் புத்தியைப் பின் பற்றுபவராய் யுத்த வீரர் வ்ரதத்தில் இருக்கிறோம்.

56—57 பலவான் ஜராஸந்தனும் அரசர்களுக்கு தலைமை வஹிக்கிறான். அளவிட முடியா ஸேனை பலமுடையவன். நாமோ குறைந்த ஸாதனத்தை யுடையவர் இந்த நகரம் ஒரு நாள்கூட முற்றுகைத் தடையைத் தாங்காது. பக்குவப்பட்ட உணவுகளும். பக்வம் செய்ய விலகும் மிக மிகக்குறைவு சுற்றி அரண் காவல் வைக்கப்படவில்லை.

58. அகழியில் நீர் நிரப்பி முன்னேற்பாடு செய்யப்படவில்லை வாயில்களில் யந்ரங்கள் வைக்கப்படவில்லை. மதில்கள்ப்ரகாரங்கள் மிக விஸ்தாரமாகச் செய்யப்படவேண்டும்.

59. படைவீடுகள் சீர்திருத்தம்செய்யப்படவேண்டும்செங்கற் கட்டிடங்கள் கட்டப்பட வேண்டும். முன்னர் கம்ஸன் தன்பலத்தால் [இந்நகரை] அனுபவித்துக் கொண்டிருந்ததால் காவல் ஏற்பாடுகள் அதிகம் செய்யப்பட வில்லை.

60–62 கம்ஸன் திடீரென வீழ்த்தப்பட்டு நம் பழய ராஜ்யம் புதிதுபோல உதித்திருப்பதால் நகர் ஜராஸந்தன் முற்றுகையைத் தாங்காது. தாக்குதலால் பிளவுபட்ட ஸேனை சத்ருக்களால் இழுக்கப்பட்டு இந்த ராஜ்யமும் ஜனங்களுடன் கூட நாசமடையும் சந்தேகமில்லை. ராஜ்யம் ஆசையுள்ளவர் ஜயிக்கப்பட்டு விரோதிகள் எல்லோரும் யாதவர்களிடம் பிளவை விரும்புகின்றனர். எது உசிதமோ அது செய்யப்படட்டும்.

63. ஜராஸந்தனிடம் பயத்தால் [போரைவிட்டு] ஓடுகின்ற ராஜாக்களுக்கு ராஜ்ய பரபரப்பில் (போர்க்களக்கத்தில்) தர்மராஜா என்ற காரணங் கொண்டு நாம் ஏமாற்றப்படுவோம்.

64. கேசவா! நம் நகரில் முற்றுகையிடப்பட்ட எல்லா ஜனங்களும் யாதவர்களின் விரோத காரணம் [கம்ஸன் கொல்லப்பட்டதால்] நாசமடைந்தோம் என மனம் வருந்தி சொல்வார்கள்.

65. க்ருஷ்ணா! இது என் கொள்கை விசுவாஸத்தால் சொல்லப்பட்டது முன் கூட்டியே விஜ்ஞாபித்துக் கொண்டேன். உனக்குத் தெரியாததைச் சொல்லவில்லை.

66, க்ருஷ்ண! இந்த விஷயத்தில் தங்களுக்கு எது தகுதியாக படுகிறதோ அது செய்யப்படட்டும் இந்த ஸேனைக்கு நீர் தலைவர் நாங்கள் உம்முடைய கட்டளையில் நிற்கிறோம். இந்த விரோதம ஏற்பட்டதிற்கு நீரே காரணம். உம்முடன் கூடி எம்மையும் காப்பாற்றும்:''

**38ம் அத்யாயம் முற்றிற்று**

## 39ம் அத்தியாயம்

## விகத்ருவின் யது ஸந்ததி வர்ணனை தொடர்ச்சி

### ராமக்ருஷ்ணர் தென்திசை யாத்ரை : பரசுராமர் ஸந்திப்பு

1. **வைசம்பாயனர் சொன்னார்:** பெருங்கீர்த்தி வாய்ந்த வஸுதேவர் விகத்ருவின் வார்த்தையைக் கேட்டு மிக மகிழ்ச்சி கொண்டமனதுடன் கீழ்வரும் வார்த்தையைச் சொன்னார்.

2 ''க்ருஷ்ண! அறு குண விஷயங்களும் மந்த்ராலோசனையும் கொண்ட ராஜநீதியையும் அதனால் வரும் நன்மையையும் புத்தி மான் விகத்ரு சொன்னான்.

3. யாதவ ஸ்ரேஷ்டனே! விகத்ருவினால், ராஜதர்மங்களும், ஜகத்துக்கு ஹிதமான உண்மைகளும் சொல்லப்பட்டன எது நன்மையோ அது செய்யப்படட்டும்.

4. பிதாவின் இந்த வார்த்தையும் விகத்ருவின்மேலான சொற் களையும் மிக்க கவனத்துடன் கேட்டு புருஷோத்தமன் க்ருஷ்ணன் சொன்னான்.

5, காரணத்தொடும் முறைப்படியும் நீதியுடனும், சாஸ்த்ரங் களுக்கு இணங்கவும். தெய்வத்தை அனுசரித்தும் சொல்கிற உங்கள் வார்த்தை கேட்கப்பட்டது.

6. நான் சொல்லும் பதிலை கேட்டபின் அங்கிகரிப்படட்டும். அரசனால் முறைப்படிநியாத்துடன் வார்த்தை சொல்லப்பட வேண்டும். ஸமாதானம், சண்டைபோரில் முன்னேறுதல் அல்லது பின்வாகுதல், பலத்துடன் ஒரே நிலையில் நிற்றல் மித்ர பேதம் செய்தல், சரணாகதி செய்தல், இந்த ஆறு ராஜ தத்வங்களை எப் போதும் யோசிக்க வேண்டும்.

7, 8. பலமிக்குள்ள சத்ருவின் ஸமீபத்தில் புத்திசாலியால், இருக்கத்தக்கதில்லை. சமயமறிந்து இடத்தைவிட்டு விலகவேண்டும்

9. பலம் மிக்கவன் போரிட முற்பட வேண்டும். நான் சக்தி வானாயிருந்த போதிலும் அசக்தனைப் போல் உயிரைக் காக்க வேண்டி இந்த நல்ல முஹூர்த்தத்தில் அண்ணனுடன் வெளி யேறுவேன்,

10, பிறகு ஸஹ்ய மலைபக்கத்திலுள்ள சோலையுடைய குறைவற்ற தென்னாட்டை ஈருடலும் ஒருயிருமாகிய அண்ண னுடன் நான் புகுவேன்.

11. அங்கு கரவீர நகரையும் அப்படியே அழகிய க்ரௌஞ்ச நகரையும் சிறந்த கோபமந்த மலையையும் நாங்கள் இருவரும் சேர்ந்து பார்ப்போம்.

12. எங்கள் வெளியேற்றத்தைக் கேட்டு வெற்றியல் விளங்கும் அந்த ஜராஸந்த ராஜா நகரத்தில் நுழையாமல் திமிர் காரணமாகஎங்களைப் பின் தொடர்வான்.

13. பிறகு அந்த ராஜா தன்னைச் சேர்ந்தவருடன் அந்த ஸஹ்ய மலைக் காடுகளில் செல்வான் எங்களைப்பிடிப்பதிலும்ராஜா முயல்வான்.

14. எங்கள் இந்த யாத்ரை யாதவகுலத்திற்கும் நகர மக்க ளுக்கும் பிறகுநகருக்கும் தேசத்துக்கும் ஸுகத்தைக் கொடுக்கும்.

15. புகழ் கொண்டதாகும். சத்ருவிடமிருந்து நழுவிய ஜரா ஸந்தன் போன்ற ராஜாக்கள் ஜயம் பெற விரும்பி போரில் பிற ராஜ்யங்களில் சத்ருக்களின் அழிவில்லாமல் சாந்தியடைய மாட்டார்கள்.''

16. இப்படிச் சொல்லி க்ருஷ்ணனும் பலராமனுமான ஸமர்த்தரான வீரர்கள் பரபரப்பில்லாமல் தென்னாட்டை யடைந்தனர்.

17. அழகிய ரூபமுடைய அவ்விருவரும் நூற்றுக்கணக்கான ராஜ்யங்களில் ஸஞ்சரித்துக் கொண்டு, தெற்கு திசை நோக்கி சிறந்த வழியல் சென்று ஸுகமடைந்தனர்.

18. அழகிய ஸஹ்ய மலையின் மேல் பாகங்களில் இருவரும் சந்தோஷத்துடன் ஸஞ்சரித்து தொடர்ந்து தெற்கு நோக்கிப் போகும் வழியையடைந்தனர்.

19. அவர்களும் குறுகிய காலத்தில் ஸஹ்யமலையால் அலங்கரிக்கப்பட்டதும் தம் வம்சத்தாரால் விளங்குவதுமான கரவீர நகரை யடைந்தனர்.

20. அவர்கள் அங்கு சென்று வேணுநதிக்கரையின்முடிவிலுள்ள விழுதுகள் நிறைந்த வ்ருக்ஷ ஸ்ரேஷ்டமான ஆலமரத்தை அடைந்தனர்.

21. அந்த மரத்தின் கீழே மந்த்ரமலையிலிருக்கும் சூர்யனைப் போல் வீற்றிருக்கும் பரசுராமரை அவ்விருவரும் சேர்ந்து பார்த்தனர். அவர் மேலான தபோதனத்தையுடையவர்.

22, 23, 24. தோளில் தொங்கும் கோடரியைக் கொண்டவர் ஜடையையும் மரவுரியையும் தரித்தவர். வெண்ணிறத்தவர்; அக்னி ஜ்வாலை போன்ற தோற்றம் சூர்யன் போன்ற தேஜஸ் க்ஷத்ரியர்களை அழித்தவர் கலக்க முடியாதவர் உருவெடுத்த கடல் போன்ற கம்பீரமுடையவர். அக்னி கார்யங்களைச் சுருக்கிக் கொண்டவர், காலத்தில் ஹோமம் செய்பவர் த்ரிகால ஸ்நாநம் நீரால் நனைந்தவர். ஆதி தேவகுரு ப்ரஹஸ்பதிபோன்றவர் மஹேந்தரகிரியில் வசிப்பவர்.

25. ஹோமம் பொருள்களையும் மற்றும் வேண்டியவற்றையும் கொடுக்கவல்ல 'க்ஷீராணி' எனும் கன்றுடன் கூடிய வெண்ணிறப்பசுவை கையில் பிடித்து வந்து கொண்டிருந்தார் அப்போது ராமக்ருஷ்ணர் பார்த்தனர்.

26. வஸுதேவரின் அவ்விரு வீர புத்ரர் பரசுராமரைப் பார்த்து முறைப்படி திருவடியை நோக்கி அஞ்சலி செய்து ஹோம குண்டத்தில் ஜ்வலிக்கும் அக்னிபோல் விளங்கி நின்றனர்.

27. சொல்லின் செல்வனும் லௌகிக விஷயங்களில் நிபுணனுமான க்ருஷ்ணன் ரிஷிபுங்கவரான பரசுராமரை நோக்கி இனியதும், ம்ருதுவானதுமான வார்த்தைகளைச் சொன்னான்.

28. 'பகவானே! நீர் ஜமதக்னி புத்ரர் முனிஸ்ரேஷ்டர் க்ஷத்ரிய குல நாசகர், ப்ருகுகுலத்து ராமர் எனும் பெயர் பொருந்தியவர். இப்படி உம்மை அறிவேன்.

29. பார்க்கவரே! அம்பு வேகங்கொண்ட உம்மால் அம்பெய்து ஸமுத்ரம் தூரத்தள்ளப்பட்டு 'சூர்டார்கம் எனும் நகரம் நிர்மாணிக்கப் பட்டது.

30. ஸஹ்ய மலை தாழ்வரையில் ஸமுத்ரக் கரையைத் தள்ளி மற்றொரு கரையை வைத்து ஐநூறு வில்லடி தூர நீளமும் ஐநூறு அம்படி தூர அகலமும் உள்ள விஸ்தாரமான பெரிய தேசம் அமைக்கப்பட்டது.

31, 32. பிதாவின் மரணத்தை மனதில் கொண்டு உம்மால் கார்த்த வீர்யனது ஆயிரங்கைளாகிய காடு உமது ஒரு கோடரி யாலேயே வெட்டப்பட்டது.

33. உமது கோடரியால் சத்ருக்களை அழிக்க வல்ல க்ஷத்ரிய வீரர்களின் ரத்தம் சிந்தப்பட்டு, இந்த பூமி இன்னும் ரத்தச்சேர் படிந்திருக்கிறது. உம்மை இப்புவியில் ரேணுகா தேவியின் மக னாகவும், க்ஷத்ரியர்களிடம் க்ரோதம் கொண்டவராகவும் நான் அறிகிறேன்.

34, 35. இங்கு எப்படியோ அப்படியே போரிலும்கையில் கோடரி உள்ளது. ஆதலால் ப்ராஹ்மணரே? உம்மிடம்ஒருவிஷயம் கேட்க விரும்புகிறேன் எங்களுக்கு யமுனைக் கரையில் விளங்கும் மதுரை நகர் சொந்த ஊர்.

36, முனி ஸ்ரேஷ்டா! நாங்கள் யதுகுலத்தவர். தாங்கள் கேட்டிருக்கலாம் உத்தம ஒழுக்கமுள்ள வஸுதேவர் எங்கள் பிதா பிறந்தது முதல் நாங்கள் இருவரும் கம்ஸன் பயத்தால் ஆய்ப்பாடி யிலேயே இருக்க நேர்ந்தது. பயத்துடனேயே வளர்க்கம்பட்டோம்

38, 39. முக்ய பர்வமான யௌவன பர்வமடைந்ததும் மதுரையில் புகுந்தோம் அந்த நாங்கள் மரியாதை மீறிய கம்ஸனை பொதுக் கூட்டத்தில் பலத்தால் கொன்று அங்கேயே அவன் பிதாவை ராஜாவாக ஸ்தாபித்து பசுக்களுடன்திரிபவராய் எங்கள் சொந்த தொழிலைச் செய்கிறோம்

40. பிறகு எங்கள் நகரை முற்றுகையிட ஜராஸந்தன் முன் வந்தான். மிகப்பெரிய யுத்தங்கள் செய்து தானாகவே லக்ஷ்யம் (ஜராஸந்தன் திரும்புதல்) கைகூடியும் எமது நகரின் லக்ஷணத்தை யும் ப்ரஜைகளின் லக்ஷணத்தையும் மனதில் கொண்டு உத்தம வ்ரதம் உடையவரே!

41. நாங்கள் கார்யம் செய்து முடிக்காது முயற்சியும் அற்று சேனுபலம் மற்றஸாதஸாதனங்களைசெய்யவேண்டியநேரில்லாமல் பாதசாரிகளாய் போரில் கவசம் ஆயுதம் இவையில்லாது ஜராஸந் தனின் முயற்சி பயத்தால் நகரினின்று இருவராக வெளிவந்தோம்.

42, 43. முனிவரே! இவ்விதம் நாங்கள் உம்மிடம் வந்துள்ளோம். எங்களுக்கு ஆலோசனை மாத்ரத்தில் உபகாரம் செய்ய வேண்டும்''

44. ரேணுகா தேவி புத்ரர் பார்கவ ராமர் இதைக்கேட்டு தோஷமற்ற அவர்கள் வார்த்தைக்கு தர்மத்துடன் கூடிய பதிலுரைத்தார்,

45. ''ப்ரபோ! க்ருஷ்ணா! நான் சிஷ்யரில்லாமல் தனியாகவே உங்களுடைய ஆலோசனை காரணமாகவே அக்கரையிலிருந்து இப்போது தான் இங்கு வந்தேன்.

46, தாமரைக் கண்ணா! ஆய்ப்பாடி வாஸமும் அஸுரர் வதமும், துராத்மா கம்ஸன் கொல்லப்பட்டதும், என்னால் அறியப்பட்டது.

47 புருஷோத்தமா! அழகியமுகனே! ஜராஸந்தன் விஷயத்தில் ப்ராதாவுடன் கூடிய உன் தன் விரோதத்தையுமறிந்து இங்கு வந்திருக்கிறேன்.

48 க்ருஷ்ணா! உன்னை ஜகத் ரக்ஷகனாகவும் குறைவற்ற ப்ரபுவாகவும், தேவகார்யத்துக்காக பாலனாகத் தோன்றினும், (உண்மையில்) பாலனல்லாதவனாயும் யான் அறிவேன்.

49. மூன்று உலங்களிலும் உன்னால் அறியப்படாதது ஒன்றுமில்லை. ஆயினும (உன்னிடம்) பக்தி மாத்ரத்தாலேயே உனக்குச் சொல்கிறேன்.

50, வார்த்தையைக்கேள், 'கோவிந்தா! கரவீரபுரம் எனும் நகரம் முன்னர் உனது மூதாதையரால் நிறுவப்பட்டது. இந்த ராஜ்யமும் அமைக்கப்பட்டது.

51. க்ருஷ்ணா! இந்த நகரில் பெரும் புகழ் பெற்று ஸதா பெருங்கோபங் கொண்ட வாஸுதேவன் எனும் ராஜா 'சருகாலன் எனக் கீர்த்தி பெற்றவன்.

52. கோவிந்தா! வீர! அந்த ராஜாவால் த்வேஷம் காரணமாக, உன் வம்சத்தில் உதித்த பங்காளிகளான எல்லா ராஜாக்களும் கொன்று அழிக்கப்பட்டனர்.

53,54. ஸதா அகங்காரமுடையவன் மிகப் பொறாமை கொண்டவன், ராஜ்யத்தாலும், செல்வத்தாலும்மதம் கொண்டவன், தன்

பிள்ளைகளிடத்தும்கொடியவன். புருஷச்ரேஷ்டனே! ஸதா ரா
வால் த்வேஷிக்கப்பட்ட கோரமான இந்த கரவீரநகரில், உ
இருப்புஎனக்கு இஷ்டமில்லை. சொல்கிறேன்கேட்கப்படட்டும்.

55. சத்ருக்களைத் துன்புறுத்தும் நீங்கள் இருவரும், பலமி
ஜராஸந்தனை எங்குபோர்செய்வீர்களோ, அந்தஇ'-த்தைச் செ
கிறேன்.

56. இன்றே இந்த புண்யமான வேணு நதியைக் கைகள
(நீந்தித்) தாண்டி, தேச எல்லையில் அடைய முடியாத மலை
வாஸத்திற்காக அடைவோம்.

57. மாம்ஸ பக்ஷிணிகளான கொடுந்தொழில் திருடர்களு
இருப்பிடமான ஸஹ்ய மலையின் தொடரான யஜஞ்ய கிரி
அடைவோம்,

58. பலவித மரங்கொடியுடையதும், பூத்த மரங்
கொண்டதும் விசித்ரமுமான 'கட்வாங்கம்' எனும் நதிக்கரைய
ஓரிரவு தங்குவோம்.

59. உனக்கு மங்களம் கூழாங்கற்களை பூஷணமாகவுடை
கங்கை வேகமாக ஓடுவது போன்று பெரிய மலையிலிருந்து கீ
விழும் நதிக்கரையில் ஓரிரவு தங்குவோம்.

60. தபஸ்விகளை பூஷணமாகவுடைய அந்தக் காட்டில் அ
நதியின். நீர் வீழ்ச்சியைப் பார்ப்போம். அங்கு இந்தக் காக்ஷிகளை
பார்த்து, மேலும் சென்று அந்த மலைகளைக் காண்போம்.

61. அங்கு மேலான அடக்கமுடைய ப்ரஹ்ம ரிஷிகளையு
காண்போம். க்ரௌஞ்ச புரம் எனும் மேலான அழகிய நகரைய
அடைவோம்,

62. க்ருஷ்ண! அங்கு உன் வம்சத்தில் பிறந்த ராஜா ஸ
தர்மிஷ்டன் 'மஹாகபி' யென க்யாதி பெற்றவன் வனவாஸ
எனும் நாட்டுக்கு ராஜா அந்த ராஜாவைப்பார்க்காமலேயே அங்
இருந்து கொண்டு பகல் மறைந்தும் அங்கு—தங்குவதன்பொருட்
'ஆனருஹம்' எனும் புண்ய தீர்த்தத்தைச் சேர்ந்து இருப்போம்.

64 அங்கிருந்து புறப்பட்டு ஸஹ்யமலையின் இடைவெளியி
பல சிகரங்களால் விளங்கும் 'கோமந்தம்' எனும் புகழ் பெற்
மலையையடைவோம்; ஸ்வர்க்கம் வரை உயர்ந்தது.

65. ஒரு சிகரம் பறவைகளால் ஏற முடியாதது தேவர்களுக்கு இளைப்பாறுமிடம். நக்ஷத்ரங்களாலும் சந்த்ரசூர்யர்களாலும் சூழப்பட்டது, ஸ்வர்க்கத்துக்குப் படிக்கட்டு போன்றது.

66. ஸ்வர்க்க மலைபோல் உயர்ந்தது தேவ விமானங்கள் இறங்குமிடம். இரண்டாவது மேரு மலை போன்றது,

67. அந்த மலையில் உயர்ந்த பெரிய சிகரத்தில் தாண்ட முடியாத தீவுகளைப் பூஷணமாகவுடைய தேவ ரூபமுடைய ப்ரகாசிக்கும் ஜ்யோதி ஶ்ரேஷ்டரான சந்த்ர சூர்யர் அஸ்தமிப்பதையும், உதிப்பதையும், வீசும் அலைகள் கொண்ட ஸமுத்ரத்தையும், பார்த்துக் கொண்டு அந்த மலைச் சிகரத்தில் ஸுகமாக ஸஞ்சரிப்பீர்கள்

69. அந்த கோமந்த மலையின் சிகரத்திலிருந்து கொண்டு வனத்தில் திரிபவர்களாய் துர்க்க யுத்த முறைப்படி மலைப்ரதேச யுத்தம் ஓடுகிறவர்களாய் ஜராஸந்தனை வெல்வீர்கள்.

70. அங்கு மலையிலிருக்கும் உங்களைப் பார்த்து, யுக்த மதங் கொண்டு ஜராஸந்தன் மலைப்போர் செய்ய முற்படுவான்.

71—73 அங்கு கோர யுத்தம் தொடங்கினதும் உங்களுக்கும் ஆயுதங்கள் சீக்ரமாகவே அடைதலைப் பார்க்கிறேன் க்ருஷ்ண! அங்கு யாதவர்களுக்கும் மற்ற அரசர்களுக்கும் ரக்த மாம்ஸங்களால் சேறுகிய பெரியபோர் தேவர்களால் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அங்கு சக்ரம், கலப்பை கௌமோதரி யெனும் கதை ஸௌனந்தம் எனும் உலக்கை அப்படியே விஷ்ணு ஆயுதங்கள் எல்லாவற்றையும் தாமே காட்டப்போகின்றன.

74—76 போரில் கொல்லப்பட்ட ராஜாக்களின் ரத்தத்தை யமன் போன்ற தேஹத்துடன் குடிக்கவும் போகின்றன. க்ருஷ்ண! சகரமுசலம் எனச் சொல்லப்பட்ட கீர்த்தி பெற்ற அந்தப்போர் தேவதைகளால் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த யுத்தம் யமனது கட்டளைப்படியானது. க்ருஷ்ண! தேவ நிர்வாஹகனே! அந்தப் போரில் உமது மிகத் தெளிவான விஷ்ணு ரூபத்தை எல்லா சத்ருக்களும், தேவர்களும் காண்பார்கள்.

77—80 க்ருஷ்ண! அந்தக் கதையையும் வெகுகாலம் மறக்கப்பட்ட சக்ராயுதத்தையும் தேவர்களின் வெற்றியின் பொருட்டு, ஸ்வயரூபத்துடன் அடைவாயாக லோகத்தால் பூஜிக்கத்தக்க இந்த பலராமனும் சத்ருக்களைப் பிளக்கும் உலக்கையும் பயங்கரமான

கலப்பையும் தேவ சத்ருக்கள் அழிப்பதற்காக அடையட்டும் க்ருஷ்ண! பூதேவியின் பொருட்டு பாரம் இறக்குவதில் பூ பாலர் களுடன் இது முதல்யுத்தம் என்று தேவர்களால் சொல்லப்பட்டது ஆயுதம், விஷ்ணு ரூபம், லக்ஷ்மி, தேஜஸ்ஸு சத்ருக்களின் வ்யூ ஹங்களைத் தகர்த்தல் இவையெல்லாம நீ அடைதல் இங்கேயே

81—83 க்ருஷ்ண! இது முதல் பூமியில் ஆயுதங்கள் கலந்த 'பாரதம்' எனும் பெயர் கொண்ட பயங்கரமான பெரிய போர் வரப்போகிறது. ஆதலால் க்ருஷ்ண! மலையரசனுன சிறந்த கோமந்த மலையை அடைவாயாக ஜராஸந்தன் போரில் வெற்றி உமது பக்கல் உள்ளது. ஹோமதேனுவின் அம்ருதம் போன்ற இனிய இந்தப் பாலையும் குடித்து நான் சொன்ன வழியாகவே செல்லுங்கள் உங்களுக்கு மங்களம்.

**39-ம் அத்தியாயம் முற்றும்**

## 40-ம் அத்தியாயம்

1. **வைசம்பாயனார் சொன்னார்**: பிறகு அவ்விரு யதுஸ்ரேஷ் டரும் ஹோமதேனுவின் அந்தப் பாலைப் பருகி பரசுராமனுடன் கூடப் புறப்பட்டனர்.

2. சொல்லின் செல்வரானஅவ்விருவரும் 'கோமந்த'பர்வதத் தைப் பார்க்க பரசுராமரால் சொல்லப்பட்ட மார்க்கமாக மதங் கொண்ட கஜேந்திரர் போல் சென்றனர்.

3. தேவர்கள் ஸ்வர்க்கத்தை ப்ரகாசப்படுத்துவது போன்று பரசுரபமரோடு மூவரான, அம்மூவரும், மூன்று அக்னிகள் போல் வழியைச்சோலையடையச் செய்தனர்.

4. பிறகு அம்மூவரும் நாள் க்ரமத்தில் க்ரமமான வழியாக, தேவர்கள்மந்ரபர்வதத்தைப்போல் கோமந்த மலையையடைந்தனர்

5. அம்மலை, கொடிகளால் அழகாகவும் விசித்ரமாகவும் உள்ளது. பலவித மரங்களால் விளங்குவது நானுவித வாஸனை மரங்களால் வ்யாபிக்கப்பட்ட இடங்களையுடையது மனதைக் கவரும்.

6. அசோகமரங்களால் வியாபிக்கப்பட்ட இடங்களை உடையது மனதைக்கவரும்அசோகமரங்களால்அழகியதுவண்டுக் கூட்டங்கள் மிகுந்தது மரங்களை அணுக்கடினமான கற்கள் கொண்டது. மேக சப்தமுடைய மதங்கொண்ட மயில்களின் கோஷங்கள் நிறைந்தது.

7. ஆகாயத்தைத் தொடும் சிகரங்கள் மேகங்களைத் தொடும் மரங்கள்; மதங்கொண்ட யானைகளின் தந்த முனைகளால்உராய்ந்த அடையாளங் கொண்ட கற்கள் இவையுடையது.

8. பறவைகளின் சப்தத்தால் நாற்புறமும் எதிரொலி கொண்டது குகைகளினின்று வரும் நீர் வீழ்ச்சி ஒலி நிறைந்தது

9. அப்படியே புலிகளின் சப்தமும், நிலக்கற்களின் குவியல் களால் அம்மலை பலவர்ணமுடைய மேகம் போல் தோன்றுகிறது தாதுப் பொருள்கள் நீரோடு கலந்து அம்மலை சந்தனம் பூசப் பெற்றது போல் உளது. தாழ்வரைகல் நீர் வீழ்ச்சிகள் பூஷணமாக வுள்ளன.

10. ப்ரகாசமுடைய தேவகணங்களால் நிறைந்தது. மைநாக ப்ர்வதம் போல் இஷ்டப்படி சொல்லக் கூடியது. மிக உயரமானது மிக விசாலமான உச்சியையுடையது. உச்சியிலிருந்து அடிவரை நீர்ப்பெருக்குடையது.

11. காடு, குகை, சிகரம், இவைகளையுடையது வெண் மேகக் கூட்டங்களை பூஷணமாகவுடையது; பலா, காட்டுமா,நாட்டுமா தினிசம் மூங்கில், சந்தனம் இந்த மரங்களுடையது; மாவிலங்க. மரம் ஏலமரம் இவை கொண்டது; மிளகு மற்ற செடிகளுடன் கூடியது.

12. திப்பிலிக் கொடி எங்கும் படர்ந்தது. இலுப்ப மரங் களால் அழகானது. ஆச்சா மரங்களால் எங்கும் சோபிக்கிறது உயர்ந்த ஸால வ்ருக்ஷங்களுடன் கூடியது

13. அழகான பல வனங்களையுடையது. வெண்தேக்கு வேப்பு இந்த வனங்களையுடையது. பாதிரி மரக்கூட்டங்கள் நிறைந்தது. கூந்தல் பனை, ஆச்சா, புன்னை, இம்மரங்களால் சோபையுள்ளது.

14, 15. நீர் நிலைகள் நீரில் உண்டாகுமவற்றால் நிறைந்தன. தரையிலுண்டாகுமவற்றாலும் நிறைந்தன. தாமரைகளாலும் மரக் கூட்டங்களாலும் நாற்புறமும் அலங்கரிக்கப்பட்டது.

16 நாவல்மரம் ஐம்பூல மரம் ஆகியவை நிறைந்தது. சத்ரு கந்தல மரங்களால் விளங்குவது சம்பக அசோக வ்ருக்ஷங்கள் மண்டியது. வில்வ திந்துக மரங்களால் சோபையுடையது

17. செடி கொடி அடர்ந்த தங்குமிடங்களாலும் நாகபுஷ் களாலும் நாற்புறமும் விளங்குவது யானைக் கூட்டங்கள நிறைந்தது மான் கூட்டங்களால் அழகியது.

18. சித்தர், சாரணர்; ரக்ஷஸ்ஸீகள் இவர்கள் தங்குமிடங் யுடையது. கந்தர்வர் கூடுமிடம். பக்ஷிகள் குஹ்யகர் இவர் வஸிக்குமிடம்

19. வித்யாதரர் கூட்டங்கள், எப்போதும் சேருமி ஸிம்ஹம் புலி இவையின் பெரிய கோஷம் எதிரொலிக்குமிடம், வீழ்ச்சிகளாலும் சந்தர கிரணங்களாலும் சோபிக்குமிடம்,

20. தேவகந்தர்வர்களால் புகழ் பெற்ற இடம். அப்ஸரஸ் களால் அலங்கரிக்கப்பட்ட இடம். உயர்ந்த மரங்களின் தி புஷ்பங்கள் உள்ள இடம்.

21. இந்திர வஜ்ராயுத அடிகளான மின்னல் இடியை ஒருநாளும் அறியாதது. காட்டுத்தீ பயமற்றது.

22. பேய்க்காற்றுப் பயமில்லாதது, நீர் அருவிப் பெ கொடுத்த நதிகளால் விளங்குவது, முகம் போன்ற வனங்கள விசேஷ சோபையுடையது.

23. நீர்ப்பாசி படர்ந்து சிகர உச்சிகள் சோபையுட விழித்துப் பார்ப்பது போல் இருந்தன. மான்களுடன் கூ இடங்கள் அழகு தோன்ற இருந்தன.

24. கற்களால் கரடுமுரடான பக்கங்கள் மேகங்காள் பே ப்ரகாசித்தது. புஷ்பிக்கும் மரங்களால் மறைக்கப்பட்ட தா யுடைய சிகரம் வனக் கூட்டங்களால் பெண்களால்கணவன்பே அலங்கரிக்கப்பட்டது.

25. அழகான குளங்களாலும் அப்படியே பள்ளத்தா களாலும் அந்தந்த விடங்களில் மனைவிகளுடன் கூடியது பே ப்ரகாசிப்பது.

26. ஔஷதச் செடிகளால் விளங்கும் சிகரத்தையுடைய வானப்ரஸ்தர்களால் வஸிக்கப் பெற்றது. அழகிய வனப்ரதே களால் செயற்கை உத்யானவனம் போல் ப்ரகாசிப்பது.

27. மிக விசாலமான அடிவாரத்தாலும் மிக உயர்ந்த சிக தாலும் பூமியையும் ஆகாயத்தையும் பிடித்துக் கொண்டிருப்ப போல் இருப்பது.

28. தேவர்கள் போன்ற அம்மூவரும் பர்வதங்களின் மேலான அழகிய கோமநிதத்தை அடைந்து மனதிற்கிசைந்த இடத்தை வஸிப்பதற்கு விரும்பினார்கள்.

29. கருடன் போன்ற பராக்ரமமுடைய அவர்கள் சிறந்த மலையை மேலே வானத்தை பறவைகள் போல் தங்கு தடையின்றி வேகமாக ஏறினார்கள்.

30. அம்மூவரும் அம்மலையின் வடக்கு சிகரத்தை தேவர்கள் போல ஏறினர். மனக் கற்பனையால் அமைந்தது போன்று இருப் பிடத்தைச் சட்டென்று அமைத்துக் கொண்டனர்.

31. அமர்ந்திருக்கும் யாதவர்களைப் பார்த்து, புத்திமான் பருசுராமர், மனதுக்கிசைத்ததும் கஷ்டமில்லாததுமானமுறையில் விடைபெற ஆரம்பித்தார்.

32 ''க்ருஷ்ணா! அப்பா! நான் சூர்பாரக நகருக்குச்செல்வேன் ப்ரபுவே! உங்கள் இருவருக்கும் தெய்வங்களாலும் கூட போரில் தோல்வி கிடையாது

33. க்ருஷ்ணா உங்களுடன் கூடி வழிநடந்தாலும் அடைந் துள்ள ப்ரீதி எனது அழிவற்ற சரீரத்தையுங் கூட அனுக்ரஹிக் கிறது.

34. எந்த இடத்தில் ஆயுதங்கள் வந்து சேர வேண்டுமோ அந்த உத்தேசிக்கப்பட்ட இடம் இது: உங்கள் இருவரது சண்டை சமயம் தேவர்களால் நிர்ணயிக்கப்பட்டுள்ளது,

35 தேவதேவா வைகுண்டா? விஷ்ணோ! தேவர்களால் ஸ்துதிக்கப்பட்டவனே! க்ருஷ்ணா! எல்லா உலகிற்கும் ஹிதமான என் வார்த்தையைக் கேள்.

36, கோவிந்தா! மனித உருவம் கொண்ட உன்னால் மனிதர் நன்மைக்காக லௌகீகமான எந்தக் கார்யம் ஆரம்பிக்கப் பட்டதோ அதன் முதல் பாகம் இது. இந்த ஸந்தர்ப்பமானது காலத்தால் பக்தமானது.

37. ஜராஸந்தனுடன் போர் மிகக் கிட்டினபோது அங்கு ஆயுத பலத்தையும் போரில் கொடிய ரூபத்தையும் தன்னாலேயே தனக்கு அமைத்துக் கொள்

38,39 ஆகவே போரில் ஜயிக்கும் சக்கரக் கையொடுப் கையிலேந்திய கதையொடும் பருத்து வலிய எட்டுக் கைகளொடுட் உன்னைப் பார்த்து தேவேந்தரனும் பயப்படுவான்.

40. கௌரவம் தருபவனே! நீ ஆயுதம் ஏந்த நினைத்தபோது இன்று முதல் பூமியில் அரசஸ்ரேஷ்டர்களுக்கு ஸ்வர்க்க யாத்ரை மிக நெருங்கிவிட்டது.

41. தோள் வல்லமையனே! கோவிந்தா சொல்லில் செல்வனே! கருடனை அழைப்பதையும் கொடியேற்று விழாவில் அவன் ஆவாஹனத்தையும் சீக்ரமே செய்.

42. அவ்வரசர் போரில் விருப்பமுடையவர் ஸ்வர்க்கத்துக்கு நேரில் புக முயற்சியுள்ளவர். துர்யோதனன் வசத்திலுள்ளவர் பொருக்கு ஆயத்தமாக நிற்கின்றனர்.

43. அரசர்களின் (அண்மையில்) அழியும் பலனைப் பார்த்து வைதவ்ய வேஷம் தரித்து புஷ்பமின்றி தலைப்பின்னல் மாத்ரமே கோண்டு அந்த பூதேவி உம்மை எதிர்பார்க்கிறாள்.

44, க்ருஷ்ணா! சத்ருக்களை அழிப்பவனே; உமது பரஸ் ரூபத்தைச் சுருக்கி, மனிதப்பிறவியெடுத்து போர் அண்மையில் இருக்கும்போது எதிரி அரசர்களின் நக்ஷத்ரம் துர்க்ரஹங்களால் ஆக்ரமிக்கப்பட்டுள்ளது.

45. க்ருஷ்ணா! அஸுரர்கள் அழிவதற்கும் அரசர்கள் ஸ்வர்க் மேறுவதற்கும் தேவர்கள் ஸுகத்திற்குமாக போரின் பொருட்டு தவரை செய்யும் க்ருஷ்ணா!

46. உம்மால் கௌரவிக்கப்பட்ட நான் ஆண்ட சராசர களால் கௌரவிக்கப்பட்டவனானேன். ஏனெனில் உலகங்களெல்ல வற்றாலும் கௌரவிக்கப்பட்ட உம்மால் நான் கௌரவிக்கப்பட் டவனானேன்.

47. தோள் வலிமை கொண்டவனே! உமது காரிய ஸித்தியின் பொருட்டு (ஆசி கூறி) போய் வருகிறேன்.

48. அரசரின் பயங்கரப் போரில் நான் நினைக்கத்தக்கவனா வும் இருக்கிறேன். பரசுராமரும் ஸ்ரமப்படாமல் லகுவா கார்யம் செய்யும் க்ருஷ்ணனைக் குறித்துக் கூறி 'ஜய ஜய' எனு ஆசீர்வாதத்தால் உத்ஸாஹமூட்டி விரும்பிய திக்கை நோக்கி சென்றார்.

**40ம் அத்தியாயம் முற்றிற்று**

## 41ம் அத்தியாயம்

## கோமந்த மலை வாசம்:

### பலராமர், கதிரா, காந்தி, லக்ஷ்மி இவர்களை ஸந்தித்தல், விஷ்ணுக்ரீடம் வைநதேயரால் மீட்பு:

1. **வைசம்பாயனர் சொன்னார்** : பரசுராமன் சென்றதும் அழகிய ரூபமுடைய அவ்விரு யதுஸ்ரேஷ்டரும் ரம்யமான கோமந்த சிகரத்தில் ஸஞ்சரித்தனர்.

2 (முறையே) நீல மஞ்சள் ஆடைகள் அணிந்தவர் நீல வெண்ணிற தேஹமுடையவர் ஆகாயத்துள்ள மேஹம் போன்றவர்.

3 விளையாட்டில் விருப்பங்கொண்ட அவ்விரு யுவ புருஷர் சிகரத்தில் தங்கியிருந்து மலை மண் பொடி பூசிக்கொண்டு அங்கு அழகிய வனங்களில் ஸஞ்சரித்தனர்.

4. மலையில் ஜ்யோதிகளில் சிறந்த உதய சந்த்ரனையும் க்ரஹங் களின் உதயாஸ்தமனங்களையும் பார்த்துக் கொண்டு ஸஞ்சரித் தனர்.

5. பிறகு ஸ்ரீயானும், வீரனுமான, மலைபோன்ற பலராமன் க்ருஷ்ணனில்லாது (தனியே) அந்த மலை சிகரத்தில் ஸஞ்சரித்தான்

6. ம்ருதுவான நறுமணம் கொண்ட காற்றால் வீசப்பட்டு நன்கு புஷ்பித்த கதம்ப மரத்தின் அழகிய நிழலில் அமர்ந்தான்,

7. அங்கு (பல்வேறு மணங்கொண்ட) காற்றுத் தொகுதி களால் உபசரிக்கப்பட்ட பலராமனுக்கு மதுவை ஸ்பரிசித்த வாஸனை மூக்கை அடைந்தது.

8. அப்போது மதுவைப் பற்றிய ஆசை அவனுக்குவிரைவில் உண்டாயிற்று. மறுநாள் மதம் கொண்டவனுக்குப் போல் அவன் முகம் வாடியது.

9. முந்நடந்த அம்ருத பானத்தை நினைவில் கொண்ட அந்த ப்ரபு தாகமடைந்தவராய் மதுவைத் தேடிக் கொண்டு அந்த மரத் தைப் பிறகு பார்த்தான்,

10. மழைக் காலத்தில் பூத்த அந்த மரத்தில் மேகத்தால் விடப்பட்டு அம்மரத்தின் பொந்திலிருக்குப் தண்ணீர்மனோஹர மான மதுவாக மாறிற்று.

11, தாகத்தால் கவரப்பட்ட மனதையுடைய அந்த ப்ரபு அளவு கடந்த ஆசையுடன் அடிக்கடி குடித்துக் கொண்டு மயக்கத்தால் ஸ்வரூபம் மாறினவனானான்,

12. மதங்கொண்ட அவன் முகம் அசையும் கண்களையுடையது; உடலும் சுழல்கிறது. சரத்கால சந்த்ரன் போன்ற காந்தியுடையதாயிற்று.

13. கதம்ப மரத்தின் பொந்தில் பிறந்தவள் அவள் பெயர் காதம்பரி; தேவர்களுக்கு அம்ருதம் கடைந்து கொடுக்கும் வாருணி என்பாள் உருவெடுத்து வந்தாள்.

14. க்ருஷ்ணனின் தமயன் பலராமனை மதுமத்தனாக அறிந்து ப்ரிய வார்த்தை பேசும் (மதுதேவி) மதிரா சந்த்ரனுக்கு ப்ரியமான காந்தி தாமரைக் கொடியிலுள்ள பெண்களுள் சிறந்த லக்ஷ்மீ தேவியுமாக மூன்று தேவப் பெண்கள் தனித்தனி உருவெடுத்து அவனை அணுகினர்.

15,16. 'மதிரையுடன் கூடி மதுமத்தனாயிருக்கும் பலராமனை மதிரா தேவி அஞ்சலிக் கையளாய் கிட்டி வார்த்தை சொன்னாள்.

17. "ஸ்வர்க்கத்திற்குத் தலைவனே! பலதேவா! அஸுர ஸேனையை வெற்றி கொள்வாயாக உனக்கு ப்ரிய மஹிஷி, வருணன் மகள் வந்திருக்கிறேன்.

18. சுத்தமுடையவனே! படபாக்னியில் நிலையாக மறைந்திருக்கும் அழிவற்ற உன்னிடமே புண்யம் கழிந்தவனைப் போல். இப்புவியில் வந்திருக்கிறேன்.

19, மகரந்தம் படிந்த பூக்களில்லெல்லாம் நான் வஸிக்கிறேன் அசைவில்லா பூங்கொத்துகள் கொண்ட குருக்கத்திக் கொடிகளிலும் நான் வஸிக்கிறேன்.

20. நான் மழைகாலத்தில் கதம்ப மரத்திலிருந்து கொண்டு' உமது ப்ரியமுள்ளவளாய், தாகங்கொண்ட உன்னைத் தேடி ஸ்வயரூபத்தைமறைத்துக் கொண்டிருக்கிறேன்.

21. தோஷ மற்றவனே! அந்த நான் பிதா வருணனாலே' உனது ஸமீபம் அனுப்பப்பட்டு அம்ருதம் கடையும் போது, முழு அம்சத்துடன், இருந்தது போன்று (இப்போதும்) படபாக்நியான உன்னிடம் அப்படியே நான் வந்திருக்கிறன்,

22—24 எனக்கு மனதுக்குகந்த ஓதுரு அல்லவா? உன்னுடன் ரமிக்க விரும்புகிறேன். தோஷமற்றவனே! உன்னால் அதட்டப் பட்டாலும், அநந்தனாகிய உன்னை நான் விடமாட்டேன். நீர் இல்லாமல் லோகத்தை அடைவதற்கு நான் விரும்ப மாட்டேன். ஆதி பத்மத்தையும், தாமரையடையாளமுள்ள அழகிய கர்ண பூஷணத்தையும், ஸமுத்ரத்துக்குத் தக்க நீல பட்டாடையும், தரித்து உன்னுடன் ரமிக்க விரும்புகிறேன்.

25. மதிரா தேவிக்குப் பிறகு காந்திதேவி, சிறிது அசையும் பின்பாகத்தையுடையளாய், சிறிது சுழலும் கண்களோடு ஸங்கர்ஷணனை அடைந்தாள்.

26. அஞ்சலிக் கையொடு புன் சிரிப்புடன், காந்திதேவி, பொருள் செறிந்த வார்த்தையை "ஜபங் ஜயங்" என்னும் வெற்றி சப்தத்துடன் கூட்டி மிக்க ப்ரீதியுடன் சொன்னாள்.

27, சந்த்ரனுக்கு மேலான ஆயிரம் தலையையுடைய (ஆதி சேஷனாகிய) ப்ரபு உன்னை என் பிறவிக் குணங்களால் மதுரா தேவி போலவே உன்னிடம் ப்ரீதி கொண்டேன்.

28. தாமரையிலிருப்பவள் விஷ்ணுவின் மார்பில்நித்யவாஸம் செய்பவள் பலராமன்மார் பிலணிந்த (துளஸி) மாலை போன்று தோஷமற்றவள்தாமரை முகத்தாள்.

29. தாமரைக்கையாள் இத்தகைய லக்ஷ்மீ குற்றமற்ற மாலை (திருத்துழாய் மாலை) கையில் கொண்டு பலராமன் மார்பை யடைந்து பிறகு அவனை (ஸங்கர்ஷணனைப்) பார்த்துச்சொன்னாள்

30. ராமா, பலராமா! மதிராதேவி அலங்காரத்தால் மதுமத்தனாயிருக்கும் தேவ தேவனே! நீர் காந்தியொடும் என்னோடும் சேர்ந்து வெகு அழகாயிருக்கிறீர்.

31. ஆயிரம் தலையுடைய உமது சிரஸில் சூர்யன் போல் ஜ்வலிக்கும் ஜ்வலித்துக் கொண்டிருந்த, அதே க்ரீடம் என்னால் ஸமுத்ரத்திலிருந்து எடுத்து வரப்பட்டது.

32. தங்தமயமான வைரங்கள் அழகாகப் பதித்த ஒரு குண்டலமும், ஆதி பத்ம (தாமரை) மணி திவ்ய கர்ணபூஷணம்.

33. ஸமுந்ரத்துக்குத்தக்க நீலப்பட்டாடைகள், ஸமுத்ர மத்தியிலிருந்த பருத்தமுத்து மாலை ஆகிய இந்தப் பழய ஆபரணங்களெல்லாம் தேவனே: ஏற்றுக்கொள்ள வேண்டும்,

34—36 தோள் வலிமை கொண்டவனே! இது நீர் பூஷணங்களைத் தரிக்க வேண்டிய ஸமயம் ஆபரணங்களுக்கு இது அலங்காரம் பலதேவன், அந்த அலங்காரத்தையும் அந்த மூன்று தேவ மங்கையரையும் நன்கு [தன்னுள்] ஏற்றுக் கொண்டு சரத்கால சந்தரன் போல் ப்ரகாசித்தானன்றோ! அந்தப் பலராமன் நீலோத்பலமும் மேகமும், க்ரஹங்களுடன் கூடிய சந்த்ரன் போல், மிக மேலான ஸந்தோஷத்தையடைந்தான்.

37. பிறகு அவ்விருவருக்கும் வீட்டிற் போய் ஸம்பாஷணை நடந்து கொண்டிருக்கும்போது கருடன் வேகமாக அந்தவழியைக் கடந்து சென்றான்.

38 போரிலிருந்து விடுபட்டவன், தேஜஸ்வி, பராக்ரமசாலி அஸுர ஆயுதங்களாலான அடையாளமுடையவன். தேவர்களால் கொண்டாடப்படும் வெற்றியுடையவன்.

39, திவ்ய மாலை பூச்சு உடையவன் வருணன் வஸிக்கும் பாற்கடலில் படுத்துறங்கும் விஷ்ணுவின் க்ரீடத்தை "வைரோசன அஸுரன் அபகரித்தான்.

40, அதற்காக அந்த யுத்தம் தன்குரு விஷ்ணுவிற்காக க்ரீடத்தைப் பெறவேண்டி, ஸமுத்ர மத்தியில் அஸுரக் கூட்டங்களுடன் போர் செய்யப்பட்டது.

41 விஷ்ணுவின் க்ரீடத்தை மீட்டுக் கொண்டு பக்ஷி ஸ்ரேஷ்டன் வைநதேயன் தேவதைகளுக்கிருப்பிடமான ஆகாயத்தை வேகமாகத் தாண்டிச் சென்றான்.

42. விளையாட்டாகவே (லேசாக) மூக்கால் எடுத்துக் செல்லப்படும் ப்ரகாசிக்கும் க்ரீடத்துடன் அந்த கருடன் வேறு கார்யமாக வந்துள்ள பகவான் விஷ்ணுவை (க்ருஷ்ணன்) மலையில் பார்த்தான்,

43. பர்வத ஸ்ரேஷ்டத்தின் சிகரத்திலிருக்கும் மனித ரூபந் தரித்த விஷ்ணுவை பரஞ்ஜோதி விஷ்ணுவின் வ்யாபாரங்களை விட்டு க்ரீடமில்லாத மனிதனாக அந்தக் கருடன் பார்த்து அவ் விஷ்ணுவின் [க்ருஷ்ணனின்] மனோபாவத்தையறிந்த பக்ஷிஸ்ரேஷ்டன் கருத்மான் ஆகாயத்திலிருந்தே க்ரீடத்தை க்ருஷ்ணனின் சிரஸில் மகிழ்ச்சியுடன் கீழே நழுவ விட்டான்.

45. அந்த க்ரீடம் உபேந்த்ரன் க்ருஷ்ணன் தலையில்மெதுவாக இறங்கியமர்ந்தது. சிரஸில் அமர்ந்து மேரு சிகரத்தில் நடுப்பகல் சூர்யன் போல் க்ருஷ்ணனை ப்ரகாசப்படுத்தியது.

46. வைனதேயர் முயற்சியால் க்ரீடம் வந்ததாக அறிந்து மகிழ்ந்த முகத்துடன் பலராமனை நோக்கிச் சொன்னார்.

47. மலையில் நம் யுத்த எற்பாடு செய்யப்பட்டதால் தேவதைகளின் கார்யம் த்வரைப்படுகிறது அல்லவா? ஸந்தேகமில்லை!

48 மஹா சமுத்ரத்தில் உறங்குகிற என் க்ரீடம் வைரோசனனால் இந்த்ரனுக்கு நேரான திவ்ய ரூபமெடுத்து ஸமுத்ரத்திலிருந்து முதலை உருவத்துடன் எடுத்துச் செல்லப்பட்டது.

49. (ஆக) பாம்பணையிலிருந்து முன்பு அபகரிக்கப்பட்டு கருடனால் அது மீட்டு இங்கு நழுவ விடப்பட்டது.

50. நன்கு தெளிவாகிறது. அந்த ஜராஸந்த ராஜா மிக நெருங்கி விட்டான் காற்று வேகத் தேர்களின் கொடி நுனிகள் காணப்படுகின்றனவல்லவா?

51. வெற்றி பெற விரும்பும் ராஜாக்களின் சந்த்ரன் போன்ற இந்தக் குடைகள் பூஜ்யனே! அங்கிருந்து ப்ரகாசிக்கின்றன.

52. அளவுக்குட்பட்டே யிருக்கின்றன. ஆச்சர்யம்!) அரசர் ரதத்தின் உச்சியிலுள்ள அழுக்கற்ற குடை வரிசைகள் ஆகாயத்தில் வெண்ணிற ஹம்ஸ வரிசைகள் போன்று நம்மை நோக்கி வருகின்றன.

53. ஆஸ்சர்யம்! ஆகாயம் நிர்மல முகத்தோடிருக்கிறது ஆயுதங்கள் அழுக்கற்ற சோபை சூர்யகாந்தியுடன் கலந்து பத்து திக்குகளிலும் பரவுகின்றது போலும் போரில் அரசர்களால் என்னிடத்து விடப்பட்ட எல்லா ஆயுதங்களும் நிச்சயமாக போரில் நாசமடையும்.

55. நம் யுத்த உரைகல்லும் முதல் யுத்த விருத்தாளியுமான, உலகாளும் ஜராஸந்த ராஜா நல்ல ஸமயத்தில் வந்தடைந்தானல்லவா;

56. பூஜ்யரே! நாம் சேர்ந்து நிற்போம் (ஜராஸந்த) ராஜா வராதபோது யுத்தாரம்பம் கூடாது. (எதிரி) சேனை ஆராயப் படட்டும்.

57. இவ்விதம் சொல்லி பிறகு க்ருஷ்ணன் போரில் ப்ரியங் கொண்டு ஜராஸந்தன் வதத்தை விரும்பி ஸுகமாக (எதிரி) சேனையைப் பார்வையிட்டான்.

58. குறைவில்லா யது ஸ்ரேஷ்டன் க்ருஷ்ணன் வந்த எல்லா ராஜாக்களையும் பார்த்துக் கொண்டான்.

59. முன்னர் மேலுலகில்) நான் ஆலோசித்தபடி, இந்த ராஜதர்மத்தில் நின்று சாஸ்த்ரத்தில் கண்ட முறைப்படிஅழிவார்கள் (ஸ்வர்க்கம் போவார்கள்)

60. யமனால் நன்கு பார்க்கப்பட்டவர்களாக இந்த ராஜ ஸ்ரேஷ்டர்களை நினைக்கிறேன் இவர் உடல்கள் ஸ்வர்க்கத்துக்குச் செல்பவைகளாக விளங்குகின்றன.

61. இந்த ராஜ ஸம்ஹங்களின் ஸேனைக் கூட்டங்களால் மிக துன்புறுத்தப்பட்டு பாரம் தாங்க முடியாமல் இளைத்து இந்த பூதேவி (ப்ரஹ்மாவிடம்) முறையிட மேலுலகம் சென்றாள் அது சரியே!

62. சிறிது காலத்திலேயே பூமி ஒருவருமில்லாமல்சூன்யமாய் விடும்ஸ்வர்க்கமோ ராஜக்கூட்டங்களால் நிறைந்திருக்குமல்லவாம்

**41-ம் அத்தியாயம் முற்றிற்று**

## 42-ம் அத்தியாயம்

## கோமந்த மலைப்போர் ஆரம்பம்

### அரசன் மலைக்குத் தீ வைத்தல்

1. **வைசம்பாயனர் சொன்னார்:** பிறகு ராஜாதி ராஜன் ஜராஸந்த ராஜாஸேனைகளுடன் கூடிய ராஜாக்கள் பின் தொடரமிக்கதேஜஸ் ஸுடன் வந்து சேர்ந்தான்.

2. சில இடங்களில் பயிற்சி பெற்ற தலை நிமிர்ந்த குதிரைகள் கட்டிய போர்த் தேர்கள் யுத்த சாமான்கள் நிறைந்திருந்தன. அவை தடையின்றி எங்கும் செல்லக் கூடியவை ஒரு பக்கம் யானைகள், தங்கக் கயிறு கொண்டவை பெரிய மணிகள் கட்டியவை. மேகம் போன்றவைபோரில் கர்வங் கொண்டவை மேலான பாகர்கள் ஏறப்பட்டவை.

4. ஒரு பக்கம் குதிரைகள் நன்கு ஏறி அமர்ந்திருக்கும் பாகர்களுடையவை; நடனமாடுபவை. துள்ளிக்குதிப்பவை வாயுவேகம் கொண்டவை பறக்கும் பறவை போன்றவை.

5, ஒரு பக்கம் காலாட்படை கத்தி, கேடயம், கொண்டு பலத்துடன் நிமிர்ந்திருப்பவை, மேலான பலம் பொருந்தியவை. ஆயிரமாயிரமாக அணிவகுக்கப்பட்டவை.

6. மேலெழும்பும் ஸர்ப்பம் போன்றவை இவ்விதம் நடமாடும் மேகங்கள் போன்ற நான்கு வித படைகளொடும் வ்ரதங் கொண்ட பலவான் ஜராஸந்த ராஜா நெருங்கி வந்தான். அந்த ராஜா சகர்சப்தத்துடன் கூடிய ரதங்களுடனும் மதங் கொண்ட யானைகளுடனும்,கனைக்கும் குதிரைகளுடனும் கர்ஜிக்கும் காலாட் படையுடனும், எல்லா திசைகளையும், குகைகளையும், முழங்கச் செய்து கொண்டு, ஸமுத்ரம் போன்ற ஸேனையுடன் ஜராஸந்தன் காணப்பட்டான்.

7, 8, 9. மகிழ்ச்சி கொண்டு கர்ஜனை தாள சப்தங்களுடைய யுத்த வீரர்களால் குழம்பிய அந்த ராஜாக்களின் ஸேனை மேக ஸைன்யம் போன்று விளங்கிற்று.

10. காற்றுவேகம் செல்லும் ரதங்களாலும் கார்மேகம் போன்ற யானைகளாலும் வெண்மேகம் போன்ற குதிரைகளாலும் சித்தமாயிருக்கும் காலாட் படையாலும் கலந்து மதயானைமிகுந்த அந்த ஸேனை கோடை முடிவில் ஸமுத்ரத்தையடைந்த வெண் மேகக்கூட்டம் போல் விளங்கிற்று.

11,12, ஜராஸந்தனை முன்னிட்ட அந்த எல்லா ராஜாக்களும் படைகளுடன் மலையைச் சுற்றித் தங்க ஏற்பாடு செய்தனர்.

13 நன்கமைக்கப்பட்ட படைவீட்டுக் கூட்டத்தின் சோபை பூர்ணிமையில் பொங்கும் கடலின் ரூபத்தைப் போன்றிருந்தது.

14. பிறகு இரவு கழிந்த போது மலையேறுவதில் விருப்பங் கொண்ட அந்த அரசர்கள் போரில் ஊக்கமுடையவர்களாய்ஒன்று கூடினர்

15 அந்த எல்லா ராஜாக்களும் மலைத்தாழ்வாரங்களில்ஒன்று கூட்டப்பட்டு அமர்ந்து போர்காலத்தை யெதிர் பார்த்து உத்ஸாஹத்துடன் ஆலோசனை செய்தனர்,

16. இந்த அரசர்களின் பெருமுழக்கம் யுக முடிவில் கரை கடந்த ஸமுத்ரங்களின் சப்தம்போல் கேட்டது.

17. அவர்களில் கவசம் தலைப்பாகை தரித்து பிரம்பு பிடித்த வயதானவர்கள் ஜராஸந்தராஜா கட்டளையால் சப்தம் செய்யாதீர், என சொல்லிக் கொண்டு ஸஞ்சரித்தனர்.

18, சப்தமில்லாது அடங்கிய அந்த ஸேனையின் உருவம் மறைந்த மீன்களையும் பாம்புகளையுமுடைய சப்தமற்ற நீர் நிலை போலிருந்தது.

19 அந்த ஸேனைப் பெருங்கடல் யோக பலத்தால் போல் அடங்கி சப்தமற்றிருக்கும்போது ஜராஸந்தன் ப்ரஹஸ்பதி போல் பேருரை ஆற்றினன்.

20 "இங்கு ராஜாக்களின் ஸேனைகளின் சீக்ரம் வந்து கூடட்டும், இந்த மலையும் படை கூட்டங்களால் சுற்றி முற்றுகை யிடப்படட்டும்.

21. கல்லெறி யந்தரங்கள் எறியத்தக்க உலக்கைகள் பூட்டப் படட்டும். வீசியெறியப்படும் ஈட்டிகள் சலாக்குகள் இவை கள் மேல் நோக்கி வைக்கப்படட்டும்,

22. மேல் நோக்கி எறிவதற்கு உறுதியானவையும் லேசான வையும் எதிர் ஆயுதங்கள் விழுவதைத் தடுக்க வல்லனவா பாணங்கள் தயாராக்கப்படட்டும்.

23. ஒருவருக்கொருவர் மதங் கொண்டுபோர் செய்யும்சூரர் களுக்கு ராஜா (சிசுபாலன்) சொல்படி சீக்ரம் செய்யப்படட்டும்

24. இந்த சிறந்த மலைசெம்மட்டிகளாலும், பாறைக்குச்சி களாலும் பிளக்கப்படட்டும், மலைப் போர் முறை தெரிந்த அரசர் அருகில் அமைக்கப்படட்டும்.

25. இந்த இரு வஸுதேவ புத்ரர்களைக் கீழே தள்ளும் வரை இன்று முதல் என் ஸேனைகளால் மலை முற்றுகை தொடங்கப் படட்டும்.

26, இந்த மலை கல்லால் ஆனது; பக்ஷிகள் பறக்க முடியாது. அசைவற்றதாகச் செய்யப்படட்டும். ஆகாயம் முழுதும் பாணக் கூட்டங்களால் இடைவெளியில்லாது செய்யப்படட்டும்.

27. என்னால் கட்டளையிடப்பட்டு ராஜாக்கள் மலைப்பிரதேசங் களில் அந்தந்த விடங்களில் நிற்கட்டும், மலை விரைவில் ஏறப் படட்டும்.

28-29. கலிங்கராஜா மத்தாரன் சேகிதானன் பாஹ்லிகன், காஷ்மீர ராஜா கோநந்தன் கரூஷராஜன், கிம்புருஷன், த்ருமன்

மலை ஜாதியினர் இவர்கள் மலையின் எதிர்பக்கத்தை சீக்ரம் ஏறட்டும்.

30. புருவம்சத்து வேணுதாரி விதர்பதேசத்து சோமகன், போஜஅதிபதி ருக்மி மாலவ ராஜா சூர்யாக்ஷன் பாஞ்சாலஅதிபதி த்ருபதன், அவந்திதேசத்து விந்தன் அனுவிந்தன், வீரன் தந்த விக்த்ரன் கௌசாம்பி ராஜாமாலவன், சாகலி, புரமித்ரன்; விராட அரசன் சததன்வா விதூரன் பூரிஸ்ரவன். த்ரிகர்தன் பாணன் பஞ்சநதன்; இந்தக்கோட்டையை புகவல்ல அரசர்கள்.

31,32,33, வடக்கு மலைப்பிரதேசத்தை துன்புறுத்தி கொண்டு வஜ்ராயுதம் போன்ற கௌரவமுடையவர்களாய் ஏறட்டும்-

34. தைதவேய உலூகன் அம்சுமான் மகன் வீரன் ஏகலவ்யன் த்ருடாச்வன், க்ஷத்ரதர்மா, ஜயத்ரதன்

35. உத்தமௌஜா, சாலிவன், கேரண தேசகைசிகன், விதிசா தேசத்து ராஜா வாமதேவன், வீரஸுகேது, இவர்கள் மேகங்களைக் காற்று விரட்டுவது போல் பிளந்து கொண்டும், ஓடியும், மலையின் கிழக்கு பாகத்திலிருக்கட்டும்.

36,37. நானும் தரதனும், வீரசேதிராஜனும், தெற்கு மலைப் பாகத்திலிருந்து பிளப்போம்.

38. இவ்விதம் இந்த மலை விரைவில் நாற்புறமும் ஸேனை களால் வளைக்கப்பட்டு இடிவிழுந்தாற்போல் மஹாபயத்தை யடையட்டும்

39, கதையுடையவர்கள் கதையாலும் தாழ்பாள் தடியுடை யவர் அவற்றாலும் மற்றவர் பலவித ஆயுதங்களாலும், இந்த உயர்ந்த மலையைப்பிளக்கட்டும்,

40. மேடு பள்ளமான கற்களையுடைய இந்தமலை அரசர் களாகிய உங்களால் முழுவதும் இன்றே தரைமட்டமாகச் செய்யப்படவேண்டும்.

41. ஜராஸந்தன் வார்த்தையைக் கேட்டு, அரசர் ராஜக் கட்டளைப்படி ஸமுத்ரங்கள் பூமியைப் போல் கோமந்த மலையைச் சுற்றிக் கொண்டனர்.

42. சேதிராஜன் தேவர்களுக்கு இந்த்ரன் போல் சொன்னான்: "இந்த உயர்ந்த அணுகி ஏறமுடியாத கோமந்தமலையில், போரால் என்ன பயன்?

43. உயர்ந்த மரங்களையும் முட்களையுமுடைய இந்த மலையில் ஏறமுடியாது. உலர்ந்த கட்டைகளையும், புல்லையுங்கொண்டு பலராலும் நாற்புறமும் சூழப்பட்டு, விரைவில் இன்றே தீ வைக்கப் படட்டும்:

44. போரில் விற்போர் செய்யும் க்ஷத்ரியர், ம்ருதுவான தேஹமுடையவரல்லவா? தளத்தில் நடந்து போர் புரிபவர் ஏற முடியாத மலையில் ஏறும்படியும், எதிர்த்து முன்னேறும் படியும் ஏவப்பட்டனர்.

45—47 பெரியவரே! இந்த மலை தேவர்களாலும் துன்புறுத்த முடியாது. மலைப்போரில், போர்முறை முக்யமானது. ஏறியெதிர்த்துப் போரிடுவதால், மலையை அணுகின அரசர், ஊண், தண்ணீர், விரகு இவை குறைந்தவர்களாய், தாழ்த்தப் படுகின்றனர். நாம் மிகப் பலர் எனும் இதுவும், புத்திசாலித்தனமான ந்யாயமாகாது:

48. இந்த இருயாதவர்களும் போரில் நிற்கும் ஸமயம், அலக்ஷ்யம் செய்யத்தக்கவரல்லர். அறியப்படாத பலமுற்ற இவர்கள் தேவருக்கு ஒப்பானவராகச் சொல்லப்படுகிறார்கள்.

49 மிக மிக பலங்கொண்ட சிறுவரை, அவர் செயல்களால் தேவர்களாக அறிகிறோம். யதுஸ்ரேஷ்டர்கள் இங்கு [இவ்வுலகில்] பிறரால் செய்ய முடியாத செயல்கள் புரிந்துள்ளனர்.

50—52 உயர்ந்த மலையை உலர்ந்த விரகுகளாலும் புற்களாலும் நாற்புறமும் சுற்றி தீயினால் கொளுத்துவோம்' கொளுத்தப்பட்டு வெளிக் கிளம்புவார்களேயானால் இங்கிருந்து பக்கத்தில் ஒன்று கூடி தீயில் தள்ளுவோம். பிறகு உயிரை விடுவார்கள். அரசருக்கு ஹிதம் சொல்லும் சேதி ராஜனால் சொல்லப்பட்ட இந்த வார்த்தை ஸேனையுடன் கூடிய அரசர்களுக்கு இனிமையாயிருந்தது.

53. பிறகு, விரகுகளாலும், புற்களாலும், மூங்கில்களாலும் உலர்ந்த கிளைகளையுடைய மரங்களாலும் உயர்ந்த மலை கொளுத்தப்பட்டு சூர்ய கிரணங்களால் மேகம் போல் ஒளிவீசிற்று.

54—56 எளிதாகப் போர் செய்யும் அவ்வரசர் உத்தேசித்த படியும் காற்றுப் போக்கின் படியும் அங்கு மலை நாற்புறமும் விரைவில் தீ வைத்தனர். வாயுவால் தூண்டப்பட்ட அந்த தீ புகை ஜ்வாலை வரிசைகளுடன் வானத்தை விளங்கச் செய்வது போல், நாற்புறமும் மேல் கிளம்பிற்று. விரகுக் குவியல்களை ஆரம்பமாகவுடைய அந்த அக்னி காற்றால் பெருக்கப்பட்டு, அழகிய வ்ருக்ஷங்களையுடைய செல்வம் பொருந்திய கோமந்த மலையை எரித்தான்.

57—59 கொளுத்தப்படுகிற அந்த உத்தமமான மலை, பெரிய கொள்ளிக் கட்டை வடிவாகத் தோன்றி, நூற்றுக்கணக்கில் நூறு ப்ரகாரமாக பெரிய சுற்களை [வெடித்து] வெளிப்படுத்தியது நாற்புறமும் ஜ்வாலைகளால் உயர்ந்த அந்த அக்னி சூர்யகிரணங் களால் மேகத்தைப் போல் சிறந்த மலையை வெண் பூச்சு பூசினான். எரித்துப் பக்குவமாக்கப்படுகிற தாதுக்களாலும் கொழுந்து விட்டெரியும் மரங்களாலும், மிக மயங்கின காட்டு ம்ருகங்களை யுடைய அந்த மலை ராஜன் ஆயுதங்களால் குத்தப்பட்டது போல சப்தமிடுகிறான்.

60—62 அந்த அக்னியால் கொளுத்தப்பட்டு நன்கு எரியும் மலை, தங்கம், மை, வெள்ளி போன்ற நிறங்களை வெளிப்படுத்தியது அக்னியால் ப்ரகாசப்படுத்தப்பட்ட உடலையுடைய மலை, புகை யிருளால் உயர்ந்த உடலையுடையதாய் கன மழை பொழிந்தெழும் மேகம் போல் அதிகப்ரகாசமில்லாமலிருந்தது. சிதறுகிற கற் கூட்டங்களையுடையதும், கெட்டியான தணலை வர்ஷிப்பதுமான மலை நெருப்பைக் கக்கிக் கொண்டு கொள்ளிக் கட்டை மழை யுடைய மேகம் போல் விளங்கியது.

63. நெருப்புக் குழம்பு மேலே வீசப்பட்டு, கீழே பாயும் தீ அருவியுடையதும், புகை மண்டிய மத்ய ப்ரதேசத்தையுடையது மதன அந்தமலை ப்ரளயாக்னியால் அழிக்கப்பட்டது போன்று பஸ்மமாயிற்று.

64. பயந்து கலங்கிய பெரிய தலைகளையுடைய ஸர்ப்பங்கள் பாதி உடல்கள் எரிக்கப்பட்டு, மங்கின கண்களையுடையவைகளாய் அந்த மலையின் பக்கங்களிலிருந்து வெளிக்கிளம்பின.

65 67 ஸிம்ஹங்களும், புலிகளும், தீயால் கலங்கி உயரத் துள்ளித்துள்ளி அடிக்கடி கீழ்நோக்கி பயங்கரமாகச் சப்தித்தன. மரங்கள் தீயால் வாட்டப்பட்டு உண்டாகிய (பிசினை) ஜலத்தை

ஞவளிவிட்டன. சாம்பல் கலந்த தீயால் மிக்க பொன் சிவப்புநி முடைய காற்று மேல் நோக்கி வீசிற்று ஆகாயத்தில் புகையி தோற்றமும் கொழுத்த மேகம் போல் இருந்தது.

68 காட்டு ம்ருகங்களாலும், பறவைகளாலும் வெளியேற விடப்பட்ட, பெரியதாழ்வரையுடைய அந்தமலே. நெருப்பின் கொடுமையால், துக்கமடைந்தது.

69 அசைகிற மேல் முனேகள் கொண்ட கற்களேயுடைய அட மலே, இந்த்ரன் வஜ்ராயுதத்தால் பிளக்கப்பட்டது போல் கற்களே வெளிப்படுத்தியது.

70. அணிவகுத்து நின்ற அந்த க்ஷத்ரியர்கள் அந்தச் சிறந்த மலேயை நாற்புறமும் கொளுத்தி தீயின் வெப்பத்தால் தாக்கப் பட்டு அரை க்ரோச தூரம் விலகிச் சென்றனர்.

71, 72 [அக்னியால்] துன்பப்படுகிற பெரிய மரங்களுடன் சிறந்த மலே, எரிக்கப்பட்டும், புகைக் கூட்டங்களால் மறைக்கப் பட்டும் அடித்தலங்கள் ஆடியும் இருந்த போது, தாமரைக் கண்ணனும், கேசியை வதம் செய்தவனுமான க்ருஷ்ணனேச் பலராமன் கோபத்துடன் சொன்னுன்

73. நம்மிடம் விரோதத்தால் தம்பீ! க்ருஷ்ணு! தாழ்வரை சிகரங்கள் மரங்களுடன் கூடிய இம்மலே பலவான்களான அரசர் களால் கொளுத்தப்படுகிறது.

74. க்ருஷ்ணு! பார்! மலேயின் பக்கத்தில் தீ வெப்பத்தை யுடையனவும், புகையுடன் கூடினவுமான காடுகளின் நாற்புறத் திலும் மேலான யானேகள் சப்திக்கின்றன. தம்பீ நம்பொருட்டு இந்தக் கோமந்த மலே எரிக்கப்படுமேயானுல் இது உலகத்தில் [நமக்கு] அபகீர்த்தி அபவாதமும் உண்டாகும்.

76. மலேக்கு நம் கடனேச் செலுத்த மலேபோன்றவனே சிறந்த வீரனே! தோள்களாலேயே க்ஷத்ரியர்களேக் கொல்வோம்.

77 தம்பீ! இந்த க்ஷத்ரியர்கள் எல்லோரும் மலேயைச் சுற்றிக் கொளுத்தி பின்பு யுத்த விருப்பதுடன் தேரேறி அவரவர்க்குரிய வீடத்தில் இருப்பதாகக் காணப்படுகின்றனர்?

78. துளஸி மாலேயணிந்த யுவா ஸ்ரீமான் பலராமன் இவ் விதம் கூறி மேரு சிகரத்திலிருந்து சந்த்ரன் போல் குதித்தான்.

79, 80 மது மதங்கொண்ட நீலாடையுடுத்தி துளஸி மாலை புரளும் வயிறுடன் சரத்கால சந்த்ரன் போல் வெண்முகமுடையனாய் அழகிய ஒரு குண்டலமும் க்ரீடமும் தரித்துகேசவன் தமயன் பலராமன் கீழ் நோக்கி அரசர் நடுவில்குதித்தான்.

81. பலராமன் குதித்ததும் பிறகு அளவற்ற வீரமுடைய கார் மேக போன்ற க்ருஷ்ணன் கோமந்த சிகரத்திலிருந்து குதித்தான்.

82. க்ருஷ்ணன் குதிக்கும் பாதங்களால் அந்த சிறந்த மலையை அழுத்தினான். அவனால் அழுத்தப்பட்ட அம்மலைநாற்புறமும் நன்கு அமுங்கிற்று. அங்கு மதநீர் கொண்ட யானை போல் [அம்மலை] ஜலத்தால் பரவப்பட்டதாயிற்று.

83. அந்த நீரால் அந்தத் தீ அந்த க்ஷணத்திலேயே அணைந்தது! கல்ப முடிவில் மேகக் கூட்டங்களால்நீர்த்தாமரைகள் மூலம் சூர்யம் [உஷ்ணம்] அடங்குவது போலஅக்னி அடங்கியது.

84. ஸிம்ஹ கர்ஜனைபோன்ற சப்தம் உடையவன்; பீதாம் பரம் அணிந்தவன்; மேகத்தோற்றமுடையவன் க்ரீடம் தரித்தவன் இனிய முகமுடையவன்; தாமரைக் கண்ணன் ஸ்ரீவத்ஸ மார்பன் அழகிய வாய் உடையவன்; இந்தரன் போன்ற காந்தியுடையவன்

85. இத்தகைய வீர்யவான் க்ருஷ்ணன் அம்மலையிலிருந்து பலராமனுக்குப் பிறகே குதித்தான்.

86. குதித்த அவர்களுடைய பாதங்களால் அழுத்தப்பட்ட மலை, கொடிய தீ அணைதல் பொருட்டு நீர் தாரைகளை வெளிப் படுத்தியது.

87. நீர் தாரை பெருகுவதைப் பார்த்து அரசர் பயமடைந் தனர்.

**42-ம் அத்தியாயம் முற்றிற்று**

## 43-ம் அத்தியாயம்

## கோமந்தமலைப் போர்

1. **வைசம்பாயனர் சொன்னார்:** மலையிலிருந்து குதித்த அந்த வஸுதேவ புத்ரர், இருவரையும் பார்த்து அரசர் ஸேனை முழுதும் மயங்கின வாகனங்களையுடையதாய் கலக்கமடைந்தது.

2. அந்த இரு யாதவர்கள், கைகளேயே ஆயுதமாகக்கொண்டு ஸமுத்ரத்தைக் கலக்கும் இரண்டு முதலேகள் போல மிக்க பரபரப்புடன் சுற்றித்திரிந்தனர்.

3. போரில் புகுந்த அந்த இரண்டு யாதவர்களுக்கு தமது) பழய ஆயுதங்களேயெடுத்துக் கொள்ளவேண்டுமெனும் எண்ணம் உண்டானது.

4. பிறகு ஆயிரக்கணக்கான அரசர்களின் நடுவில் போரை விரும்பும் மஹாத்மாக்களான அவர்களுக்கு மதுரைப் போரில் போர்செய்தபோது எந்த ஆயுதங்கள் வந்தனவோ, அவை ஆகாயத்திலிருந்து மீண்டும் இறங்கின.

5. யாதவர் இருவரும் அங்கு (மதுரையில்) எந்த ஆயுதங்களே விட்டு வந்தனரோ அந்த வளேந்து மிதந்து இறங்கும் கொழுந்துவிட்டெரியும் அக்னிபோல் ப்ரகாசிக்கும், திவ்யமான அவை போரில் நன்கு குதிக்கும் போது இறங்கின.

6, 7. மாம்ஸ பக்ஷிணிகளால் பின் தொடரப்பட்டும் பெரிதாகவும் (தங்கள் சக்தியின் உருவங்கொண்டும்) போரில் எல்லா விதத்தாலும் அரசர் மாம்ஸங்களே உண்ண ஆசைகொண்டும் பலவித மாலேகள் தரித்தும் ஆகாயத்தில் நடமாடுமவர்களே நடுங்கச்செய்து கொண்டும் ஸ்வய ஒளியால் சோபித்தும் பத்து திக்குகளிலும் அமர்ந்தன.

8, 9. ஸாமவர்த்தகம் எனும் கலப்பை அப்படியே 'ஸௌநந்தம்' எனும் உலக்கை ஸுதர்சனம் எனும் சக்ரம், கௌமோதகீ எனும் கதை. ப்ரகாசிக்கும் இந்த நான்கு விஷ்ணு ஆயுதங்களும், மஹாயுத்தத்தில் அந்த யாதவர்கள் பொருட்டு இறங்கின

10, 11. பலராமன் நாகராஜன் போல் வளேந்து வருமதும், திவ்யமாலேகளால் அலங்கரிக்கப்பட்டதும்நெற்றிஸரம் போன்றதுமான கலப்பையை முதலில் எடுத்தான்.

12. யாதவஸ்ரேஷ்டனும் பலவானுமான பலராமன் சத்ருக்களுக்கு துக்கம் கொடுக்கும் ஸௌநந்தமெனும்சிறந்தஉலக்கையை இடது கையால் பிடித்தான்,

13. கேசவன் உலகத்தாரால் காணத்தக்க (அழகுமிக்க) ஸுதர்சன மெனும் ஸூர்யதேஜஸ்ஸுடைய சக்ரத்தை ப்ரீதியுடன் எடுத்துக் கொண்டான்.

14, வீரன் க்ருஷ்ணன் உலகத்தாரால் காணத்தக்க அழகு மிக்க ஸார்ங்கமெனு பெயர்பெற்ற மேகசப்தமுடையவில்லே ப்ரீதியுடன் எடுத்துக்கொண்டான்.

15. கௌமோதகி எனும் அந்த கதாயுதம் தேவர்களால் புகழப்பட்ட, கீர்த்தியுடைய தாமரைக் கண்ணனுடைய மற்றொரு கையில் பொரிந்தியது

16. விஷ்ணு ரூபத்திற்கு நேரொத்த வீரரான, ஆயுதங்களுடைய அவ்விரு ராமகோவிந்தர் அந்த சத்ருக்களேபோரில் எதிர்த்து போரிட்டனர்.

17. ஆயுதங்களேக்கொண்ட அவ்விரு வீரர் அன்யோன்ய மானவர், தமயன் தம்பி எனப்படுவர், ராம கோவிந்தராகத் தோற்றுபவர், போரில் ஒப்பற்றவர்.

18. ஓரே விஷ்ணு இரண்டாக ஆனவர். சத்ருக்களுக்கு ப்ரதி செய்பவர். பரம்பொருள் போல் வீரமுடையவர்.

19. சத்ருக்களுக்கு யமன் போன்ற வீரனை ராமன் கோபங்கொண்ட நாகராஜன் போன்ற கலப்பையை உயர்த்தி போரில் நடமாடினூர்.

20. பெரும் வீரரான க்ஷத்ரியர்களின் தேர்க்கூட்டங்களே இழுத்து யானேகளிடத்தும் கோபத்தைப் பயனுடையதாக்கினூர்.

21. எப்புறமும் அழகிய ராமன் கலப்பையால் உயர்த்தூக்கப்பட்டு, உலக்கையால் வீசியடிக்கப்பட்ட மலேகளேப்போன்ற யானேகளேக் கலக்குகின்ருன்.

22. போரில் ராமனுல் அடித்து வீழ்த்தப்பட்ட க்ஷத்ரிய ஸ்ரேஷ்டர்கள் பயந்து தேரின்றி, ஜராஸந்தன் அருகே சென்றனர்.

23. 24 க்ஷத்ரிய தர்மத்தில் நிலேநின்று ஜராஸந்தன் அவர்களே நோக்கிச் சொன்னுன்: ''போரில் பயந்த உங்கள் இந்த க்ஷத்ரிய தர்மத்தைச் ''சீ!சீ எடு'' போரில் சத்ருவால் ஆக்ரமிக்கப்பட்டு தோற்று ஓடுகிறவனுக்கு சிசுஹத்தி போன்ற தோஷத்தை அறிவாளிகள் சொல்கிருர்கள்.

25. பாதசாரி, தனித்தவன் மாடு மேய்ப்பவன் அல்ப பலமுடையவன். இவனுக்கு பயந்து, இந்த க்ஷத்ரியத் தொழிலேச் சீ . சீ, சுடு திரும்புங்கள்!

26. இந்த கோபர்களை யமலோகத்துக்கு அனுப்பும் வரை என் சொல்லால் தூண்டப்பட்டு சீக்ரம் திரும்பியிருங்கள்!

27, 28. பிறகு ஜராஸந்தனால் தூண்டப்பட்ட அந்த எல்லா க்ஷத்ரியர்களும் தங்க ஆபரணங்களுடைய குதிரைகளொடும் சந்த்ரன் போன்ற காந்தியுடைய ரதங்களொடும், பாகர்களால் தூண்டப்பட்ட மேகம் போன்ற யானைகளொடும், அம்புக்கூட்டங்களை வீசிக்கொண்டு மகிழ்ச்சியுடன் போர் செய்ய முற்பட்டனர்

29, 30. கத்தி, கவசங்களொடும்; ஆயுதம் ஆபரணம், ஆடைகளொடும்; நரணேற்றிய விற்களொடும் அம்பறாத்தூணி அம்புகளொடும்; தூக்கிப் பிடிக்கப்பட்ட குடைகளொடும், வீசப்பெற்ற சாமரங்களொடும்: ரதங்களிலிருக்கும் அரசர்களை போர்களத்தை யடைந்து ப்ரகாசித்தனர்.

31. போர்க்களத்தில் குதித்து வேகமாக ஓடும் தோள் வலிமையுடைய வஸுதேவ வீர புத்ரர் இருவரும், போரில் விருப்பங்கொண்டவர்களாக காணப்பட்டனர்.

32. அங்கு போர்க்களத்தில் அவ்விருவருக்கும் அரசர்களுக்கும் அம்பு வீச்சு நிறைந்தும்;கதையடிகள் பயங்கரமாகவும் அந்தப் போர் நடந்தது.

33. பிறகு ஆயிரக்கணக்கான (எதிரி) அம்புகளை ஏற்றுக் கொண்டு போர் புரியும் அவ்விரு போர் வீரரும் மழை பொழியப் பட்டமலைபோல் இருந்தனர்.

34. கனத்த கதைகளாலும் வீசும் சூலங்களாலும், பீடிக்கப் பட்ட, சிறந்த வில்வீரர் யாதவரிருவரும் அசையவேயில்லை.

35. பிறகு சங்க சக்ர கதாதரனும் மேகம் போன்றவனுமான க்ருஷ்ணன், காற்றுடன் கூடிய தீ போல் மிக்க தேஜஸ்ஸுடன் கோப மூண்டெழுந்தான்,

36. அந்த வீர க்ருஷ்ணன், சூர்யன் போன்று ஒளி வீசும் சக்ரத்தால், காலாள், யானை, குதிரை தேர் படைகள் யாவற்றையும் துண்டம் துண்டமாக்கினான்.

37, போரில், கதை வீழ்ச்சியால் அடிக்கப்பட்டு கலப்பையினால் இழுக்கப்பட்டு அந்தஅரசர் நிற்க முடியவில்லை.

38. சக்ரத்தின் கூர்மையால் அறுக்கப்பட்ட அரசரின் விசித்ர ரதக் கூட்டங்கள் உடைந்து, போரில் அசைய முடியவில்லை.

39. உலக்கை வீச்சால் பங்கமடைந்த அறுபது வயது யானைகள், உடைந்த கொம்புடன், மழை முடிவில் மேகம் போல் விட்டன.

40. காலாட்படையுடன் கூடின தேர் வீரர் சக்ராயுதத்தின் தீ ஜ்வாலையால் தாக்கப்பட்டு வஜ்ராயுத அடிபட்டவர் போல அங்கு உயிர் நீங்கி விழுந்தனர்.

41. சக்ரத்தாலும் கலப்பையாலும் நன்கு தீய்க்கப்பட்டும் பிளக்கப்பட்டும், அந்த ஸேனை முழுதும் விழுந்து, யுகமுடிவிலழிக்கப்பட்டது போல் விளங்கிற்று.

42. மூர்த்தீ கரித்த திவ்ய விஷ்ணு ஆயுதங்களின் விளையாட்டு பூமியை (போர்களத்தை) பார்ப்பதற்குக்கூட அந்த அரசர் பலவற்றவரானர்.

43. சில ரதங்கள் நன்கு நொறுக்கப்பட்டன. சில கொல்லப்பட்ட அரசர் உடையன. மற்றவை ஒரு சக்ரம் முறிந்தவை.

44. இவ்விதம் பூமியில் சிதறி கிடந்தன. சக்ரமும், கலப்பையும் இட்ட கொடிய யுத்த வெள்ளத்தில், கொடிய ராக்ஷதர்களும், துர்நிமித்தங்களும் தோன்றின.

45. மூங்கில் போல் இரண்டகாப்பிளக்கப்பட்டு, துன்புற்று சப்திக்கும் மனிதர், யானை, தேர், குதிரைகளின் முடிவு எண்ணிக்காண முடியவில்லை.

46. வீழ்த்தப்பட்ட அரசர் ரத்தத்தால், நனைந்த அந்த போர் பூமி சந்தனப் பூச்சால் நனைந்த உடலுடைய பயங்கரப் பெண் போல் காணப்பட்டது.

47. மனிதரின் மயிர், எலும்பு, மஜ்ஜை, நரம்பு இவையாலும் கொல்லப்பட்ட யானைகளின் ரத்தப்பெருக்காலும், பூமி மறைக்கப்பட்டது.

48. அந்த மஹா பயங்கர மனித வாஹன அழிவில், நரிகளின் அமங்கள சப்தங்கள் ஒலித்தன. பயங்கர காட்சி துன்புற்றவரின் பெரிய சப்தத்தையுடையது:

49. ரக்த நீர் மடுக்களால் நிறைந்தது; யமன் விளையாட்டு ஸ்தவம் போன்றது நாற்புறமும் யானை உடல்கள் கொண்டது,

50. வெட்டின கைகள், பிளக்கப்பட்ட குதிரைகள் கொண்டது. வல்லூருக்கள், கழுகுகள் இவையின் சப்தமும் எதிரொலியும் கொண்டது'

51, மரணத்துக்கு நிலைக்களமாயும், அரசர் வீழ்த்தப்படுமிடமாயும் உள்ள போர்க் களத்தில் க்ருஷ்ணன், யமனது தோற்றமுடையவனாய், சத்ரு வதம் செய்வதற்குச் சுற்றித் திரிந்தான்.

52. கேசவன் யுகாந்த சூர்ய காந்தியுடைய சக்ரத்தையும், கருநிற இருப்புக் கதையையும் எடுத்து போர்க்களம் அடைந்து அரசர்களை நோக்கிச் சொன்னான்:

53. ''சூரர்களே! ஏன் போர் செய்யவில்லை? யானை, குதிரை, தேரொடு ஏன் (திரும்பிப்) போகிறீர்கள்? சூரர்களே! ஆயுத வல்லமை கொண்டவர்களே! நான், என் தமையனுடன், காலாளாகவே, போர்க்களத்தில் உங்கள் எதிரில் நிலைத்திருக்கிறேன்,

54. கஷ்டங்களைப் பாராமல் எவனால் போரில் காக்கப்பட்டீர்களோ, அந்த ஜராஸந்தன் ஏன் முன்வறவில்லை?

55. இப்படி சொல்லப்பட்டதும் வீரன் தரதன் எனும் ராஜா ஸேனை நடுவில் இருக்கும் கலப்பை ஏந்திய கொடிய தோளுடைய பல ராமனை எதிர்த்து வந்தான்,

56, தரதன், சிவந்த கண்களையுடைய காளையை தார்க்கோல் போல் (தூண்டிச்) சொன்னான் ''ராமா! வா! வா! சத்ருக்களை வெல்பவனே! என்னுடன் போரிடு!!

57. ராமன் தரதன் ஆகிய அவ்விருவருக்கும், உலகில் சிறந்த இரு யானைகளுக்குப் போல் போர்க்களத்தில் கடுமையான போர் நடந்தது.

58. பிறகு பல மிக்க ராமன் போரில் தரதனை, கலப்பையால் கழுத்தில் மாட்டி உலக்கையால் அடித்தான்.

59. உலக்கையால் அடிக்கப்பட்ட தரதன், தன் உடலில் நுழைந்த தலையையுடையவனாய், இரண்டாகப் பிளக்கம்பட்ட மலைபோல் பூமியில் விழுந்தான்.

60. ராஜஸ்ரேஷ்டனுன அந்த தூதன் ராமனால் கொல்லப் பட்டதும் ராஜா ஜராஸந்தனுக்கு மஹேந்த்ரனுக்கு வ்ருத்ராஸுர னுடன் போல், மயிர்கூச்செறியும் பயங்கர மோதல் ராமனுடன் மூண்டது.

61. கதாயுதங்களையெடுத்து வீரத்துடன் ஒருவரையொருவர் எதிர்த்தோடி பூமியை நடுங்கச் செய்து உயரத்தூக்கிய கதை களுடன் மஹாதமார்களாகிய அவ்விருவீரரும் சிகரத்துடன்கூடிய மலைகள் போல் காணப்பட்டனர்.

62. கதாயுதத்தில் புகழ் பெற்ற கோபாவேசத்துடன் ஓடும் அவ்விரு புருஷ ஸ்ரேஷ்டர்களையும் பார்த்து யுத்தங்கள் நின்று விட்டன.

63, 64. உலகில் சிறந்த கதை வீரரும் புகழ்பெற்றவரும் மிக்க வல்லமையருமான அவ்விருவரும் மதங்கொண்ட இரு யானைகள் போல் ஒருவரையொருவர் எதிர்த்தோடினர்.

65. பிறகு கந்தர்வருடன் கூடின தேவர் ஸித்தர்பரமரிஷிகள் யக்ஷர், அப்ஸரஸ்ஸுக்கள் ஆகிய எல்லோரும் ஆயிரக்கணக்கில் வந்து கூடினர்.

66. தேவ யக்ஷ கந்தர்வ மஹர்ஷிகளால் அலங்கரிக்கப்பட்ட அந்த ஆகாயம் ஜனமே ஜயரே! நக்ஷத்ர கூட்டங்களால் மிகப்ரகாசித்தது.

67. ஜராஸந்தராஜா ராமனை நோக்கி இடதுபக்கம் சுற்றி ஓடினன். பலராமனே வலப்பக்சம் சுற்றியோடினன்.

68. கதைப்போரில் வல்ல அவ்விருவரும் இருயானைகள் தந்தங்களால் போல், பத்து திசைகளை ஒலிக்கச் செய்து, ஒருவரை யொருவர் தாக்கினர்.

69. போரில் ராமனது கதை வீழ்ச்சி இடியொலிபோல் கேட்டது. ஜராஸந்தனதோ பிளக்கப்படும் மலையொலிபோல் கேட்டது.

70. ஜராஸந்தன் கையிலிருந்து நழுவிய கதை கதாதாரிகளில் சிறந்தவனுன ராமனை காற்று விந்த்ய மலையைப்போல் அசைக்க வில்லை.

71. ராமனது கதாவேகத்தை அந்த மகத அரசன் (ஜரா ஸந்தன்] வெகு தைர்யத்துடன் பொறுத்துக் கொண்டான். பயிற்சித் திறமையால் தடுத்தான்.

72. வெகு காலம் அடித்துக் கொண்டனர். பிறகு ஆகாயத் தில் அசரீரி வாக்கு எழுந்தது. ''ராமா! கௌரவத்தைக் கொடுப் பவனே! உன்னால் இவன் கொல்லத்தக்கவனல்ல ஶ்ரமம் போதும்

73. இவன் மரணம் திட்டப்படுத்தப்பட்டுள்ளது. ஆகையால் நல்ல முறையில் (போரை) நிறுத்து: மகத ராஜா விரைவிலேயே ப்ராணனை விடப் போகிறான்''

74. ஜராஸந்தன் அதைக் கேட்டு மனமுடைந்தவனானான். பலராமன், பிறகு அவன் பொருட்டு மீண்டும் அடிக்கவில்லை, அவ்ருஷ்ணிகளிருவரும், அரசர்களும் போரை நிறுத்தினர்.

75- ஜராஸந்த ராஜா, தோற்றுத் திரும்பிச் சென்றதும், திரும்பிச் சென்ற மஹா ரதர்களின் ஸேனை செயலற்றிருந்து.

76. தூண்டப்பட்ட யானைகள், குதிரைகள் இவையுடன் அந்த அரசர்கள் பயந்த மனத்தராய் புலியால் நுகரப்பட்ட மான்கள் போல ஓடினர்.

77. கொழுப்படங்கிய மஹா ரதர்களான, அரசர்களால், அறவே விடப்பட்ட அந்தப் போர்க்களம், மாம்ஸ பக்ஷிகளால் வ்யாபிக்கப்பட்டு, கொடிய பயங்கர தோற்றமளித்தது.

78. முக்ய தேர்ப் படைகள் ஓடும் போது, மஹாதேஜஸ்வி, சேதி ராஜன் (சிசு பாலன்) யாதவர் உறவை நினைத்து க்ருஷ்ணனை அனுஸரித்தான்

79. குற்றமற்ற ஜனமேஜயா? கருஷ ஸேனையாலும் சேதி ஸேனையாலும் சூழப்மட்ட அந்த சேதி ராஜன், உறவை விரும்பி, கோவிந்தனை நோக்கி இந்த வார்த்தை சொன்னான்:

80. ''நான் உன் அத்தையின் பிள்ளை யதுஶ்ரேஷ்டரே! ஸேனையுடன் உன்னை அடைந்தேன். ப்ரபுவே! நீ எனக்குப்ரிய மானவன் அல்லவா?

81. என்னால் இந்த அல்பபுத்தியுடைய ஜராஸந்த ராஜா 'துர்புத்தியுடையவனே! போரில் க்ருஷ்ணனுடன் போரிடுவதி லிருநது விலகு' எனச் சொல்லவும் பட்டான்.

82. ஆகையால், என் வார்த்தையை நிந்தித்த இவன் இப்போது என்னால் விடப்பட்டான். போரில் உன்னால் தோற்கடிக்கப்பட்ட ஜராஸந்தன் தன்னைச் சேர்ந்தவர்களுடன் ஓடுகிறான்.

83. இந்த ஜராஸந்தராஜா விரோதமில்லாமல் தன் நகருக்குத் திரும்பவில்லை மீண்டும் உன்னிடமே மற்றொரு குற்றம் செய்து காட்டப்போகிறான்.

84, ஆகையால் நீ கொல்லப்பட்ட மனிதர்களால் நிரம்பியதும் மாம்ஸ பக்ஷிணி கூட்டங்களால் வ்யாபிக்கப்பட்டதும் மனிதரல்லாதாரால் பழகத்தக்க இந்த பூமியை (போர்க்களத்தை) சீக்ரம் விட்டு விலகு.

85. க்ருஷ்ணா! ஸேனையுடன் கரவீரபுரம் செல்வோம். அங்கு ச்ருகாலன் என்றும் வாஸுதேவன் என்றும் அழைக்கப்படும் ராஜாவைப் பார்ப்போம். உங்கள் இருவர் பொருட்டு மேலான இரண்டு ரதங்கள் என்னால் தயாரிக்கப்பட்டுள்ளன.

86. நல்ல அச்சு சக்ரம், பார்தடி இந்தஅங்கங்களையுடைய ரதங்கள் வேகமாகச் செல்லும் குதிரைகளுடன் பூட்டப்பட்டுள்ளன. பலதேவனுடன் சீக்ரம் தேரில் ஏறு,

87. உனக்கு மங்களம் சரவீரபுரத்தில் இருக்கும் அந்த அரசனைப் பார்க்க விரைவோம்''

88. வைசம்பாயனர் சொன்னார் : சேதராஜனான அத்தை மகன் சொல்லைக்கேட்டு லோககுரு க்ருஷ்ணன் மனமகிழ்ச்சியுடன் வார்த்தை சொன்னான்:

89. 'ஆஸ்சர்யம். போரில் நன்கு வாட்டப்பட்ட (நாங்கள்) பந்துவுக்குத்தக்க உனது வார்த்தையாகிற நீரால் நன்கு (குளிர) நனைக்கப்பட்டோம். சேதிராஜனே! தேசகாலத்துக்கு யுக்தமாயும் ஹிதமாயும் இனிமையுமான வார்த்தையை சொல்வோர்கள் கிடைப்பதரிது

90,91. சேதிராஜனே! உன்னைக் கண்டதால் நல்ல தலைவனுடன் கூடினவரானோம் உன்னைப் பந்துவாகப் பெற்ற எங்களுக்கு அடைய முடியாதது ஒன்றுமில்லை

92. சேதிகுல அரசனே! உன்னுடன் கூடியதால் ஜராஸந்தனை யும் [அப்படியே] போன்ற மற்ற அரசர்களையும் வீழ்த்திவிட தகுதி யுள்ளவராயிருக்கிறோம்.

93, 94. சேதிராஜனே! எல்லா யாதவ அரசருக்கும் நீயே முக்யமானவன் இது முதல் யுத்தங்களைப் பார்ப்போம். உயிர் பிழைத்திருக்கும் போர்த்தொழில் அரசர்கள் இத்த உலகில் சக்ரயுத்தம் உலக்கை யுத்தம் யென இந்த யுத்தத்தைச் சொல்லார் கள்.

95; 96. சிறந்த கோமந்த மலையால் போரில் அரசர் தோல்வி யைக் கேட்பதாலோ, மனதில் எண்ணுவதாலோ ஸ்வர்க்கலோகப் அடைகிறார்களல்லவா! சேதிராஜா! மஹாராஜா! உன்னால் உ தேசிக்கப்பட்ட வழியால் மங்களத்தின் பொருட்டு அந்தச் சிறந் கரவீர நகரை அடைவோம்.

97, அந்த எல்லோரும் காற்று வேகத்தில் செல்லும் குதிரை களைப் பூட்டிய தேறிலேறி உருவெடுத்த அக்னி போல் வெகுதூரம் சென்றனர்.

98. அவர்கள் மூன்று இரவு வழியில் தங்கி. சிறந்த கரவீர நகரையடைந்தனர். மங்களத்தின் பொருட்டு, மங்களமான இடத்தில்; தேவர்கள் போன்ற அவர்கள் தங்கினார்கள்,

### 43-ம் அத்தியாயம் முற்றிற்று

## 44-ம் அத்தியாயம்

### கரவீரபுரம் ஸ்ருகாயனுடன் போரில் ஸ்ருகாவராஜா கொல்லப்பட்டு அவன் மகன் சக்ரதேவன் பட்டாபிஷேகம் மதுரை திரும்புதல்

1. **வைசம்பாயனர் சொன்னார்:** பிறகு வந்த அவர்களையறிந்து போரில் துர்மதங்கொண்ட அந்த ஸ்ருகாலன், நகரை ஆக்ரமிக்க வந்ததாக நினைத்து இந்த்ரன் போன்ற வீரத்துடன் வெளிக் கிளம்பினான்.

2; தேர் சூர்ய வர்ணம், ஒளிவீசிக் கொண்டு போரில் செல்வது, ஆயுதங்கள் நிரம்பியது சக்ரத்தின் சப்தத்தால் சிரிப்பது போன்றது. சித்ர வேலைப்பாடுள்ள ஆபரணங்களையுடையது, அம்பறாத் தூணி நிறைந்தது.

3. ஸமுத்ர கோஷமுடையது. மலைச் சிகரங்களிலுங்கூட அதிவேகமாகச் செல்லும் பழுப்புநிறக் குதிரை பூட்டியது.

4. தங்கமயமான பார்த்தடி கொண்டது. உறுதியான அச்சினுல் மிகவும் சோபிக்கிறது. அழகாக அசைந்தாடிச் செல்லும் ஒளிவீசும் கருட வேகங் கொண்டது.

5. ஆகாயத்தில் செல்லும் இந்த்ரனின் மலை வடிவமுடைய தேர் போன்றது. ஸாவிதர வ்ரதம் முடிவில் சூர்யனுல் கொடுக்கப் பட்டது.

6. சூர்ய கிரணங்கள் போன்ற தன் ஒளிவீச்சிலேயே அடங்கியது.

7. எதிரிகளது தேரை அழிக்கவல்ல அந்தச் சிறந்த தேரில் அந்த ச்ருகாலன், விளக்கு விட்டில் பூச்சி; தீயைப்போல், க்ருஷ்ணனை அடைந்தான்.

8—10. வில் ஏந்தி மிக்க கூரிய அம்பு கொண்டு, கவசம் பூண்டு; தங்கமாலையணிந்து வெண்ணிற தலைப்பாகை சூடி, தீ போன்ற கண்களுடன். நாணேற்றிய கொடியவில்லை, அடிக்கடி இழுத்து நாதம் எழுப்பி நாற்புறமும் அக்னி ஜ்வாலை வீசும் கோபப் பெருமூச்சு கக்கிக் கொண்டு. பூஷண அடுக்குகளால் ஒளி வீசி, மேருபோன்று அசைவற்று தேரிலிருக்கும் மலை அரசன்போல் ச்ருகாலன் காணப்பட்டான்.

11. அவனது கர்ஜனை சப்தத்தாலும், தேர் சக்ர சப்தத்தாலும், கனத்தாலும், வளைந்த பூமி பயத்தால் கலங்கி நடுங்கிற்று.

12. உருவெடுத்த மலைபோல் ஓடி வருகிற ஸ்ரீமானும், லோக பாலகர் போன்ற சோபையடையவனுமான ச்ருகாலனைப் பார்த்து, க்ருஷ்ணன் பயப்படவில்லை.

13. ச்ருகாலனும் மிகக் கோபங்கொண்டு வேகமாகச் செல்லும் தேருடன். க்ருஷ்ணன் அருகில் போர் செய்ய விருப்பமுடைய ச்ருகாலன், அங்கிருக்கும் க்ருஷ்ணனை எதிர்நோக்கி மேகக் கூட்டம் மலையை நோக்கி ஓடுவதுபோல் வேகமாக ஓடினுன்.

15, க்ருஷ்ணன் புன்சிரிப்புடன் எதிர்த்துப் போரில் முற்பட்டான். அவ்விருவரும் காட்டில் மதங்கொண்ட இரு யானைகளைப் போல், பயங்கர தோற்றமுடைய போர் மூண்டது.

16. 17 போரில் ப்ரியத்தால் மதிமயங்கி அருகேயிருக்கும் க்ருஷ்ணனை நோக்கி, கௌரவம் குறையச் சொன்னான். 'க்ருஷ்ணா! கோமந்தத்தில் தலைவனற்ற மூர்க்கரான ராஜாக்களின் சக்தியற்ற ஸேனையில் உன்னால் போர் செய்யப்பட்டது.

18. க்ருஷ்ணா! போரில் விவேகமற்று சக்தியற்று போர் செய்யாமலிருக்கும் க்ஷத்ரியர்களது தோல்வி எனக்கு நன்ருகத் தெரியும்.

19. இப்போது இஷ்டப்படி நில் நான் அரசன் நிலையில் நிற்கிறேன். போரில் பயிற்சியற்ற நீ; என்னால் தடுக்கப்பட்டு எங்கே போவாய்?

20. ஸேனையுடனிருச்கும் நான் ஒருவனுகத் தடுத்து நிற்கும் உன்னுடன் போர்க்களத்தில் போர் செய்யத் தகுதியற்றவன்

21. நான் ஒருவன் நீயும் ஒருவனுயிருந்து இருவரும் போர் செய்வோம். இந்நப் படைகளைக் கொன்று என்ன ப்ரயோஜனம், போர்க்களத்தில் நிற்கும் நீயோ. நானோ. யாரோ ஒருவர் தர்ம யுத்தத்தால் நாசமடையட்டும்,

22. நீ கொல்லப்பட்டால், இந்த் உலகில் நானொருவனே வாஸுதேவனுவேன். நான் கொல்லப்பட்டாலோ நீ ஒருவனே வாஸுதேவனுயிருப்பாய்.''

23. ச்ருகாலன் வார்த்தையைக் கேட்டு. க்ஷமையே மேலானதாகக் கொண்ட க்ருஷ்ணன், பொறுமை கொண்ட ச்ருகாலனைப் பார்த்து, ''அடி. போரிடு'' என்று சொல்லிச் சக்கரத்தையெடுத்தான்.

24. லகு வீரனை ச்ருகாலன், கோபங்கொண்டு பயங்கர அம்புக் கூட்டங்களை போரில் க்ருஷ்ணனிடத்து எறிந்தான்.

25. புகழ்பெற்ற அந்த ச்ருகாலன் உலக்கை முதலிய எல்லா ஆயுதங்களையும் கோவிந்தன்பால் தள்ளினுன்

26. ச்ருகாலனுல் விடப்பட்ட அக்னி ஜ்வாலை வரிசைகளுடைய ஆயுதங்களால் இரக்கமின்றி அடிக்கப்பட்ட க்ருஷ்ணன் மலைபோல் அசையாமல் நின்ருன்.

27. ஆயுதத் தாக்குதலால் மோதுண்ட க்ருஷ்ணன் சிறிது கோபங்கொண்டு. சக்கரத்தை உயர்த்தி ச்ருகாலனை நோக்கியெறிந்தான்.

8. யுத்த துர்மதங்கொண்டவனும், மஹாபலவானும், நெறியில் நின்றவனும், கொழுப்புடையவனும், தேரிலிருப்பமான அந்த ச்ருகாலனை, சக்ரம் போரில் மாய்த்தது.

29. பிறகு சுதர்சன சக்ரம் க்ருஷ்ணன் திருக்கையில் திரும்பச் ந்தது. சக்ரத்தால் மார்பில் பிளக்கப்பட்ட அந்த ச்ருகாலன், ் பெருக்கிட்டு, கர்வமடங்கி, வீழ்த்தப்பட்ட மலைபோல் வீழ்ந்தான்.

30. ச்ருகாலன் கொல்லப்பட்டு, இடி விழுந்த மலை போல் ன் விழுந்ததைக் கேட்டு, அவனுடைய படைகள் மனமுடைந்து ்பிச் சென்றனர்.

31. சிலர் நகரில் புகுந்து, துக்கத்தால் மிக வாடி மூர்ச்சை ந்து தலைவன் (மறைந்த) சோகத்தால் பீடிக்கப்பட்டு ஓல டனர்.

32 சிலர் அங்கேயே துக்கித்து, அவன் செய்த நன்மைகளை த்து பூமியில் விழுந்திருக்கும் அந்த அரசனைத் துக்கத்தினல் டுய் பிரியவில்லை.

33. பிறகு சத்ரு நாசகனும், தாமரைக் கண்ணனுமான ஷ்ணனும், மேக நாத ஸ்வரத்துடன், ஜனங்களுக்கு அபயம் டுத்தார்

34. சக்ரத்துக் கேற்ற சோபிக்கும் விரல்கணுக்களுடைய து) கையால் அமர்த்தி "பயம் வேண்டாம்! பயம் வேண் ம்" என்று அவர்களை நோக்கிச் சொன்னன். இந்த பாபியின் ஷத்தால், குற்றமற்ற ஜனங்களை போரில் கொல்லமாட்டேன்.

35, 36, 37. இது (ஸாது ஜனங்களைக் கொல்லுதல்) சூரர் ள்கையாக ஒப்புக்கொள்ளப்பட்டதில்லை. [பெரியோரால்] ணீர் நிறைந்த முகத்துடன் ஓலமிடும் மிக மெலிந்த அவர்கள் ்போது, சக்ரத்தால் பிளக்கப்பட்ட மார்புடன் பூமியில் சிகரம் ந்தமலைபோல் விழுந்திருக்கும் அரசனைப் பார்த்தனர்.

38. நீர் சொரியும் கண்களுடன் துன்பத்தில் மூழ்கிய ஜனங் டன் கூடிய அந்த எல்லா மந்திரிகள் மெலிந்து வருந்திப் ம்பினர்.

39. அந்த நகர ஜனங்களின் கோர குரல்கள் கொண்ட ழகை சப்தத்தால் ச்ருகாலனின் மஹிஷிகள் அழும் முகத்துடனும் ரிகளுடனும் வெளி வந்தனர்.

40. அந்த மஹிஷிகள், தங்கள் மேலான பதியான விழுந்துள்ள அரசனைப் பார்த்து, நகங்களால் ஸ்தனங்களை துன்புறுத்திக் கொண்டு மிக மனம் வருந்திப் புலம்பினர்.

41. அந்தப் பெண்கள் மார்பையும் ஸ்தனங்களையும் பரந்த தலை மயிரையும், இறக்கமின்றி [பலமாக] அடித்துக் கொண்டு கோரக் குரலுடன் அழுதனர்.

42. எல்லாப் பெண்களும், மிக்க துக்கத்தால் வருந்தி, மார் படித்து கண்ணீர் வழிய, கைகளை உயரத்தூக்கிக் கொண்டு, வேரறுந்த கொடிபோல் ச்ருகாலன் மார்பில் விழுந்தனர்.

43 அந்த மஹிஷிகள் நீர் நிறைந்த கண்கள் தண்ணீரால் அடிக்கப்பட்ட தாமரை போல விளங்கினர்.

44, 45. அந்தப் பெண்கள் தரையில் விழுந்துள்ள அரசனைப் பார்த்து அழுது மனம் நொந்து (பார்ப்பவர்கள்) இரங்கும்படி புலம்பி வருந்தினர். சருகாலனது. கண்ணீர் பெருக்கும் சிறுவனான புத்ரன் 'சக்ர தேவனை' பிதாவின பக்கல் நிறுத்தி இருமடங்கு அழுதனர்.

46, 47. வீர! இந்த உன் மகன் பராக்ரமமுடையவன் சிறுவன் இன்னும் படிப்பு முடிக்காதவன். உன்னைப் பிரிந்து பாரம்பர்யமான யிடத்தில் (ராஜாவாக) எப்படியிருப்பான்? உன்னுடன் நாங்கள் ஸுகத்தை அனுபவித்து முடிக்காதவர்கள் மேலான அந்தப்புரத்தை விட்டு திடீரென எப்படி மாய்ந்தாய்?

48. விதவைகளான நாங்கள் என் செய்வோம் பெண்களில் சிறந்த மகிஷி பத்மாவதி பிள்ளையை அழைத்துக் கொண்டு, க்ருஷ்ணனை அணுகினள்.

49. "வீர, யுத்தமுறைப்படி, எவன் உன்னால் வீழ்த்தப்பட்டானோ, இறந்த அவனது மகன், இவன் உன்னைச் சரணமாக அடைந்தான். இவன் உன்னை வணங்கி விட்டான்.

50. உன் கட்டளைப்படியே செய்வான். இந்த ஜனம் திடீரென உனது ஒரே அடியால் பயங்கரமாககஷ்டத்துக்குள்ளாகக் கூடாது.

51. இந்த மூடன் (ச்ருகாலன்) உன்னிடம் பந்து முறையைச் செய்தானேயானால், இப்படிக் காலமாகி பரிதபிக்கும்படி பூமியில் கிடக்க மாட்டான்!

52. குற்றமற்றவனே! இறந்து போன இந்த பந்துவின் ஸந்ததியான பிள்ளை உனது பிள்ளை போல ரக்ஷிக்கப்படட்டும்''

53. சொல்வல்லாரில் சிறந்த ஶ்ரேஷ்டன் க்ருஷ்ணன் அம்மஹிஷியின் அவ்வார்த்தையைக் கேட்டு ம்ருதுவான இவ் வார்த்தையைச் சொன்னன்.

54. ''ராஜ பத்னீ! இந்த துராத்மாவுடன் கோபம் போய் விட்டது. நாம் ஸாதாரண [கோபமற்ற] நிலையிலிருக்கிறோம். தேவீ! இந்த நான் உனக்கு பந்து.

55, இவன் சருகாலனின் பிள்ளை, எனக்கும் அவன் அப்படியே ஸந்தேகமில்லை. பதிவ்ரதையே! உனது குற்றமற்ற வார்த்தை களால் எனது கோபம் போய் விட்டது.

56. இவனுக்கு ஸுகத்திற்காக அபயத்தையும் அபிஷேகத் தையும் கொடுக்கிறேன். ஜனங்கள் அழைக்கப்படட்டும். அப் படியே மந்த்ரிகளும் புரோஹிதர்களும்; பித்ரு, பிதாமஹ பாரம்பர்ய ராஜ்யத்தில் உன் பிள்ளை அபிஷேகம் பண்ணப் படட்டும்''.

57 பிறகு எல்லா ஜனங்களும் அப்படியே மந்த்ரிகளும் புரோஹிதர்களும் அபிஷேகத்திற்காக ராமகேசவர் இருக்குமிடம் வந்தனர்.

58. பிறகு ஜனார்தனன் வீர க்ருஷ்ணன், ஸிம்ஹாஸனத் திலிருக்கும் ராஜ புத்ரனுக்கு திவ்ய பட்டாபிஷேகம் செய்து வித்தான்.

59. ச்ருகாலன் பிள்ளையைக் கரவீரபுரத்தில் அபிஷேகம் செய்து அந்நாளே க்ருஷ்ணன் சீக்ரம் தன் புறப்பாட்டை விரும்பினன்.

60 கேசவன் போரில் சம்பாதிக்கப்பட்ட, குதிரையோடு கூடிய தேரிலேயே இந்தரன் ஸ்வர்க்கத்தைப் போல் [மதுரை] தன் வழி புறப்பட்டான்.

61, 62. தன் தாயுடன் தர்மாத்மாவான சக்ரதேவ ராஜாவும் சிறுவர், பெரியோர் கூடிய பெண்களும் அப்படியே ப்ரஜைகளும் போரில் துர்மதங்கொண்ட ச்ருகாலன் [உடலை] பல்லக்கில் ஏற்றி ஒன்று கூடி, தொலைவழியில் மேற்கு முகமாகச் சென்றனர்.

63, பிறகு அவர்கள் அவனுக்கு பித்ரு கார்யத்தை, மரண விதிப்படி செய்தார்கள். பித்ருக்களின் பரலோக க்ரியைகளை செய்வித்தனர்.

64. சருகாலனைக் கருதி. அவர்கள் ஆயிரக்கணக்கில் ஶ்ராத்தம் செய்து நாம கோத்ர கீர்த்தனத்துடன் நீர் கடன் கொடுத்து, பிறகு தகப்பன் அரசன் கோரமாக மறைந்ததும் துக்கம் நிறைந்த மனதுடன் நீர்க்கடன் இறுத்து, பின்பு, மேலான நகரில் புகுந்தான்

**44ம் அத்தியாயம் முற்றிற்று**

## 45ம் அத்தியாயம்

## ராமக்ருஷ்ணன் மதுரை திரும்புதல் அமோக வரவேற்பு

1. **வைசம்பாயனர் சொன்னார் :** பிறகு, பலராமனும் க்ருஷ்ணனும், சிசுபாலனுடன் கூடி வழியை யனுசரித்துச் சென்றனர்.

2. வழியில் அவர்கள் ஒரே இரவு தங்கினர்போல் மிக்க மகிழ்ச்சியுடன் ஐந்து இரவுகள் தங்கினர். வஸுதேவ புத்ரர் வீரர் இருவரும் சிசுபாலனுடன் சேர்ந்து சென்று, ஸ்வல்ப காலத்திலேயே மதுரை நகரையடைந்தனர்.

3. பிறகு எல்லா யாதவர்களும் உக்ர ஸேனரை முன்னிட்டு ஸேனையுடன் மனமகிழ்ந்து யாதவ ஶ்ரேஷ்டரான ராமக்ருஷ்ணரை எதிர் கொண்டு சென்றனர்.

4. தொழிலாளர் திரள் குடி மக்கள் மந்திரிகள் முறைப்படி சிறுவர் முதியோருடன் கூடிய நகரமே எதிர்கொண்டது.

5. ஆநந்த வாத்யங்கள் முழங்கின. அவ்விரு புருஷஶ்ரேஷ்டர் ராமக்ருஷ்ணர். ஸ்தோத்ரம் செய்யப்பட்டனர். வீதியை எங்கும் கொடி வரிசைகள் ப்ரகாசப்படுத்தின.

6 அவ்விரு ஸஹோதரர் வரவில் இந்த்ர விழாவில் போல் நகரம் முழுதும் மகிழ்ந்தது, மிக மிக சோபையுடையதாக்கப் பட்டது.

7 அந்நகரில் பாடகர்கள் யாதவர்களுக்கு ப்ரியமான ஸ்தோத்ர ஆசீர்வாதங்களால் மிகுந்த பாடல்களை ராஜ வீதிகளில் மகிழ்ச்சியுடன் பாடுகின்றனர்.

8. ஸஹோதரர்களான கோவிந்தராமர் உலகப்புகழைப் பெற்று வந்து சேர்ந்தனர். யாதவர்களே! எல்லோரும் உங்கள் ஊரில் [இனி] பயமற்று ஸுகமாக விளையாடுங்கள்'' அந்த மதுரையில் ராமக்ருஷ்ணர் நல்வரவில் ஒருவனும் ஏழையில்லை.

9, 10. அழுக்குடையவனில்லை துக்கமுடையவனில்லை. பறவைகள் நல்வார்த்தை பேசின:

11 பசு. குதிரை யானைகள் மிக மகிழ்ந்தன. ஆண்கள் பெண்கள் யாவரும் மனோஸுகமடைந்தனர் பிறகு காற்றுகள் மங்களகரமாக வீசின பத்து திசைகளும் தூசியற்று இருந்தன கோவில்களில் எல்லா தேவதைகளும் மகிழ்கின்றன.

12 அவர்கள் வந்தபோது உலகில் த்ருதயுகத்துக்குரிய அடையாளங்கள் முழுதும் தோன்றின.

13. பிறகு மங்களமான புண்ய காலத்தில் சத்ருவை வெல்லும் அவ்விரு வீரரும், குதிரை பூட்டிய தேரில் மதுரை நகரில் புகுந்தனர்.

14. அழகிய நகரில் புகும் கோவிந்தனையும் ராமனையும் இருவரையுமே, யாதவக் கூட்டங்கள், இந்த்ரனைத் தேவர்குழாம் போல் பின் சென்றனர்.

15. அவ்விரு யது ஸ்ரேஷ்டரும் பிதா வாஸுதேவரின் திருமாளிகையை சந்த்ர சூர்யர் மலையை யடைவது போல் அடைந்தனர்.

16 யது ஸ்ரேஷ்டரான வஸுதேவ புத்ரர் இருவரும் அங்கு தம் மாளிகையில் ஆயுதங்களை வைத்து, இஷ்டப்படி ஸஞ்சரித்து மகிழ்ந்தனர்.

17. பிறகு அவ்விருவரும் வஸுதேவர் திருவடிகளை நன்கு பற்றி வணங்கி, அங்கு உக்ரஸேன ராஜாவையும் இதர யது ஸ்ரேஷ்டர்களையும், முறைப்படி கௌரவித்து, அவர்களெல்லோராலும் கொண்டாடப்பட்டு மனமகிழ்ச்சியுடன் தம் தாயார் வீட்டையேயடைந்தனர்.

18, 19. ஒருவரேயானவரும் மங்களமுகத்தையுடையவருமான அவ்விருவரும் உக்ரஸேனனைப் பின் பற்றியிருந்து இவ்விதம் சிறிது காலம் மகிழ்ந்தனர்.

**45ம் அத்யாயம் முற்றுற்று**

## 46ம் அத்யாயம்

### பலராமன் ஆய்ப்பாடி சென்று மகிழ்தல் யமுனையை கலப்பையால் இழுத்தல்

1. **வைசம்பாயனர் சொன்னார் :** பிறகுகொஞ்ச காலம்கழித்து க்ருஷ்ணனை அனுஸரித்து இருந்த பலராமன் கோபர்களிடத்து நட்பை நினைத்து, ஒருவனாய் ஆய்ப்பாடியை யடைந்தான்.

2. அங்கு சென்ற அந்த ராமன் முன் அனுபவிக்கப்பட்ட அழகிய பெரிய வாஸனையுடைய வனங்களையும், குளங்களையும் பார்த்தான்.

3. [க்ருஷ்ணன், தமயன் அந்த] பலராமன் அழகிய வன அலங்காரத்தால் (வன புஷ்பம், தழை முதலியவற்றால்) அலங்கரிக்கப்பட்டு, விரைவில் ஆய்ப்பாடியைப் புகுந்தான்.

4. சத்ருக்களை வெல்லும் அந்த பலராமன் அந்த கோபர்களை கோபரின் முறைப்படியே ந்யாயத்தையும் வயதையும் அனுஸரித்து முன்போன்றே பேசினான்.

5. அந்த எல்லா ஆயர்களையும் முன் போலவே ஸந்தோஷப்படுத்திக் கொண்டு, அப்படியே ஆய்ப்பெண்களுடன் இனிய கதைகளைத் தொகுத்து நடந்தபடியே சொன்னான்.

6 இனியன பேசும் கோபமுதியோர், வெகுகாலம் பிரிந்திருந்து திரும்பிவந்து மகிழ்விப்பவரில் சிறந்த அந்த பலராமனை, ப்ரியத்துடன் சொன்னார்கள்,

7. "சிறந்த கைகளையுடையவனே! யாதவகுலத்தை மகிழ்விப்பவனே! உனக்கு நல்வரவு குழந்தாய்! நாங்கள் இன்று மனநிறைவு பெற்றோம், ஏனெனில் நாங்கள் உன்னை நேரில் காண்கிறோம்.

8 வீர! சத்ருக்களுக்கும் பயமூட்டி, பூவுலகும் புகழ்பெற்ற ராமனாகிய நீ திரும்பவும் இங்கு வந்தாய். நாங்களும் ப்ரீதி கொண்டவராகவே யானோம்.

9. வீர! யாதவநந்தன! உன்னால் நாங்கள் பெருமைப்படத் தக்கவர் இதற்கோ குழந்தாய், எல்லோரும் ஜன்ம பூமியில் மகிழ்ச்சியடைகின்றனர்!

10. அதற்கோ, நீ வந்தது! தெளிந்த முகத்தனனே! குழந்தாய். உன் வரவை எதிர் பார்த்திருந்த நாங்கள் உன்னைக் கண்டோம்! நாங்கள தேவர்களால் கொண்டாடத் தக்கவர்கள்!

11. நிச்சயம் உன்னால் மல்லர் கொல்லப்பட்டனர். கம்ஸனும் வீழ்த்தப்பட்டான். உன்னுடைய பெருமையால் உக்ரஸேனன் அபிஷேகம் செய்யப்பட்டான்.

12, ஸமுத்திரத்திலும் திமிங்கிலத்துடன் போரும் பஞ்சஜன அஸுரன் வதமும் எங்களால் கேட்கப்பட்டது. கோமந்த மலையில் க்ஷத்ரிய அரசருடனும் நடந்த போரும்கேட்கப்பட்டது.

13 தரதன் வதமும். ஜராஸந்தன் தோல்வியும், அந்தப் பெரிய போரில் ஆயுதங்களின் (வானத்திலிருந்து) வருகையும் எங்களால் கேட்கப்பட்டது.

14. சிறந்த கரவீர நகரவில் சருகாலனுடையவதமும், பிள்ளையின் பட்டாபிஷேகமும் நகர மக்களைச் சாந்தப் படுத்தியதும் கேட்கப்பட்டது.

15. மதுரை நகர ப்ரவேசமும் உத்தம தேவர்களாலும் கொண்டாடத் தக்கது. பூமியும் நிலைநிறுத்தப்பட்டது. அரசர்களும் வசப்படுத்தப்பட்டனர்.

16. உனது வரவையும் பார்த்து, முன் போல் பாக்யவான்களாயிருக்கிறோம் அதனால் நாங்கள் பந்துக்களுடன் கூட, மிக்க மகிழ்ந்திருக்கிறோம்.

17 பிறகு ராமன் நாற்புறமிருக்கும் அவர்கள் வல்லோரையும் நோக்கி "எல்லா யாதவர்களைக் காட்டிலும் நீங்கள் எனக்கு பந்துக்கள்

18. இந்த ஆய்ப்பாடியில் எங்கள் பால்யம் சென்றது. இங்கேயே எங்கள் விளையாட்டுக்களெல்லாம். உங்களாலேயே வளர்க்கப்பட்டோம். எப்படி உங்களிடம் அன்பில்லாது மாறுபட்டிருப்போம்?

19. உங்கள் வீடுகளில் எங்களால் உண்ணப்பட்டது. பசுக்களும் நன்கு ரக்ஷிக்கப்பட்டன. நீங்கள் எல்லோரும் எங்களிடம் மிக்க அன்பே கொண்ட பந்துக்கள்''

20. ஆயர்கள் நடுவில் பலராமன் உள்ள படியே இப்படிச் சொல்லும் போது ஆச்சியர் மிக்க மகிழ்ந்த முகமுடையோர் ஆனார்.

21. பிறகு, மிக்க பலம் வாய்ந்த ராமன் வன மத்தியில் சென்று மகிழ்ந்தான். அங்ஙனம் வனத்ததை யடைந்த ராமன் மதம் வளர்க்கும் பானத்தை [விரும்பினான்],

22 23 இச்சமயம் இவன் தன்மை அறிந்து தேசகாலந் தெரிந்த ஆயர்களால் மது கொண்டு வரப்பட்டது. வெண்மேகம் போன்ற அவன், அப்போது பந்துக்களுடன் சேர்ந்து குடித்தான்.

24 பிறகு, பலவித காட்டுப் பொருள்களையும் புதிய அழகிய புஷ்பங்களையும் பழங்களையும் பலவித பரிசுத்த வாஸனைப் பொருள்களையும் மனதை ஈர்க்கும் பக்ஷயங்களையும் அப்போது; பறித்த தாமரைப் பூக்களையும் அவனுக்காகக் கொண்டு வந்தனர்

25, 26. சிறிது ஆழ்ந்த க்ரீடத்தோடும், அழகிய குழல்களையுடைய சிரஸ்ஸோடும் ஒரு செவியில் தொங்கும (ப்ரகாச) குண்டலத்தொடும், சந்தனப் பூச்சால் நனைந்து, துளசி மாலை தொங்கும், மஞ்சள் நிறமுடைய மார்பொடும் பலராமன், மந்த்ர மலை, கைலாஸ (சிகர)த்தால் போல விசேஷமாக ப்ரகாசித்தான்.

27. நீருண்டெழும் மேகம் போல் காந்தியுடைய நீல ஆடைகளை யுடுத்திய ராமன் தன் திருமேனியால் இருள்திரளில் வெண்ணிய சந்த்ரன் போல் ப்ரகாசித்தான்.

28. பாம்பின் உடல் போல் தோற்றமுள்ள கலப்பையொடும் அப்படியே காந்தியுடைய கைமுனையில் பிடித்திருக்கும் உலக்கையொடும் விளங்கினான்.

29. சிறந்த பலவானுன, மதங்கொண்ட ராமன், அசையும் தலையொடு குளிர் கால இரவுகளில், வியர்வையுடன் கூடிய சந்த்ரன் போல் சோபித்தான்.

30, 31. [அப்போது] ராமன் யமுனையைப் பார்த்துச் சொன்னான்! "மஹாநதி யமுனே! அழகியே! என்னிடம் வா!" பலராமனுடைய மதங்கொண்ட அவ்வார்த்தையை அலக்ஷ்யம் செய்யாது பெண் ஸ்வபாவத்தால் மயங்கிய யமுனை அவனிடம் வரவில்லை,

32. பிறகு மதத்தால் தூண்டப்பட்ட பலவான் ராமன். கோபங் கொண்டான். பலவானான அவன், கலப்பையை யிழுப்ப தற்குக் கீழ்முகமாக வைத்தான்.

33. அந்த பூமியின் மேல் தாமரை மாலைகள் விழுந்தன பூக்கொத்துகளிலிருந்து மகரந்தம் கலந்து சிவப்பு நீரை வெளி விட்டன

34. அந்த ராமன், வளைந்த முனையை யுடைய கலபபையால் அந்த மஹா நதியைக் கரையில் பிடித்து, ஸுதந்த்ரையான பெண்ணைப் போல் இழுத்தான்.

35. அந்த யமுனா நதி கலங்கின ஜலப்பெருக்கோடு[கலப்பை] மடுவின் வழி புறப்பட்டு கலப்பையின் போக்கைப் பின்பற்றியயப்-பட்டுத் திரும்பினாள்.

36. கலப்பை குறித்த வழிச் செல்லும் அந்த நதி, வளைந்து வேகமாய்ச் சென்று, பலராமனிடத்து பயத்தால் நடுங்கி பெண் கலக்கத்தைபடைந்தாள். மணல் திட்டுக்களாகிற பின்பாகத்தை யும், கோவைப்பழம் உதட்டையுமுடையவள்; தண்ணீரால் அடிக் கப்பட்டு சிதைந்த நுரைகளாகிற மேகலைகளால் மேகம் போல் செல்பவள்.

37,38,39 அலைகளால் ஸமனிலாதசிரோபூஷ்ணமுடையவள் சக்ரவாக பக்ஷிகளாகிற உயர்ந்த ஸ்தனங்களையுடையவள்;வேகத் துடனும் பீடு நடையுடனும் வளைந்த உடலைக் கொண்டவள்;

40. துள்ளும் மீன்களாகிற ஆபரணங்கள் கொண்டவள் வெண்ணிற ஹம்ஸங்களாகிற கடைக்கண் பார்வையுடையவள் நாணல் புஷபங்களாகிற வெண்பட்டாடை தரித்தவள்; மரங்களா கிற குழல் கற்றையுடையவள்; நீரால் அசையம் நடையுடையவள்; கலப்பை முனை போன்ற கடைக்கன் பார்வையுடையவள்; கலங்கி ஸமுத்ரத்தைச் சேர்ப்பவள்:

41. ராஜபாட்டையில் செல்கிறவணங்கிய உடலுடைய மதங்கொண்ட பெண் போன்றவள்; ப்ரவாகத்தால் அசைந்து செல்பவள் நேர் வழிக்கு மாருக வலிய இழுக்கப்பட்டவள்; இத்தகைய யமுனை நதி ப்ருந்தாவனத்திடம் வேகமாக இழுக்கப் பட்டாள்.

42. நீரில் வாழும் பறவைகளொடு அந்த யமுனை நதி ப்ருந்தா வன நடுவுக்கு இழுக்கப்பட்டாள். அந்தப்பறவைகள் செய்த கோஷம் அவள் ஓலமிடுவது போலிருந்தது

43. ப்ருந்தாவனக்காட்டை வ்யாபித்த போது அந்த யமுனை நதி பெண்வடிவங்கொண்டு பலராமனை நோக்கிச் சொன்னாள்.

44 நாதனே! க்ருபை செய்ய வேண்டும் மாருன கார்யத்தால் பயந்துள்ளேன். எனது இந்த உருவமும ஜலமும் தம் நிலைமாறி இருக்கின்றன.

45. சிறந்த கையுடையவனே! ராமா! உம்மால் நதி வழியி லிருந்து இழுக்கப்பட்டதால், தன் முறை விலகிச்செல்லும் தோஷ முள்ளவளாகச் செய்யப்பட்டேன்.

46. தண்ணீர் திருப்பப்பட்டுச் சென்று ஸமுத்ரத்தை யடைந்த என்னை, முன்னுள் வேகத்தால் கர்வங்கொண்ட, ஸபத்னி நதிகள், நுரையாகிற சிரிப்பால், பரிஹஸிப்பார்கள்.

47. வீர! தேவர் தலைவா! க்ருஷ்ணன் தமயனே! உம்மை யாசிக்கிறேன் எனக்கு அனுக்ரஹம் செய்யும் எப்போதும் மிகத் தெளிந்த மனமுடையவனுயிரும்.

48. கலப்பை ஆயுதங் கொண்ட தோள் வலிமையனே! கலப்பையால் இழுக்கபட்டேன். இக்கோபம் தணிக்கப்படட்டும் உமது திருவடிகளை நான் தலையால் வணங்குகிறேன். நீர் வழி காட்ட விரும்புகிறேன். எங்கு போவது?''

49. **வைசம்பாயனர் சொன்னார்** கலப்பை ஆயுதங்கொண்ட பலராமன் வணங்கிய யமுனையை ப்ரீதியால் பார்த்து மதத்தால் கலங்கியவனுய் ஸமுத்ரப் பத்னியை நோக்கி இந்த வார்த்தையை பதில்சொன்னான்.

50. ‘மங்களரூபியே! ப்ரிய தோற்றமுடையவளே! நீ கலப்பை வழிச்சென்று இந்தத் தேச முழுதும் சிறந்த தீர்த்த தானத்தால் புனிதப் படுத்துவாயாக.

51. அழகிய புருவமுடையவளே! ஸாகரத்தையுடையவளே உனக்கு இந்த நல் வார்த்தை சொல்லப்பட்டது. புண்யவதியே சாந்தி அடைவாயாக. ஸுகமாகப் போகலாம். இந்த உலகமுள்ள வரை, எனது புகழ் (உன்னைக் கலப்பையால் இழுத்த புகழ்) இருக்கட்டும்.’’

52 ஆய்ப்பாடி வாஸிகள் எல்லோரும் யமுனை இழுக்கப் பட்டதைப் பார்த்து ‘‘நன்று! நன்று’’ என்று சொல்லிப் பலராமனை வணங்கினார்கள்.

53. மஹாபுண்யவதி யமுனையை விட்டு அந்த எல்லா ஆய்ப் பாடி வாஸிகளையும் விட்டு, பிறகு போர்வீரரில் சிறந்த மகான் ராமன் நல்ல மனதால் ஆலோசித்து திரும்ப சீக்ரமாக மதுரையை அடைந்தான்.

54, 55. அந்த ராமன் மதுரையையடைந்து பூமியில் ஸாப் மாயும் குறைவற்ற க்ருஷ்ணன் வீட்டில் படுக்கையில் புரண்டு கொண்டிருப்பதைப் பார்த்தான்.

56 அப்படியே ராமன் வழிநடந்த வேஷத்தோடு புதிய துளஸி மாலை புரண்டு விளங்கும் மார்புடன் க்ருஷ்ணனை ஆலிங் கனம் செய்து கொண்டான்.

57, அந்த கோவிந்தன் கலப்பைதரித்து வேகமாக வந்த ராமனைப் பார்த்து திடீரென எழுந்து உயர்ந்த ஆஸனத்தைக் கொடுத்தான். அப்போது உட்கார்ந்திருக்கும் ராமனை ஆய்ப்பாடி யில் பந்துக்கள் எல்லோரைப் பற்றியும் பசுக்களைப் பற்றியும் க்ருஷ்ணன், க்ஷேமம் விசாரித்தான்

59. பிறகு ராமன் இனிமையாகப் பேசும் தம்பியைப்பார்த்து க்ருஷ்ணா! நீ விரும்புகிற எல்லோரும் க்ஷேமமே!’’

60. எனப் பதிலுரைத்தான். பிறகு வஸுதேவர் முன், ராம கேசவர் இருவருக்கும் அப்போது ஆச்சர்யமானவிஷயங்களுடைய புண்யமான பழயகதைப்பேச்சுக்கள் நடந்தன.

**46ம் அத்யாயம் முற்றிற்று**

## 47ம் அத்யாயம்

## க்ருஷ்ணன் யாதவர்களுடன் குண்டினபுரம் ருக்மிணி ஸ்வயம்வரத்துக்காகச் செல்லுதல்

1. **வைசம்பாயனர் சொன்னார்** :இந்த ஸமயம் உலக விவகார மறியும் ஒற்றர்கள் எல்லோரும் லோகபாலஹர் க்ருஹம் போன்ற சக்ராயுதனை க்ருஷ்ணன் க்ருஹத்தை யடைந்தனர்:

2. ஒற்றர்கள் இங்கு அரசர் துரிதம் பற்றிய வார்த்தையைத் தெரிவக்கும் போது குறிப்பறிவிக்கப்பட்ட யாதவப் பெரியோர் க்ருஷ்ணன் ஸபையில் யாதவப் பெரியோர் க்ருஷ்ணன் ஸபையில் வந்து கூடினர்.

3. ஸபையில் யாதவப் பெரியோர் எல்லோரும் வந்து கூடிய தும் ஒற்றர்கள் அரசர்களின் வேகம்பற்றிய வார்த்தையைச் சொன்னார்கள்.

4. "ஜனார்த்தன! பலபடியாக ஒன்று கூடிய பல அரசர் களின் கூட்டம் ஏற்படும்.

5, தாமரைக் கண்ண! போஜ ராஜ குமாரன் (ருக்மியினது) கட்டளைப்படி நானாதேச அரசர் அந்த குண்டின நகருக்கு வேக மாகச் செல்கின்றனர்.

6. ஜனார்த்தன அங்கு ஜனங்கள் சொல்லும் வார்த்தைகள் வெளிப்படையாகக் கேட்கப்படுகின்றன

7. ருக்மியின் முக்ய ஸஹோதரி ருக்மினி என்பவள் உண்டல் லாவா? அவளது ஸ்வயம்வரம் நடக்க விருக்கிறது இதன் பொருட்டு இந்த அரசர் ஸேனையுடன் செல்கின்றனர்!

8. யாதவனே! பொன் ஆபரணம் பூண்ட அந்த மூவுலக ஸுந்தரியின் ஸ்வயம்வரம். இன்றைக்கு மூன்றும் நாள் நடக்க விருக்கிறது.

9. அங்கு ஒன்றுகூடிய யானை குதிரை ரதம் முதலியவைகளைச் செல்லும் மஹாத்மாக்களாகிய அரசரது தங்குமிடங்களை நூற்றுக் கணக்கில் பார்ப்போம்.

10. ஸிம்ஹம், புலிபோன்ற திமிருடையவர், மதங்கொண்ட யானைமேல் செல்பவர்; எப்போதும் யுத்த ஆசையுடையவர்; ஒரு

வருக்கொருவர் க்ரோதங்கொண்டவர்; இத்தகைய அரசர் வெற்றிக்காக ஸேனைகளோடு சேர்ந்து வேகமாக ஒன்று கூடியுள்ளனர்

11. அரசர் (சண்டையிட்டுச் கொள்ளாமல்) தடுக்கப்பட்டுள்ளனர். நாங்கள் (இங்கு) தனியே ஏன் திரிய வேண்டும்? தனியேயிருந்தால் உத்ஸாஹமின்றி ஆகிவிடுவோம்.

12. க்ருஷ்ணு நாம்போவோம்' தன் ஹ்ரதயத்தில் ஈட்டி பாய்ந்தாற்போன்ற இந்த வார்த்தையைக் கேட்டு யதுஶ்ரேஷ்டன் கேசவன், யாதவ ஸேனையுடன் வெளிக்கிளம்பினுன்.

13. போரில் மிக விருப்பங்கொண்ட பலத்தால்மேல்நிமிர்ந்த அந்த எல்லா யாதவர்களும் சிறந்த தேர்களில் ஏறி கர்வங் தேவர்கள் போல் வெளிக்கிளம்பினர்.

14 க்ருஷ்ணன் சிவனைப்போல் முன் செல்லும் ஸேனையுடன் சக்ரக்கையுடனும் கதாயுதக்கையுடனும் விசேஷமாகப் ப்ரகாசித்தான்.

15. அங்கு வாஸுதேவனைப் பின்தொடர்ந்து செல்லும் மற்ற யாதவர்களும் கிங்கிணி சப்தத்தால் எதிரொலி கிளப்பும் சூர்யன் போன்ற தேர்களில் ஏறிச் சென்றனர்.

16. கோவிந்தன் உறுதியான எண்ணங்கொண்டு உக்ரஸேனனைக் குறித்துச் சொன்னுன்:

17. "பாபமற்ற ராஜஶ்ரேஷ்டரே! நீர் என் தமயன் பலராமனுடன் இங்கு இரும். வீரா! க்ஷத்ரியர் நீதி நூலில் உறுதியான ஞானம் உடையவர், கபடமான எண்ணம் உடையவர் ஒருவருமில்லா இந்த நகரை கீழ்த்தரமாக ஆக்ரமிப்பார்கள்.

18. நம்மிடம் வெறுப்பு கொண்ட ஜராஸந்தனைப் பின்பற்றும் எல்லா அரசர்களும் அங்கு (குண்டினபுரத்தில்) தேவலோகத்தில் தேவர்கள் போல் ஸுகமாக மகிழ்ந்திருக்கின்றனர்.

19. **வைசம்பாயனர் சொன்னுர்:** அவனது அவ்வார்த்தையைக் கேட்டு, பெருங் கீர்த்தி வாய்ந்த உக்ரஸேந மஹாராஜன் க்ருஷ்ணனிடம் அன்பால் தழதழத்த குரலில் நல்வார்த்தை கூறினுன்:

20. "க்ருஷ்ணு! க்ருஷ்ணு! தோள் வலிமையுடையவனே! (சத்ருக்களை யழிப்பவனே யாதவருக்கு ஸந்தோஷத்தை வளர்ப்பவனே!) நான் சொல்கிறேன் கேட்கப்படட்டும்;

21 "நீ யில்லாமல், நாங்கள் எல்லோரும் இந்நகரிலும், இந்த தேசத்திலுமே கணவனைப் பிரிந்த பெண்கள் போல் ஸுகமாயிருக்கச்சக்தியற்றவர்கள்.

22. குழந்தாய்! கௌரவம் கொடுப்பவனே! உன்னுடன் கூடி உனது தோள் வலிமையை யண்டி, இந்த்ரனுடன் கூடின அரசருக்கும் நாங்கள் பயப்படோம்.

23. யதுஸ்ரேஷ்டனே! யாதவருள் காளை போன்றவனே! நீ, வெற்றியின் பொருட்டு எங்கெங்கு செல்கிருயோ, அங்கு, எங்களுடன் கூடினவனுகவே செல்ல வேண்டும்"

24. அந்த ராஜனின் வார்த்தையைக் கேட்டு. தேவகீ புத்ரன் க்ருஷ்ணன் புன் சிரிப்புடன் "இன்று உமதிஷ்டப்படி செய்வேன், ஸந்தேகஹமில்லை."

25. **வைசம்பாயனர் சொன்னர்:** க்ருஷ்ணன் இப்படிச் சொல்லி தேரேறி வேகமாகச் சென்ருன், சூர்யன் சிவப்பு நிறங் கொண்ட மாலைப் போது (குண்டினபுரத்தில்) பீஷ்மகராஜா வீட்டை யடைந்தான்.

26 அரசர் தங்குமிடங்கள் நிறைந்த அரசர் கூட்டத்தை அடைந்ததும், விஸ்தார இடை வெளி முற்றத்தைக் கண்டு க்ருஷ்ணன் ரஜோ குணத் தோற்றத்தை ஏறிட்டுக் கொண்டான்.

27. அரசர்களை நடுங்கச் செய்யவும் தன்னை ப்ரகாசப் படுத்தவும், பழமையான மஹாபலம் பொருந்திய கருடனை மனதால் நினைத்தான்.

28. பிறகு, நினைத்த மாத்ரமே கருடன் (க்ருஷ்ணன்) எண்ணமறிந்து அழகான சரீரம் அமைத்துக்கொண்டு க்ருஷ்ணன் அருகில் மறைந்து நின்ருன்

29. அக்கருடனது இறக்கையடிப்பதால் காற்று சுழலைச் செய்ய, எல்லா மனிதர்களும் நடுங்கினர். வளைந்து பூமியில் விழவும் செய்தனர்.

30. கருடனால் [காற்றால்] அடிக்கப்பட்ட எல்லோரும், பாம்புகள் போலச் செயல் பட்டனர். அசையாத மலைபோன்ற க்ருஷ்ணன் கீழே விழுந்த அவர்களைப் பார்த்து அப்போது இறக்கைக் காற்றால் கருடன் (வரவை) அறிந்தான்.

31. இறக்கைக் காற்றால் அடிக்கடி பூமியை அசையச் செய்து திவ்ய மாலையும் பூச்சுக்களும் அணிந்து வந்தடைந்த கருடனை க்ருஷ்ணன் பார்த்தான்.

32, 33, 34. முதுகிலுள்ள ஆயுதங்கள், பாம்புகள் வளைந்து சுற்றிக் கட்டியது போலிருந்தன. விஷ்ணுவின் [க்ருஷ்ணனின்] கைகளால் தடவுதலை விரும்பி குனிந்த தலையுடையவன் கால்களால் சிறந்த வெண்ணிற ஸர்ப்பத்தை இழுத்துக் கொண்டிருப்பவன்; பொன்னிற இறக்கைகளால் தாதுக்களையுடைய மலைபோலத் தோன்றுபவன்; அம்ருதத்தை வேகமாக அபஹரித்தவன்; சிறந்த ஸர்ப்பங்களையெல்லாம் கொல்லக் கூடியவன்; அஸுரக் கூட்டங்களை நடுங்கச் செய்பவன்; விஷ்ணுவின் வாஹனமாகவும் கொடியாகவுமிருப்பவன்

35, 36. இத்தகைய யுத்த மந்த்ரியும் கொடியாயுமிருக்கும் கருடன் வந்ததைப் பார்த்து மதுஸூதனன் [க்ருஷ்ணன்] தைர்யவானும், சிறந்த இயற்கையுடையவனும் மற்றுமொரு தேவனைப் போன்றிருப்பவனுமான அந்தக் கருடனைக் குறித்துப் பொருத்தமான, திறமை கொண்ட வார்த்தை சொன்னான்:

37. **க்ருஷ்ணன் சொன்னான்** "நல்வரவு பக்ஷி ராஜனே! தேவ சத்ரு ஸேனையைக் கொல்பவனே! விநதா தேவிக்கு ஆநந்தத்தைக் கொடுப்பவனே! நல்வரவு!

38. கேசவ ப்ரியனே! பக்ஷி ராஜனே! கைசிக ராஜன் [பீஷ்மான் பிதா] வீட்டிற்குப் போ. நாம் அங்கேயே சென்று [ருக்மணி] ஸ்வயம் வரத்தை இன்று எதிர் பார்த்திருப்போம்.

39. அங்கு யானை குதிரை தேரில் செல்கிற மஹாத்மாக்களான ராஜாக்களை நூற்றுக்கணக்கில் பார்ப்போம்.

40. வைநதேயருக்கு தோழனான தோள் வலிமையுடைய ஸ்ரீமான் க்ருஷ்ணன் மிக்க பலமுடைய கருடனுக்குச் சொல்லி, யாதவரோடும் பெரிய தேர்களோடும் கைசிகனது நகரையடைந்தான்.

41, 42. தேவகி மகன் க்ருஷ்ணன் விதர்ப்ப நகரை யடைந்தான். சஸ்த்ரமும், ஆயுதங்களும் தரித்த பயம்மிக்க அரசர் எல்லோரும் மிக மகிழ்ந்து தங்குவதற்கு ஏற்பாடு செய்யத் தொடங்கினர்.

43 வைசம்பாயனர் சொன்னார் இந்த ஸமயமே, நீதியறிந்த அரசன் கைசிகன் அங்கிருந்து எழுந்து, தானே அர்க்யம் [பாத்யம் ஆஸனம் கொடுத்து, முறைப்படி கௌரவித்து, க்ருஷ்ணனைத் தன் ஊருக்குள் அழைத்துச் சென்றான்.

44, முன்னரே க்ருஷ்ணன் பொருட்டு, அழகிய மாளிகை அமைக்கப்பட்டது. சங்கரன் கைலாசத்தைப் போல் ஸ்ரீமான் க்ருஷ்ணன் ஸேனையுடன் புகுந்தான்!

45 இந்த்ரன் தம்பியான க்ருஷ்ணன் உணவு பானம், ரத்னங்கள், இவைகளால் அர்ச்சிக்கப்பட்டு நட்பு மிக்க மனதால் பூஜிக்கப்பட்டு, அந்த ராஜ மாளிகையில் ஸுகமாகத் தங்கினான்.

## 47-ம் அத்யாயம் முற்றிற்று

## 48ம் அத்யாயம்

## குண்டின நகரில்க்ருஷ்ணன் வரவைக்குறித்து அரசர்கள் மந்த்ராலோசனை ஜராஸந்தன் ஸாந்தன நல்லுரை

1. வைசம்பாயனர் சொன்னார்: அந்த எல்லா ராஜ ஸ்ரேஷ்டரும் கருடனுடன் கூடி வந்த அச்சுதன் க்ருஷ்ணனை கண்டு கவலை நிறைந்தவர் ஆனார்கள்.

2. ஜனமேஜயரே! பயங்கர பெரிய வீரமுடைய நீதிசாஸ்த்ர மறிந்த மந்த்ராலோசனையில் வல்ல பயங்கர பெரிய வீர முடைய ராஜாக்கள் ஆலோசனைக்காக சபையையடைந்தனர்.

3. அந்த ராஜ ஸ்ரேஷ்டர், பீஷ்மக ராஜாவின் தங்கத்தால் சித்ரிக்கப்பட்ட அழகிய சபையை யடைந்து ஆஸ்சர்யமான மேல் விரிப்புடைய நேர்த்தியான ஸிம்ஹாஸனங்களில், தேவர் தேவ சபையில் போல் அமர்ந்தனர்.

4. அவர்கள் நடுவில் மஹாபாஹுவும் மஹாபலவானும் மஹாதேஜஸ்வியுமான ஜராஸந்த ராஜா தேவர் நடுவில்தேவேந்த்ரன் போல் பேசினான்.

5. ஜராஸந்தன் சொன்னான்: ''அரசஸ்ரேஷ்டர்களே! மஹா புத்திமான் பீஷ்மமகராஜாவே! நாவலர்களே! என் புத்திக்குத் தோன்றும் வார்த்தையைக் கேளுங்கள். வஸுதேவர்மகனும் பலமான, புகழ் பெற்ற க்ருஷ்ணன், கருடன் துணையுடன் இந்தக் குண்டின நகருக்கு வந்திருக்கிறான் இவன் கன்னி காரணமாக யாதவர்களால் சூழப்பட்டு கன்னியை யடைதல் முடியும் வரை அவஸ்யம் முயற்சி செய்வான்.

6, 7, 8, வேந்தர்வேங்கைகளே இந்த விஷயத்தில் பலாபலத்தை நிர்ணயம் செய்து கொண்டு நல்ல நீதியுடன் கூடியதும் நிறைவு கொண்டதுமான உபாயத்தையும் கார்யத்தையும் செய்யுங்கள்.

9. அந்தச் சிறந்த மலையில் பெருவீரர்களான வஸுதேவ புத்ரர் இருவரும் காளான்களாய் கருடனில்லாமல் மிகக் கோர யுத்தம் புரிந்தனர், உங்களால் அறியப்பட்டதல்லவா?

10. வ்ருஷ்ணிகள் யாதவர் போஜர், அந்தகர் மஹாரதர்கள் இவர்களுடன் கூடி யுத்தம் செய்கிற அவனது சண்டை எப்படியிருக்கும்.

11. கன்னிகைக்காக முயலும், கருடன் மேல் வீற்றிருக்கும் இந்த விஷ்ணுவுடன், அந்தப் போரில் தேவரொடு இந்த்ரனும் (நிற்க மாட்டான்) மற்று எவன் நிற்பான்?

12. பெண் இவனுக்கு ஒரு போதும் கொடுக்கப்படாமல் போனால், பிறகு, இவன் தேவர்களுடன்கூட இவளை, அழைத்துப் போவதற்கு சக்தனல்லவா?

13. முன்னர் பயங்கர ஒரே ஸமுத்ரமாயிருந்ததில் இந்தப் பூமி பாதளத்தில் ஆடி மூழ்கிப் போனாள். ஸர்வ சக்தி வாய்ந்த விஷ்ணுவால் வராஹரூப மெடுத்து உயரத்தூக்கப்பட்டாள்.

14. ஜகத்துக்கு முதல் காரணமான வராஹமூர்த்தியால் அஸுரஸ்ரேஷ்டன் ஹிரண்யாக்ஷனும் கொல்லப்பட்டான்.

15. ஹிரண்ய கசியபும் மிக்க பலமும் வீரமுமுடையவன். தேவர். அஸுரர், ரிஷிகள், கந்தர்வர், கின்னரர், யக்ஷர் ராக்ஷஸர், நாகர், இவர்களால் கொல்ல முடியாதவன்.

16, 17 வீட்டுள்ளும், இரவிலும், பகலிலும், உலர்ந்த பொருளாலும் கொல்லப்படமுடியாதவன்; அந்த அஸுர ராஜனே, மூன்று லோகங்களிலும் ஜயிக்கப்படாதவன். ந்ருஸிம்ஹ ரூபமெடுத்த விஷ்ணுவால், முன்னர் கொல்லப் பட்டான்.

18. காச்யபருக்கு அதீத வயிற்றில் தோன்றிய பலமுள்ள மகன் வாமன ரூபங் கொண்டு அஸுர ஸ்ரேஷ்டன் பலியை ஸத்யமாகிற நூல் கொண்டு ஆக்கப்பட்ட கயிறுகளால் கட்டி பாதாளத்தை அடைந்திருக்கச் செய்தான்.

19, 20 கார்த்த வீர்யன், மஹா வீரன் ஆயிரந்தோள் படைத்தவன். தத்தாத்ரேய அனுக்ரஹத்தாலும் ராஜ்ய மதத்தாலும் திமிர் கொண்டவன். ஜமதக்கி மகன் மஹா தேஜஸ்வி, ரேணுகா தேவிக்குப் பிறந்தவன் த்ரேதா யுகம் த்வாபரயுகம் ஸந்தியில் வாழ்ந்தவன் பரசுராமன் ஆயுத வீரரில் சிறந்தவன்

21. ஏழு தீவுகளுக்கும் தலைவனான கார்த்த வீர்யான் காம தேனு பசு காரணமாக வஜ்ராயுதத்துக்கு நேரான (கோடரி) ஆயுதங்கொண்டு மறுபடி கபட வேஷம் [பரசுராமன்] கொண்ட விஷ்ணுவால் கொல்லப்பட்டான்.

22. இக்ஷ்வாகு குலத்தில் உதித்த தசரத ராமன் மூன்று லோகத்தை வென்ற வீரனான ராவணனை, முன்னர் அடியோடு வீழ்த்தினான்.

23. முன்னர் க்ருத யுகத்தில் ஆகாயப் போரில் வீரன் விஷ்ணு எட்டுக் கைகளுடையனாய். கருடன் மேல் இருந்து, வரம் பெற்றதால் கர்வம் கொண்ட அஸுரர்களைப் போரில் கொன்றான்.

24, 25. தேவர்களுக்கு பயம் கொடுக்கும் கால நேமி அஸுரனும் மஹா யோக பலமுடைய விஸ்வரூ விஷ்ணுவால் ஸுர்ய காந்தியுடைய சக்ராயுதத்தால் போரில் கொல்லப் பட்டான்.

26. மஹாபலமும் வீரமும் வாய்ந்து வனத்தில் ஸஞ்சரிக்கும் அந்த ப்ரலம்பன் அரிஷ்டன், தேனுகன், முதலிய பல அஸுரர்,

காலம் முடிந்தவராய், இவனால் குழந்தை [விளையாட்டு] ஆகவே வனத்தில் கொல்லப்பட்டனர்.

27, 28. சகுனி, கேசி, இரு மருதமரங்கள், குவலயாபீட யானை, சாணூர் முஷ்டிக மல்லர், அப்படியே தன் இனத்தாருடன் கூடியிருந்து, பலவான்களின் சிறந்த கம்ஸன் (இவர்களெல்லோரையும்) தேவகி மகன் கேசவன், கோபர் வேஷங் கொண்டு, விளையாடுபவனாகக் கொன்றான்.

29. பெரும் சக்தி வாய்ந்த சக்ராயுதம ஏந்திய விஷ்ணுவால் கபட வேஷம் கொண்டு திவ்ய ரூபத்தோடு இவ்விதமானவை செய்யப்பட்டன.

30, 31, 32. 33, ஆகையால் நான் உங்களுக்கு நன்மை கருதி அவிளக்கிச் சொல்கிறேன். கேசவன் ஆதிதேவன் அஸுரர் யமன் எல்லாப் பூதங்களையும் படைப்பவன்; நாராயணன். ஜகத் காரணம்; புராண புருஷன்; நித்யன்; அறியன்; [பக்தருக்கு]; அறிவெளியன்; ஆதிபகவன்; எவருக்கும் அஞ்சாதவன் எல்லா; உலகும் வணங்கிமவன்; ஆதி, மத்யம், அந்தம் அற்றவன்; க்ஷரன் அக்ஷரன்; அவ்யயன்; தான்தோன்றி; பிலப்பிலி; நிலைத்திருப்பவன் சராசரங்களால் ஜயிக்க முடியாதவன்; த்ருவிக்ரமன்; த்ரிலோகேசன்; தேவேந்த்ரன்; சத்ருவை அழிப்பவன்; இத்தகையனாக நான் அவனை [க்ருஷ்ணனை] அறிகிறேன்.

34. இது எனது நிச்சயமான எண்ணம் இவன் (க்ருஷ்ணன்) மதுரையில் சக்ரவர்த்திகளான அரசர்களின் கீர்த்தி பெற்ற, பரந்த குலத்தில் பிறந்தவன்.

35. வேறு மனிதனுக்கு எப்படி கருடன் வாஹனமாவான்? ஜனார்த்தனன் கன்னிகைக்காக விசேஷ வீரத்துடனிருக்கும் போது கருடனுக்கெதிராக எந்த பலம் வாய்ந்த வீரபுருஷன் நிற்பான்?

37. இந்த விஷ்ணு ஸ்வயம் வரத்திற்காக தானே இங்கு வந்துள்ளான் விஷ்ணுவின் போர் வரவிலோ, பெரிய துன்பமே சொல்லப்பட்டிருக்கிறது இதை நன்கு ஆலோசித்து பிறகு செய்ய வேண்டியது உங்களால் செய்யப்படட்டும்"

**வைசம்பாயனார் சொன்னார்** இப்படி மகதராஜா ஜராஸந்தன் விசேஷமாகச் சொன்ன பின்னரே மிக்க அறிவாளி ஸுநந்தன் இந்த வார்த்தைச் சொன்னான்,

39, 40. ஸூந்தன் சொன்னான் : "கோமந்தமலையில் எவரும் செய்ய இயலாத மிகப்பெரிய கார்யத்தை ராமக்ருஷ்ணரால் செய்யப்பட்ட மஹாயுத்தத்தில் நடந்தபடியே அரசர் முன்னிலையில் மஹாபாஹு மகதத்தலைவன் ஜராஸந்த ராஜா நன்றாகச் சொன்னார்

41. யானை குதிரை தேர் மிகுந்ததும் பலகோடிகள் கொண்ட காலாட்படை நிறைந்ததுமான பெரிய ஸேனை சக்ரம் கலப்பை ஆயுதங்களின் தீயால் அடியோடு கொளுத்தப்பட்டது.

42. அதனால் இந்த ஸ்ரீமான் ஜராஸந்தன் வருங்காலத்தை ஆலோசிக்கிறார் அங்கு [கோமந்தத்தில்] காலாள்களான ராம கேசவர் போரில் எவ்விதமும் தடுக்கமுடியாத கொடுமையான ஸேனை நாசம் ஏற்பட்டது.

43, 44. அந்த மிகக்கொடிய பெரிய நாசத்தை எண்ணி இந்த அரசர் கூட்டத்தில் சொல்கிறார். ராஜஸ்ரேஷ்டர்களே நல்வரவை தோற்றுவிக்கும் கருடனது இறக்கைக் வேகக் காற்றால், தள்ளப் பட்ட ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர், ப்ரமித்தார்கள்; இது உங்களுக்குத் தெரிந்ததே.

45. எல்லா ஸமுத்ரங்களும் கலங்கின மலை அசைந்தது; பூமியும் அடிக்கடி நடுங்கியது! நாமெல்லாரும் இது உத்பாதமோவெனக் கலங்கி மிக நடுங்கினோம்.

46. எப்போது கேசவன், கருடன் மீதேறி போர் தொடங்குகிறானோ, அப்போது நம் போன்றவர் யுத்த களத்தில் எதிர் நிற்க எப்படி சக்தராவோம்?

47 அரசருக்கு ஸ்வயம்வர மென்பது, மிக்க மகிழ்ச்சியை வளர்க்கும் குதுஹல கார்யம். பழைய பெரியோர்களால் கீர்த்தி தர்மத்தின் முறையாகச் செய்யப்பட்டதல்லவா?

48. அரசர்களோ, இங்கு குண்டின நகரையடைந்துள்ளனர் சீக்ரம் மறுபடியும் மஹா புருஷன் க்ருஷ்ணனுடன் விரோதம் ஏற்படும்.

49. அந்த அரசகுமாரி ருக்மிணி வேறொருவனை (க்ருஷ்ணனைத் தவற) வரிப்பாளானால், க்ருஷ்ணனது புஜவீர்யத்தை எந்தபுருஷன் ஸஹிப்பான்?

50. ஸ்வயம் வர மஹோத்ஸவத்தில் இக்குறை என்னல் சொல்லப்பட்டது. க்ருஷ்ணன் அதற்காகவே வந்திருக்கிறுன்.

51. நாமோ அரசர், கன்னிகை காரணமாக க்ருஷ்ணனது வருகை, ஜராஸந்தன் சொல்கிறபடி அரசர்களுக்குத் துன்பம் தரக் கூடியது.

48-அத்தியாயம் முற்றிற்று

## 49-ம் அத்தியாயம்

## தந்துவக்தூர், சால்வகன் வார்த்தையை கேட்டுபீஷ்மகன் க்ருஷ்ணன் பெருமையைக் கூறல்

1. வைசம்பாயனர் சொன்னுர்: இவ்விதம் மஹாத்மா ஸுநீத ளுல் வார்த்தை சொல்லப் பட்டதும், கரூஷ நாட்டரசன், வீரன் தந்தவக்த்ரன் பேசினுன்.

2. தந்தவக்தரன் சொன்ளுன்: அரசர்களே! ஜராஸக்தனுலும் ஸுநீதனுலும் சொல்லப்பட்ட, அதை மிகவும் உசிதமாக நினைக்கிறேன், அந்த வார்த்தை நமக்கு ஹிதமானது.

3. விசேஷ த்வேஷம் காரணமாகவோ, அஹங்கார வாதம் காரணமாகவோ, தனது வெற்றியாசை காரணமாகவோ இந்த அம்ருதமான வார்த்தையை நான் தூஷிக்க மாட்டேன்.

4. நீதி நூல் தத்வங்கொண்டு விவரிக்கப்பட்ட, மிக்க ஆழ்ந்த பொருள் கொண்ட வாக்ய ஸமுத்ரத்தை இந்த ராஜசபையில் முழுதும் விளக்க யார் சக்தராவார்? (ஒருவருமில்லை)

5. ஆனல் நான் சொல்லப்புகுந்தது (அந்த வாக்ய ஸமுத்ரத்தை) அனுஸரித்து நினைக்க வேண்டுமென்பதற்கே, அரசர்களே க்ருஷ்ணன் இங்கு வந்தது என்பதில் என்ன ஆஶ்சர்யம்?

6. நாம் எல்லோரும் எப்படி (காரணம் பற்றி) வந்திருக்கிறேமோ, க்ருஷ்ணனும் கூட அப்படியே வந்திருக்கிறுன். இதில் தோஷமென்ன? குணமென்ன? எல்லோரும் கன்னிகையின் பொருட்டு வந்திருக்கிறேம்?

7. நாம் எல்லோராலும் சேர்ந்து ஒன்றுகூடி கோமந்த முற்றுகை செய்யப்பட்டது. அங்கு போரால் செய்த தோஷத்தை எப்படி சொல்ல அர்ஹதையுடையவராவீர்?

8. ஜராஸந்த ராஜரே! ராம ஜனார்த்தன வீரமும், கம்ஸனுக்கு மனக்கலக்கம் காரணமாக காட்டில் வஸித்தனர். தேவரிஷி நாரதர் வார்த்தையால் ப்ருந்தாவனத்தின் ஓரத்தில் இருந்தனர்.

9. அவ்விருவரையும் கொல்வதற்காக அழைத்து யானையால் கோபமூட்டப்பட்டனர். யானையைக் கொன்று [மல்போர்] அரங்கைப் புகுந்தனர்.

10. பிறகு போர் அரங்கக்கடலில் உயிர் நீங்கினவன் போல் உட்கார்ந்திருந்த மதுரைமன்னன் கம்ஸனும் தன்னைச் சேர்ந்த வனுடன் க்ருஷ்ணனது வீரத்தால் கொல்லப்பட்டான்.

11. கம்ஸ வதம் காரணமாக நாமெல்லோரும் ஒன்று கூடி, மதுரையை முற்றுகையிட்டோம். வயோதிகர்களான நம்மால் என்ன தோஷம் செய்யப்பட்டது?

12. நமது ஸேனை பல மிகுதியைக் கண்டு, மிகவும் பயந்த ராம கேசவர், நகரையும், ஸேனையையும் விட்டுவிட்டு, கோமந்தத் திற்கு, இருவரும் சென்றனர்.

13. அங்கும், போர் புரியும் நம்மால், யௌவனம் வராத காலாள்களான அவருடன் போரிட்டுக் கொல்ல போர்களத் துக்குச் செல்லப்பட்டது.

14. நம்மால் தேர், குதிரை யானை, காலாள்களால் சண்டை செய்யப் படவில்லை, மலையை முற்றுகையிட்டு க்ஷத்ரிய முறைப் படி தீ வைக்கப்பட்டது.

15. ஶ்ரேஷ்டர்கள் எல்லோரும் க்ருஷ்ணன் அடக்கப் பட்ட தை நினைத்தோம். மிக்க தபோ பலமுடைய அவ்விருவரும், காட்டுத் தீ முகத்தில் புகுந்து வெளி வந்து பதில் போர் செய்யப் பட்டபோது ஜனார்த்தனனை இவ்விதம் தூஷித்தோம்.

16. நாம் எங்கெங்கு போகிறோமோ, அங்கங்கு கலகம் நடக் கும். [ஆகையால்] அரசர்களே! க்ருஷ்ணனுடன் ப்ரீதியின் பொருட்டு, முயல்வோம்;

17 க்ருஷ்ணன் இந்தக் குண்டின புரத்துக்குக் கலக்கத்துக்காக வரவில்லை. கன்னியின் பொருட்டு வந்த விடத்தில் எவரோடு போர் புரிவான்?

18. இந்த மனித வுலகில் இவன், க்ருஷ்ணன் புருஷ ஶ்ரேஷ்டன் ப்ரகருதி ஸம்பந்தமுள்ள ஒரு மனிதனில்லை. தேவலோகங்களில், தேவர்களில் மிக மேலானவன்.

19. புருஷோத்தமன் இவன் தேவர்களையும் படைப்பவன் எல்லா உலகங்களையும் விசேஷமாகப் படைப்பவன் பாலர்களது அல்ப புத்தி இல்லவே யில்லை.

20. பொறுமையில்லை, பேராசையில்லை, கடினமானவனில்லை துர்பவனில்லை, சோகமுடையவனில்லை எப்போதும் தன்னை வணங்குபவர் சோகத்தை போக்குபவன் இந்தக்ருஷ்ணன் விஷ்ணு ப்ரபு தேவன் தேவ தேவன்.

21. இங்கு தன் மாயையை விளங்கச் செய்யும் பொருட்டு கருடனுடன் வந்துள்ளான். நானுவித அஸ்தரங்களோடு கூடின க்ருஷ்ணன் சத்ரு நாசத்துக்காக ஸஞ்சரிக்கிறுன்.

22. யாதவ ஶ்ரேஷ்டர்களுடன், போஜர் வ்ருஷ்ணிகள், அந்தகர்களுடனும் கூடிய இந்த யாத்ரையை நன்ருகத் தெரிந்து கொள்ளுங்கள். தன்ப்ரியத்துக்குகாக விஷ்ணு வந்துள்ளான்.

23. அரசர்களே! நாம் எல்லோரும், மஹாத்மா கேசவனுக்கு அர்கயம் ஆசமனம் கொடுத்து, அதிதி பூஜை செய்வோம்.

24. இவ்விதம், க்ருஷ்ணனுடன் ஸந்தி செய்து கொண்டு, க்ருஷ்ணனுடன் கூடி, நாம் பயமின்றி, தாபமின்றி, கோபமின்றி வாழ்வோம்

25 26 புத்திமானுன தந்தவக்த்ரனின் அந்த வார்த்தையைக் கேட்டு சொல்பவரில் சிறந்த சால்வன், அரசர்களைப் பார்த்துச் சொன்னுன். சால்வன் சொன்னுன் அரசர்களே! க்ருஷ்ண பயத்தால் நடுங்குகிற எல்லோரும், ஸமரச காரணமாக ஆயுதங்களைக் கீழே வைப்போம்.

27, 28 இவன் பயத்தால் நமக்கு என்ன பயன்? தன் பலத்தை நிந்தித்து, பிறரைத் துதியால் என்ன கார்யம்? க்ஷத்ரியதர்மத்தில் இருக்கிற அரசர்களுக்கு இது தர்மமில்லை.

28, 29. (நீங்கள்) பெரிய அரசகுலங்களில் பிறந்து குலத்தை விளக்கு மவர்கள். அத்தகைய உங்களுக்கு இந்த கீழ்த்தரபுத்தி எப்படி உண்டாகிறது? நானே க்ருஷ்ணனை அறிவேன் ஆதிதேவன் நித்யன், ப்ரபு, எல்லா தேவேந்த்ரர்களுக்கும் ப்ரபு, பரமான நாராயணனே இவன்;

30, 31. வைகுந்தன், அஜ்யன்; சராசரங்களை ஆள்பவன் ஹரி; தேவகி கர்ப்பத்தில் தோன்றியவன்; விஷ்ணு; உலகால் வந்தனை செய்யத்தக்கவன்; கம்ஸ ராஜன் வதத்துக்கும் பூபாரம் தீர்க்கவும், நம்மை அடியோடு ஒழிக்கவும், லோக ஸாதுக்களை ரக்ஷிக்கவும், காரணமாக அவதரித்தவன். விஷ்ணுவின் விசேஷ கார்யங்களை எல்லாம் நான் அறிவேன்.

32, 33. அரசர்களே! விஷ்ணுவுடன் ஒப்பற்ற (ஏற்றத் தாழ்வுள்ள) போர் செய்து அவன் சக்ரத் தீயால் அடியோன கொளுத்தப்பட்டு யமன் வீட்டை அடைவோம்.

33, 34. ராஜஸ்ரேஷ்டர்களே! தத்வத்தையறிவேன். காலத்தால் ஆயுள் தேய்கிறது. ஒருவனும் அகாலத்தில் சாகமாட்டான் காலம் வந்த போது ஜீவிக்கவும் மாட்டான் இவ்விதம் நிச்சயம் செய்து ஒருவனுக்கும் பயமடையப்படாது.

35, 36 அந்தப் பகவான் விஷ்ணுவே தபஸ்ஸின் குறைவைப் பார்த்து காலப்படி யோக பலத்தால் அஸுரஸ்ரேஷ்டர்களைக் கொல்கிறான். கொல்ல முடியாத மஹாபலம் வாய்ந்த விரோசன புத்ரன் பலியை இவ்விதம் கட்டி தேவ தேவேசனான விஷ்ணு பாதாள லோக வாஸியாகச் செய்தான்.

37. அரசர்களே! விஷ்ணுவின் லீலைகள் இத்தகையக் அல்லவா? ஆதலால் சண்டைக்காக ஆலோசனை உங்களுக்கே தகாதது.

38. இந்த க்ருஷ்ணனின் வரவும், போர் காரணமாக இல்லை யாரோருவனுக்கு கன்னிகை; அவனை அவள் வரிக்கப்போகிறாள். ராஜாக்களுள் போர் எதற்கு? நிச்சயமாக மகிழ்ச்சி உண்டா கட்டும்.

**வைசம்பாயனர் சொன்னார்:** இவ்விதம் பேசிக்கொண்டிருக்கும் புத்திமான்களான அரசர்களுக்கு பீஷ்மகராஜா (புத்ரன் காரணத் தால்) ஒன்றும் சொல்லவில்லை.

40. மிக்க வீர்ய மதத்தால் கர்வம் கொண்டும், பரசுராம அஸ்த்ரத்தால் ரக்ஷிக்கப்பட்டும், யுத்தகளத்தில் வேகமாகத் தேர் செலுத்துமவனுமான மகனை மனதால் நினைத்து ஒன்றும் சொல்ல வில்லை

41. பீஷ்மகன் சொன்னான் "பலத்தால் கர்வங்கொண்ட என் பிள்ளை எப்பொழுதும் அகங்காரம் கொண்டவன். போரிலும் ஒருவனுக்கும் பயப்படுவதில்லை. எப்போதும் க்ருஷ்ணனை ஸஹிப் பதேயில்லை.

42. க்ருஷ்ணனது புஜ பலாக்ரமத்தால் இவன் கீர்த்தியிழந்து அவமானப் படுவான். இதில் ஸந்தேகமில்லை பிறகு மஹாபுருஷன் க்ருஷ்ணனுடன் விரோதம் காரணமாக போர் மூளும்.

43. பரத்வேஷமுடையவன் ஸ்வாபிமானங் கொண்டவன், என் மகன் எப்படி வாழ்வான்? என் மகனுக்கு கேசவனிடமிருந்து வாழ்வை நான் பார்க்கவேயில்லை.

44 பித்ருக்களுக்கு ஸந்தோஷம் வளர்க்கும், மூத்தபிள்ளையை எப்படி போர் புரியச் செய்வேன். கன்னியின் பொருட்டு வந்த க்ருஷ்ணனை மகனுடன் எப்படி போர் செய்விப்பேன்.

45. மகன் ருக்மி, தேவனான நாராயணனை மேலானவனாக விருப்பவில்லை மூடன் மதத்தால் கர்வங்கொண்டவன் போரில் புறங்காட்டுவதில்லை நெருப்பில் பஞ்சுக்கூட்டம் போல் நிச்சய மாக சாம்பலாய்ப் போவான்.

46 விசித்ர யுத்தம் புரியும் பலவான் கேசவனால் சூரன் கரவீர மன்னன் ச்ருகாலன், ஒரு நொடியில் சாம்பலாக்கப்பட்டான்.

47 48, 49. சிறந்த பலவான் ஸ்ரீமான் கேசவன் ப்ருந்தா வனத்தில் வஸித்தான், மலையை ஒரு கையால் தூக்கி ஏழு நாட்கள் தாங்கினான்: அவன் செயற்கரிய செயலை என் மனம், நினைத்து, நினைத்து மிகவும் கவலை கொள்கிறது.

49. [அத்த] சிறந்த மலையில், தேவேந்த்ரன் தேவர்களுடன் சீக்ரமாக வந்து க்ருஷ்ணனுக்கு [கோவிந்த] பட்டாபிஷேகம் செய்து தேவேந்தரன் [நீ எனது தம்பி] உபேந்த்ரன் என்றும் சொன்னான்.

50. யமுனை மடுவில் காளியன் எனும் ஸர்ப்பம் கொடியவன் விஷாக்னியால் ஜ்வலிப்பவன் காலன் போன்றும் அந்தகன் [யமனது அதிகாரிகள்] போன்றும், காந்தியுடையவன் அத்தகைய வன் அடக்கப்பட்டானல்லவா?

51. குதிரை ரூபங் கொண்ட மஹா வீர்யமுடைய தேவர் களாலும் அணுக முடியாத கேசி அஸுரனும், வஸுதேவ புத்ரன் க்ருஷ்ணனால் அழிக்கப்பட்டான்.

52. கடலில் வெகுகால முன்னர் நஷ்டமான சாந்தீபனி முனிவர் புத்ரனும் பஞ்சன அஸுரனைக் கொன்று, யமன் வீட்டிலி ருந்து [போர் புரிந்து] கொண்டுவரப்பட்டானல்லவா?

53, 54. கோமந்த மலையில் பல அரசர்களால் சூழப்பட்ட அவ்விருவர், யானை குதிரை தேர் இவைகளை யழிக்கும் பெரு நடுக்கம் செய்யும் மிகப் பெரிய போர் செய்து, வஸுதேவ புத்ரர் மஹாவீரரான அவ்விருவரும், யானைக் கூட்டங்களை யானையாலும் தேர்வீரர்களை தேராலும் குதிரைப் பாகர்களை குதிரை போராலும் காலாட் படை வீரரை மனிதராலும் கொன்றார்கள்.

55, 56. தேவர் அஸுரர், கந்தர்வர் யக்ஷர், உரகர் ராக்ஷஸர் நாகர், அஸுரஸ்ரேஷ்டர், பிசாசர் குஹ்யத்ர [இவரில் எவரும்] அம்மாதிரி யானை; குதிரை, தேர், முதலியவற்றினை கோர நாசம் செய்தவரில்லை அந்த போரை நினைத்து என் மனம் மிகத் தவிக்கிறது.

57. தேவஸ்ரேஷ்டன் வஸுதேவனைத் தவிர, அம்மாதிரி வேரு மனிதன் ஓரிடத்திலும் என்றால் இதற்கு முன்; கேட்கப் பட்டதுமில்லை, பார்க்கப்பட்டது மில்லை.

58. புஜபராக்ரம முடைய தந்த வக்த்ர ராஜா அழகாகச் சொன்னான் மஹாவீர க்ருஷ்ணனைச் ஸமாதனம் செய்து, எது தகுதியோ அதைச் செய்வோம்''

59. **வைசம்பாயனர் சொன்னார்:** பலா பல உண்மையை, இவ் விதம் மனதால் நன்கு ஆலோசித்து அதிசதனாகிய க்ருஷ்ணனை சமணப் படுத்த எண்ணி முற்பட்டான்.

60. நீதிமான்களான பல அரசர்களுடன் ஆலோசனை செய்த அரசன் பீஷ்மகனும் [ஸுப்ரபாதம் பாடும்] ஸுதமாகத வந்தி களின் மங்கள ஸ்துதிகளால் [மறுநாள்காலை] துயிலெழுப்பப் பட்டான்.

61. பொழுது விடிந்ததும், காலைக்கடன் முடித்துக்கொண்டு எல்லா அரசர் களும் அவரவர் இளைப்பாறும் இடங்களில் அமர்த் திருந்தனர்.

62 விதர்ப்ப நகரில் [ஆலோசனை செய்த] அரசர்களால் அனுப்பப்பட்டவர்கள் தங்கள் அரசரிடம் வந்து ரஹஸ்யமாகச் சொன்னார்கள்.

63. க்ருஷ்ணாபிஷேகத்தைக் கேட்டு சிலர் மகிழ்ந்தனர் பயந்த சிலர் பயங் கொண்டனர் மற்றவர்கள் அலக்ஷ்யமாக யிருந்தனர்.

64 பனித. யானை குதிரை, வரிசையுடைய அந்த ஸேனை மூன்று வகையாகப் பிரித்து க்ருஷ்ணாபிஷேகத்தால்அசைவெடுத்து மஹா ஸமுத்ரம் போல்கலங்கிறது

65, 66. ராஜ ஶ்ரேஷ்டனான பீஷ்மகன் அரசர்களின் பீள வைப் பார்த்து. அரசனான தன்னால் செய்யப்பட்ட நினைக்க முடியாத, க்ருஷ்ணனுக்கு ஆதித்ய முறை தவறியதை நன்கு ஆலோசித்து, ராஜா பீஷ்மகன் மனம் தபித்துக் கொண்டு, அரசர் [பொது] கூட்டத்தில் தெளிவுபடுத்துவதற்கும்சென்றான்.

67. இச்சமயம் தேவதூதர், க்ரதன், கைசிகன், இருவரிடமும் வந்தனர், பிறகு ஓலையை சிரமேல் வகித்து அரசர் கடலை யடைந்தனர்.

49ம் அத்யாயம் முற்றுற்று

## 50ம் அத்யாயம்

### க்ருத கைசீகர் தங்கள் இராஜ்யங்களை க்ருஷ்ணனுக்கு ஸமர்ப்பித்தல் பகவான் க்ருஷ்ணனின் இந்த்ரனின் விருப்பத்தால் எல்லா ராஜாக்களாலும் சக்ரவர்த்தியாக அபிஷேகம் செய்து;கொள்ளல் எல்லோரை யும் ஸமாதானம் செய்தல்

**ஜனமேஜயர் சொன்னார்:** "தேவர்கள் எல்லாம் அணுக முடியாத, மஹாவீரன் கம்ஸனைக் கொன்று, ராஜ்யத்தில் தான் பட்டாபிஷேகம் செய்து கொள்ளவில்லை. ஸிம்ஹாஸனத்தில் உட்காரவுமில்லை.

2. கன்னியின் பொருட்டு க்ருஷ்ணன் வந்தான். அங்கேயும் அதிதியாக (ப்ரியத்தால்) ஏற்கப்படவில்லை ஒப்பற்ற அவமான மடைந்து எக்காரணத்தால் பொறுத்திருந்தான்?

3. விந்தையான கருடனும் மஹா பல பராக்ரமமுடையவன். அவனும் பொறுமையோடிருந்தான். என்ன காரணம்? பகவான் வைசம்பாயனரே. இதைக் கேட்க எனக்கு மிக்க உத்ஸாஹ மிருக்கிறது.

4.5. **வைசம்பாயனர் சொன்னார்** அச்சுதனோடு கூடின கருடன் விதப்ப நகரை அடைந்ததும், கைசிகராஜன் க்ருஷ்ணன் பொருட்டு மனதால் நினைத்தான். க்ருஷ்ணனைப்பார்த்தது ஆஶ்சர்யமல்லவா? (இதை) எல்லா அரசர்களிடமும் சொல்கிறேன். வஸுதேவர் மகன் க்ருஷ்ணன் பார்க்கப்பட்ட போது பாபம் தேய்ந்து போகும். க்ருஷ்ணன் கடாக்ஷகதத்வத்தால் நாமிருவருக்கும் மனச்சுத்தம் உண்டாகும்.

6, 7 தேவதேவன் க்ருஷ்ணனைக் காட்டிலும், மூவுலகிலும் அதிதிபூஜை செய்ய மேலான பாத்ரம் வேறு எவன் இருக்கிறான். அரசனே! க்ரதனே! க்ருஷ்ண தர்மம்குறைவேற்படாதபடி, நாமிரு வரும் எதைக் கொடுப்போம்

8. இவ்விதம் க்ரத கைசிக ஸஹோதரர் இருவரும் ஒருவருக் கொருவர் ஆலோசனை செய்து, தங்கள் ராஜ்யத்தைக் கொடுக்க விரும்பி கேசவன் பக்கம் அடைந்தனர்.

9. விதர்ப்ப நகர் தலைவர்களான அந்த இரு வீரர்கள் க்ரத கைசிகர், தேவன் க்ருஷ்ணனை யடைந்து, மிக புண்யவான்களான அவ்விருவரும் ஹரியைத் தலையால் வணங்கிச் சொன்னார்கள்:

10. ''தேவரீர் எங்கள் க்ருஹத்து வந்ததும், எங்கள் இரு வரின் ஜன்மம் கடைத்தேறியது புகழும் அப்படியே. இன்று எங்கள் பித்ருக்கள் த்ருப்தியடைந்தார்கள்.

11. சாமரம், விசிறி, குடை கொடி ஸிம்ஹாஸனம், ஸேனை, நிறைந்த செல்வத்தையுடைய இந்நகரமும், எங்களுடன் சேர்ந்து உனக்கு அர்ப்பணம்.

12. 13. மஹாபாஹோ? தேவேந்த்ரனால் 'உபேந்த்ரனாக' அபிஷேகம் செய்யப்பட்டீர் இந்த ராஜ்யத்தில் நாங்கள் இருவரும் உமக்கு அபிஷேகம் செய்விக்கிறோம். எங்களாலும், பல அரசர் களாலும், மகதராஜன் ஜராஸந்தனாலும் செய்யப்பட்ட கார்யம் மாற்றி செய்ய முடியாது.

14. மஹா தேஜஸ்விமகத ராஜன் ஜராஸந்தன் உமது சத்ரு எரசர்களுக்கு அபயம் கொடுக்கும் அவன் உமது (திவ்ய) கதையை அப்போதும் சொல்கிறான்.

15. அசரீரி வாக்கு சொன்னது ''இந்த (நரனுக்கான) ஸிம்ஹாஸனம் க்ருஷ்ணன் உட்காரத் தக்கதில்லை இவனுக்கு ஏற்ற நகரமுமில்லை இந்த அரசர் கூட்டத்தில் தேவகீ புத்ரன் க்ருஷ்ணன் எப்படி அமர்வான்?

16. க்ருஷ்ணனே மிகப் பெரிய வீரன் (தானம் கொள்ளாத கௌரவ முள்ளவன், மிக்க தேஜஸ்வி, இந்த ஸ்வயம் வரத்தில் கன்னிகைக்காக வரமாட்டான்.

17. அரசர்கள் தங்கள் ஸிம்ஹாஸனங்களில் அமர்ந்த பிறகு, தாழ்மையான தகாத ஆஸனங்களில் மஹா தேஜஸ்வி க்ருஷ்ணன் எப்படி உட்கார்வான்?

18. ''இப்படி நன்கு ஆலோசித்து எங்களால் தூண்டப்பட்ட பீஷ்மக அரசன், எங்கள் இருவருடன் கூட கேட்டு ஆலோசித்து சண்டை வராமல் அடக்கவும் உனது இளைப்பாறு வதற்காகவும், இந்த உத்தமமான மாளிகை நிர்மாணிக்கப்பட்டது.

19 20 தேவர்களுக்கெல்லாம் நீர் ஆதிதேவன் எல்லா உலகங்களாலும் வணங்கப்பட்டவன். மனிதர் வலிக்கும் மேலான தன்மையை அடைவாயாக இந்த அரசர் கூட்டத்தில் ஆஸனத்தைப் பற்றிய சங்கடம் வேண்டாம்.

21. விதர்ப்ப நகரில் இந்த அரசர்களுக்கு அரசனாயிருக்கும் தன்மையை நடத்திக் காட்டு மஹாதேஜஸ்வியே! நாளை காலை அழகிய ஆஸனத்தில் அமரலாம்.

22. இன்று தன்னை சாஸ்திர விதிப்படி [பட்டாபிஷேகத்திற்கு] பூர்வாங்க கார்யங்களைச் செய்து தேவேந்தரன் கட்டளைப்படி, அரசர்கள் வருகை தரும்படி செய்வேன்''

23. இவ்விதம் இவ்விருவிரும் சொல்லிக் கைகூப்பி, தேவ ச்ரேஷ்டன் க்ருஷ்ணனை வணங்கி, தேவ தூதர்களை அனுப்பினார்கள் [49 அ—67].

24 மிக்க தேஜஸ்வி கைசிக ராஜா தேவேந்தரனால் சொல்லப்பட்ட வார்த்தையை எழுதி [தேவேந்த்ர] கட்டளையைச் சொன்னான்.

25—27 **கைசிகன் சொன்னான்:** ''அரசப் பெரியோரே! கருடன் கூடிய அச்சுதன் ஹரி விருந்தாளியாக விதர்பப நகருக்கு வந்திருக்கிறான் உங்களுக்குத் தெரிந்த விஷயம் [இது] விதர்ப்ப ராஜன் வந்த க்ருஷ்ணனைப் பார்த்து இவன் ஸத்பாத்ரம் எனத் தீர ஆலோசித்து தர்மத்தின்படி, தன் ராஜ்யத்தை வாஸுதேவனுக்குத் தானம் பண்ணினான். பிறகு என் ஸஹோதரன் க்ரதனால் இந்த ஆஸனத்தில் அமர வேண்டும் எனக் கேட்டுக் கொண்ட போது ஆகாயசாரியான ஏதோ ஒரு அசரீரியால் வார்த்தை சொல்லப்பட்டது.

28 **தேவதூதன் சொன்னான்** ''ராஜா! நீ உபயோகித்த ஆஸனத்தை கொடுப்பது ஸரியல்ல இவனுக்கு இது ஆஸனம். திவ்யமானது, எல்லா ரத்னங்களாலும் அங்கீகரிக்கப்பட்டது.

29. தங்க மயமானது, மிக அழகியது விஸ்வகர்மாவால் செய்யப்பட்டது, தேவராஜன், இந்த்ரனால் அனுப்பப்பட்டது. ஆம் ஹலக்ஷ்ணத்தால் அடையாளம் செய்யப்பட்டது.

30. இதில் அமர்த்தி சராச்ரங்கள் வணங்கும் தேவதேவன் ராஜஸ்ரேஷ்டன் க்ருஷ்ணனை பல அரசர்களுடன் அபிஷேகம் செய்யட்டும்.

31. குண்டின புரத்தில் கன்னியின் பொருட்டு அரசர்கள் வந்துள்ளனர் இந்தப் பட்டாபிஷேகத்துக்கு வராதவன், கொல்லப்படத்தக்கவன் ஆவான்.

32. இந்த எட்டு கலசங்களும் [அஷ்ட] நிதிகளின் அம்சமாக உண்டானவை, குறைவற்றவை, ராஜராஜனான மஹாத்மா குபேரனுடையவை, திவ்யமானவை, தங்கம் ரத்னம் நிரம்பியவை, திவ்யாபரணங்களுக்கு மூல காரணமானவன் ராஜராஜன் க்ருஷ்ணனது அபிஷேகத்திற்காக தேவ அரசர்களால் சூழப்பட்டு வருகின்றன.

34. இது இந்த்ரனது கட்டளை, அரசர்களே! உங்களுக்குச் சொல்லப்பட்டது. இந்த ஆஜ்ஞா பத்ரத்தின் மூலம் அந்த எல்லா அரசர்களையும் வரவழைத்து கேசவனைப் பட்டாபிஷேகம் செய்யுங்கள்.''

35. **கைசிகன் சொன்னான்:** இவ்விதம் ஆஜ்ஞையைச் சொல்லி பால சூர்யனைப் போன்ற காந்தியுடைய ஆஸனத்தை க்ருஷ்ணனிடம் கொடுத்து ஆகாயத்திலிருந்த இந்த தேவ தூதன் ஸ்வர்க்கத்திற்குப் போனான்.

36. அதனால் நான் உங்களை ஊக்குவிக்கிறேன். உங்களுடன் வந்தவர்களையும் அப்படியே. இது தேவேந்தரன் தன்னாலேயே சொல்லப்பட்டது. உலகில் இதற்கு மாறு சொல்ல முடியாது.

37. உலகங்களால் பார்க்கத் தக்கது அற்புதமானது உலகில் துர்லபமானது ஆகாயத்திலிருந்து தானாகவே கலசங்களால் அபிஷேகம் செய்யப்படுகிற ஆஸ்சர்யத்தைப் பார்த்து, நமக்குப் பாபம் தேய்ந்து விடும்.

38, 39 நிச்சயமல்லவா? தேவ தேவன் க்ருஷ்ணனது அபிஷேகத்திற்கு வந்து சேருங்கள்! அரச ஸ்ரேஷ்டர்களே பயப்பட வேண்டாம். க்ருஷ்ணன் உங்களுக்காக எங்கள் இருவருடன் ப்ரியமாயிருக்கிறான். ஹரியான க்ருஷ்ணன் எல்லா அரசர்களுக்கும் அபயம் கொடுக்கிறான்.

40, 41. க்ருஷ்ணனே கடாக்ஷ தத்வத்தால் நம்மிடம் விசேஷ சுத்த மனதுடையவன். ஜராஸந்தனிடம் விசேஷ க்ருபா பாவம் கொண்டிருக்கிறான். க்ருஷ்ணன் ஹ்ரதயத்தில், விரோதம் காணப்படவில்லை, இதில் காரண கார்யம் உங்களால் ஆலோசிக்கப் படட்டும்

42, 43 **வைசம்பாயனர் சொன்னார்:** இந்த்ரன் ஆஜ்ஞைக்குப் பயப்பட்டு அரசர்கள் இப்படி ஆலோசித்தனர். மஹாத்மா கேசவனைப் பற்றி ராஜச்ரேஷ்டர்கள் மறுபடி அசரீரி வாக்கு கேட்டார்கள். தேவராஜன் இந்தரன் கட்டளையால் மேக கம்பீர நாதத்தால் ஆகாயத்தை நிரப்பி சித்ராங்கதனை அசரீரி வார்த்தை சொன்னான்.

44. மூவுலகாதிபதி, தேவேந்தரன் ஜனங்களை ரக்ஷிக்கும் காரணமாக அரசர்களாகிய உங்கள் நன்மையைக் கருதி கட்டளையிடுகிறான். அரசஸ்ரேஷ்டர்களே! க்ருஷ்ணனுடன் ஒருவருக்கொருவர் விரோத பாவத்துடன் வாபிப்பது உசிதமில்லை

45, 46 தங்கள் ராஜ்யங்களில் ப்ரீதியை உண்டு பண்ணி வஸியுங்கள் க்ருஷ்ணன் வணங்கியவரின் துக்கத்தைப் போக்கடிப்பவன். இவனுடன் நல்ல ப்ரீதி கொண்டு பொறுமையின்றி மகிழுங்கள்.

47. மனிதருக்கு அரசர் தலைவர் ஆவர். அரசருக்குத் தலைவராவர். தேவருக்கு இந்த்ரன் தலைவன். இந்த்ரனுக்கோ ஜனார்த்தனன் தலைவன்.

48. இந்த ப்ரபு விஷ்ணு தேவன் தேவர்களுக்கும் தெய்வம் இந்த கேசவன். மனித உலகில் மனித உருக்கொண்டு அவதரிக்கிறான்,

49 எவ்வுலகிலும், தேவராலும், அஸுரராலும், ஜயிக்க முடியாதவன்; கார்த்திகேய ஸஹாயனுன சூலம் பிடித்த சங்கரன் தன் சக்தியாலும் ஜயிக்க முடியாதவன்.

50. தேவாதிதேவனுன மஹாத்மா கேசவனுக்குதேவகளுடன் கூடி அபிஷேகம் செய்ய விரும்புகிறேன். இதற்கு மேலானது என்ன?

51. அரசஸ்ரேஷ்டர் அபிஷேகத்தில் ஸாமான்ய தேவர்களுக்கு அதிகாரமில்லை. ஆகையால் நான் எல்லாவுலகும்வணங்கும் க்ருஷ்ணனை பட்டாபிஷேகம் செய்யவில்லை.

52. அரசஸ்ரேஷ்டனது பட்டாபிஷேகத்தில்இந்த அதிகாரம் அரசர்களுக்கே அரசஸ்ரேஷ்டர்களே! நீங்கள், கைசிகர்களுடன் கூடி விதர்ப நகரை யடைந்து நன்கு யோசித்து முறைப்படி செய்யுங்கள்.

53. அரசர்களே! இது பரஸ்பரம் ப்ரீதி செய்ய ஸமயம் எனத் தேவேந்தரன் நன்கு யோசித்து உங்களைத் தெளிவிப்பதற்காக நான் அனுப்பப்பட்டேன்.

54—56 விதர்ப்ப நகரில், க்ரத, கைசிகர், இருவராலும் க்ருஷ்ணன் ராஜாதிராஜனுக அபிஷேகத்திற்காக பூர்வாங்க விதிகளைச் சொல்ல க்ருஷ்ணன் கேட்டான். அரசஸ்ரேஷ்டர்களே! அவர்களுடன் கூடி பெரிய (பட்டாபிஷேக) உத்ஸவத்தைச் செய்து அபிஷேகத்தை செய்வித்து தக்ஷிணையும் பெற்று மிக்க மகிழ்ச்சியுடன் திரும்பவும் ஸ்வயம்வரத்து வாருங்கள்.

57. ஜராஸந்தன், ஸுநந்தன், மஹாரதன் ருக்மீ ஸௌபாதி சால்வன், இந்த நான்கு சிறந்த அரசர்களும் இந்த ஸபை சூன்யமில்லாமலிருக்க இங்கே யிருக்கட்டும்.''

58, 59 **வைசம்பாயனர் சொன்னர்;** எல்லா ராஜஸ்ரேஷ்டர்களும் சித்ராங்கதனுல் சொல்லப்பட்ட இந்த்ரன் கட்டளையைக் கேட்டு புத்திமான் ஜராஸந்த ராஜாவால் அனுமதிக்கப்பட்டு செல்ல இசைந்தனர்.

60, 61. பீஷ்மகனை முன்னிட்டு தங்கள் ஸேனை சூழப்புறப் பட்டனர், மஹாபாஹு பீஷ்மகனும், தன்ஸேனையொடு, மனஸ்தாபத்துடன் க்ருஷ்ணன் இருக்கும் கைசிகன் மாளிகைக்கு, அரசர்களுடன் சென்றான்.

62. வெகுதூரத்திலிருந்தே ஒளி வீசும் விருதுக் கொடிகள் த்வஜங்கள் இவைகளின் வரிசைகளையுடைய மங்களகரமான தேவசபை அபிஷேகத்துக்காக இங்கு வந்தது.

63. திவ்ய ரத்ன காந்தி நிறைந்தது தேவ த்வஜங்களால் சூழ்ந்தது. திவ்ய வஸ்த்ரங்களாவன விருதுக் கொடிகள் நிறைந்தது; திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டது.

64. சிரோ மாலைகளும், மார்பு மாலைகளும், மிகக் கொண்டது; திவ்ய வாஸனைப் பொருள்களால் நறுமணம் கொண்டது; லக்ஷணமான விமானங்களாலும் வாஹனங்களாலும் நாற்புறமும் சூழப்பட்டது.

65. திவ்ய அப்ஸரஸ் கூட்டங்கள் வித்யாதரர் கூட்டங்கள், கந்தர்வர், முனிகள் கின்னரர் இவர்கள் எல்லோரும் ஆகாயத்தையடைந்து, தேவேந்த்ரனை ஸ்துதி பாடுகின்றன.

66. முனிகள் சித்தர், பரமரிஷிகள் இவர்களும் ஸ்தோத்ரம் செய்கின்றனர் தேவதுந்துபிகளும், தாமே ஆகாயத்தில் ஒலித்தன.

67. ஐந்து மூலப் பொருள்களால் ஆகிய வாஸனைச் சூர்ணங்கள், ஆகாயத்திலிருக்கும் தேவர்களால் நாற்புறமும் தூவப்பட்டன.

68 தேவேந்த்ரன் இந்த்ராணியுடன் தானே வந்து, சிறந்த விமானத்தில் ஏறி ஒளி வீசுபவனாய் ஆகாயத்தில் இருந்தான்.

69. எட்டுலோக பாலகர்கள் தங்கள் தங்கள் திக்குகளிலிருந்து நாற்புறமும் பாடுகின்றனர் ஆடுகின்றனர் ஸ்தோத்ரம் செய்கின்றனர்.

70. எல்லா அரசர்களும் [வானத்தில்] மிக அதிகமான சப்தத்தைக் கேட்டு, ஆஶ்சர்யத்தால் கண்கள் மலர்ந்து, மங்களமான (தங்கள்) ஸபையில் புகுந்தனர்.

71 பலவானான மஹாபாஹு கைசிகனும் அரசர்களையடைந்து, முறைப்படி கௌரவித்து உள்ளே வரச் செய்தான்

72. தேவ தேவன் க்ருஷ்ணனிடம் அரசர்களின் வரவு தெரியப் படுத்தப்பட்டது ஸர்வ மங்களமான பொருள்களாலே பூஜிக்கப் பட்ட ஸ்ரீமான் ஹரி க்ருஷ்ணன் வெளிவந்தான்.

73. பிறகு ஆகாயத்திலிருக்கிற வஸ்த்ரங்கள் கட்டிய கழுத்துடைய, மாவிலையுடன் கூடிய அந்த திவ்ய கலசங்கள், மேகங்கள் போல் வர்ஷித்தன.

74, 75, 76, 77. திவ்யமான ஸ்வர்ணம், ரத்னக் குவியில்கள் திவ்ய புஷ்பங்கள் நறு மணமுடைய சூர்ணங்கள் இவைகளால் ரஜேந்த்ர பட்டாபிஷேகத்தில் ஜனார்த்தனனை, சாஸ்த்ர விதிப்படி அபிஷேகம் செய்து மங்களமான தெய்வத்தன்மை வாய்ந்த (ஸபையின்) ப்ராகாரங்களைச் சுற்றி அரசர்களுக்குக் காண்பித்து திவ்ய வஸ்த்ரங்களாலும், மாலை பூச்சுக்களாலும் முறைப்படி ராஜாக்களை பஹுமானித்து; பிறகு அபிஷேகத்துக்காக இங்கு வந்த அழகிய தேவ ஸபையில் ஜனார்தனன் (கைசிகன் வேண்ட) அமர்ந்தான்.

78—80 யாதவர்களாலும், விதர்ப்ப வாஸிகளாலும், அரசர்களாலும் கௌரவிக்கப்படுகிற அழகிய ரூபமுடைய பலவான் கருடன், மனித உருவங்கொண்டு (க்ருஷ்ணன்) வலது பக்கம் அடைந்து ஆஸனத்திலிருந்தான். மஹா பலமுடைய க்ரதன், வீரன் கைசிகன் ஆகிய மஹாத்மாக்களான அரசர் இருவரும் அப்படியே க்ருஷ்ணன் அனுமதியுடன் இடது பக்கம் உட்காரந்தனர். அவ்விதமே ஸங்கர்ஷணி, அந்தகர் மஹாரதர், சாத்யகி, முதலிய, மஹாபலமுள்ள வீரர்கள் இடது பக்கத்தில் உட்கார்ந்தனர்.

81—83 சூர்யன் போன்றதும் திவ்யமான விரிப்பு கொண்ட, தெய்வத்தன்மையுள்ள ஸிம்ஹாஸனத்தில் ஸுகமாக வீற்றிருக்கும் ஸ்ரீமான் க்ருஷ்ணனை, அமர்ந்ததாக மந்த்ரிகளால் அறிவிக்கப்பட்ட அரசர்கள் இந்தரனை அமர்த்தின தேவர்கள் போல ஸபையில் எல்லா ராஜாக்களும் முறைப்படி க்ருஷ்ணனைப் பூஜித்து தம்தம் ஆஸனங்களில் ஸுகமாக அமர்ந்தனர்,

84. எல்லா சாஸ்த்ரங்களையும் அறிந்தவரில் ஸ்ரேஷ்டனும், மஹாபுத்திமானும் சொல்வல்லோரில் சிறந்தவனுமான கைசிகனும் க்ருஷ்ணனைப் பூஜித்து ந்யாயப்படி சொன்னான்:

85. கைசிகன் சொன்னான்: "ப்ரபுவே! அரசர்கள் எல்லோரும் அறியாதவர்கள். நீர் [ஸாமான்ய] மனிதனென்ன எண்ணி உன்னை எதிர்த்த இவர்களை மன்னித்தருள வேண்டும்"

86, 87 க்ருஷ்ணன் சொன்னான்! கைசிகனே! என்னிடத்தில் ஒரு நாள் கூட விரோத மனப்பான்மை நிற்காது ஷத்ர தர்மத்தை அனுஸரிக்கும் அரசர்களிடையோ, இருக்கவே யிருக்காது தர்மப் படி போர் செய்கின்றனர். அதர்மத்தில் நோக்கமில்லை. ஆக அரசரிடம் எக்காரணங்கொண்டு கோபங் கொள்வது? சென்றது சென்றதே.

88, 89 மாண்டவர் ஸ்வர்க்கம் புகுந்தனர், இது இந்த மனித உலகில் தர்மம்; பிறக்கின்றனர். இறக்கின்றனர் அரசர்களே! இறந்தவனுக்காக நீங்கள் வருந்த வேண்டாம். பொறுமை எனக்கு இஷ்டம் அவர்கள் விரோதம் நீங்கியவராக இருக்கட்டும்

**வைசம்பாயனர் சொன்னார்:** மஹா தேஜஸ்வி மது ஸூதனன் அந்த அரசர்களை இவ்விதம் சொல்லி ஸமாதானப்படுத்தி கைசிகனது முகத்தைப் பார்த்துப் பேசாமலிருந்தான்.

91. இந்த ஸமயத்தில் சொல்வல போரில் சிறந்த ந்யாயத்தில் ஸமர்த்தனான பீஷ்மகன் க்ருஷ்ணனை முறைப்படி பூஜித்துச் சொன்னான்:

50 அத்தியாயம் முற்றிற்று

## 51-ம் அத்தியாயம்

### க்ருஷ்ணா பீஷ்மகன் ஸம்வாதம் பீஷ்மர் க்ருஷ்ணனை துதித்தல் க்ருஷ்ணன் மதுரை வருகை க்ருஷ்ணன் பீஷ்மகன் உரையாடல் பீஷ்மகன் க்ருஷ்ணன் ஸ்துதி மதுரை வருகை

**பீஷ்மகன் சொன்னான்:** என் மகள் குழந்தைத் தன்மையாக ஸஹோதரியை ஸ்வயம்வரத்தில் அரசர்களுக்குக் கொடுக்க விரும்புகிறான்.

2. அப்படிக்கொடுக்க இஷ்டமில்லை அவன் மிக்க பிள்ளைப் பேதமையால் [அப்படி] கொடுக்க விரும்புகிறான் என நான்

நினைக்கிறேன், எனது அபிப்ராயம் ஒருத்தி ஒருவனையே நன்கு அலோசித்து வரிப்பாள்

3. ஆதலால் பிள்ளையின் துர்மார்க்கம் காரணமாக, உம்மை (மன்னிக்க) வேண்டுகிறேன். தேவ தேவே! அனுக்ரஹம் செய்யும் என் விஷயத்தில் கருணை காட்ட வேண்டும்.

4. ஸ்ரீ க்ருஷ்ணன் சொன்னான்: உனது மகன் பிள்ளைத்தனத் தாலேயே! அரசர் கூட்டமே ஆட்டப்பட்டது. பெரியவனானால், எத்தகைய முரட்டுத்தனம் உண்டாகுமோ?

5, 6. எவன் ஒரு ராஜா எதிரில் மயக்கதால் பொய் சொல் வானோ, அவன் இவ்வுலகில் வாழமாட்டான் இவ்வுலகில் உயர்ந்த அரசகுலப் பிறப்பாலாகிய நலத்தால் பெற்ற மேன்மையுடைய சூர்ய சந்த்ர ஸமான உலகங்களையும் நீதி தண்டனையாகிற அக்னி எரித்து விடும்.

7. ப்ரபோ! பீஷ்மகா! இது அரசர் நீதியென உமக்குத் தெரியும் லோக நீதியை முன்னிட்டு, முன்னர் ப்ரஹ்மாவால் சொல்லப்பட்டது.

8. ராஜாவே உமது மகன் இந்த அரசர்களுக்கு எதிரில், ராஜ ஸபையில், உண்மையல்லாத வார்த்தை எப்படிச் சொல்லாம்?

9. உமது மகன் அத்தகைய ஒப்பற்ற அரச சபை ஏற் பாடு செய்து, உமக்குத் தெரியாது என்பது, எனக்குப் பெரிய ஸந்தேஹம்.

10. அக்னி, சூர்யன், சந்திரன் போன்ற தேஜஸ்ஸுடைய அரசர்களுக்கு, தகுதிப்படி பூஜித்து வந்தவருக்கு அதிதி பூஜை செய்திருக்கிறாய்!

11. தேர், குதிரை, காலாள், யானை, இவைகள் செய்த அமளியாகிற, உமது மகன் குறும்புத்தனத்தை, நீர் எப்படி அறியவில்லை?

12. இங்கு சதுரங்க ஸேனை வரவால் கஷ்டம் உண்டாக வில்லை! ராஜாவே! நீர் இதை எப்படி அறியாமலிருந்தீர்? இது பற்றி என் மனம் ஸந்தேஹப்படுகிறது.

13. ராஜாவே! அநேகமாக இங்கு, என் வருகை தான் உமக்கு ஹிதமில்லை, அல்லவா! ஆகையால் பாத்திரமல்லாத எனக்கு அதிதி பூஜை செய்யப்படவில்லை,

14. ராஜாவே! என்னை விட்டு விட்டு, கன்னிகை ஸத்பாத்ரத்தில் கொடுக்கப்பட்ட என் வரவின் தோஷத்தால் என் கன்னிகையை (மணம்செய்து) கொடுக்கிறீரில்லை?

15 கன்னிகா தானத்தைக் கெடுப்பவன் மீளா நரகத்தில் தள்ளப்படுகிறுன். எனத் தர்ம மறிந்த மனுமுதலிய அரசர்களால் சொல்லப்பட்டிருக்கிறது.

16. அரசரே! ராஜாவே! இதற்காகவே அதிதி பூஜை செய்யப்படாதது அறிந்து அரங்க நடுவில் உமது வீட்டில் நான் புகவில்லை.

17. அரசே! ஜனத்தலைவா! விதர்ப நகரில் ஸேனைகள் (எங்கும்) தங்கியுள்ள காரணத்தால் ராஜனை நான் வெட்கம் கொண்டேன்.

18. எங்கள் இருவருக்கும் (க்ருத கைசிகரால்) அதிதி பூஜை செய்யப்பட்டது, சைசிகன் ப்ரிய அதிதியை அடைந்தான். அவன் மாளிகையில் முன்னர் நாங்கள் (கேசவனும் கருடனும்) ஸ்வர்க்கத்தில் போல். ஸுகமாக இருந்தோம்.

19. **வைசம்பாயனர் சொன்னர்:** இவ்விதமே, வஜ்ராயுதம் போன்ற வார்த்தைகள் கூறும் க்ருஷ்ணனை ம்ருதுவான வார்த்தைகளாகிற தண்ணீரால் குளிரச் செய்ய, அணைந்த தீப்போல் க்ருஷ்ணன் சாந்தியடைந்தான்.

20. பீஷ்மகன் சொன்னன்: தேவலோகத்தலைவனே! உலகங்களை ஆள்பவனே! அறியாமையால் சூழப்பட்ட எனக்கு ஞானக் கண்ணை அருள வேண்டும்.

21. மனித வுலகில் ஞானக் கண் அல்லது ஸாமான்யமாம்ஸக் கண்களுடன் இருப்பதால் நாங்கள் நல்லறிவில்லாதவர்கள். ஆலோசிக்காமல் செய்வதால் சோபிப்பதில்லை.

22. தேவர்களுக்குத் தெய்வமான உம்மைச் சரணடைந்து எனக்கு ஞானப் பார்வை உண்டாகட்டும். என் கார்யங்கள் எல்லாம் செவ்வனே முடிய வேண்டும்

23 மஹா ஸேனுதிபதி திறமையற்ற ஸேனையைக் கொண்டு கார்ய வெற்றி கொள்வது போல் பெரியோர் குறையுள்ள கார்யங்களையும் நீதியுடன் கூடி பலன் பெறச் செய்கின்றனர்.

24, 25 உம்மைச் சரணடைந்து, எனக்குப் பயம் சிறிதுமில்லை. என்னால் சிந்திக்கப்பட்ட கார்யத்தைக் கேட்டருள வேண்டும். அரசர்களுக்கு ஸ்வயம் வரத்தில் கன்னிகையைக் கொடுக்க நான் தேவ தேவா! அனுக்ரஹம் செய் கோபங்கொள்ள வேண்டாம்.

26. ஸ்ரீக்ருஷ்ணன் சொன்னான்: மஹாபுத்திமானே: ராஜாவே! வார்த்தை சொல்லிப் பயன் என்ன? உன் பெண்ணை ஒருவனுக்குக் கொடுக்கிறாய் கொடுக்கவில்லை. பாபமற்றவனே! இந்தவிஷயத்தில் உனக்கு நியமிப்பவன் யார் இருக்கிறான்.

27 (உனது இஷ்டமே) ''நீ கொடுக்காதே'' என நான் சொல்லத் தக்கத்தில்லை. 'கொடு' என்றும் என் வார்த்தையில்லை. ஆனால் அவளது தெய்வத்தன்மைகொண்ட ரூபத்துக்கு (விஷ்ணுவான) எனது ஸம்பந்தமே காரணம்.

28. முன்னொருகால், மேரு சிகரத்தில், தேவர்களால்அவரவர் அம்ச அவதாரம் செய்யப்பட்டது. அப்போது முதல் முதல் லக்ஷ்மீ தேவி தோற்றுவிக்கப்பட்டாள்.

29. அழகிய ப்ருஷ்டபாகமுடையவளே! தேவேந்த்ரனுக்கா பூவுலகில் குண்டினபுரத்தில் பீஷ்மகன் பத்னி வயிற்றில் தோன்றுவாம் என்றும் கூறப்பட்டாள்.

30. ராஜாவே! நான் உனக்குக் கபடமற்ற வார்த்தையைச் சொல்கிறேன். கேட்டு நீயே யோசித்து எது யுக்தமோ அதைச் செய்.

31. அந்த 'ருக்மிணி'யெனும் உன் பெண் ஸாதாரணமனிதப் பெண்ணல்ல, இவள் லக்ஷ்மீ தேவி ஏதோவொருகாரணங்கொண்டு ப்ரஹ்மா வார்த்தையால் தோன்றியவள்.

32 அவளும் மனித அரசருக்கு ஸ்வயம்வர முறைக்கு ஏற்றவளில்லை. 'அவள் ஒருவனே ஒருவனுக்கே கொடுக்கத் தக்கவள் என்று தர்மம் நிச்சயிக்கப்பட்டுள்ளது.

33, ராஜாவே! அந்த லக்ஷ்மியை ஸ்வயம் வரத்தில் கொடுக்க நீ தக்கவனில்லை ஏற்ற வரனைப் பார்த்து தர்மப்படி கொடுக்க நீ தக்கவன்.

34. இதற்காகவே, அந்தக் கருடன், விக்னம் உண்டாகலாம் எனும் காரணத்தால் தேவதேவனுல் தூண்டப்பட்டு குண்டின புரத்துக்கு வந்துள்ளான். நானும் அரசர் மஹோத்ஸவத்தையும், தாமரையை விட்டு வந்த சிறந்த குணவதி லக்ஷ்மியாகிய அந்தக் கன்னிகையையும், காணவிரும்பி இங்குள்ளேன்.

35, 36, ராஜாவே! என் எதிரில் பொறுமைகாட்ட வேண்டு மெனக் கேட்டுக்கொண்டது யுத்தமானதென நான் எண்ணு கிறேன். வேறு உன் தோஷகாரணமில்லை.

37 முன்னரே என்னுல் சொல்லப்பட்டது. எதனுல் உன் தேசத்தில், நல்ல எண்ணத்துடன் வந்தேனே, அதனுலேயே நான் பொறுமை கொண்டேன்,

38. [என அறி] பொறுமை கொண்டவனிடம் நற்குணங்கள் பூர்ணமாயிருக்கும், பிறர் [செய்தி] தோஷத்தை மறப்பது க்ஷமை. ராஜாவே! என் போன்றவர் ஹ்ருதயத்தில் கோபம் எப்படி வஸிக்தம்.

39 இவ்வுலகில் நற்குலத்தில் தோன்றி ஸத்யகுணம்நிறைந்து தர்மமறிந்து உண்மை பேசும் உன் போன்றவரிடம் ராஜாவே எப்படி தோஷமிருக்கும்?

40 ஸேனையுடன் வந்திருக்கும் என்னுல் பொறுமை கொள்ளப்பட்டதென அறி. நான் ஸேனையோடுசத்ரு ஸன்யத்தை[போருக்காக] அடைய மாட்டேன்.

41. பொறுமையில்லா ஸமயம் சந்த்ர சூர்யன் போன்ற ஆயுதங்களை கைகளில் தரித்து, கருடன் மேலிருந்து செல்வேன்

42. ராஜாவே! நீ என்னுல் கௌரவிக்கத் தக்கவன். வயதாலும் அப்படியே என் பிதாவுக்கு ஸமமானவன். நகரை நன் காப்பாற்று.

43 க்ஷத்ரியரிடம். பிதாவிடம் போய் இரு. ராஜ ஶ்ரேஷ்டா தோஷமென்பது, கீழ்த்தரப்பட்ட மனிதரிடமிருக்கும் சுத்தமனதுடைய வீரனிடம், எப்படி தோஷமிருக்கும்?

44 இது என் ஸ்வபாவம் நம் பிள்ளைகளிடம் பிதா போன்றவர் விதர்ப்ப நகரத் தலைவர்களான [கரதகைசிகர்] ராஜாக்களு

எனக்கு ஆதித்யத்தில் தம் ராஜ்யத்தைக் கொடுத்தனர், அந்
தான பலனாக இவர்கள் மூன் பத்து தலைமுறையினர் ஸ்வர்க்க
சென்றனர்.

45, 46. வரப்போகும் பிள்ளை, பேரன் முதலியபின் பத்
தலைமுறை ராஜாக்கள் அந்த ஸ்வர்க்கத்துக்குப் போவார்கள்

47. இவர்கள் இருவரும் வெகு காலம் இடையூறில்லாம
ராஜ்யத்தை அனுபவித்து மோக்ஷம் விரும்பும் போது கவலையின்
மோக்ஷத்தையடைவர்.

48 இந்த அபிஷேகத்துக்கு வந்த அரசரெல் லோரும் உரியகால
தில் ஸ்வர்க்கம் அடைவர், உங்கள் எல்லோருக்கும் மங்கள

49. கருடனுடன் போஜராஜன் உக்ரஸேனனால் ஆளப்படு
அழகிய மதுரைக்குச் செல்வேன்.

50. யது ஸ்ரேஷ்டனும், பீஷ்மகராஜனிடம் இவ்விதம் கூ
விதர்ப அரசர் க்ருதகைசிகரிடமும் விசேஷமாக விடைபெற்று
கொண்டு சபையிலிருந்து வெளியேறி தேவத் தலைவன்க்ருஷ்ணன்
ரதத்தின் பக்கம் சென்றான்.

51. பிலகு ராஜர்ஷி பீஷ்மகன் சேவகனைப் பற்றி சந்தோ
மடைந்தானல்லவா? அந்த எல்லா அரசர்களும் சோக முகத்துட
னிருந்தனர்,

52. ஆதி முதல்வன்; தான் தோன்றிய ரூபம்; தேவர் அஸுர
இருவரும் வணங்குமவன்: பாதங்கள் ஆயிரம் கண்கள் ஆயிர
முடிகள் ஆயிரம், கைகள் ஆயிரம் கொண்ட திருமேனி சோபி
கும் க்ரீடங்கள் ஆயிரம் திவ்யமாலை, வஸ்த்ரம் தரித்தவன்.

53. திவ்ய வாஸனைப் பூச்சுடையவன்; திவ்யாபரணங்க
அணிந்தவன்; பல திவ்ய ஆயுதங்கள் ஏந்தியவன்: க்ருஷ்ணன் செ
தாமரைக் கண்ணன்.

54. சந்த்ர, சூர்ய, இவை கண்களாகவுடையவன்; இத்தகை
ராஜஸ்ரேஷ்டன் க்ருஷ்ணனை, பீஷ்மகராஜா பார்த்து வணங்கி
கை கூப்பி அப்போது வாக்கு மனஸ்ஸு, காயம் இவை மூன்
லும் ஒன்று பட்டு ஸ்துதி செய்ய ஆரம்பித்தான்.

55,56. பீஷ்மகன் சொன்னான்: ''தேவதேவா! நாராயணா! பாராயணா! ஆத்யந்த மற்றவனே! நிலையானவனே! ஆதிதேவா! உனக்கு நமஸ்காரம்.

57. ஸ்வயம்பூ! விஸ்வனே ஸ்தாணுவே! வேதஸ்ஸே பத்மனாபா! ஜடாதாரீ! தண்டீ! மின்களவர்ணனே! ஹம்ஸ காந்தியனே சக்ரரூபனே இத்தகைய உனக்கு வணக்கம்.

58. வைகுண்டனே. அஜனே! பரமாத்மா? ஸதஸத் தன்மையனே! புராணபுருஷா! உனக்கு வணக்கம்.

59. புருஷோத்தமா! எங்குமுள்ளவனே! ஹேயகுணமற்றவனே! உனக்கு வணக்கம்!

60. ஸுரோத்தமனே! உன் பக்தனான எனக்கு எப்போதும் வரம் கொடுப்பனாயிரு: நாதா! நீ லோகநாதனாயிருக்கிறாய். ஆத்ம ஸ்வரூபமறிந்த ஞானிகளுக்கு நீ விஷ்ணுவாயிருக்கிறாய்.

61. வைசம்பாயனர் சொன்னார்: பீஷ்மகராஜா விலை மதிக்க முடியாத ரத்னம் முத்து, வைரம், வைடூர்யம், இவை சிரிப்பது போல் ப்ரகாசிக்கும் ஆபரணங்களுடையவனான மஹாதேவன் க்ருஷ்ணனை இப்படி ஸ்தோத்ரம் செய்து தங்கங்குவியல்களை க்ருஷ்ணனுக்குக் கொடுத்தான். மறுபடியும் மஹாபலமுடைய கருடனை வணங்கினான். பீஷ்மகன் சொன்னான்; பக்ஷிராஜனே! வாயுவேகமுடையவனே! திவ்ய ஸ்வரூபியே! காச்யபர் புத்ரனே! உனக்கு வணக்கம்,

62,63,64. வைசம்பாயனர் சொன்னார்: இவ்விதம் சுருக்கமாக ஸ்துதி செய்து சிறந்த ஆபரணங்களைப் பஹுமானமாகக் கொடுத்து பிறகு தாமரைக் கண்ணன் க்ருஷ்ணனை புறப்படச் செய்தான்.

65,66 அரசர்களும் புறப்பட்ட க்ருஷ்ணனை கொஞ்ச தூரம் பின் தொடர்ந்து சென்றனர். வீரன் க்ருஷ்ணன் பஹுமானத்தை ஏற்றுக் கொண்டு அரசர்களிடம் விடைபெற்று குளிர்ந்த முகமுடைய பக்ஷிராஜனை முன்னிட்டு பத்து திக்குகளையும் ப்ரகாசப் படுத்திக் கொண்டு மதுரையையடைந்தான்.

67. நாற்புறமும் பெரிய தேர்க்கூட்டத்தால் சூழப்பட்டு பேரி படக சப்தத்தாலும் சங்கம் துந்துபி ஒலியாலும், யானை

பிளிறுதலாலும், குதிரைகள் கனைத்தலாலும் தேர் சக்கர சப்த
தாலும் பெருத்த மேக சப்தம் போன்று மிகப்பெரிய முழக்க
இருந்தது;

68 69,70. மஹாவீரன் க்ருஷ்ணன் சென்றதும் தேவர்கள்
திவ்ய ஸிம்ஹாஸனத்தையும் சபையையும் எடுத்துக்கொண்டு
தேவலோகத்தையடைந்தனர்.

71. அந்த அரசர்கள் பெரிய ஸேனையால் சூழப்பட்டு க்ரோச
தூரம் [2½ மைல்) பின் சென்று ஜனார்த்தனன் அனுமதி கொடுத்த
தும் எல்லோரும் திரும்பி ஸ்வயம்வர இடத்திற்கே சென்றனர்.

**52ம் அத்யாயம் முற்றிற்று**

## 53ம் அத்யாயம்

## சால்வகன் சொல்படி காலயவனிடம் ஜராசந்தன் அனுமதியின் பேரில் சால்வகனே தூது செல்லல்

**வைசம்பாயனர் சொன்னார்** : பிறகு வஸுதேவர்மகன் க்ருஷ்ணன் சென்றதும் ஆபரணங்களால் அங்க அலங்காரம் கொண்டு தேவேந்த்ரனையொத்த அரசர்கள் ஊருக்குப்புறப்பட்டுப்போவதில் மகிழ்ச்சிகொண்டு (பீஷ்மகனிடம்] விடை பெற ஸபையையடைந்தனர்,

2. ஸபையை யடைந்து அழகிய ஆஸனங்களில் ஸுகமாக அமர்ந்திருக்கும், சந்த்ர சூர்ய ப்ரகாசமுடைய அரசர்களைப் பார்த்து, நல்ல நீதி வார்த்தை பேசும் அரசு ச்ரேஷ்டன், பீஷ்மக ராஜா வார்த்தை சொன்னான்!

3. "அரசர்களே! வயது சென்ற எனது துரத்ருஷ்ட பலனாக ஸ்வயம் வரம் வைத்த தோஷத்தை அறிந்து நீங்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

**வைசம்பாயனர் சொன்னார்** : இப்படி பீஷ்மகன் அந்த எல்லா அரசர்களுக்கும் சொல்லி, முறைப்படி பஹுமானம் செய்துபிறகு. மதிய தேசதரசர்களையும், கிழக்கு, மேற்கு தேச அரசர்களையும் வடதேச அரசர்களையும் கூட விடை கொடுத்தனுப்பினான்.

5—8 எல்லா ஜனங்களும், சிறந்த வில்லாளியான ராஜாக்களும் முறைப்படி, கௌரவிக்கப்பட்டு, மன மகிழ்ச்சியுடன்

சென்றனர். ஜராஸந்தன், ஸுநந்தன் வீரதந்தவக்தரன், சௌப்பதி சால்வன், மஹா தர்மராஜா க்ருதகைசிகர், முதலிய உயர்குலத்த துதித்த அரசர்களும், ராஜர்ஷி வேணுதார், காஸ்மீர ராஜா, இவர்களும் மற்ற தென்தேச அரசர்களும் வார்த்தை ரஹஸ்ய மாகக் கேட்க விரும்பி பீஷ்மகன் பக்கத்திலிருந்தனர்.

9—10 ராஜஸ்ரேஷ்டனும் பலவானுமான அந்த பீஷ்மகன், அங்கிருக்கும் அரசர்களைப் பார்த்து அன்பு மிக்க மனதுடன் நட்பு பொருந்தியதும், தர்பார் காமத்துடன் கூடியதும் ஷட்குணங்கள் பொருந்தியதும் ம்ருதுவானதுமான வார்த்தைகளை விநயத்துடன் சொன்னான்.

11, 12 (முன்னர்) பூபதிகளான உங்கள் நீதியான வார்த்தை களைக்கேட்டு, இந்த (ஸ்வயம் வர) கார்யம் செய்யப்பட்டது. ஸாதுக்களாகிய உங்களால், பொறுத்துக் கொள்ளத் தக்கது நான் எப்போதும் அபராதம் செய்கிறவன்.

**வைசம்பாயனர் சொன்னார்** அந்த நீதிவல்லவன் பீஷ்மக ராஜா, இவ்விதம் கூறி, அரசர் ஸபையில் மகன் விஷயமாக வார்த்தை சொன்னான்;

14. பீஷ்மகன் சொன்னான்: மகனின் தகாத செயலைப் பார்த்து பயத்தால் கலங்கிய கண்களுடன், இந்த உலக மக்கள் எல்லோரும் (விவேகமற்ற) குழந்தைகளாக எண்ணுகிறேன். அந்த வந்திருந்த க்ருஷ்ணன் ஒருவனே உயர்ந்த புருஷன்.

15 அவனே கீர்த்தி; கீர்த்தி பெற்றோரில் தலைசிறந்தவன்; அப்படியே விசித்ர யசஸ்ஸும் (புகழ்) கொண்ட சரிதமும் இம் மனிதவுலகில் அவனது நிரந்தர பூஜாபலம் ஸ்தாபிக்கப்பட்டிருக் கிறது.

16. பெண்களில் சிறந்த மஹா புண்யவதி தேவகி க்ருதார்த் யல்லவா? மூவுலகாளியும் தாமரைக் கண்ணனும் செல்வக் குவி யலும் தேவர் வணங்குபவனும், கேசவனுமான க்ருஷ்ணனை கர்ப்பத்தில் பிள்ளையாகத்தரித்து அன்பு நிறைந்த கண்களால் அவன் தாமரை முகத்தைக் காண்கிருள்.

18. **வைசம்பாயனர் சொன்னார்:** இப்படி புலம்பும் பீஷ்மக ராஜாவை, மஹா தேஜஸ்வி சால்வராஜா ம்ருதுவான வார்த்தை சொன்னான். சால்வன்

19. சத்ருக்களை வெல்லும் மகன் பொருட்டு துக்கப்படுவது பாதும் ராஜாவே! போரில் க்ஷத்ரியனுக்கு வெற்றியோ தோல்வியோ (ஒன்று) நிச்சயம். இது புராதன தர்மமும் ராம க்ருஷ்ணர்களைத் தவிர மூன்றாவது எந்த புருஷன் மஹாபலம் வாய்ந்த உமது மகனுடன் போரில் சண்டையிட சக்தனாவான்.

20, 22 ரதர், அதிரதர், இந்த கூட்டத்துள் தோள் வலிமை கொண்ட உன் மகன் ஒருவனே போர்களத்தில் வில்பிடித்து சத்ருக்களைத் துன்புறுத்த சக்தி வாய்ந்தவன். தேவர்களாலும் நெருங்கமுடியாத மிகக்கொடிய "பார்க்வ" அஸ்த்ரத்தை தோள் வலிமையால் ப்ரயோகிக்கும் உன் மகனை எந்த புருஷன் ஸஹிப்பான்?

23. இந்த க்ருஷ்ணனே ஆத்யந்தமில்லாதவன்; குறைவற்றவன்; அந்தக்ருஷ்ணனை பூலோகத்தில் தானக ஐயிப்பவன்.

24 சூலதாரி பரமசிவனுமில்லை. மஹாராஜாவே! எல்லா சாஸ்த்ரப் பொருள் நுட்பமும் அறிந்த உன் மகன் அறிந்து கேசவனிடம் போர் செய்ய மாட்டான்.

25. ராஜாவே! இப்போது க்ருஷ்ணனைப் போரில் வெல்பவன் யவன அரசன் காலயவனன். அவன் கேசவனால் கொல்லப்பட முடியாதவனல்லவா?

26. செய்தற்கு மிக அரியதும் மிக்க பயங்கரமானதும் கொடியதுமான தபஸ்ஸை செய்து பன்னிரண்டு ஆண்டுகள் இரும்பு சூர்ணம் உண்டு.

27. ருத்ரனை ஆராதித்தார். பிள்ளைப் பேறு வேண்டியமுனிவரால் ருத்ரனை மகிழ்வித்து மகன் வேண்டப்பட்டான். இவன் மதுரையில் பிறந்தவரால் கொல்லப்படத்தகாதவன், என்றும் சங்கரனை வேண்டினன்.

28. ருத்ரனும் 'இப்படியே ஆகுக' வென முனிக்கு மகனைக் கொடுத்தார் இவ்விதம் கார்க்ய முனிவருக்கு ருத்ரவரத்தால் உண்டான ஸ்ரீமானை இந்தப் புத்ரன்மதுரையில்பிறந்தவன்பால் கொல்லத்தகாதவன் விசேஷமாக மதுரை நகரில் கொல்லத்தகாதவன்.

30. இந்த க்ருஷ்ணனும் பலவான். இவன் மதுரையில் பிறந்தவன். அந்த கார்க்ய புத்ரன் காலயவனன்! மதுரைக்குச் சென்று க்ருஷ்ணனைப் போரில் வெல்வான்.

31. அரசர்களே! நான் சொன்ன வார்த்தை உங்களுக்கு உசிதமாகத் தோன்றினால் யவன ஸ்ரேஷ்டன் நகரைக் குறித்து அந்த விஷயமாக தூதனுப்புங்கள்''

32. வைசம்பாயனர் சொன்னார்: சௌபராஜனின் வார்த்தையைக் கேட்டு அந்த ஸ்ரேஷ்டர்கள் எல்லோரும் ஸந்தோஷமடைந்து மஹாபலனான ஜராஸந்தனை நோக்கி 'செய்கிறோம்' என்று சொன்னார்கள்,

33 ஜனமேஜய ராஜனே! அந்த ஜராஸந்த ராஜா அவர்கள் வார்த்தையைக் கேட்டு ப்ரஹ்மாவின் வார்த்தையை நினைத்து மனமுடைந்தவனாக ஆனான்.

34. ஜராஸந்தன் சொன்னான்: முன்பு என்னையண்டி அரசர் பலத்தால் பீடிக்கப்பட்ட அரசர்கள், அபஹரிக்கப்பட்ட பணியாட்கள் ஸேனை, வாகனம், இவைகளுடைய ராஜ்யத்தை(திரும்ப) அடைந்தனர்,

35. இப்போது அவர்களால் வேறொரு ஆச்சர்யம் காரணமாக தன் கணவனிடம் கோபத்தால் இன்பம் நாடும் பெண் வேறொருவனை(யடைவது) போல தூண்டப் படுகிறது.

36. துக்கம் தெய்வம் மிக்க பலமுள்ளது திரும்பப் போர் செய்வது முடியாதது நான் க்ருஷ்ணனிடம் பயங் கொண்டு, அதிக பலமுடைய வேறொருவனை [காலயவனனை] அடைகிறேன். நிச்சயம் நான் உபாயம் இல்லாதவன் பிற ஆஸ்ரயத்தைச் செய்யப்படுகிறேன், எனக்கு மரணமே மேலானது

37, 38. அரசர்களே! வேறொருவனை யடையமாட்டேன். க்ருஷ்ணனோ பலதேவனோ அல்லது யாரொரு அரசனோ என்னைக் கொல்ல வருபவனை திருப்பி போர் செய்வேன்.

39. இது எனது நிச்சயமான புத்தி இது ஸத்புருஷனது வ்ரதம்: ஆகையால் வேறு விதமாக மற்றொருவனை ஆஸ்ரயிப்பதை செய்வதற்கு நான் சக்தன் இல்லை.

40. க்ருஷ்ணன் நல்லொழுக்கமுடைய உங்களுக்குக் கெடுத செய்ய மாட்டான். ஆகையால் அரசர்களின் பொது ரக்ஷணத்து காக தூதனைத் [தேர்ந்து] கொடுக்கிறேன்.

41. அரசர்களே! க்ருஷ்ணன் நம்மைத் துன்புறுத்தாதவண யில் ஆகாய மார்க்கமாகப் போக வேண்டும் நன்கு ஆலோசித்து (தூது போகிறவனை) அனுப்புங்கள்.

42. இந்த சௌபபதி ஸ்ரீமான், அக்னி, சந்த்ரன் சூர்ய இவர்கள் பராக்ரமமுடையவன். பலவானான இவன் சூர்யகாந் யுடைய ஆகாய ரதத்தின் மூலம் தந்நகரை அடைகிறான்.

43. க்ருஷ்ணன் நம்முடன் [நரிம] சண்டைக்கு வராவண்ண மும், அரசர்களான தம் கூட்டத்தில் காலயவனன சேரும் வண்ண மும் நம்மால் தூது வார்த்தை யமைக்கத் தக்கது.

44. **வைசம்பாயனர் சொன்னார்:** ஜராஸந்தராஜா மறுபடியு தேஜஸ்வி சௌப பதியை நோக்கிச் சொன்னான்: "கௌரவப் கொடுப்பவனே! நீ போ.

45. எல்லா அரசர்களுக்கும் ஸஹாயம் செய் யவன ராஜா எப்படி நம்முடன் சேர்வனோ, எப்படி க்ருஷ்ணனை ஜெயிப்பானோ நாமும் எப்படி ஸந்தோஷப் படுவமோ, அத்தகைய முறை செய்யப்படட்டும்."

46. இவ்விதம் எல்லோரிடமும் சொல்லி, பீஷ்மக ராஜாவை முறைப்படி பூஜித்து, தன் ஸேனை சூழ ஜராஸந்த ராஜா தந்நகரை யடைந்தான்.

47. ராஜ ஶ்ரேஷ்டன் சால்வனும் தான் அந்த அரசர்களை முறைப்படி பூஜித்து காற்று வேகத் தேர் மூலம், ஆகாய வழியாகச் சென்றான்.

48. தெற்கு தேச வாஸிகளான அந்த எல்லா அரசர்களும், ஜராஸந்தன் பின், சென்று தம் தம் நகரங்களை யடைந்தனர்.

49. பீஷ்மகன், அந்த இரு, சால்வ, ஜராஸந்த அரசர்களின் அந்யாயத்தை யோசித்து துக்க முடையவனாய் க்ருஷ்ணனையே த்யானித்துக் கொண்டு பிள்ளையுடன் தன் மாளிகையில் வஸித்தான்,

50. பதி சுத்தையான ருக்மிணி க்ருஷ்ணன் வந்த காரணத்தை அரசர்களின் தர்சனமாகிற தோஷமுடைய ஸ்வயம்வரம் விலக்கப் பட்டதை யறிந்து, தோழிகளினிடை சென்று, வெட்க மடைந்த முகமுடையளாய் சொன்னாள்: '' நான், தாமரைக்கண்ணன், க்ருஷ்ணனைத் தவிர, மற்ற அரசருக்கு பத்னியாவதை ஸஹிக்க மாட்டேன். எனது இந்த வார்த்தை ஸத்யமானது.

**52-ம் அத்தியாயம் முற்றிற்று**

## 53-ம் அத்த்யாயம்

# காலயவனனிடம் சால்வகன் தூது-ஜராஸந்தன் சொன்னதை காலயவனன் கேட்டல்

1, **வைசம்பாயனர் சொன்னார்:** யவனருக்குள், பலத்தில் சிறந்த அந்தக் காலயவன அரசன். நகர மக்களை முறைப்படி ரக்ஷிக்கும் அரசனாக விருந்தான்.

2. தர்மார்த்தகாம தத்வ மறிந்தவன்; புத்திமான்; ஸந்தி முதலிய ஆறு ராஜநீதி குணங்களையும் அனுஸரித்து, ஜீவிப்பவன். ஏழு வித தோஷங்களொன்றும் அறியாதவன்.

3, 4 5. நற்குணங்களிலேயே எப்போதும் மகிழ்பவன்; வேத மறிந்தவன்; தர்மத்தை ஒழுக்கமாகவுடையவன். ஸத்ய வாதி இந்த்ரியங்களை ஜெயித்தவன். போர் முறையறிந்தவன்; அகிழ்' மதிள், கோட்டை, காடு முதலிய புகமுடியாத துர்கங்களாள் அமைப்புப்பயனை அனுஸரிப்பவன்; சூரன், ஒப்பற்ற பலமுடைய வன்; மேலான மந்த்ரிகளை அனுஸரித்து நடப்பவன்; அழகிய (ஸாதுக்கள்) ஸபையில் ஸுகமாக வீற்றிருப்பவன்; மந்த்ரிகளால் சூழப்பட்டவன்; ஒருவருக்கொருவர் திவ்யகதைகளைச் சொல்லும் ஆத்ம தத்வமறிந்த யவன ஞானிகளால் சூழப்பட்டவன்,

6. இது ஸமயம் நல்ல மணமுள்ள காற்று வீசியது. ஸுக மாக குளிர்ச்சியுடனிருந்த காற்று; தன்னறியா இன்ப உணர்ச்சி யை உண்டாக்கியது.

7. ஸபையிலிருந்த எல்லோரும், 'இது வென்னவென்று ஒரு மனதுடன், ஆஶ்சர்யத்தை விளக்கும் விழித்த கண்களுடன், இருந்தனர். அந்த ராஜாவும் அவ்விதமே பார்த்தான்.

8, 9. திவ்ய ரதத்தைப் பார்த்தார்கள், அது சூர்ய
போன்றிருந்தது; தங்கமயமான சக்ரங்களால் ப்ரகாசிக்கிறது
மிக்க சோபையுடையது; திவ்ய ரத்ன காந்தியைப் பரப்புகிறது
திவ்ய த்வஜங்களையும் பிருது கொடிகளையுமுடையது; ம
வேகம் வாயுவேகம் கொண்ட குதிரைகள் பூட்டப்பட்டது.

10 11, 12. சந்த்ர, சூர்ய ப்ரதிமைகள் செய்து பொருத்த
பட்டது. தங்கமயமானது; விஸ்வ கர்மாவால் செய்யப்பட்
சிறந்த புலிகளால் நாற்புறமும் விளங்குவது; சத்ருக்களை நடுங்க
செய்வது; மித்ரர்களுக்கு மகிழ்ச்சி ஊட்டுவது; சத்ரு தேர்கள்
அழிக்க வல்லது; இத்தகைய தேரில், ஸ்ரீமானும், தேஜஸ்வியுமா
சௌபபதி சால்வன் அமர்ந்திருப்பதைப் பார்த்து, (ஆலோசனை
யில் சிறந்த காலயவனனின்) மந்த்ரி மகிழ்ந்து அர்க்யம் பாத்ய
எனப் பலமுறை சொன்னான்.

13. தோள் வலிமையுடைய காலயவனன் அச்சமய
ஸிம்ஹாஸனத்திலிருந்து எழுந்து தானே அர்க்யம் எடுத்து
கொண்டு எதிர் சென்று தேர் இறங்குமிடத்தில் நின்றான்.

14, 15. மஹாதேஜஸ்விசால்வனும் மிக மகிழ்ந்து, இந்த்ர
போன்ற சோபையுடன் வந்திருக்கும் அரசனைப் பார்த்து, மிச்
பரபரப்புடையனாய் தான் ஒருவனே இறங்கி, மிகப்ரீதியுடன்
நண்பனைப் பார்க்கும் ஆசையால் உட்புகுந்தான்

16. ராஜ ரிஷிகளில் சிறந்த சால்வ ராஜா, உயர்த்திய அர்
யத்தைப் பார்த்து ம்ருதுவான வார்த்தைகளைச் சொன்னா
மஹாதேஜஸ்வியே! நான் அரக்யத்திற்குத் தக்கவனில்லை.

17. மஹா ராஜா! நான் அர்சர்களிடமிருந்து உங்களிட
புத்திமான் ஜராஸந்தனால் பலருடன், அனுப்பப்பட்டேன்.

18. ஆதலால் அர்கியத்திற்குத் தக்கவனில்லையென நினை
கிறேன். காலயவனன் சொல்கிறான்.

19. ''மஹாப்ரஹோ! நீ தூதனாக வந்திருப்பதை நான் அ
கிறேன். சிறந்த புத்தி மானே! அரசர் கூட்டத்தில் ஜராஸந்
னால் அனுப்பப்பட்டிருக்கிறாயல்லவா;

20. 21. சிறந்த புத்திமானே! அதனால் அர்க்ய பாத்
முதலான உபஹாரங்களால் முறைப்படி ஆஸனமளிப்பதாலு
உன்னை விசேஷமாக அர்ச்சிக்கிறேன் தாங்கள் பூஜிக்கப்பட்

போது, எல்லா அரசர்களும் பூஜிக்கப்பட்டதாக ஆகும் ராஜாவே! என்னுடன் இந்த சோபையுள்ள ஆஸனத்தில் அமருங்கள்.

22. **வைசம்பாயனர் சொன்னார்** : கைகுலுக்கி, க்ஷேம ஆரோக்யம் விசாரித்து, இருவரும் சேர்ந்து, மங்களமான ஸிம்ஹாஸத்தில் இனிது அமர்ந்திருந்தனர்.

23. 24 காலயவனன் சொன்னான் : ''அரசர்களாகிற நாமெல்லோரும், தேவர்கள் தேவேந்த்ரனைப் போல், ஜாஸந்தன் தோள் வலிமையண்டி, பயமற்று வஸிக்கிறோம்; அவனால் என்னிடம் அனுப்பப்பட்டிருக்கிறீர், எனக்கு எது அஸாத்யம்? அவனது உண்மையான வார்த்தைகளைச் சொல்லுங்கள். அந்த ப்ரபு என்ன கட்டளையிடுகிறான்? அவனது வார்த்தை செய்ய முடியாத கார்யமாயிருந்தாலும், செய்து முடிப்பேன்.

25. **சால்வன் சொல்கிறான்** : ''யவன அரசே! கேட்கப் படட்டும். அரச ஶ்ரேஷ்டனே! மகதராஜன் எப்படிச் சொல் கிறானோ அப்படியே நான் உனக்கு நன்கு சொல்கிறேன்.

26. ஜராஸந்தன் சொல்கிறான். ''இந்த மிகவும் வெல்ல முடியாத க்ருஷ்ணன், உலகங்களுக்குத் தொல்லை கொடுப்பவனாகப் பிறந்தான்.

27. 28. 29. நான், அவனது தீய ஒழுக்கத்தையறிந்து கொல்ல முயன்றேன். நிறைந்த ஸேனை, வாகனங்களுடைய பல அரசர்களுடன், சிறந்த கோமந்த மலையை பெரிய ஸேனைகளால் முற்றுகையிட்டு சேதிராஜன், (சிசுபாலனின்) போருட் செறிவு கொண்ட வார்த்தையைக் கேட்டு, அப்போது, ராமக்ருஷ்ணர் இருவரையும் அழிப்பதற்குத் தீ வைத்தேன்''.

30. நூற்றுக் கணக்கான அக்னி ஜ்வாலைகள் நிறைந்து ப்ரள யாக்னி போன்ற காந்தியுடைய மலையைப் பார்த்து, தங்க பனை மரக் கொடி கொண்ட ராமன் மலைச் சிகரத்திலிருந்து துள்ளி குதித்துக் கடல் போன்ற ஸேனை நடுவில், வேகமாக இறங்கி, தடுக்க முடியாதவனாய், காலாள், குதிரை, தேர், யானைப் படை களை நாற்புறமும் அழித்தான்.

31. வளைந்து செல்லும் ஸர்ப ஶ்ரேஷ்டனைப் போன்ற கலப்பையை எறிந்து இழுத்துக் காலாட் படை யானை, குதிரைக் கூட்டங்களை உலக்கையால் அழித்தான்.

32. யானையால் யானையையும் ரதத்தால் ரத வீரர்களையும், குதிரையால் குதிரை வீரரையும், காலாட்களால் காலாட் படையினரையும் அழித்தான்.

33. நூற்றுக் கணக்கான அரசர் நிறைந்துள்ள போரில் கோடைக்கால சூர்யன் போல், பலவிதமாகச் சத்ருக்களை தபிக்கச் செய்தான்.

34. 35. சத்ருக்களை தபிக்கச் செய்தான். ராமனுக்குப் பிறகு ஆஜ்ஞை செலுத்துவோரில் சிறந்த க்ருஷ்ணன், ஆர்யனை யொத்த ப்ரகாசமுள்ள சக்ராயுதத்தை நன்கு பிடித்தான். மஹாவீரனை அவன் கால் பலத்தால் மலையை அசைத்தான், கீர்த்திமானை யது வீரன் க்ருஷ்ணன், ஸிம்ஹம் அல்ப மிருகங்களைப் போல் சத்ரு ஸேனையின் மேல் குதித்தான்.

36. சிறந்த கோமந்த மலை நாட்டிய மாடுவது போல, நீர்த் தாரையால் அபிஷேகம் செய்யப்பட்டது. நெருப்பையணைத்து கோஷம் போட்டுக் கொண்டு தரையை யடைந்தான்.

37. ராஜாவே! க்ருஷ்ணன் நாற்புறமும், ஜ்வலித்துக் கொண்டிருக்கும். சிகரத்திலிருந்து குதித்து, சக்ராயுதம் சுழலும் கையால் ஸேனையைக் கொன்றான்.

38. கம்பீரமான சக்ராயுதத்தை வீசி. கதையாலடித்து, உலக்கையால், காலாட் படை யானை குதிரைப் படைகளை சூர்ண மாக்கினான்.

39. கோபக் காற்றால் தூண்டப்பட்ட சக்ரம், கலப்பை, நெருப்பால், அரச சூர்யர்களால் பரிபாலிக்கப்பட்ட பெரிய சேனை கொளுத்தப்பட்டது.

40. காலாள், யானை, குதிரை இவைகள் நிறைந்ததும், கொடி வரிசைகள் கொண்டதுமான தேர் படை, காலாள்களான் இவ்விருவரால் ஒரு க்ஷணத்தில் அழிக்கப்பட்டது.

41. 42. சக்ராயுதத் தீ பயத்தால் தொலைகொண்டு அழிக்கப் பட்ட ஸேனையைப் பார்த்து, நாற்புறமும் சூழ்ந்த ஸமயம் இந்த க்ருஷ்ணனின் தமயன் பலவான், புருஷ ரிஷபன், சூரன், கதைக் கையன், கலப்பை ஆயுதமாகவுடையவன், இத்தகைய பலராமன் என் எதிரில் நின்றான்.

43. மூரி திமிர்ந்து, முழங்கிப் புறப்பட்ட ஸிம்ஹம்போல், பன்னிரண்டு அக்ஷௌஹிணி ஸேனையைக் கொன்று 'ஸௌநந்தம்' எனும் கலப்பையை விட்டு விட்டு கதையால் என்னையடித்தான்.

44. என்மேல் வஜ்ராயுதம் விழுந்தால் போன்ற வேகத்தை தள்ளி, திரும்பவும் என்னைக் கொல்ல விரும்பி வைசாகப் போர் முறையில் தரையில் நின்றான்.

45. முன்னொரு கால், சுப்ரமண்யன், வைசாக முறையி நின்று 'க்ரௌஞ்ச' மலையை தகர்ந்தது போல் நீண்ட கண்களால் கொளுத்துகிறவன் போல் என்னைப் பார்த்தான்.

46. அத்தகைய ரூபமுடைய பலராமனை யுத்த களத்தில் நேரே பார்த்து உயிரோடு இருக்க விரும்பிய எந்த புருஷன் இவ்வுலகிலிருக்க முடியும்?

47. யமன் ஈட்டியால் தள்ளினது போலும் உயர்த்தப்பட்ட காலதண்டம் போன்றும் உள்ள பயங்கரமான கதையை [கையில்] பிடித்து அவன் என் முன்னாலேயே நின்றான்.

48. பிறகு உலகபிதாமகரான ப்ரஹ்மா நீநண்ட மேகத்வனியால் ஆகாயத்தை நிறைத்துத் தானாகவே அசரீரியாகச் சொன்னார்: ''கலப்பை ஆயுதமாகவுடையவனே!

49. பாபமற்றவனே! இந்த அரசன் கொல்லத்தக்கவனில்லை. உன்னால் கொல்லப்படத்தகாதவன் இவன் அழிவு வேறொருவன் மூலமாக விதிக்கப்பட்டுள்ளது.

50. ப்ரஹ்மாவால் தன்னாலேயே சொல்லப்பட்ட என்னுயிரை அடியோடழிக்கும் பயங்கரமான வார்த்தையைக்கேட்டு அதனால் மனங்கலங்கித் திரும்பி விட்டேன்.

51. அதனால் அரசர்கள் ஹிதத்தை விரும்பி நான் உனக்குச் சொல்கிறேன். அந்த வார்த்தையைக் கேட்டு ராஜஸ்ரேஷ்டனே' [காலயவனா!] நீயே செய்ய வல்லவன்''

52. மஹாமுனி கார்க்யர் இரும்பு சூர்ணம் உட்கொண்டு பன்னிரண்டு வருஷம் தவமிருந்து தேவர் அஸுரர் இவர்களால் நன்கு பூஜிக்கப்பட்ட திருவடியுடையவராம் விரும்பிய புத்ரப் பேற்றையடைந்தார் உக்ரமான பெரிய தவத்தால், புத்ரனை விரும்பி மஹாதேவன் சங்கரனை மகிழ்வித்து மதுரை ஜனங்களால் அழிக்கப்படாதவனாக உன்னை அடைந்தார்.

53,54. மஹாத்மாவான கார்க்ய முனிவர் தபோபலந்தால் பிறைச்சந்திரனைச் சூடிய பரமசிவன், வரத்தின் பெருமையால் ஜனித்த உன்னை ஜனார்த்தனன் க்ருஷ்ணன் அடைந்து, சூர்யகிரணத்தால் பனிபோல் மறைவான்''

55. அரசர் வார்த்தைகளால் தூண்டப்பட்டு முயற்சி செய். உனது வெற்றிக்காக கேசவன் [இருப்பிடம்] குறித்துப் புறப்படு வாயாக. மதுரை நகரை ஸேனையுடன் அடைந்து க்ருஷ்ணனைக் கொன்று உன் கீர்த்தியைப் பரவச்செய்.

56. க்ருஷ்ணனும் பலராமனும் பந்துக்களுடன் மதுரையில் பிறந்தவர். அம்மதுரை நகரை யடைந்து போரில் அவ்விருவரை யும் ஜெயிப்பாய்.''

57. **சால்வன் சொன்னான்:** ''அரசரில் சூர்யனான ஜராஸந்தனால் சொல்லப்பட்ட அரசரின் நன்மைக்காக இந்த வார்த்தை சொல்லப்பட்டது அதை எல்லா மந்த்ரிகளுடன் புத்தியால் ஆராய்ந்து, ராஜாவே! உனக்கு யுக்தமாகத் தோன்றியதைச் செய்வாய்.

53-ம் அத்தியாயம் முற்றிற்று

## 54-ம் அத்தியாயம்

## காலயவனன், க்ருஷ்ணனை ஜெயிக்க மதுரைக்குப் புறப்படல்

1. **வைசம்பாயனர் சொன்னார்:** இப்படி அரசன் கட்டளையால் சொல்லும் சால்வ ராஜனை, யவன ராஜன் மிக ப்ரீதி யடைந்த வனாய்ச் சொன்னான்.

2. காலயவனன் சொன்னான் ''தன்யனானேன் அனுக்ர ஹிக்கப் பட்டவனானேன் என் வாழ்க்கை பயனடைந்தது பல அரசர்களால் க்ருஷ்ண நிக்ரஹ காரணமாக நியமிக்கப் பட்டிருக்கிறேன்

3. தேவ அஸுரக் கூட்டங்களாலும் மூவுலகிலும் ஜெயிக்க முடியாதவன் க்ருஷ்ணன் அவனை நிக்ரஹிக்கும் காரணமாக என்னைத் தேர்ந்தெடுத்து 'ஜய' ஆசி கூறி ஸந்தோஷமடைந்த அந்தராஜ ஸிம்ஹங்களால், எனது வெற்றி நிச்சயிக்கத் தக்கது. அவர்களின் சொல் மாரியால் எனக்கு வெற்றி வரும்.

5. அரச ஶ்ரேஷ்ட ஜராஸந்தனால் சொல்லப்பட்ட அவ் வரசர் வார்த்தையைச் செய்வேன். ராஜ ஶ்ரேஷ்டனே எனது தோல்வியும் வெற்றி யொத்ததே.

6. சால்வ ராஜனே! இப்போதே திதி நக்ஷத்திரம் முஹூர்த்தம் கரணம். சுபம் (யோகம்) எல்லாம் சுபம். கேசவனை போரில் வெல்ல மதுரைக்குப் போவேன். (இப்போதே)''

7. 8 வைசம்பாயனர் சொன்னார் : சௌப பதி தேஜஸ்வீ சால்வ ராஜாவை, இப்படி சொல்லி விலை மதிக்க முடியாத ரத்ன ஆபரணங்களால் முறைப்படி பூஜித்து (காலயவன்) அரசன், கீர்த்தியின் பொருட்டு ஆசீர்வாதத்திற்காக ப்ராஹ்மணர்களுக்குத் தனம் வழங்கினான். ஜனமே ஜயரே! ப்ரோஹிதருக்கு, தனம் மிகுதியாகக் கொடுத்தான்.

9. காலயவனராஜா யாத்ரா காலத்திற்கு உரிய மங்களங்களைச் செய்து, ஜனார்த்தனனை ஜயிக்க விரும்பி நல்ல முறையில் புறப்பட்டான்.

10. ஜனமேஜயரே சால்வராஜாவுடன் செய்யவேண்டியதை முடித்தவனாய் காலயவனராஜாவை ஆலிங்கனம் செய்து தன்னூர் அடைந்தார்

54-ம் அத்தியாயம் முற்றிற்று

## 55-ம் அத்தியாயம்

### கருடன், துவாரகை இடம்பார்க்கச் செல்லுதல் மதுரையில் க்ருஷ்ணனுக்கு வரவேற்பு-

1. ஜனமேஜயர் சொன்னார்: ப்ரஹ்ம ஞானியே! மஹா முனிவரே! இந்த்ரனை யொத்த வீரமுடைய க்ருஷ்ணன், விதர்ப்ப நகரிலிருந்து [மதுரை] செல்லும் போது கருடன் எதற்காக அழைத்துச் செல்லப்பட்டான்?

2. கருடன் என்ன கார்யம் செய்தான்? பகவான் க்ருஷ்ணன் மஹா பலவான் கருடன் மேல் ஏறவுமில்லை. ப்ரஹ்ம ஞானியே! இது என் ஸந்தேஹம் அதன் தத்வத்தைச் சொல்ல வேண்டும்.

3. வைசம்பாயனர் சொன்னார்: ஜனமேஜய ராஜாவே! கேளுங்கள் கருடனால் அதிமானுஷமான கார்யம் செய்யப்பட்டது மஹாதேஜஸ்வீ கருடன் விதர்ப்ப நகரை அடைந்தார்:

4. க்ருஷ்ணன் மதுரா நகரை அடையாமலிருக்கும் போது அந்த வைநதேயர் ஆலோசித்தார்.

5. 6. விதர்ப்ப நகர அரசர்களிடம், தான் போஜ ராஜனால் பரிபாலிக்கப்பட்டதும் அழகிய மதுரை அடைவேன் என்று

சொன்ன அளவில் ஸ்ரீமான் கருடன், கைகூப்பி, வணங்கி, இவ்விதம் சொன்னான்.

7. கருடன் சொன்னான். தேவனே ரைவத ராஜாவின் 'குசஸ்தலி' நகரையும் ரைவத மலையையும், அழகான [இந்த்ரன்] நந்தன தோட்டம் போன்ற வனத்தையும் அடைவேன்.

8. 9. 10. ருக்மி மலையிலிருந்து, ஸமுத்ரம் வரையுள்ளதும்; மரம், புதர்களால் நிறைந்ததும், புஷ்ப மகரந்தத் தூள்கள் பரவியுள்ளதும், ஸ்ரேஷ்டமான யானைகள், ஸர்ப்பங்கள் கொண்டதும், கரடிகள், வானரங்கள் வஸிப்பதும், பலதர மான் கூட்டங்கள் கொண்டதுமான, அத்தகைய பூமியை உமது வாஸத்துக்காக, நாற்புறமும் நன்கு பார்த்து உமக்கு அழகிய புகழக் கூடிய நகரமாகத் தக்க பூமியை முட்கள் களைந்து உம்மிடம் வருவேன்''

11, **வைசம்பாயனர் சொன்னார்** : பலவான் பஹிராஜனும், தேவ தேவன் க்ருஷ்ணனை வணங்கி, மேற்கு திசை நோக்கிச் சென்றான.

12. 13. க்ருஷ்ணனும் யாதவர்களுடன் மதுரை நகரைப் புகுந்தான். உக்ரஸேன ராஜாவும் பணிப் பெண்களும், நகர மக்களும் நாற்புறமும் மகிழ்ச்சி கொண்ட ஜனங்களால் சூழப்பட்ட க்ருஷ்ணனை எதிர் கொண்டு கௌரவித்தனர்.

14, **ஜனமே ஜயர் சொன்னார்** : பல அரசர்களால் க்ருஷ்ணன் ராஜாதி ராஜனாக பட்டாபிஷேகம் பண்ணப் பட்டதாகக் கேட்டு உக்ரஸேன மஹாராஜன் என்ன செய்தான். (ஸமர்ப்பித்தான்)

15. 16, **வைசம்பாயனர் சொன்னார்** : பல அரச ஶ்ரேஷ்டர்களால், ராஜராஜன் க்ருஷ்ணன், அபிஷேகம் செய்யப்பட்டதாகக் கேட்டு, இந்திரனால் அனுப்பப்பட்ட தூதன் சித்ராங்கதனால், ஒவ்வொரு அரசனுக்கும், தக்கபடி நூறு ஆயிரம் கணக்கில் பஹுமானம் செய்யப்பட்டது. ராஜேந்திரன், க்ருஷ்ணனுக்குப் பத்து கோடி கொடுக்கப்பட்டது. சாதாரண மனிதர்களுக்கு பத்துக் கணக்கில் கொடுக்கப்பட்டது, அங்கு வந்தவர்கள் எவரும் ஒன்றுமில்லாமல் போகவில்லை"

17. சங்கநிதி யாதவரூபம் தரித்து ஹரியாகிய க்ருஷ்ணன் திருவுள்ளப்படி வாரி வழங்கியது. இப்படியே ஸ்ரீமான் நிதிபதி குபேரனும், தேவர்களால் அங்கீகரிக்கப்பட்டு க்ருஷ்ணன் திருவுள்ளப்படி வழங்கினான்.

18. உக்ரஸேனன் இப்படி ஒற்றர்கள் மூலம் கேட்டு தேவதை கோயில்களிலும், பெரிய பூஜை செய்தான்.

19. வஸுதேவன் மாளிகையில். தோரணத்தின் இரண்டு பக்கங்களிலும், நடிப்பவர்களின் ஆடல் பாடல்களும் நாற்புறமும் நிகழ்ந்தன.

20. உக்ரஸேன ராஜா, கம்ஸராஜன் மண்டபத்தை விசித்ர மான ஆடைகளால், நல்ல காந்தியுடையதாகவும், விருதுக்கொடி த்வஜம் இவைகளின் வரிசையால் நிறைந்ததாகச் செய்வித்தான்.

21. போஜ ராஜா உக்ரஸேனன், பலவித விருதுக் கொடி களைக் (மக்கள் கூட கொடுக்கச் செய்தான். ராஜேந்த்ரனை க்ருஷ்ணன் இருக்குமிடத்தில் வெள்ளைச் சாந்து பூசச் செய் த்தான்.

22. அப்படியே தோரணத்தையும் (கோபுர முகப் பட்டை யையும்) கோபுரத்தைச் சாந்து பூசச் செய்வித்தான்.

23 (நாற்புறமும்) நடிகர்களின் ஆடல் பாடல்கள், வாத்யங் கள், நாற்புறமும் விருது கொடிகள், திருத்துழாய் மாலை சூடிய பூர்ணகும்பங்கள், சந்தன ஜலம் தெளிக்கப்பட்ட பட்டணத்தின் ராஜ வீதிகள்.

24. ராஜ உக்ரஸேனன் (வீதிகளின்) தரையில் அலங்கார மான நடை பாவாடை விரிக்கச் செய்தான்.

25 இரு பக்கங்களிலும் சந்தனம், அகில், குங்கிலியம் முதலிய தூபங்கள் கமழச் செய்தான். ஆங்காங்கு வெல்லம் கலந்த குங்கிலியம் கொளுத்தப்பட்டது.

26. வயதான ஸ்த்ரீ கூட்டங்கள் ஆங்காங்கு மங்கள ஸ்துதி பாடினர். பெண்கள் தங்கள் இடங்களில் அர்க்யம் மாத்ரம் ஏந்தி க்ருஷ்ணன் வரவை எதிர்பார்த்திருக்கின்றனர்.

27. இவ்விதம் நகரத்தை ஆனந்தமாக்கி; ராஜ உக்ரஸேனர். வஸுதேவர் மாளிகைக்குச் சென்று (க்ருஷ்ணன் வருகையாகிற) ப்ரிய வார்த்தையைத் தெரிவித்து ராமனுடன் நன்கு ஆலோசித்து (க்ருஷ்ணன்) தேர் அருகில் சென்றார்.

28, 29, 30 ஜனமேஜயரே! அதே சமயம் பெரிய சங்கத்வனி உண்டாயிற்று. மதுரையில் வஸிக்கும் மங்கையர், வயோதிகரும், பாலரும், ஸூத, வந்தய மாகத முதலிய இசை வல்லோர் யாவரும் கூடிய பெருங்கூட்டம், ராமனை முன்னிட்டு, அர்க்ய பாத்யம் ஏந்தி புத்திமான் உக்ரஸேனனுடன் புறப்பட்டது

31—35 உக்ரஸேன மஹாராஜா, க்ருஷ்ணன் கண்ணுக்கு தென்பட்டதும், சோபையுடைய தேரிலிருந்து இறங்கி, முன்னால் கால் நடையால் (சென்றான்) அழகான தேரில் அமர்ந்திருப்பவன் திவ்ய ரத்னங்களாலான ஆபரணங்களுடையவன்; திவ்ய ரத்ன காந்தியோடு கூடிய ஆபரங்களைக் கையிலணிந்தவன்; திருமார்பில் வனமாலை சூர்யனைப் போன்று ஒளிவீசுபவன்; சாமரம். விசிறி, குடை, கருடக்கொடி உயர்ந்திருந்தவன்; ராஜலக்ஷணங்கள் பூர்ணமாக அமைந்தவன்; அருகே இருக்கிற சூர்யன் போல் மிகக்காந்தி வீசுபவன்; தேவதேவன்; காணக்கூசும் ஒளியுடையவன்; இத்தகைய ஹரியாகிற க்ருஷ்ணனைப் பார்த்தான். ஜனமேஜயரே! உக்ரஸேன ராஜா, தாமரைக் கண்ணன் க்ருஷ்ணனைப் பார்த்து ஸந்தோஷத் தழதழத்த குரலுடன் சத்ரு ஸேனையழிக்கும் தேரிலிருக்கும் ராமனைக் குறித்துச் சொன்னான்.

36, 37 புகழ் படைத்தவனே! என்னால் தேரில் ஏறிச் செல்லுதல் பொருந்தாது, என நினைத்து கீழே இறங்கினேன். நீ தேரிலேயே போ! விஷ்ணுவால் கபட வேஷத்துடன் மதுரை நகரை யடைந்து, தன்னைத் தேவ ஶ்ரேஷ்டனாக அரசர் கடவில் ப்ரகாசப்படுத்தினான். அந்தக் கேசவனை, நான் எல்லா ப்ரகாரத்திலும் ஸ்தோத்ரம் செய்ய இச்சைப் படுகிறேன்.

38 க்ருஷ்ணன் தமயன் மஹா தேஜஸ்வீ பலராமன் உக்ரஸேனனை நோக்கி பதிலுரைத்தான் "ராஜனே! வந்து கொண்டிருக்கும் தேவ ஶ்ரேஷ்டன் க்ருஷ்ணனை ஸ்துதி செய்வது உசிதமில்லை; ஜனார்த்தனன் ஸ்துதியல்லாமலேயே உன்னிடம் ஸந்தோஷம் கொண்டவன்

39 ஸந்தோஷ மடைந்தவனுக்கு ஸந்தோஷம் என்ன ப்ரயோஜனம்? உன்னைப் பார்த்த மாத்ரமே க்ருஷ்ணன் ஸ்துதிக்கப்பட்டான்

40. ராஜனே! ராஜாதி ராஜனுடைய தன்மை பெற்று, உனது நாளிகை வந்துள்ளான். அமானுஷமான திவ்ய ஸ்துதிகளால் ஏற்கனவே ஸ்துதிக்கப்பட்டுள்ளான் உன்னால் தேவையில்லை.

41,42. இவ்விதம் பேசிக்கொண்டு கேசவன் பக்கல் இருவரும வந்தனர் அர்க்யம் ஏந்தியுள்ள உத்ரஸேனனைப் பார்த்து சிறந்த தேரை நிறுத்தி, சொல்வோர் செம்மல் க்ருஷ்ணன் உக்கிரஸேன ராஜாவைக் குறித்துச் சொன்னான்.

43. என்னால் மதுரைத் தலைவனாக நீர் அபிஷேகம் பண்ணப் பட்டுள்ளீர். மதுரை ராஜனே! நீரே முறைமாறிச் செய்வது பொருந்தாது.

44. அர்க்யம், பாத்யம், ஆசமனீயம், இவை நான் உமக்குச் செய்ய வேண்டியதை நீர் எனக்குச் செய்வது பொருந்தாது. இது தான் எனக்கு இஷ்டம்.

45. ராஜாவே! உமது அபிப்ராயமறிந்து வார்த்தை சொல் கிறேன் நீரே மதுரைக்கு அரசன். பொருத்தமில்லாதது செய்யத் தகாதது.

46. எல்லா அரசர்களுக்கும் போல் எமக்கும் உமது அந்தஸ் துக்கு ஏற்ப பஹுமானம் ஸமர்ப்பிப்பேன் நீர் மேலான முதல் ஸ்தானத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறீர்.

47. வஸ்த்ரங்கள் ஆபரணங்கள் கணக்கிடாமல் ஒரு லக்ஷம் (தங்க நாணயங்கள்) தனபாகம்உமக்குத் திட்டமிடப்பட்டுள்ளது.

48. நீர் ஸ்வர்ண அலங்காரங்கொண்டப்ரகாசமானரதத்தில் ஏறிக் கொள்ளும். புண்யவானே! ராஜனே! சாமரம், விசிறி, குடை த்வஜக் கொடி கொண்டு திவ்ய ஆபரணங்கள், சூர்ய ஒளி வீசும் க்ரீடம் இவைகளை அணிந்து கொள்ளும். இந்த மதுரை நகரை ஆட்சி கொள்ளும்,

49. புத்ர பௌத்ரர்களுடன் மிக மகிழ்ந்து மதுரையை ஆட்சி புரிவீர். சத்ருக் கூட்டங்களை ஜயித்து போஜ வம்சத்தை வ்ருத்தி செய்வீர்.

50—53. தேவதேவனாகிய ஆதிசேஷன் பலராமனுக்கு வஜ்ரா யுத மேந்திய இந்த்ரனால், திவ்யா பரணமும், வஸ்த்ரமும் அனுப்பப்பட்டுள்ளது. எல்லா மதுரை வாஸிகளுக்கு, பத்து, பத்துக்களாக தங்க நாணயங்கள், ஸூத, மாகத வந்திகளான இசை வல்லுனர் ஒவ்வொருவருக்கும் ஆயிரம் ஆயிரம் 'தீனாரக' தங்க நாணயங்கள்; வ்ருத்த ஸ்த்ரிகள், பணிப் பெண்களுக்கு தனித்தனி நூறு தீனாரகங்கள். அரசன் மெய்க் காவலர், விதந்ரு

முதலியவர்களுக்கு தனித்தனி பத்தாயிரம் தீனாரகங்கள், இவ்வாறு இந்திரனால் பங்கிடு செய்யப்பட்டுள்ளது.

54. **வைசம்பாயனர் சொன்னார் :** இவ்விதம் மதுரை ஸேனை யெதிரில், உக்ரஸேன மஹாராஜாவை நன்கு கௌரவித்து, மதுரை மிக மிக குதூகலமடையச் செய்து மதுஸூதனன் க்ருஷ்ணன் அந்நகரைப் புகுந்தான்.

55, ஸ்வர்க்க லோகத்துத் தேவர்கள் போன்று திவ்யாபரண மாலைகளாலும், திவ்ய ஆடை பச்சுக்களாலும், நாற்புறமும் ப்ரகாசிக்கின்றன.

56. 57. (மதுரை வாஸிகள்) பேரி, படஹ சப்தங்களாலும், சங்கம், துத்துபி, இவைகளின் த்வனியாலும், யானைகளின் பிளிறுதலாலும் குதிரைகளின் கனைப்பாலும், சூரர்களின் ஸிம்ஹநாதத்தாலும் தேர்ச் சக்ர ஓசையாலும், ஆகாசத்தில் மேக சப்தம் போல பெரிய முழக்கம் எழுந்தது.

58. வந்திகளால் ஸ்துதி பண்ணப்பட்டு, மற்ற ப்ரஜைகளாலும் வணங்கித் துதிக்கப்பட்டார். அளவற்ற தானங் கொடுத்துங்கூட ஹரியாகிற க்ருஷ்ணன் பெருமிதமடையவில்லை.

59. இயற்கையாகவே, உயர்ந்த குணத்தாலும், இதைக் காட்டிலும் அதிகமாக முன்னர் கண்டிருப்பதாலும், அஹங்கார பாவமில்லாமையாலும், க்ருஷ்ணன் பெருமிதம் கொள்ளவில்லை

60. அருகில் வரும் சூர்ய காந்தியுடைய தன் திருமேனி ஒளி வீசும் க்ருஷ்ணனைப் பார்த்து, மதுரை வாஸிகளான பெண்கள் அடிக்கடி வணங்கினர்.

61. "இவன் ஸ்ரீமான் நாராயணன், பாற்கடலில் நிலையா யிருப்பவன் நரக யானையாகிற (பலராமனை) முன் அவதரிக்கச் செய்து, மதுரை நகரை யடைந்திருக்கிறான்

56. தேவர்களாலும் வெல்லமுடியாத, மஹா வீரனை பலியை (அடக்கியாண்டு) கட்டி, வஜ்ராயுத மேந்திய இந்திரனுக்கு மூவுலகாட்சி கொடுத்தான்.

63. எல்லா அஸுரக் கூட்டங்களையும் அழித்தான். பலவான்களில் சிறந்த கம்ஸனையும் கொன்று உக்ரஸேனனுக்கு மதுரையைக் கொடுத்து, கேசி அஸுரனை அழித்த க்ருஷ்ணன், தானே ராஜ்யத்தில் அபிஷேகம் செய்து கொள்ளவில்லை;

64. ராஜஸிம்ஹாஸனத்திலும் அமரவுமில்லை; ராஜாதிராஜ ஞகப் பதவியடைந்து, பிறகு மதுரைக்கு வந்துள்ளான்''.

65. நகரவாஸிகள், ஒருவருக்கொருவர், இவ்வித ஸம்பாஷணையை, வந்திகள், மாகதத், ஸூதர் ஆகிய இசைவல்லுனர்களின் கூட்டத் தலைவர்கள் கேட்டு, இப்படிச் சொன்னார்கள்.

66. ''குணஸாகரமே! உனது கீர்த்தி வாய்ந்த விசித்ர சக்தியால் வெளிப்படுபவைகளை (குணங்களை) மனிதனின் ஒரு நாவினால் சொல்வதற்கு முடியுமா என்ன?

67. அந்த விஷயத்தில் புத்திமான் ஸர்ப்பராஜன் வாசுகி இராயிரம் நாக்குகளால் சொல்வான்.

68, இந்த பூவுலகில் அரசர்களிடத்து இந்த அற்புதம் முன்னரும் நடந்ததில்லை இனியும் நடவாது. என்ன ஆஸ்சர்யம்? இந்திரனிடமிருந்து ஸிம்ஹாஸனம் க்ருஷ்ணனுக்கு வந்தது.

69. தேவசபை கலசங்கள் தாமாகவே வருகையும் முன் கேட்கப்பட்டதுமில்லை, காணப்பட்டதுமில்லை. அதனால் அற்புதமாக நினைக்கிறோம்.

70 மங்கையரில் சிறந்த [தேவகிதேவி] மஹாபுண்யவதி, தன்யை, க்ருஷ்ணனைப் பெற்ற பயன் படைத்தவள். தேவர் தலைவன்! கேசவன்? தாமரைக் கண்ணன், செல்வக் களஞ்சியம் தேவர் வணங்குபவன்!

71. இத்தகைய கிருஷ்ணனாகிற உம்மை தேவகி வயிற்றில் வைத்திருந்து அன்பு நிறைந்த கண்களால் உனது முகத் தாமரையைக் காண்கிறாள்.

72. 73. இவ்விதம் பேசுகிறவர்களின் அவரவர் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு உக்ரஸேனனை முன்னிட்டு ஸஹோதரர் இராம க்ருஷ்ணர் ப்ராகார வாசலையடைந்தனர். அச்சமயம் ஆசமனீயம் கொடுத்து, பாத்யம் பாத்யமென்று சொன்னான்; புத்திமான் உக்ரஸேனன், பிறகு கேசவன் தேர் எதிரில் பூஜித்தான்.

74. சிரஸால் க்ருஷ்ணனை வணங்கி, வீரன் உக்ரஸேனன், யானை மேலேறி, மேகம். மழை, தாரையால் போல். பொன் மழை பொழிந்தான்.

75. பொன் குவியல்களால் வர்ஷிக்கப்பட்டவனாய், க்ருஷ்ணன், பிதா மாளிகைக்குள் புகுந்தான். மதுரை நாயகன் ஸ்ரீமான் உக்ரஸேனன், மதுஸூதனனை நோக்கிச் சொன்னான்.

76. ப்ரபுவே! ராஜாதிராஜனாகிய பதவியை ஏற்று எனது ராஜக்ருஹத்தில், இந்திரனால் கொடுக்கப்பட்ட ஸிம்மாஸனத்தை ஸ்தாபிப்பது பொருத்தமானது.

77. மதுரை மன்னன் கம்ஸன், புஜபலத்தால் சம்பாதிக்கப் பட்டுள்ள ஸபைக்கு அழைத்துச் செல்வேன். பகவானே! அனு கிரஹிக்க வேண்டும்.

78. கோபங் கொள்ளக் கூடாது. தேவகி, வாஸுதேவர், ரோஹிணி மூவரும் ஜனமேஜயரே, ஸந்தோஷ மிகுதியால், மயங்கி ஒன்றும் சொல்ல முடியாதவராய் இருந்தனர்.

79. பிறகு ஜனமேஜயரே! கம்ஸனின் தாயார், கேசவனைப் பூஜித்தாள். நாற்றிசை தேசங்களில் விளைந்து ஸம்பாதிக்கப்பட்ட செல்வத்தை காலதேசத்தை நன்கு ஆலோசித்து, திருவடித்தாமரை களிரண்டிலும் ஸமர்ப்பித்தாள்.

80. உக்ரஸேனரை அழைத்து, (க்ருஷ்ணன்) மிருதுவான வார்த்தையைச் சொன்னான்.

81. க்ருஷ்ணன் சொன்னான்: "நான் மதுரையை ஆசைப்பட வில்லை. நன் ஆசையால் உமது பிள்ளை என்னால் கொல்லப்பட விலலை. இவன் காலத்தால் மரணமடைந்தான்.

82. பலதரப்பட்ட யாகங்களைச் செய்யும்; நிறைந்த செல் வத்தைக் கொடும்; எனது தோள் வலிமை உதவி கொண்டு சத்ரு ஸேனைகளை வெற்றி கொள்ளும்.

83. கம்ஸன் மரணத்தால் உண்டான பயத்தையும், மனஸ் தாபத்தையும், விடும். என்னால் திரும்பக் கொடுக்கப்பட்ட தனக் குவியலை யெடுத்து கொண்டு போம்"

84. பிறகு, க்ருஷ்ணனும், இவ்விதம் உக்ரஸேனனை ஸமாதானப்படுத்திப் பின்பு ஸ்ரீமான் க்ருஷ்ணன் கலப்பை ஆயுதங் கொண்ட பலராமனுடன், மாதா பிதாக்கள் அருகில் சென்றான்.

85. மஹாபலம் வாய்ந்த ராமகிருஷ்ணன் இருவரும் ஆநரிதம் நிறைந்த ஹிருதயத்துடன், பிதாமாதாக்கள் திருவடிகளை ஸாஷ்டாங்கமாக வணங்கினர்.

86. அந்த முஹூர்த்தத்தில், அந்த மதுரை நகரை, ஸவர்க்க உலகைவிட்டு கீழ் இறங்கிய இந்திரன் தலைநகர் அமராவதி போலாயிற்று.

87. நகரமக்கள் வாஸுதேவன் திருமாளிகையை நன்கு கண்டு மனதால் தேவலோகமாக நினைத்தனர்.

88, 89. இப்பூமியாகவல்ல அப்போது மஹிஷ்யுடன் இருக்கும் மதுரை மன்னன் உக்ரஸேனன் ராஜாவை யனுப்பி வைத்து வாஸுதேவர் மாளிகையில் புகுந்து ராம கேசவர் இருவீரரும் (ஆயுதங்களை) அளவான இடத்தில் வைத்து தம் மாளிகையில் இஷ்டப்படி ஸஞ்சரித்தனர்.

90. பிறகு நித்ய கடமைகளை முடித்து, கதைகள் பேசிக் கொண்டு ஸுகமாக இருந்தனர். இதே சமயத்தில் பெரிய உத்பாத முண்டாயிற்று.

91. வானத்தில் மேகங்கள் சுழன்றன; பூமியில் மலைகள் அசைந்தன. எல்லா ஸமுத்ரங்களும் கலங்கின, ஆதிசேஷனும் மயங்கினான். எல்லா யாதவர்களும், நடுங்கி, வளைந்து விழுந்தனர்.

92. அசைவற்ற ராமக்ருஷ்ணர்களும், அவர்கள் விழுந்ததைப் பார்த்து, இறக்கைகளின் வேதத்தால் கருடன் (வரவை அறிந்தனர்.

93. திவ்யமாலை பூச்சுக்களுடன், வந்து சேர்ந்த கருடனை க்ருஷ்ணன் பார்த்தான். கருடன் அவ்விருவரையும் தலையால் வணங்கி, இனியமுகத்துடன், கொடுத்த ஆஸனத்தில் அமர்ந்தான்.

94. பலியை அடக்கின க்ருஷ்ணன், யுத்த மந்திரியான தீரன் கருத்மான் அருகில் வந்ததும் பார்த்து சொன்னான்.

95. 'தேவஸேனைகளின் சத்ருக்களை யழிப்பவனே! பக்ஷி ராஜனே! விந்தையின் மனதுக்கு ஆநந்தமளிப்பவனே! கேசவா பிரியனே! உனக்கு நல்வரவு.''

96 பிறகு, தன்னொப்பாரில்லா ரூபத்துடன் அமர்ந்திருக்கும் கருடனைப் பார்த்து, க்ருஷ்ணன், ஸந்தர்ப உசிதமான வார்த்தை சொன்னான்.

97. **க்ருஷ்ணன் சொன்னான் :** ''பக்ஷி ஸ்ரேஷ்டனே! போஜ ராஜனின் பெரிய அந்தப்புரத்துக்குச் செல்வோம். அங்கு சென்று இனிதமர்ந்து மனதிலிருப்பதை ஆலோசிப்போம்.''

98, **வைசம்பாயனர் சொன்னார் :** பிறகு மஹாவீரர்களான பறதேவ ஜனார்த்தனர், வைன தேயருடன், மூவராக (அந்தப்புரம்) புகுந்து, ரஹஸ்ய ஆலோசனை செய்தனர்.

99. ''இந்த ஜராஸந்தன் (வரத்தினால்) நம்மால் கொல்லப் படத்தகாதவனாக செய்யப்பட்டிருக்கிறான். சத்ரு ஸேனையோ மிகப் பெரிது.

100, பெரிய ஸேனையால் சூழப்பட்ட பெரிய அரசர்களையும், அளவற்ற ஸேனைகளையும் அழிக்கவும்; ஜராஸந்தனது ஸேனையை யழிக்கவும், நூற்றுக்கணக்கான வர்ஷங்களானாலும் முடியாது.

101. இதற்காகவே, வைநதேயனே! உனக்கும் சொல்கிறேன்! 'மதுரை புரியில் வஸிக்கும் நமக்கு மேன்மையுண்டாகாது என்று எனது எண்ணம்''

102. **கருடன் சொன்னான் :** 'தேவனே தேவ தேவனான உம்மை வணங்கி, வஸிப்பதற்கு தக்க ஸ்தலம் பார்க்க, உம்மிட மிருந்து 'குசஸ்தலிக்கு' நான் சென்றேன்.

103 தேவ ஸ்ரேஷ்டனே! நான் வானத்திலிருந்து, நாற் புறமும் பார்த்து, லக்ஷணங்கள் அமைந்த அந்த நகரைப் பார்த் தேன். கடலருகிலுள்ள விசாலதேசம். கிழக்கும், வடக்கும் குளிர்ச்சி மிகுந்தது.

104 நாற்புறமும் கடல். நடுவில் உள்ளது. தேவர்களாலும் ...கர்க்க முடியாதது. எல்லா ரத்னங்களுக்கும் இருப்பிடம். ...ம்பும் எல்லா பழமரங்களுடையது; எப்போதும் எல்லா ...ன் புஷ்பங்களுமுள்ளன; நாற்புறமும் மனதுக்கினியது. ...ய க்ருஹஸ்த முதலிய எல்லா ஆஸ்ரம வாஸிகளுமிருக்

105. நம் விருப்பமெல்லாம் கிடைக்குமிடம் ஆண், பெண்கள் நிறைந்தது. ஸதா ஆனந்தத்தை வளர்க்க கூடியது (ப்ராகாரங்கள்) திருசுற்றுகள், — அகிழ்கள் கொண்டது.

106. பல அடுக்குகள் கொண்ட கோபுர வரிசைகளையுடையது; விசித்திரமான, நாற்சந்திகளையுடையது. விசாலமான வாசல்களையும், தோரணங்களையுமுடையது.

107. ஆஶ்சர்யமான யந்த்ர தாழ்பாள்கள் கொண்டது. தங்க திருசுற்றுகளால் விளங்குவது. காலாள், யானை, குதிரை நிறைந்தது. தேர்ப்படை கொண்டது;

108. நாற்திசை தேசங்களில் உண்டான பொருள்கள் மிகுந்தது. திவ்ய புஷ்ப பழங்கள், உடையமரங்கள் கொண்டது.

109. விருதுக் கொடிகள், த்வஜக் கொடிகள் இவைகளின் வரிசைகள் நிறைந்தது. பெரிய மாளிகைகளால் நிறைந்தது. சத்ரு கூட்டங்களுக்குப் பயங்கரமானது. நண்பர்களுக்கு ஸந்தோஷத்தை வளர்க்கக் கூடியது.

110. ராஜாக்கள் வாஸஸ்தலங்களெல்லாவற்றிலும் சிறந்தது மிகச்சிறந்த நகரம் இத்தகைய நகரைப் பார்த்தேன்.

111. தேவஸ்ரேஷ்டனே! சிறந்த ரைவதமலை இந்த்ரன் உத்யான வனமாகிய நந்தனம் போன்றது தெய்வத்தன்மை வாய்ந்தது நகர வாசலுக்கு அலங்காரமானது.

112. அங்கு சென்று தேவஸ்ரேஷ்டனே! வாஸஸ்தானத்தை அமைக்கச் செய்.

113. அதை தேவாலயமாகச் செய் பெண்களின் ஸஞ்சாரமும் அடிக்கடி அமையப்போகிறது, ''த்வாரவதி'' எனும் பெயரால் அறியத்தக்கது பூவுலகில் புகழ் பெற்றது அழகிய நகராக அமையும்.

114—117 ப்ரபுவே! ரத்னம், முத்து, பவழங்களாலும் வைரம் வைடூர்யம், போன்ற காந்தியுடைய தேவத்தன்மை வாய்ந்த மூவுலகிலுமுண்டான திவ்ய ரத்னங்களாலும் இஷ்டப்படி பொருத்தப்பட்ட தூண்கள் கொண்ட ஸ்வர்க்கலோக தேவஸபை போன்ற சொக்கத்தங்கமயான ஒளிவீசும், எல்லாரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்ட திவ்ய விருதுகொடி த்வஜக்கொடி கொண்ட தேவ கந்தர்வர்களால் ரக்ஷிக்கப்பட்ட சத்ரசூர்ய சோபை கொண்ட உப்பரிகைள் அமைக்கச் செய்''

**வைசம்பாயனர் சொன்னார்:** இப்படி ஸங்கல்பித்துக்கொண்டு பிறகு வைந்தேயர் கேசவனை சிரஸால் வணங்கி ராமக்ருஷ்ணரால் ஆஸனம் கொடுக்கப்பட்டு அமர்ந்தார்.

119. க்ருஷ்ணனும் ராமனுடன் கூடிஆலோசித்து 'கருடனால், சொல்லப்பட்ட நன்மையைச் செயல்படுத்தவிரும்பி வைந்தேயனை, விலை மதிக்க முடியாத உயர்ந்த ஆபரணங்களால் முறைப்படி பஹுமானித்து அனுப்பி விட்டு ஜனமே ஜயரே!

120. தேவலோகத்து தேவர்கள் போல் அங்கு ஸுகமாக மகிழ்ந்திருந்தனர்.

121. அந்த க்ருஷ்ணனுடைய [மந்த்ராலோசனை) வார்த்தையை (உக்ரஸேன மஹாராஜா) கேட்டு நட்பினால் நம்பிக்கையுடன் அமுத வார்த்தை மொழிந்தான்.

122 'க்ருஷ்ண! க்ருஷ்ண! மஹாபாஹோ! யாதவர்களுக்கு ஆநந்தம் கொடுப்பவனே! உனக்கு இப்போது சொல்கிறேன். கேட்கப்படட்டும்.

123. உன்னைவிட்டுப் பிரிந்த நாங்கள் எல்லோரும் இந் நகரத்திலோ தேசத்திலோ, நாயகனைப் பிரிந்த பெண்கள் போல் ஸுகமாக விருந்து சக்தியற்றவர்கள்.

124. பெரியோனே! கௌரவமளிப்பவனே! உன்னை நாதனாக வுடைய நாங்கள், உனது புஜபலத்தையண்டி, இந்த்ரனோடு கூடிய அரசர்களுக்குக்கூட அஞ்சோம்.

125. யது ஶ்ரேஷ்டா! யாதவ வ்ருஷபா! வெற்றியின் பொருட்டு, எங்கெங்கு செல்வாயோ அங்கங்கு நீ எங்களுடன் கூடவே செல்வாயாக?'

126. அந்த உக்ரஸேன, ராஜாவின் வார்த்தையைத் தேவகி புத்ரன் க்ருஷ்ணன் கேட்டான். இப்போது உங்கள்இஷ்டப்படியே செய்வேன் ஸந்தேஹமில்லை (என்று கூறினான்)

**55-ம் அத்யாயம் முற்றும்**

## 56ம் அத்யாயம்

# க்ருஷ்ணன் ஆஜ்ஞைப்படி மதுரை விட்டு த்வாரகையை இருப்பிடமாக அடைதல் க்ருஷ்ணன் சொல்படி - யாதவர்கள் த்வாரகைக்குப் போதல்

**வைசம்பாயனர்.** சிறிது காலங்கழித்தபின் யாதவ ஸபையில் ஸபையோர்களை நோக்கி, தாமரைக் கண்ணன் க்ருஷ்ணன், காரணத்துடன் கூடிய சிறந்த வார்த்தையைச் சொன்னான்:

2. "ராஜ்யங்களை மாலையாகவுடைய இந்த மதுரை நகர் யாதவர்களுடையது. நாம் இங்கேயே பிறந்தவர் காட்டில் ஆய்ப்பாடியில் வளர்ந்தவர். சத்ருக்கள் ஜெயிக்கப்பட்டனர்.

3. இப்போது துக்கம் போயிற்று. (ஆயினும்) அரசர்களிடம் விரோதம் பிறந்தது,

4. நமக்கு வாகனங்களும் இருக்கின்றன. காலாட்படையோ அளவற்றது. ஸ்ரேஷ்டமான பொருள்கள் (நம்மிடம்) பலதரப் பட்டன. நண்பர்களோ வெகு அதிகம்.

5. இந்த மதுரை நகரம் சிறியதாயுள்ளது. சத்ருக்கள் (எளிதில்) வரக்கூடியதாயிருக்கிறது. நம்ஸேனையும் நண்பர்களும் பெருகியுள்ளனர்.

6. இங்கு காலாட்படைக்கும் யுவகோடிகளுக்கும் கைகலப்பு எதிர்பார்க்கிறேன். யது ஸ்ரேஷ்டர்களே! இங்குவஸிப்பதுஎனக்கு உசிதமாகப் படவில்லை.

7. ஆகையால் நகர் ஒன்று புதிநாக நிர்மாணிக்கப் போகிறேன். என்னுடைய இதை நீங்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

8. காலத்துக்குப் பொருத்தமாக யாதவ ஸபையில் உங்கள் நன்மைக்காக என் அபிப்ராயமாகிற இந்த வார்த்தை உங்களுக்கு ஏற்றது.

9. அப்போது எல்லா யாதவர்களும், மனமகிழ்ந்து க்ருஷ்ணனிடம் சொன்னார்கள். "இந்த ஜனங்களின் க்ஷேமத்திற்காக உமது அபிப்ராயம் எதுவோ அது நிறைவேற்றப்படட்டும்.

10. பிறகு வ்ருஷ்ணிகள் சிறந்த ஆலோசனை செய்தனர். 'ஜராஸந்தன்' தம்மால் கொல்லப்பட முடியாதவன். சத்ரு ஸேனை மிகப்பெரிது. அரசர்களின் பெரிய ஸேனை (சிறிது) அழிக்கப் பட்டது.

11. அவர்கள் ஸேனைகளோ அதிகம். நூற்றுக்கணக்கான வர்ஷங்களாயினும், நம்மால் அழிக்கமுடியாது ஆகையால் இதை விட்டு வெளியேறுவதில் எங்கள் மனம் நாடுகிறது.

12, அதே ஸமயத்தில் காலயவன ராஜா, தனக்கொத்த ஸேனையுடன், மதுரைக்கு வந்தான். அப்போது, ஜராஸந்தன் ஸேனை ஜயிக்க முடியாத அளவில் வந்தது.

13—15 பிறகு காலயவனன் வந்ததைக் கேட்டு இந்த இடத்தை அடைந்தனர். அப்போது ஸத்யஸங்கல்பனான கேசவன் மறுபடியும், யாதவர்களைக் குறித்துச் சொன்னான் ''இன்றே புண்யமான நாள், நம் ஸேனைகளொடு புறப்படுவோம். பிறகு எல்லா யாதவர்களும் க்ருஷ்ணன் கட்டளைப்படி ஸமுத்ர ஜல வெள்ளம்போல், ஸேனைகளின் கூட்டத்தால் எதிரொலி எழுப்பப் பட்டு வெளிக்கிளம்பினர்.

16: வஸுதேவரை முன்னிட்டு அந்த எல்லோரும், காப்பாற் றப்படவேண்டியவற்றை எடுத்துகொண்டு, நன்கு தயாராக்கப் பட்ட மதயானைகள், குதிரைகள், தேர்கள், இவையுடனும், தம் பந்து ஜனங்கள், எல்லோருடனும் துந்துபி வாத்யங்கள் முழக்கி மதுரையை விட்டு வெளிக்கிளம்பினர்.

18.19 தங்கக் கும்பங்களுடைய ரதங்களாலும், மதங்கொண்ட சிறந்த யானைகளாலும், ஸாரதிகளால், சாட்டை, கடிவாளங் கொண்டு தூண்டித் துள்ளும் குதிரைகளாலும், தம் தம் சேனை முகங்களை, ப்ரகாசப்படுத்தி நடத்திக் கொண்டு மகிழ்ச்சி கொண்ட வ்ருஷ்ணிகா ஜனமே ஜயரே! மேற்கு திசை நோக்கிச் சென்றனர்.

20. பிறகு அந்த வாஸுதேவனை (க்ருஷ்ணனை) முன்னிட்டுச் செல்லும் போரில் ஸமர்த்தரான மிக முக்ய எல்லா யாதவர்களும் ஸேனை முகத்தை நடத்திக் கொண்டு நானுவித கொடிகளால் அழகியதும்.

தென்னந்தோடங்கள் கொண்டதும், யானைக் கூட்டங்கள் ஸஞ்சரிப்பதும் அழகியதும், தாழைப் புதர்கள் நிறைந்ததும். சில விடங்களில், பனை, புன்னை, பகுளம், த்ராக்ஷை வனங்களால் நெருங்கியதும் ஆகிய ஸமுத்ரராஜனின், தாழ்ந்த ஜல ப்ரதேசத்தை யதுஸ்ரேஷ்டர்கள் அடைந்தனர்.

23. ஸுகத்தில் ப்ரியமுடைய எல்லா யாதவர்களும் அங்கு அழகிய இடங்களிலிருந்து, ஸ்வர்க்கத்தில் உள்ள தேவர்கள் போல் மகிழ்ந்தனர்.

24. சத்ரு வீரரையழிக்கும் அந்த க்ருஷ்ணனும் மனைகள் அமைக்கு மிடத்தைத் தேடி ஸமுத்ரத்தால் ப்ரகாசிக்கும ப்ரந்த இடத்தைப் பார்த்தான்.

25. வாகனங்களுக்கு நலமானது; மணல் செம்மண் கலந்த பூமி நகர லக்ஷணங்கள் கொண்டது! லக்ஷ்மி தேவி விரும்பியிருக்கு மிடம்; கடல் காற்று வீசுமிடம் கடல் நீர் சூழ்ந்தது:

26 27 நகர லக்ஷணங்கள் விளங்குமிடம் இத்தகைய கடலிடம். அங்கு ரைவதம்' எனும் மலை வெகு தூரத்திலில்லை. மந்தர மலைச்சிகரமொத்த உயர்ந்த சிகரங்கள் நாற்புறமும்; சோலையுடையது;

28. அது ஏகலவ்யன் வஸித்த இடம் வெகு மனிதர்கள் இருந்த விடம் எல்லா ஶ்ரேஷ்டமான பொருள்கள் இருக்குமிடம்,

29 31 அங்கேயே அந்த உக்ரஸேன ராஜாவுக்கு விளையாடு மிடம் நன்கு நிர்மாணிக்கப்பட்டுள்ளது. "தவராவத்" எனும் பெயர், நல்ல விஸ்தாரமான கைலாசம் போன்றது. அங்கு நகரம் அமைக்க கேசவனாலே புத்தி கூர்ந்து செலுத்தப்பட்டது. அங்கு ஸேனையிருக்குமிடத்தை யாதவர் ஏற்படுத்தினர் மாலைச் செந்நிற சூர்ய வேளை, அங்கு யாதவர் ஶ்ரேஷ்டர் ஸேனைத் தலைவர் வீட்டையும், படைவீட்டையும் நன்கு அமைத்தனர்.

32. அந்த யது ஶ்ரேஷ்டன் ப்ரபு கேசவன், யாதவர்களுடன் ஸ்திரமான வாஸத்துக்காக அங்கு தங்கினான்.

33, 35 யாதவோத்தமனான புருஷ ஶ்ரேஷ்டன் விஷ்ணு அந் நகருக்கு வஸிக்கு மிடங்களையும் (அதனதன்) பெயரையும் நிச்சயித் தான். ஜனமே ஜயரே! "த்வாரவதி" நகரையடைந்து பந்துக் களுடனும் ஸ்வர்க்கத்தில் தேவ கூட்டங்கள் போல் ஸுகமுடைய

வராக வஸித்தனர். கேசியைக் கொன்ற க்ருஷ்ணனும் காலயவனன் (வரவை) யறிந்து ஜராஸந்த பயத்தாலும் த்வாரவதி நகருக்குச் சென்றான்.

**56-ம் அத்யாயம் முற்றிற்று**

## 57-ம் அத்யாயம்

## காலயவனனின் வதம்

1, **ஜனமே ஜயர் சொன்னார்** : "பகவன் வைசம்பாயனரே! யது ஸ்ரேஷ்டனும், மஹாத்மாவும், புத்திமானுமான, க்ருஷ்ணனது சரித்ரத்தை விஸ்தாரமாகக் கேட்க விரும்புகிறேன்.

2, 3 மத்ய தேசத்தின் உத்தமமான ஸ்தலம்; லக்ஷ்மிக்கே தனியிடம்; பூமியின் சிகரம்; மிக அழகியது; அளவற்ற தனதான்யங்களுடையது; ஸாதுக்கள் நிறைந்த இடம்; நீர் வாய்ப்புடையது! உத்தம வாசஸ்தலம்; இத்தகைய மதுரையை மதுஸூதனன்போர் புரியாமலே விட்டு விலகினான்.

4, 6 எதற்காக வைசம்பாயனரே! ப்ராஹ்மண ஸ்ரேஷ்டரே அந்தக் காலயவனனும் க்ருஷ்ணனிடத்தில் என்ன செய்தான்? மஹாபாஹு மஹாயோகி, மஹாதபஸ்வீ, க்ருஷ்ணன் ஸமுத்ர மாகிய அகிழ் காவலுடைய த்வாரகையை அடைந்து என்ன செய்தான்? பொறுக்க முடியாத எவனைப் பார்த்து, ஜனார்த்தனன் மதுரையை விட்டு வெளியேறினானே! அந்த காலயவனன் அத்தகைய வீரமுடையவன்? வீரனான அவன் எவனுக்குப் பிறந்தான்.

7. **வைசம்பாயனர் சொன்னார்** வ்ருஷ்ணிகள் அந்தகா இவர்கள் ஆசார்யன் கார்க்ய முனி விசாலமனதுடையவர். முன்னர் ப்ரஹ்மசாரியாயிருந்து மனைவியை யடையவில்லை.

8. அப்படியிருக்கிற ஊர்த்வ ரேதஸ்ஸாய அழிவற்ற அந்த கார்கியமுனியை [அவர்] மைத்துனன் ராஜஸபையில் அலியெனப் பரிஹாஸம் செய்தான்

9. ஜனமே ஜயரே! ஸபையில் பரிஹாஸம் செய்யப்பட்ட அந்த கார்க்யர் ஜயிக்கப்படாத பரமாத்மாத்வின் (கட்டளையை) ஜயிப்பதற்காக ஸ்த்ரீயை விரும்பாமலேயே வெகு கடுமையான தவமும் செய்தார்.

10. பிறகு பன்னிரண்டு வர்ஷங்கள் அவர் இரும்பு சூர்ணத்தை உட்கொண்டார். சிந்தைக்கப்பாற்பட்ட பெருமையுடைய சூலமேந்திய சிவனை ஆராதித்தார்.

11. ருத்ரன் வ்ருஷ்ணிகளையும் அந்தகர்களையும். அழிக்கவல்ல மிக்க தேஜோமயனான புத்ரனை வரமாகக்கொடுத்தான்.

12, புத்ரப்பேறு விரும்பியவனும், தெய்வத்தால் பிள்ளைப் பேறில்லாதவனுமான, யவன தேசத்தவன், புத்ரப்பேறுண்டாகும் அந்த வார்த்தைக் கேள்விப்பட்டான்.

13. அந்த யவன அரசன், அந்த அந்தண ஸ்ரேஷ்டனை வரவழைத்து, ஸமாதானப்படுத்தி, ஆய்ப்பாடி நடுவில் கோப ஸ்த்ரீகளுடன் இருக்கச் செய்தான்.

14. அந்த ஆய்ப்பாடியில் கோபாலி என்கிற அப்ஸரஸ் கோபஸ்த்ரீ வேஷம் பூண்டு. கார்க்யருடைய, தரிக்க முடியாத, நழுவாத கர்ப்பத்தைத் தரித்தாள்.

15, சங்கர தேவனின் கட்டளையால் மனித ரூபந் தரித்தவளான கர்க்ய பார்யையிடத்தில், காலயவனன் எனும், அந்த மஹா பலவான், சூரன் பிறந்தான்.

16. பிள்ளையில்லா அந்த அரசனுடைய அந்தப்புரத்தில் இந்த சிசு வளர்ந்தது ஜனமேஜயரே; அவன் காலமானதும், காலயவனன் அரசனானான்.

17. காலயவனனான அரசன், போர் செய்ய விரும்பி, அந்தண ஸ்ரேஷ்டர்களைக் கேட்டான். நாரதரால் அவனுக்கு வ்ருஷ்ணி, அந்தக் குலம் (போருக்காக) தெரிவிக்கப்பட்டது

18. தேஜஸ்வீ க்ருஷ்ணன், நாரதரால் கார்க்யர், வரதானத்தையறிந்து. யவனர்களிடத்து, வளர்ந்து வருகிற காலயவனனை அலக்ஷ்யம் செய்தான்.

19. மஹாபலன் காலயவன ராஜா பல பூர்ணனான ம்லேச்ச அரசர், இவனையடைந்து அனுஸரித்தனர்.

20. சக்ர, துஷாரர், தரதர், பாரதர், ச்ருங்கலர், சவஸர், பஹ்லவர் ஆகிய இவர்களும், மற்றும், ஹிமயமலை வாஸிகளான

ம்லேச்சரர்களும், இப்படியே நூற்றுக் கணக்கில் காலயவனனை அனுஸரித்தனர்.

21. காலயவனன், விளக்கு விட்டில் போன்று, அந்த மலேச் சாரர்களால், சூழப்பட்டு நாலுவித பயங்கர ஆயுதங்களுடன், மதுரையை நோக்கிப் படையெடுத்தான்.

22. காலயவன ராஜா, யானை, குதிரை, கழுதை, ஒட்டகம், இவைகளின் லக்ஷம் கணக்கில், பெரிய ஸேனையால் சூழப்பட்டு, பூமியை நடுங்கச் செய்தான்.

23 சூர்ய வழியே தூசியால் மறைந்தது. ஸேனையின் மூத்ரத் தாலும், மலத்தாலும், நதியே யுண்டாயிற்று.

24: குதிரை, ஒட்டகம் (இவை) மலங்களின் குவியல்களி லிருந்து நதி உண்டானதால், ஜனமேஜயரே! பிறகு, 'அச்வ ஸச்ருது' (குதிரை மலம்) எனும் பெயர் அந்நதிக்கு ஏற்பட்டது.

25 வ்ருஷ்ணி அந்தகர், இவர்கள் தலைவன் வாஸுதேவன், பெரிய ஸேனை வருகிறதைக் கேட்டு, பந்துக்களை யழைத்து இவ் விதம் கூறினான் :

26. ''இந்த பெரிய கொடிய வ்ருஷ்ணி, அந்தகருக்கு பயம் மிக ஏற்பட்டு விட்டது. பரமசிவன் வரதானத்தில், நமது சத்ருவும் கொல்ல முடியாதவன்.

27. ஸாமதான முதலிய உபாயங்களும் எல்லா வழியாலும் செய்யப்பட்டன. அஹங்கார மதத்தாலும், பலத்தாலும், திமிர் கொண்டு, அவன் போர் புரியவே விரும்புகிறான்.

28 இந்த மதுரை வாஸம், 'இவ்வளவுதான்' என நாரத முனியால் எனக்குச் சொல்லப்பட்டது.

29. இவ்வளவு பலவானுன சத்ரு விடத்தில் நல் வார்த்தை தான் சொல்ல வேணுமென்பது மேலான கொள்கை.

30. ஜராஸந்த ராஜனும், நம்மை எப்போதும், பொறுப் பதில்லை. [விரோதமான மனதில்] கம்ஸ வதத்தால் வெறுப்புக் கொண்ட சில அரசர்களும், அப்படியே, வ்ருஷ்ணி கூட்டத்தால், [illegible] கொடுக்கப்பட்ட மற்ற அரசர்களும், அவனை [ஜரா ஸந்தனைச்] சேர்ந்து விட்டனர்.

31. ஜராஸந்தனையண்டி, நம்மைத் துன்புறுத்த விரும்புகின்றனர்.'' அரசர்களால் யாதவர் பலர் கொல்லப்பட்டனர். இந்நகரில் வ்ருத்தியடைய நம்மால் இயலவில்லை. என்று கேசவன் வெளியேற நினைத்து, இந்தக் காலயவனுக்குத் தூதனை அனுப்பினான்.

32. பிறகு, வெட்டிய மைக்கட்டி போன்ற மிகக் கருநிறமுடையதும், கொடியதும், கோரைப் பற்களில் விஷமுடையதுமான பெரிய கருநாகத்தை, ஒரு குடத்தில் அடைத்தான்.

33. பின்பு அந்தக் குடத்தை மூடி முத்திரையிட்டு, தன் தூதனைக் கொண்டு (காலயவனனுக்கு) கொடுக்கச் செய்தான்.

34. கோவிந்தன், த்ருஷ்டாந்தத்துக்காக [கேவலம் கீர்த்திக்காக க்ருஷ்ணனுடன் யோருக்கு வருவதைக் குறித்து] அந்த காலயவனனை பயப்படுத்தினான். 'க்ருஷ்ணன் காலஸர்ப்பம் போன்றவன்' என அந்த தூதன் சொல்லி, காலயவனிடம் பாம்புக் குடத்தைக் காட்டினான்,

35. அதை யாதவர்கள் பயங்காட்டுவதாக நினைத்து கொடிய எறும்புகளால் அக்குடத்தை நிறைத்தான்.

36. அந்த பாம்பு, அந்த பல கொடிய எறும்புகளால் அங்கங்கள் கடித்து, தின்னப்பட்டு சாம்பலாகி விட்டது.

37. யவன ராஜன் அந்தக் குடத்தை அதே போல் மூடி; முத்திரையிட்டு, பலபடி வர்ணித்து, க்ருஷ்ணனிடம் அனுப்பினான்,

38. க்ருஷ்ணனும் தன் செயல் வீணானதைப் பார்த்து, மதுரையை விட்டு சீக்ரமாகவே, த்வாரகையை யடைந்தான்

39 40 ஜனமேஜயரே! பெரிய கீர்த்தி வாய்ந்த க்ருஷ்ணன், விரோதத்திற்கு முடிவு செய்ய விரும்பி, த்வாரகையையடைந்து, வ்ருஷ்ணிகளை ஸமாதானப்படுத்தி அப்போது புருஷ ஸ்ரேஷ்டன் க்ருஷ்ணனும், கைகளையே ஆயுதமாகக் கொண்டு கால் நடையாக மதுரைக்கு வந்தான்.

41. அந்த க்ருஷ்ணனைப் பார்த்து ஸந்தோஷமடைந்த அந்த காலயவனன், கோபத்துடன் வெளிக் கிளம்பினான். மஹாபலவான் க்ருஷ்ணனும் தன்னைக் காட்டிக் கொண்டே [பாச்சுக்காட்டி] இழுத்துக் கொண்டு போனான்,

42. பிறகு, கோவிந்தனைப் பிடிக்க விரும்பிய யவன ராஜன், கோவிந்தனைப் பின் தொடர்ந்தான். யோக தர்ம மறிந்த க்ருஷ்ணனை பிடிப்பதற்கு அந்த ராஜா சக்தியற்றிருந்தார்.

43. மாந்தாதாவின் மகன், பெருங்கீர்த்தி வாய்ந்த முசுந்த ராஜன், முன்னர் தேவாஸுரப் போரில் மிக்க பலங்கொண்டு கார்யத்தை முடித்து தேவர்களால் வரம் கேட்கும்படி தூண்டப் பட்டு நித்ரையையே வரமாகக் கேட்டுக் கொண்டான். அப்போது களைப்படைந்த அவனுக்கு அப்போது இவ்விதம் அவன் வாயி லிருந்து வார்த்தையெழுந்தது.

45. "தேவர்களே, தூங்கும் என்னை எவன் எழுப்புவானோ, அவனை நான் கோபத் தீ கொண்ட கண்ணால் எரித்து விடுவேன்" இப்படித் திரும்பத் திரும்பச் சொன்னான்,

46. அவனை இந்திரன் தேவர்களுடன் "இப்படியே இருக் கட்டும்" என்று சொன்னான். முசுகுந்தன் தேவர்களால் அனுமதிக் கப்பட்டு, மலை ராஜனை, [ஹிமய மலையை] அடைந்தான்.

47. அவன் ஒரு மலைக் குகையில் புகுந்து ஶ்ரமத்தால் இளைத்து, க்ருஷ்ணனைத் தரிசிக்கும் வரை இவ்வளவு காலம் தூங்கினான்.

48, 49. நாரத முனியால் அந்த எல்லாம் தேவர்களால் வர தானத்தையும். அந்த காலயவனன் தேஜஸ்ஸையும் பற்றி க்ருஷ்ண னுக்குத் தெரிவிக்கப்பட்டது.

50. க்ருஷ்ணன் அந்த ம்லேச்ச சத்ருவால், பின் தொடரப் பட்டு, முசுகுந்தனின் அந்த குகையைப் புகுந்தான்

51. மிக்க துஷ்டபுத்தியுடைய அந்த யவனன் உடன் சென்று தூங்குகிற யமன்போன்றஅரசனை அணுகிப் பார்த்தான்.

52. அந்த அரசனை க்ருஷ்ணனாக, நினைத்து (விட்டில் நெருப் பைப் போல்) காலால் உதைத்தான்.

53. ராஜரிஷி முசுகுந்தனும், கால் தொடுதலால் எழுப்பப் பட்டு தூக்கக் கலைவாலும், அந்தக் கால் ஸபர்சத்தாலும் கோபங் கொண்டான்.

54,55. அந்த முசுகுந்தன் இந்த்ரன்வரத்தை நினைத்து அந்தக் கால் யவனனைத் தன்முன்னல் பார்த்தான். அந்தக் காலயவனன், பார்க்கப்பட்ட மாத்ரத்திலேயே, நாற்புரம் கோபக்னியால் (திப் பற்றி) ஜ்வலித்தான்.

56. அந்தக் காலயவனனை (முசுகுந்தன்) கண் தேஜஸ் ஸிலிருந்து வெளிப்பட்ட அக்னி, உயர்ந்த மரத்தை இடிபோல் ஒரு க்ஷணத்தில் எரித்து விட்டது.

57. வெகு காலநித்ரை கொண்ட ஸ்ரீமான் முசுகுந்த ராஜனை, புத்திமான் க்ருஷ்ணன் கார்யம் செய்து முடித்தவனுக, இந்த வார்த்தை சொன்னுன்.

58. ''முசுகுந்த ராஜனே! வெகு காலமாக உறங்கிக் கொண் டிருக்கிறுய். எனக்கு நாரதரால் சொல்லப்பட்டது. எனக்கு (உன்னுல்) மிகப் பெரிய கார்யம் செய்யப்பட்டது. உனக்கு மங்களம் உண்டாகுக. போம் வருகிறேன்,'

59 (த்ரேதா யுகத்து) முசுகுந்தராஜா உருவ அளவில் குறைந்த க்ருஷ்ணனைப் பார்த்து, அப்போது, வெகு காலமாக யுகம் கடந்து விட்டதை எண்ணினுன்.

60. ராஜா முசுகுந்தன், கோவிந்தனை நோக்கிச் சொன்னுன். 'நீர் யார்? எதற்காக இங்கு வந்திருக்கிறீர்? நான் தூங்கி எத்தனை 'காலம் ஆயிற்று? உமக்குத் தெரியுமேயானுல் சொல்லப்படட்டும்',

61. ஸ்ரீ க்ருஷ்ணன் சொன்னுன் : ''சப்த்ர வம்சத்தில் உதித்த அரசன் நகுஷனின் புத்ரன் யயாதி என்பவன். அவனது மூத்த மகன்யது. மற்ற நால்வர் இளையவர்.

62. அரசனே! ப்ரபுவே! நான் யதுவம்சத்தில் பிறந்த வாஸுதேவர் மகன் வாஸுதேவன், என்று அறியும், நான் இங்கு வந்துள்ளேன்.''

63. த்ரேதாயுதத்தில் தூங்கத் தொடங்கினீர். நாரதரால் இந்தச் செய்தி நான் அறிந்தேன். இதைக் கலியுகமாக அறியும், இன்னும் உமக்கு என்ன செய்ய வேண்டும்?

64. தேவர்களால் கொடுக்கப்பட்ட வரதத்தையுடைய எனது சத்ரு உம்மால் எறிக்கப்பட்டான். அவன் நூறு வர்ஷங்களானு லும், என்னுல் கொல்லப்பட முடியாதவன்?

65 **வைசம்பயனர் சொன்னுர் :** க்ருஷ்ணனுல் இவ்விதம் சொல்லப்பட்ட முசுகுந்தனும், கார்யம் செய்து முடித்த புத்திமான்

க்ருஷ்ணனால் பின் தொடரப்பட்டு குகையிலிருந்து வெளிக் கிளம்பினான்.

60. பிறகு, குறைந்த மனத் திட்பம், அல்ப பலம், எளிய வீர்ய பராக்ரமம், இவை கொண்டு குறுகிய ரூபமுடைய மனிதர்களால், வ்யாபிக்கப்பட்ட பூமியையும், பிறரால் ஆக்ரமிக்கப் பட்ட இழிவான தன் ராஜ்யத்தையும் பார்த்தான்.

67. தவம் செய்ய மனவுறுதி கொண்ட முசுகுந்த ராஜன், ப்ரீதியுடன் கோவிந்தனை அனுப்பி, ஹிமய மலையை அணுகி, பெரிய வனத்தையடைந்தான்.

68, பிறகு தவமியற்றி, சரீரத்தை விட்டு, அசுரம் நீங்கிய தன் (புண்ய) கர்மாக்களால், அந்த முசுகுந்த ராஜா ஸ்வர்க்க மேறினான்.

69. விசால மனமுள்ள தர்மாத்மா, வாஸுதேவன் க்ருஷ்ண னும், உபாயத்தால் தன் சத்ருவை யழிக்கச் செய்து, அவனது ஸேனையை தனதாக வடைந்தான். அந்த புத்திமான் க்ருஷ்ணன், ஏராளமான தேர், யானை, குதிரை, கவசம், சஸ்தரம், ஆயுதம், கொடி முதலிய தலைவன் (காலயவனன்) சுற்ற ஸேனையை ஏற்றுக் கொண்டு சென்றான்.

70. பிறகு மகிழ்ச்சி நிறைந்த மனதுடைய க்ருஷ்ணன், அந்த ஸேனை முதலியவற்றை, உக்ரஸேன ராஜாவிடம், தெரியப்படுத்தினான் (ஸமர்ப்பித்தான்) அந்த அளவற்ற செல்வத்தால், அந்த துவாரகை நகரையும் சோபை கொள்ளச் செய்தான்.

57 அத்தியாயம் முற்றும்

## 58 அத்தியாயம்

## பலராம் ரேவதி விவாகம் விஸ்வகர்மா துவாரகையை விரிவாக நிர்மாணித்ததில் ஸுதர்மா சபை வருதல்—யாதவர்கள் க்ருஷ்ணனால் ஸாகமாக கவனித்தல்

1. **வைசம்பாயனர் சொன்னார் :** பிறகு ஒளி வீசும் காலை நேரம். சூர்யன் உதித்த போது. காலைக் கடன் முடித்த க்ருஷ்ணன், வனத்தில் அமர்ந்தான்.

2. நல்ல காப்பு கொண்ட இடம் தேட அந்த ஸ்தலத்தைச் சுற்றி வந்தான். யதுகுலப் பெரியோர், க்ருஷ்ணனிடம் வந்தனர்

3. ரோஹிணி நக்ஷத்ரம் கூடிய சிறந்த நாளில் ப்ராஹ்மணர்களைக் கொண்டு, ஸ்வஸ்தி வாஸனம் செய்வித்து, துர்க்க (அகழ், மதிள்) வேலை ஆரம்பித்தான்.

4. கேசியைக் கொன்றவன் தாமரைக் கண்ணன், சொல்வல்லோரில் சிறந்த க்ருஷ்ணன், யாதவர்களை நோக்கி, தேவர்களை இந்த்ரன் போல் சொன்னான்.

5. "தேவலோகம் போல் இந்த இடம் நிர்மானிக்கப்பட்டது. பாருங்கள் இந்நகருக்கு சூடப்பட்ட பெயரும் (உலகில்) கீர்த்தி பெறப் போகிறது.

6. இந்த 'த்வாராவதி' என்பது என்னால் நிர்மாணிக்கப்பட்டது. இந்த்ரனுக்கு அமராவதி போல், அழகிய நகராக ஆகும்.

7. இந்நகருக்கு (அமராவதியில்) போன்று, அடையாளங்களையும், இருப்பிடங்களையும். நாற் சந்நிதிகளையும், ராஜ வீதிகளையும், அந்தப்புரங்களையும், நன்கு செய்விப்பேன்.

8. இந்நகரில், உக்ரஸேனனை முன்னிட்ட நீங்கள், கொடிய சத்ருக்களைத் தொல்லை கொடுத்துக் கொண்டு, தேவர்களைப் போல் மகிழ்ந்திருங்கள்.

9. வீட்டுக்கான தளவாடங்கள், எடுத்து வரப்படட்டும், ராஜ வீதிகளும் மாடி அமைப்புகளும், அளக்கப்படட்டும்.

10. வீடு கட்டுவதில் சிறந்த சில்பி ஸ்ரேஷ்டர்கள் அனுப்பப்படட்டும். இட்ட வேலையை நன்கு செய்யும் பணியாட்கள், அவ்வவ்விடங்களில் நியமிக்கப்படட்டும்.

11. இவ்விதம் சொல்லப்பட்டதும், வீடு கட்டுவதில் கருத்துடையவர்களாய், மகிழ்வுடன் வீட்டுத் தளவாடங்கள் சேர்ப்பதை இடத்திற்கேற்றவாறு செய்தனர்.

12. ஜனமேஜயரே! பிறகு, யாதவ ஸ்ரேஷ்டர்கள் ப்ராமணர்களைப் பூஜித்து, அளவு நூல் கையிலெடுத்து, புண்யநாளில் அளவெடுத்தனர்.

13. வாஸ்து தேவதை கார்யங்களை, முறைப்படி செய்விக்கிறார்கள். பிறகு மஹா புத்திமான் கோவிந்தன், அங்கு ஸ்தபதிகளைப் பார்த்துச் சொன்னான்.

14. "இங்கு, எனக்காக நன்கு திட்டமிடப்பட்டுப் ஏகாந்தமான, நான்கு ப்ராகாரமுடையதும், நன்கு ஸ்தாபிக்கப்பட்ட இஷ்ட தேவதையுடையதுமான வீடு கட்டப்படட்டும்."

15, 16. அந்த ஸ்தபதிகள், 'அப்படியே' என்று மஹாபாஹூ க்ருஷ்ணனிடம் சொல்லி, அப்போது வேண்டிய உபகரணங்களை முறைப்படி யமைத்து, துர்க்கங்களையும், இருப்பிடங்களையும், முறைப்படி நிர்மானம் செய்தனர்.

17. ப்ரஹ்மா முதலியவர்க்கு இடங்களையும் கர்மப்படி அமைத்தனர். அப்பு [ஜல] தேவதை, அக்னி, இந்த்ரன், லிங்க தேவதை [சிவன்] ஆகிய நான்கு தேவதைகளையுடைய நான்கு வாயில்களை அமைத்தனர்.

18. சுத்தாஷ, ஐந்த்ர, பல்லாட, புஷ்பதந்த இந்த நான்கு மூர்த்திகளை ஆவாஹனம் செய்து அந்த வீடுகளில், மஹாத்மாக்களான யாதவர்கள் வந்து சேர்ந்ததும், மாதவன், நகரம் சீக்ரம் அமைக்க ஆலோசித்தான்.

19. யாதவர்களுக்கு ப்ரியம் செய்து வ்ருத்தி யுண்டு பண்ணும் பரிசுத்தமான நகரை சீக்ரம் அமைக்க, எண்ணம், க்ருஷ்ணனுக்கு அத்ருஷ்ட வசத்தால் உண்டாயிற்று.

20. ''தேவர்களின் ஶ்ரேஷ்ட தச்சன், ப்ரஹ்ம புத்ரன், சக்தியுள்ள விச்வகர்மா, தன் புத்தியால், இந்த நகரை நன்கு அமைப்பான்.''

21. க்ருஷ்ணன், விச்வகர்மாவின் வரவு காரணமாக, மனதில் த்யானித்து, தேவதா அபிமுகமாக மேல் நோக்கிப் பார்த்துக் கொண்டு தனித்திருந்தான்.

22. பிறகு அதே ஸமயத்தில் தேவர்களில் சிறந்த மிக்க புத்தியுடைய, சில்ப வல்லவனான, விச்வகர்மா க்ருஷ்ணன் எதிரில் நின்றான்.

23. **விஶ்வகர்மா சொன்னான் :** துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலன வ்ரதத்தை கடைப்பிடிப்பவனே! விஷ்ணுவே! உம்மிடம் இந்த்ரனால் சீக்ரமாக அனுப்பப்பட்டேன். பணியாளாக் வந்துள்ளேன். எனக்கு பணியிடும் உமக்கு என் செய்வேன்?

24. ப்ரபுவே! எனக்கு எப்படி சங்கரனும், ப்ரஹ்மாவுமோ அப்படியே தேவர்களால் கொண்டாடத் தக்க நீரும் உங்களுக்குள் [என் பொருட்டு] பேதமில்லை.

25. பெருமை வாய்ந்த தோள் வலிமையுடையவனே! மூவுலகுக்கும் நியமிக்கும் வார்த்தையைச் சொல்ல வேண்டும், எனக்குப் பணியிடும்.

26. சத்ருக்கள், கேசி, கம்ஸனைக் கொன்றவன், யதுஸ்ரேஷ்டன் கேசவன், வணக்கத்துடன் கூடிய விச்வகர்மாவின் வார்த்தையைக் கேட்டு, ஒப்பற்ற வார்த்தையைச் சொன்னான்.

27. தேவ ஸ்ரேஷ்ட விச்வகர்மாவே! நாம் எங்கேயிருந்தோமோ [பரமபதம்] தேவரஹஸ்யத்தை நீ யறிவாய் எனக்கு இருப்பிடம் [அதுபோன்று] இங்கு செய்யப்பட வேண்டும்.

28 ஆகையால் எனக்காக இந்நகரம் உன் வேலைத் திறனை ப்ரகாசப்படுத்த அமைக்கத் தக்கது. நல்ல வ்ரதமுடையவளே! என் பெருமைக்குத் தக்க வீடுகள் நகர நாற்புறமும் அமைக்கப் படட்டும்.

29. சிறந்த புத்தியுடையவனே! ஸ்வர்க்கத்தில் 'அமராவதி' எப்படியோ அப்படி இந்நகர் உலகிலேயே சிறந்ததாக உன்னால் செய்யத்தக்கது.

30. நீ ஸமர்த்தனல்லவா! ஸ்வர்க்கத்தில் போல் என் இந்த இடம் செய்யத்தக்கது, எனதும், என் யதுகுலத்ததுமான நகரத்தின் சோபையை மனிதர் காணட்டும்! (கண்டு வியக்கட்டும்)

31. இவ்விதம் சொல்லப்பட்ட, புத்தியில் சிறந்த விஸ்வகர்மா தேவ சத்ருக்களையழிக்கும் எளிதில் எதையும் செய்யும் க்ருஷ்ணனை நோக்கிச் சொன்னான்.

32. "ப்ரபுவே உம்மால் நியமிக்கப்பட்ட இந்த எல்லாவற்றையும் செய்வேன். இந்த நகரமோ, இந்தயதுகுலத் தேவைக்கு மேலாகவேயிருக்கும். புருஷோத்தமா கோவிந்தா!

33. மிக விஸ்தாரமானதாக அமையும், இந்நகருக்கு மங்களம் வ்ருத்தியடையட்டும். இந்நகரில் நான்கு ஸமுத்ரங்களும் உருவெடுத்து ஸஞ்சரிக்கும்.

34. ஜலராஜன் ஸமுத்ரம் சிறிது பூமி உத்பத்தி செய்துகொடுப்பானேயாகில், பிறகு நகரம் நல்ல விஸ்தார, லக்ஷணமுடையதாக அமையும்"

35, சொல்வோரில் செம்மலான க்ருஷ்ணன் இப்படிச் சொல்லப்பட்டு, முன்பே தீர்மானம் செய்தவனாகி, பிறகு, நதிகளுக்கு நாயகன் ஸமுத்ரத்தைப் பார்த்துச் சொன்னான்;

"ஸமுத்ரமே! என்னிடத்தில் உனக்குக் கௌரவமிருக்குமேயாகில், ஜலமிருக்குமிடத்தில் பன்னிரண்டு யோஜனை தூரம் உனது ஆத்மாவாகிற ஜலம் சுருக்கிக் கொள்ளப்படட்டும்.

37, உன்னால் கொடுக்கப்பட்ட இடத்தில் இந்த நகர் போதுமான விஸ்தாரமுடையதாகவும், அழகியதாகவும், எனது ஸேனை முழுதுக்கும் இடமளிப்பதாகவுமிருக்கும்.

38 பிறகு நதங்களுக்கும், நதிகளுக்கும் தலைவனான ஸமுத்ரம், மாருதயோகத்தால் (காற்றின் சேர்க்கையால்) அருக்கப்பட்டு ஜலமிடத்தை வெளிவிட்டான்.

39. பிறகு விஸ்வகர்மா, அந்தப் பரப்பைப் பார்த்து ப்ரீதியடைந்தான். அப்போது ஸமுத்ரமும் கோவிந்தனிடத்தில் பெருமையையே செய்தான்

40, பிறகு விஸ்வகர்மா; யது ஸ்ரேஷ்டன் க்ருஷ்ணனிடம் சொன்னான்; "கோவிந்தா! இன்று முதல் எல்லோரும் நகரில் புகுந்து வஸியுங்கள்,

41.42 ப்ரபுவே! என்னால் இந்த ஸ்ரேஷ்டமான நகரம், எனது மனதால் நிர்மாணிக்கப்பட்டது சீக்ரமே, க்ருஹங்களின் நெருங்கிய வரிசையுடையதாயும் சிறந்த வாசல்களுடையதாயும் மிக உயர்ந்த தோரணங்களையுடையதாயும் உப்பரிகைகளாகிற புஜ பூஷணத்தைப்பூண்டதாயுமுள்ள இந்த அழகிய நகரம் பூமிக்குச் சிகரம் போல் விளங்கும்.

43. தேவர்களால் பூஜிக்கப்பட்ட இடமான அந்நகரில், க்ருஷ்ணனுக்குப் பரிசர்யை செய்யும் இடமாகிய பெரிய அந்தப்புரத்தையும் செய்தான்.

44. பிறகு விஸ்வகர்மாவால் அந்த அழகிய விஷ்ணுவின் நகரமாகிய த்வாரவதி, மன யத்னத்தால், நிர்மாணிக்கப்பட்டது. விதிப்படி செய்யப்பட்ட வாயில்களையுடையது.

45. சிறந்த ப்ராகாரங்களாக விளங்குவது அகழ்களால் நான்கு காக்கப்பட்டது மாடி ப்ராகார வரிசையுடையது,

46-55 அழகிய ஆண் பெண் கூட்டங்களையுடையது வ்யாபாரிகளால் விளங்குவது. நானாவித வ்யாபாரிகளால் விளங்குவது. நானாவித வ்யாபாரப் பொருள்களால் நிறைந்தது. ஆகாயத்தில்

இருப்பது போல் தோன்றுகிறது. தெளிந்த தண்ணீர் கொண்ட தண்ணீர்ப் பந்தல்களும் குளங்களும் உடையது உத்யானவனங் களால் விளங்குவது. நாற்புறமும் மறைக்கப்பட்ட உடலும் நீண்ட கண்களுமுடைய பெண் போன்றது. பூர்ணமான நாற்சந்தி களையுடையது. மேகம் போன்று உயர்ந்த வீடுகளையுடையது. வெண்ணிற ராஜ வீதிகளால் சிறந்தது. இந்த்ரபுரி ஸ்வர்க்கத்தைப் போல் ஸமுத்ரத்தை அழகு படுத்துவது உலகில் எல்லா ரத்னங் களின் கூட்டங்களால் விளங்கும் ஒரேயிடம். தேவர்களுக்கும் மங்களமானவிடம். சுற்றி உள்ள அரசர்களைக் கலக்குச் செய்வது ஆகாசம் தெரியாதபடி மறைக்கும் உயர்ந்த மாடிகளுடையது பெரிய ராஜ்யங்களையுடைய பூமியில் இந்நகர் (அதிக) ஜனக் கூட்டங்களின் எதிரொலியுடையது, ஸமுத்ரத்தின் (அலைத்) தொகுதிகளால் குளிர செய்யப்பட்ட காற்றை உபவனங்களாலும் ஏற்பட்ட சோலையால் ஜனங்களது மனதை மகிழ்விப்பது. நக்ஷத்ரங்களுடன் கூடிய வானம் போல் அந்த த்வாரகை விளங்கு கிறது. ஸ்வர்ணமயமான சூர்யநிற ப்ராகாரத்தால் சூழப்பட்டது கம்பீரமான இன்னொலியுடைய பொன்னிற வீடுகள் நிறைந்தது வெண்ணிற மேகக் காந்தியுடையது வாசல்களாலும் மாடி களாலும், சோபிக்கிறது சிற்சில விடங்களில் மிக உயர்ந்த மாடி களின் உச்சிகளால் (நிழலால்) எப்போதும் மறைக்கப்பட்ட பெரியசாலைகளையுடையது தன்னிஷ்ட ஜனங்களால் நிறைந்த இத்தகைய நகரில் க்ருஷ்ணன் வானத்தை விளங்கச் செய்யும் சந்த்ரன் போல் வஸித்தான் எல்லா யாதவர்களும் வஸித்தனர்.

56. விஸ்வகர்மாவும், இந்த்ர நகர் போன்ற அந்த நகரை நிர்மாணித்து கோவிந்தனால் பஹுமானிக்கப்பட்டு ஸ்வர்க்கம் சென்றான்.

57. தன் ஸ்வருமறிந்த க்ருஷ்ணனுக்கு மறுபடியும் எண்ணம் உண்டாயிற்று; இந்த ஜனங்களைச் செல்வக் குவியல்களால் நான் த்ருப்தி படுத்துவேன். ப்ரபு அந்த க்ருஷ்ணன் குபேரனை சேர்ந்த நிதிகளில் உத்தமான சங்கநிதியை இரவில் தன் மாளிகையில் வர வழைத்தான். நிதி ராஜனான அந்த சங்க நிதி கேசவன் அழைப்பை யறிந்து அந்த த்வாரகா நாயகனின் ஸமீபத்தை தானே அடைந்தான்.

60. அந்த சங்கநிதி, பூமியை அடைந்து வணக்கத்துடன் அஞ்சலி எஜமானன் குபேரனிடம் போல் க்ருஷ்ணனிடம் விண்ணப்பித்துக் கொண்டனர்.

61. பகவானே யது ஸ்ரேஷ்டனே தேவர்கள் செல்வத்தைக் காக்கும் என்னுல் செய்யத்தக்க கார்யத்தை நியமிக்க வேண்டும்.

62 ஹ்ருஷீகேசன், க்ருஷ்ணன், மேலான சங்க நிதியிடம் சொன்னுன் : 'இந்த நகரில் செல்வம் குறைந்தவர்களை தனத்தால் பறைந்தவராகச் செய்ய வேண்டும்.

63. இந்நகரில் சாப்பாடில்லாதவன், அழுக்கடைந்தவன், 'கொடு' என்று யாசிப்பவன், தனமில்லா ஏழை இத்தகைய மனிதனை [நான்] பார்க்க விரும்பவில்லை.

64. **வைசம்பயனர் சொன்னுர்** : கேசவனின் ஆஜ்ஞையை சிரமேல்வஹித்து நிதி ராஜன் சங்கன், மற்ற நிதிகளை ஆஜ்ஞாபித் தான்; "த்வாரவதி நகரில் வீட்டிற்கு வீடு செல்வக் குவியல்களை நாற்புறமும் பொழியுங்கள்." எல்லா நிதிகளும் அப்படியே செய்தன.

65, 66. மஹாத்மா கேசவனது த்வாரவதி நகரில், ஏழை, குறைந்த பாக்யமுடையவன், மெலிந்தவன், அழுக்கன் இதுவரை எங்கு தேடினும் இல்லை.

67. யாதவர்களுக்கு ப்ரியத்தை செய்யும் பகவான் புருஷோத்தமன், மறுபடியும் அங்கிருந்தே வாயு தேவனை அழைத் தான்.

68. தனிமையில் ஒருவனுயிருக்கும் தேவரஹஸ்யங்களைத் தன்னிடம் கொண்டிருக்கும் ப்ரபு க்ருஷ்ணனை, ஜீவன்களுக்கு ப்ராண ஹேதுவான [வாயு] அணுகினுன்.

69. "பாபமற்றவனே! சீக்ரம் எங்கும் செல்லும், என்னுல் என்ன செய்யக் கடவது?"

70. ஹரி புருஷோத்தமன், க்ருஷ்ணன், பிறகு உருவெடுத்து வந்திருக்கும், உலகுக்குயிரான அந்த வாயுவை நோக்கி ரஹஸ்ய மாகச் சொன்னுன்.

71. "வாயு தேவனே! போ. தேவர்களுடன் இந்த்ரனை அனுமதி கொண்டு தேவ ஸபையாகிய, 'ஸுதர்மையை' தேவர் களிடமிருந்து, வாங்கி இங்கு கொண்டு வா.

72. இந்த யாதவர் தர்மத்தில் நிலை நிற்பவர். வீரமுடைய வரும், ஆயிரக் கணக்கில் இருக்கின்றனர். இவர்கள் அதில் [தேவ ஸபையில்] உட்காரட்டும்: செயற்கையான ஸபையில் அன்று;

73. 'ஸுதர்மை' ஸபை குறைவற்றது அழகியது, இஷ்டப் படி செல்வது அழகிய ரூபம் உடையது. அந்த ஸபை தேவர்களால் போல், எல்லா யாதவர்களையும் தாங்கும் ''

74. எளிதில் எதையும் செய்யும் அந்தக் க்ருஷ்ணனது வார்த்தையை நன்கு ஏற்று, தன்னைத் தானே யொத்த போக்குடைய வாயு தேவன், ஸ்வர்க்கத்துக்கு விரைந்தான்.

75, அந்த வாயு தேவன் எல்லா தேவர்களின் அனுமதி கொண்டு, க்ருஷ்ணனின் வார்த்தையைந் தெரிவித்து 'ஸுதர்ம ஸபையை யெடுத்துக் கொண்டு திரும்ப பூமியையடைந்தான்.

76. வாயுதேவன் எதையும் எளிதில் செய்யும் தர்ம ஸ்வரூபியான க்ருஷ்ணனுக்கு 'ஸுதர்மை' யாகிய தேவ ஸபையைக் கொடுத்து, மறைந்தான்.

77. ஸ்வர்க்கத்தில் தேவர்களுக்குப் போல், த்வாரவதி நகரின் நடுவில் யாதவப் பெரியோருக்கு ஸுதாமை ஸபை கேசவனால் அமைக்கப்பட்டது.

78. இவ்விதம் குறைவற்ற ஹரி தேவலோக செல்வங்களாலும் ஸமுத்ர செல்வங்களாலும், தந்நகரை பெண்ணைப் போல் அலங்கரித்தான்.

79. எல்லாத் திட்டங்களையும், வரம்பிட்டமைத்தான், வ்யாபாரிகள், ஜனங்கள், ஸேனுதிபதிகள், ப்ரஜா தலைவர்கள் எல்லாவற்றிற்கும் திட்டமிட்டான்.

80. உக்ரஸேனனை அரசனாகவும், காசியில் பிறந்த சாந்தீப மூனியை, புரோஹிதராகவும், அனுத்ருஷ்டி என்பானை ஸேனாபதியாகவும் விகத்ருவை முதல் மந்த்ரியாகவும் ஏற்படுத்தினான்.

81, அங்கு புத்திமான் க்ருஷ்ணன் யாதவ குலத்திற்கு மூல புருஷனான பத்துப் பெரியோர்களை, எல்லாக் கார்யங்களுக்கும் ஆலோசகர்களாக அமைத்தான்.

82. தேர் பாகரில் தேர்ந்தவனான தாருகன், க்ருஷ்ணனுக்குத் தேர்பாகன், வீரர்களில் சிறந்த ஸாத்யகி போர்த் தலைவனாக நியமிக்கப்பட்டான்.

83. பிறகு லோக ஸ்ருஷ்டி கர்த்தாவான குறைவற்ற கீர்த்தி வாய்ந்த க்ருஷ்ணன், இவ்விதம் ஏற்பாடுகள் செய்து, பூமியில் யாதவர்களுடன் இருந்து மகிழ்ந்தான்.

84. பிறகு க்ருஷ்ணனது அனுமதியுடன் ஒழுக்கம் நிறைந்த ரேவத ராஜன் குமாரி ரேவதியை பலதேவன் விவாகம் செய்து கொண்டான்.

58 அத்தியாயம் முற்றும்

59-ம் அத்யாயம்

## ஸ்ரீக்ருஷ்ணன் ஸ்ரீருக்மிணியை அபஹரித்தல் யாதவர்கள் ஜராஸந்தன் சிசுபாலனுடன் கடும்போர்

**வைசம்பாயனார் சொன்னர் :** இதே சமயத்தில் கீர்த்தி பெற்ற ஜராஸந்தன் சேதி ராஜன் சிசுபாலனுக்கு ப்ரியம் செய்யும் ஆசையால் அரசர்களை ஒரிடத்தில் சேர்த்தான்.

2. பிறகு, பீஷ்மக புத்ரியான ருக்மிணிக்கும் சிசுபால அரசனது ஸ்வர்ணத்தால் எல்லாமான விவாகம் வரப்போகிறதல்லவா?

3—8 தந்தவக்த்ரன் மகன் அளவற்ற சோபையுடையவனும், இந்த்ரனுக் கொப்பானவனும் போரில் நூற்றுக்கணக்கான மாயம் செய்யவல்லவனுமான 'ஸௌவக்த்ரன்' தனிப்பட்ட ஒரு அக்ஷௌஹிணி கணக்குள்ள ஸேனைத் தலைவன் மஹாபலம் வாய்ந்த வீர்யவான் பௌண்ட்ர வாஸுதேவன் மகன், மஹாவீர்யவானும், பலவானுமான ஏகலவ்யன் மகன், பாண்டியன் மகன் கலிங்கத்தரசன் க்ருஷ்ணனிடம் அப்ரியம் செய்து கொண்ட வேணுதாரி, அம்ஸுமான், க்ரதன் மகன் ஸ்ருதத்தர்மா, சதருவில்லாத கலிங்கன் மகன் காலிங்கன் காந்தாராதிபம் மஹா வீர்யன் ஸௌசாம்பி அதிபதி பெரிய ஸேனையுடைய பூதத்தன், சலன் மஹாபலன் சால்வன், பெரிய ஸேனையுடைய பூரிஸ்ரவஸ் வீர்யமுடைய குந்த வீர்யன் இந்த அரசர் எல்லோரும் ஸ்வயம் வரத்திற்காக போஜராஜன் (குண்டின) நகருக்கு வந்து சேர்ந்தனர்.

9. ஜனமேஜயர் சொன்னர் ''ரிஷி ஸ்ரேஷ்டரே வைசம்பாயனரே வேதவித்துக்களில் சிறந்தகாந்தியுடைய அரசன் ருக்மி, எந்த தேசத்தில் பிறந்தான்? எந்த வம்சத்தில் தோன்றினன்?

10 'யாதவன்' எனும் ராஜரிஷிக்கு 'விதர்ப்பன்' எனும் மகன் பிறந்தான் விந்திய மலையின் தென் பாகத்தில் விதர்ப்ப நகரில் வஸித்தான்,

11. அந்த விதர்ப்பனுக்கு 'க்ரதன்' கைசிகன் முதலிய மிக்க பலம் வாய்ந்த வீர்ய ஸம்பத்துடைய தனித்தனி வம்சங்கள் உண்டாக்கக் கூடும் அரசர் இருந்தனர்.

12 அந்த வம்சத்தில் தோன்றிய பீஷ்மகனுக்கு வ்ருஷ்ணி அரசர் தோன்றினர். க்ரதனின் வம்சத்தில் 'அம்சுமான்' தோன்றினன் கைசிகன் வம்சத்தில் பீஷ்மகன் தோன்றினன்.

13, தென் தேசத்தரசனான அவனை அரசர் 'ஹிரண்ய ரோமா என்றும் சொல்வர் அந்தஅரசன் குண்டினபுரத்திலிருந்துகொண்டு அகஸ்த்யரால் காக்கப்பட்ட தென் திசையை ஆண்டான்.

14. ஜனமேஜயரே அவனுக்கு மகன் ருக்மி, மகள் ருக்மினி மஹாபலவான் ருக்மியும், த்ருமனிடமிருந்து, திவ்ய அஸ்த்ரங்களை யடைந்தான்.

15. அப்படியே, ஜமதக்னி மகன், பரசு ராமரிடமிருந்து ப்ரஹ்மாஸ்த்ரத்தைக் கொண்டான்.

16. ஜனமேஜயரே! ருக்மினியும் ரூபத்தால் பூமியில் ஒப்பற்ற வளாயிருந்தாள். மஹாதேஜஸ்வியான வாஸுதேவன் க்ருஷ்ணன் கேள்வி மாத்ரத்திலேயே அவளை விரும்பினன்.

17 அந்த ஜனார்த்தனன் க்ருஷ்ணன், தேஜஸ், வீர்யம், பலம் இவை கூடியவன். ''அத்தகையவன் எனது நாயகன் ஆவான்'' என்று கேள்வி மாத்திரத்திலேயே அவளால் (ருக்மினியால்) விரும்பப்பட்டாள்.

18. மஹாபலன் ருக்மி, யாசிக்கிற அளவற்ற தேஜஸ்ஸுடைய க்ருஷ்ணனுக்கு, கம்ஸனைக் கொன்ற வருத்தத்தால் த்வேஷம் காரணமாக 'இவன் கம்ஸனுக்கு விரோதி என நினைத்து, க்ருஷ்ணனுக்கு அவளைக் கொடுக்க விரும்பவில்லை.

19. அரசன் ஜராஸந்தனும் ஸுநீதன் மகன் சிசுபாலனுக்காக அவளை (ருக்மிணியை) பயங்கர வீரங் கொண்ட பீஷ்மக அரசனிடம் வரித்தான்.

20. சேதி ராஜன் வஸுவுக்கு ப்ரஹ்த்ரதன் எனும் மகன் இருந்தான். முன்னர் அவனால் மகத தேசத்தில் க்ரிவர்ஜம்' எனும் இந்த நகரம் நிர்மிக்கப்பட்டது.

21. அவனது வம்சத்தில், மஹாபலம் பொருந்திய ஜராஸந்தன் பிறந்தான். வஸுவின் வம்சத்திலேயே அப்போது, சேதி ராஜன்தமகோஷனும் உண்டானான்.

22. நீதனான தமகோஷனுக்கு வஸுதேவன் ஸஹோதர ஸ்ருதஸ்ரவனிடத்தில் ஐந்து பிள்ளைகள் பிறந்தனர்.

23. சிசுபாலன், தசக்ரீவன்' ரைப்யன், உபதிசன், பலி எனும் ஐந்து பிள்ளைகள். எல்லா அஸ்த்ரங்களிலும் ஸமர்த்தர், வீரர் மேன்மை பொருந்தியவர். மஹாபலம் வாய்ந்தவர்.

24. ஸமான வம்ச பங்காளியாகிற ஜராஸந்தனுக்கு, சிசுபாலன் எனும் பிள்ளையைக் கொடுத்தான். ஜ்ராஸந்தனும் இந்த சிசு பாலனைத் (தன்) பிள்ளை போல் பார்த்தான். காக்கவும் செய்தான்.

25. வ்ருஷ்ணிகளுக்கு அப்ரியத்தை விரும்புகிற சிசுபாலனோடு வ்ருஷ்ணி சத்ரு மஹாபலமுடைய ஜராஸந்தனை முன்னிட்டு அபராதங்கள் செய்யப்பட்டன.

26, அந்த ஜராஸந்தனுக்கு கம்ஸன் மாப்பிள்ளையானான். **யுத்தத்தில்?** அவன் கொல்லப்பட்டதும், க்ருஷ்ணனின் பொருட்டு வ்ருஷ்ணிகளிடம் விரோதம் ஏற்பட்டது

27. ஸுநந்தன் மகன் சிசுபாலனுக்காக, பீஷ்மகனிடம், ருக்மிணியை வரித்தான். வீர்யவான் பீஷ்மகனும், அந்த ருக்மிணியை சிசுபாலனுக்கு (மனதால்) கொடுத்தான்.

28. பிறகு ஜராஸந்தன் சிசுபாலனை அழைத்துக் கொண்டு தந்தவக்த்ரனுடன் கூடி விதர்ப்ப தேசம் சென்றான்.

29. அங்க, வாரக கலிங்க தேசங்களுக்கு ராஜாதிராஜன், மஹாபலன் ஜராஸந்தன், புத்திமான் பௌண்ட்ர வாஸுதேவனாலும் அனுமதிக்கப்பட்டான்.

30. ருக்மி அரசர்களை எதிர் கொண்டு வரவேற்று கௌரவிக்க வேண்டி, அவர்களை மிகவும் பூஜித்து, நகரை நோக்கி அழைத்துச் சென்றான்.

31. ராமக்ருஷ்ணர் இருவரும் கூட அத்தையின் ப்ரியத்திற் காகச் சென்றனர். அங்கு ஸேனையுடன் கூடிய மற்ற வ்ருஷ்ணி களும் தேரிலேறிச் சென்றனர்.

32. க்ரத கைசிக தேசத்தை ஆளும் பீஷ்மகனும், பூஜிக்கத் தக்க அந்த அரசர்களை, முறைப்படி வரவேற்று கௌரவித்தான். வெளியில் தங்கியிருக்கவும் செய்தான்.

33, 34. நாளை நடக்கப் போகும் விவாகத்திற்காக சுபமான இந்த்ரன் கோவிலில் இந்த்ராணி தேவியை பூஜிப்பதற்கு மங்கள ஸ்நாநம் செய்து, சோபையுடைய ரூபத்துடன், பெரிய சேனையால் சூழப்பட்டு நாலு குதிரை பூட்டிய ரதத்திலேறி ருக்மிணி வெளியே சென்றாள்.

35, 36. க்ருஷ்ணன், சிறந்த ரூபத்துடன், ஸாக்ஷாத் லக்ஷ்மீ தேவியைப் போலவேயிருக்கும் அந்த ருக்மணியை அப்போது கோவிலருகில் பார்த்தான்.

37. அக்னி ஜ்வாலைக் கொழுந்து போன்றவள், பூமியை படைந்த தேவ மாயை போன்றவள், பூதலத்திலிருந்து மேல் கிளம்பிய, கம்பீரமான பூதேவி போன்றவள். தாமரையை நீங்கி வந்த லக்ஷ்மீ தேவி போன்றவள். வரப்போகும் [த்வாரக] செல்வத் துத் தோழி போன்றவள்; தேவர்களாலும் காணமுடியாதவள். இத்தகைய ருக்மிணி க்ருஷ்ணன் மனதால் பார்க்கப்பட்டாள்.

38. ருக்மிணியாகிற அவள் "உத்தம லக்ஷணம் வாய்ந்த கார்மேனியள்; வெகு அழகியவள்; பெரிய அழகிய நீண்ட கண் களுடையவள்; சிவந்த உதடும் கடைக்கண்களும் கொண்டவள்;

39. உருண்டு திரண்ட ப்ரஷ்ட பாகத்தையும், ஸ்தனங்களை யும் உடையவள்; ஒப்பற்ற பெருமை வாய்ந்தவள், மெல்லியலாள். சந்த்திரன் போன்ற காந்தி வீசும் முகத்தினள்;

40. சிவந்து உயர்ந்த நகத்தினள்; அழகிய புருவத்தினள்; திரண்டு சுருண்ட குழலினள்; ரூபத்தால் மிகவும் விரும்பத்தக்க வள்; பருத்த ப்ரஷ்ட பாகத்தையும், ஸ்தனங்களையும் உடையவள்;

41. கூரிய வெண்மையான, ஸமமான ஒளி வீசும் பற்களால் அலங்கரிக்கப்பட்டவள்; ரூபத்தாலும், கீர்த்தியாலும், சோபை

ழ்ரீனுக்கு ஒப்பற்ற பெண்; ருக்மிணி [மானிட] உருவெடுத்த லக்ஷ்மீ தேவி; மேனிப்பட்டாடையாள்.

42. நெய்யினால் ஹோமாக்னியின் ஜ்வாலைபோல் ப்ரியமான தோற்றமுடைய அவளைப் பார்த்து க்ருஷ்ணனுக்கு இச்சை மிகுந்தது அவ்விடம் மனதை நிலைநிறுத்தினான்.

43. மஹா பலவான் கேசவன், பலராமனுடன் நிச்சயித்து வ்ருஷ்ணிகளுடனும் கலந்து, அவளைத் தூக்கிச் செல்வதில் புத்தியைச் செலுத்தினான்.

44. தேவதா பூஜை முடிந்ததும், தேவாலயத்திலிருந்து வெளி வரும் ருக்மிணியைத் திடீரென்று க்ருஷ்ணன் தூக்கி தன் சிறந்த தேரில் ஏற்றினான்.

45. பலராமனும் மரத்தைப் பிடுங்கி பின்தொடர்ந்து வரும் சத்ருக்களைக் கொன்றான் அவனால் கட்டளையிடப்பட்ட யாதவ வீரர்களும் நாற்புறமும் போருக்குத் தயாரானார்கள்.

46. அந்த யாதவ வீரர்களும் நன்கு உயர்த்தப்பட்ட த்வஜக் கொடியுடைய, பலவித வடிவுடைய ரதங்களுடனும் குதிரை யானைகளுடனும், பலராமனைச் சூழ்ந்து கொண்டனர்.

47. வீர்யவான் க்ருஷ்ணன் ருக்மிணியை எடுத்துக் கொண்டு பலராமனிடத்திலும் யுதானனிடத்திலும் அந்த யுத்தபாரத்தை வைத்துவிட்டு. சீக்ரமாக த்வாரகா புரியை நோக்கிச் சென்றான்.

48—51 அக்ரூர், விப்ருது, சுதன் க்ருதவர்மா சக்ரதேவன்' ஸுதேவன், மஹாபலன் ஸாரணன், நிவ்ருத சத்ரு, பராக்ரம பங்க காரன், யதூரதன் உக்ரஸேனகுமாரன் கங்கன்; சதத்யுமனன், ராஜாதிதேவன ப்ருதுரன், ப்ரஸேனன், சித்ரகன், அதிதாந்தன், ப்ரஹத்துர்கன்; ஸ்வபல்சன் ஸத்யகன், ப்ருது இவர்கள் முதலிய வ்ருஷ்ணி அந்தக முக்யர்களிடத்தில் மதுஸூதனன், க்ருஷ்ணன், அந்தப்பெரிய பாரத்தை வைத்து த்வாரவதி நகரைக் குறித்துச் சென்றான்

52. தந்தவக்த்ரன் ஜராஸந்தன், வீர்யவான் சிசுபாலன் (இம் மூவரும்) கோபங்கொண்டு ஜனார்த்தனன் க்ருஷ்ணனைக் கொல்ல விரும்பி தயாராக வெளிக்கிளம்பினர்.

53. சேதிராஜன் ஸஹோதரர்களுடனும், அங்கவங்க கலிங்க மஹாரதர்களான பௌண்டார்களுடனும் வெளிக்கிளம்பினன்.

54. வ்ருஷ்ணி வீர மஹாரதர்கள் பரபரப்புடையவராய் ம்ருத்துக்கள், இந்த்ரனைப் போல் பலராமனை முன்னிட்டு அவர்களை எதிர்த்துப் போராடினர்.

55. ஸாத்விகி, பெரும் போரில் வேகமாக வரும் மஹாபலன் ஜராஸந்தனை, ஆறு அம்புகளால் அடித்தான்.

56—59 அக்ரூரனையும் காருஷன் [எனும் சத்ரு] வேகமாய்ச் செல்லும் பத்து பாணங்களால் திருப்பியடித்தான். விப்ருதுவும், சிசுபாலனை ஏழு அம்புகளால் அடித்தான். சிசுபாலனும் அவனை எட்டு அம்புகளால் திரும்பியடித்தான். சைத்யன் சிசுபாலனை, க்ருஷ்ணன் ஆறு அம்புகளால் அடித்தான். அப்படியே அதிதாந்தன் எட்டு அம்புகளாலும், ப்ரஹத்துர்கன் ஐந்து அம்புகளாலும் அடித்தனர். ஸாமர்த்யவான், சிசுபாலனும் அவர்களை ஐந்தைந்து அம்புகளால் திருப்பியடித்தான். நாலு பாணங்களால், விப்ருது வின் குதிரைகளைக் கொன்முன்.

60. ப்ரஹத்துர்கனுடைய சிரன்ஸ் சத்ருவைக் கொல்லும் சிசுபாலன்'பல்ல'மெனும் பாணத்தால் அறுத்தான். கவேஷணனது தேர்பாகனை யமலோகத்துக்கனுப்பினன்.

61. மஹாபலன் வீர்ய விப்ருதுவும் குதிரை கொல்லப்பட்ட தனது தேரை விட்டு ப்ரஹத்துர்க்கனுடைய ரதத்தைச் சீக்ரமாக ஏறினன்.

62. விப்ருதுவின் தேரோட்டியும் கவேஷணன் தேரிலேறி, வேகக் குதிரைகளைச் செலுத்த ஆரம்பித்தான்.

63, 64 அவர்கள் (யாதவர்கள்) கோபங்கொண்டு விற்கையுடனும் அப்பருத்துணியுடனும் தேர் வழியில் துள்ளிக் குதிக்கும் சிசுபாலன் மேல் அம்பு மழை பொழிந்தனர். சக்ரதேவன் தந்தவக்த்ரனை அம்பால் மார்பில் அடித்தான், ஐந்து பாணங்களால் க்ஷேத்ரதனையும் போரில் அடித்தான்.

65. அவர்களால் மர்மஸ்தானங்களைப் பிளந்து செல்லும் கூர்மையான பத்து பாணங்களால் (திரும்பி) அடிக்கப்பட்டான். பிறகு பலி என்பான் பத்து அம்புகளால் சக்ரதேவனையடித்தான்.

66. அவனும் விதூரதனைத் தூரத்திலிருந்தே ஐந்து பாணங்களால் அடித்தான். விதூரதனும் போரில் அவனை ஆறு கூரிய பாணங்களால் திருப்பியடித்தான்.

67. பலி என்பவன் மஹா பலன் விதூரதனை முப்பது பாணங்களால் அடித்தான். க்ருத்வர்மா போரில் பௌண்டரக வாஸுதேவனை ராஜாவின் மகனை மூன்று சரங்களால் அடித்தான் அவன் இவனது உயர்த்தப்பட்ட த்வஜத்தையும் தேர்ப்பாகனையும் அடித்தான்.

68 69 பௌண்ட்ர வாஸுதேவன் கோபங்கொண்டு ஆறு பாணங்களால் திருப்பியடித்தான். இந்த க்ருத வர்மாவின் வில்லை பல்லவமெனும் பாணத்தால் துண்டித்தான் நிவ்ருத்தசத்ரு தானியங்களை கூரிய அம்புகளால் அடித்தான். கலிங்க அரசன் அவனைச் சலாக்கால் தோளில் குத்தினான்.

70, 71 வீர்யகங்கனும் அருகில் வந்து அங்கனுடைய யானையை சலாக்கால் தாக்கினான் அங்கனும் அவனை அம்புகளால் அடித்தான் சித்ரகன் ஸ்பல்கன் மஹாரதன் ஸத்யகன் இவர்கள் லிங்கராஜன் ஸேனையை, நூறு அம்புகளால் தாக்கினர்.

72—74 வங்க ராஜனையும், வங்க ராஜன் யானையையும் போரில் வீசி எறியப்பட்ட மரத்தால் கோபங்கொண்ட பலராமன் கொன்றான். வீர்ய ஸங்கர்ஷணன் அவனை (வங்கராஜனை) கொன்று தேரிலேறி வில்லையெடுத்து கொடிய அம்புகளால் பல கைசிகர்களைக் கொன்றான். மிக்க கோபங்கொண்ட வீர்ய பலராமன்பெரிய திவில்லாளிகளான காருஷர்களை ஆறு அம்புகளால் பெரியஸேனை கொண்ட போர்க்களத்தில் நூறு போர்களைக் கொன்றான்.

75. அவர்களைக் கொன்ற பிறகு, மிக்க தோள் வலிமை கொண்ட பலராமன் ஜராஸந்தனை நோக்கிச் சென்றான். ஜராஸந்தன் தன்னை நோக்கி வரும் பலராமனை, மூன்று பாணங்களால் அடித்தான்.

76. உலக்கை ஆயுதங் கொண்டு கோபமடைந்த பலராமன் எட்டு பாணங்களால் அவனை அடித்தான். பல்லமெனும் பாணத்தால் அந்த ஜராஸந்தனது தங்க த்வஜத்தை அறுத்தான்.

77. அந்த இரு ஸேனைகளுக்கும் அம்பு மழை பொழிந்து ஒருவொருக்கொருவர், அடித்துக் கீழ்ப்படுத்தும் அவர்களுக்குத் தேவாஸுர யுத்தம் போன்ற அந்தக் கொடிய போர் நடந்தது

78. யானைகளால் யானைகளும், ரதங்களால், ரதங்களும் குதிரைப் பாகர்களால் குதிரைப் பாகர்களும் ஆயிரக் கணக்கில், கோபங்கொண்டு, அடிபட்டு விழுந்தனர்.

79. சக்தி ஆயுதம், தோல் கேடயம், வாள், கையிலேந்திய அந்த காலாட் படைகளை, தனித்தனி தலைகளை அறுத்துக் கொண்டு போர்களத்தில் [போர் புரிந்து] திரிந்தனர்.

80. கவசங்கள் மேல் தள்ளப்படுகிற சக்திகளுடையவும், அம்புகளுடையவும், மஹா சப்தம் பாய்ந்து பறக்கும் பக்ஷிகளின் சப்தம் போல் கேட்கப்பட்டது. போரில், பேரி, சங்க, ம்ருதங்கம் இவைகளிதும், புல்லாங்குழலதுமான த்வனியை, மஹாத்மாக்களான போர் வீரர்களின் ஆயுத சப்தமும், நாணொலியும், மறைத்தது.

## 59 அத்தியாயம் முற்றும்

## 60 அத்தியாயம்

# க்ருஷ்ண ருக்மிணீ விவாஹம், ருக்மியின் தோல்வி ருக்மிணியின் ஸந்தானம் பற்றி சுருக்க அறிமுகம்

1. வைசம்பயனர் சொன்னார் : ருக்மி, க்ருஷ்ணனால் அபஹரித்துப் போகப் படுவதாகக் கேட்டு; பீஷ்மகன் முன்னிலையில் [ருக்மி] கோபங் கொண்டு சபதம் செய்தான்.

2. ருக்மி சொன்னான், ''கோவிந்தனைப் போரில் கொல்லாமல ருக்மிணியை மீட்காமலும், குண்டன புரத்தில் ப்ரகவசிக்க மாட்டேன்.' நான் இதை ஸத்யமாக சொல்கிறேன்.''

3—5 அந்த வீரன் ருக்மி கோபங்கொண்டு பெரிய ஸேனையால் சூழப்பட்டு ரதத்திலேறி வேகமாகச் சென்றான். அந்த ருக்மியை தென்தேச வாசிகளும், க்ராதகன், அம்சுமான், ச்ருதர்வா வீர்ய வேணுதாரி பீஷ்மகனின் மற்ற பிள்ளைகள் க்ரத கைசிக முக்யஸ்தர்கள் தேவவல்லவா மஹாத்தர்கள் எல்லோரும் அவனைப் யின் தொடர்ந்தனர்.

6. அவர்கள் வெகு தூர வழி சென்று ப்ரியையான ருக்மிணியுடன் கூடவேயிருக்கும் கோவிந்தனைக் கோபத்துடன் பார்த்தனர்

7—9. ருக்மி திமிர் பலங்கொண்டு ஒருவருக்கொருவர் த்வந்த யுத்தம் செய்ய விரும்பி அந்தச் சேனையை நிறுத்தி மதுஸூதனனை நோக்கிச் சென்றான் ருக்மி கோவிந்தனை அறுபத்து நான்கு கூரிய அம்புகளால் அடித்தான் ருக்மியை க்ருஷ்ணன் போரில் எழுபது பாணங்களால் திருப்பியடித்தான். மஹாபலமுள்ள வீர்ய க்ருஷ்ணன் (வெற்றிக்கு) முயலும் இந்த ருக்மியின் த்வஜக் கொடியை அறுத்தான் அவனது தேர்பாகனின் தலையையும் உடலிலிருந்து பிரித்துத் தள்ளினான்,

10. ஆபத்திலிருக்கும் ருக்மியை யறிந்த தென்னாட்டரசர் எல்லோருமே ஜனார்தனனைக் கொல்ல விரும்பி சூழ்ந்து கொண்டனர்

11. அந்தக் க்ருஷ்ணனை மஹாபாஹு அம்ஸுமான் பத்து அம்புகளால் அடித்தான்; ச்ருதர்வா ஐந்து அம்புகளால் கோபங் கொண்டு வேணுதாரி எழு அம்புகள்.

12. பிறகு வீர்ய கோவிந்தன் அம்ஸுமானை மார்பிலடித் தான் அடிபட்ட அந்த அம்ஸுமான் தேர்த்தட்டில் உட்கார்ந் தான்.

13. ச்ருதர்வாவின் நான்கு குதிரைகளையும் நான்கு அம்பு களால் கொன்றான் வேணுதாரியின் த்வஜத்தை யறுத்து வலது கையில் அடித்தான்.

14, 15. அப்படியே த்வஜத்துடன் ஶ்ருதர்வா ஐந்து அம்பு களால் அடிபட்டு வருந்தி உட்கார்ந்தான் பிறகு க்ரத கைசிக தேச முக்யஸ்தர, மஹாரதர், எல்லோரும், அம்பு மழை பொழிந்து கொண்டே க்ருஷ்ணனை எதிர்த்துச் சென்றனர்.

16. போரில் அவர்கள் பாணங்களைத் தன் பாணங்களால் ஜனார்த்தனன் முறித்தான் விழுகிற அவர்களது பாணங்களைக் கோபங் கொண்டு அழித்தான்

17. மலை போன்ற பலமுடைய க்ருஷ்ணன், மறுபடியும் அறுபத்து நான்கு அம்புகளால் கோபங்கொண்டு எதிர்த்து வருகிற மற்றவீரர்களையும் கொன்றான்.

18. (பின் வாங்கி) ஓடுகிற தன் ஸேனையைப் பார்த்து, கோப வசத்தனாகிய ருக்மி, ஐந்து கூரிய பாணங்களால், கேசவனின் மார்பில் அடித்தான்,

19. அவனது தேர்பாகனையும் மூன்று கூரிய அம்புகளால் அடித்தான். (சலாக்கு போன்று) வளைந்த முனையுடைய அம்பால் அவனது கொடியையும் அடித்தான்.

20. கேசவன் பாய்ந்து கோபங் கொண்டு அம்புகளால் வேகமாக ருக்மியை யடித்தான். வெற்றிபெற முயலும் இந்த ருக்மியின் வில்லையும் முறித்தான்.

21. பிறகு ருக்மி வேறு வில்லை யெடுத்து க்ருஷ்ணனைக் கொல்ல விரும்பி, வீர்யங்கொண்டு, வேறு திவ்ய அஸ்தரங்களையும் ப்ரயோகித்தான்.

22. மஹா பலன் க்ருஷ்ணன், அவனது பாணங்களைத் தன் பாணங்களால் தடுத்து, மூன்று அம்புகளால் அந்த (இரண்டாவது) வில்லையும் முறித்தான்

23. வில்லொடிந்து தேரிழந்த ருக்மி கத்தி கேடயம் எடுத்து வீரன் கருடன் போல், தேரிலிருந்து துள்ளிக் குதித்தான்.

24. தன்னை நோக்கி ஓடிவரும் ருக்மியின் கத்தியைக் கேசவன் போரில் முறித்தான்: கோபங் கொண்டு மூன்று அம்புகளால் இவனை மார்பிலும் அடித்தான்.

25. அந்த மஹாபாஹு ருக்மி ராஜா, மயங்கி, மூர்ச்சை அடைந்து, வஜ்ராயுதத்தால் அடிபட்ட பெரிய அஸுரன் போல். பூமியை அதிரச் செய்து சப்தத்துடன் கீழே விழுந்தான்.

26 மறுபடியும் அந்த எல்லா அரசர்களையும் அம்புகளால் அடித்தான் அந்த அரசர்கள் கீழே விழுந்த ருக்மியைப் பார்த்து, (திருப்ப்) வேகமாக ஓட்டப் பிடித்தனர்.

27. ருக்மிணி தேவி கீழே பூமியில் விழுந்து துடிக்கும் ஸஹோதரனைப் பார்த்து, தன் உயிருடனிருத்தலை விரும்பி, வ்ஷ்ணு, க்ருஷ்ணனின் திருவடிகளில் விழுந்து வணங்கினாள்.

28. கேசவன் அவனைத்தூக்கி நன்கு ஆலிங்கனம் செய்து, ஸமாதானப் படுத்தினான். ருக்மிக்கு அபயம் கொடுத்து, தன் நகரை (த்வாரவதியை) அடைந்தான்.

29 வ்ருஷ்ணிகளும் ஜராஸந்தனையும் அந்த அரசர்களையும் ஓடச்செய்து மகிழ்ச்சியுடன், பலராமனை முன்னிட்டு த்வாரகையை யடைந்தனர்.

30. தாமரைக் கண்ணன் க்ருஷ்ணன் சென்றதும் போர்க் களத்தில் ஶ்ருத்ரவா வந்து ருக்மியைத் தேரிலேற்றிக்கொண்டு தன் நகரை நோக்கி சென்ருன்.

31. அபிமான மதங்கொண்ட அந்த ருக்மியும், ஸஹோதரியை யழைத்து வராமல் சபதம் நிறைவேருது குண்டினபுரம் நுழைய விரும்பவில்லை.

32. வஸிப்பதற்காக விதர்ப்ப தேசத்தில் வேறு பெரிய நகரை நிர்மாணித்தான். அது போஜகடம்' என்றே பூமியில் புகழ்பெற்றதாயிற்று.

33. அந்த மஹா தேஜஸ்ஸுடைய ருக்மி தன் மனத்திட் பத்துடன் தென் திக்கை யடைந்தான், தோள் வலிமையுள்ள பீஷ்மக ராஜாவும் குண்டின புரத்திலேயே வஸித்தான்.

34. வ்ருஷ்ணி ஸேனையுடன், ராமனும் த்வாரகையை யடைந்நான் ப்ரபு கேசவன் ருக்மிணி தேவியின் கையை முறைப் படி பிடித்தான்.

35. பிறகு மிக்க ப்ரீதி கொண்ட அந்த பார்யையுடன் முன்னர் ஸீதையுடன் ராமன் போலவும், இந்த்ராணியுடன், இந்த்ரன் போலவும் ரசித்தான்.

36, அந்த ருக்மிணி தேவி க்ருஷ்ணனின் முக்ய முதல் மஹிஷ்யாளுள்: பதிவ்ரதை; நற்குணம் மிக்கவள் ரூபம், ஒழுக்கம் ஆகிய குணங்களுடையவள்.

37. வீர்ய க்ருஷ்ணன் ருக்மிணியிடத்தில் சாருதேஷ்ணன், ஸுதேஷ்ணன், மஹாபலன், ப்ரத்யும்னன், ஸுஷேணன், சாருகுப்தன், சாருபாஹு, சாருவிந்தன், ஸுசாரு, பத்ரசாரு அப்படியே பலவான்களின் ஶ்ரேஷ்டனுனசாரு, இந்த பத்து மஹாரத புத்ரர்களையும் அப்படியே சாருமதியென்னும் பெண்ணையும் பெற்ருன்.

38, 39 அவர்களும் தர்மார்த்தங்களில் ஸமந்த்தர்கள். அஸ்த்ர வித்துக்கள், யுத்தத்தில் தேவையான மதங்கொண்டவர்கள்.

40—43. பிறகு மதுஸூதனன், காளிந்தி, மித்ரவிந்தை, (நக்னஜித்தின் மகள்) ஸத்யநு (ஜாம்பவான் மகள்) ஸாம்பவதி விரும்பும் ரூபங் கொள்ளும் ரோஹிணி மத்ரராஜ புத்ரி, நல்லொழுக்கமுள்ள கண்ணழகி லக்ஷ்மணை, ஸத்ராஜித்தின் மகள்

ஸத்யபாமா, ஸைப்யனின் மகள், அப்ஸரஸ்ஸுப்போல் ரூபமுடைய அழகி காந்தாரி ஆக (ருக்மிணி தவிர) வேறு இந்த எட்டு மங்களமான மஹிஷிகளையும், கல்யாணம் செய்து கொண்டான் ஒப்பற்ற பராக்ரமமுடைய அந்த க்ருஷ்ணன் வேறு ஆயிரக்கணக்கான ஸ்த்ரீகளையும் மணம் புரிந்தான். ஹ்ருஷீகேசன், அவர்கள் எல்லோரையும், ஸமமாக வாழ்க்கை நடத்தினன்.

43, அவர்கள் விலைமதிக்க முடியாத வஸ்த்ராபரணங்களையுடையவர்கள். எல்லா ஆசைகளையும் ஸுகமாக அனுபவித்தவர்கள்.

44. அவர்களிடத்தில் அந்த க்ருஷ்ணனுக்கு வீர புத்ரர்கள் ஆயிரக்கணக்கில் பிறந்தனர்.

45. எல்லா பிள்ளைகளும், சாஸ்த்தார்த்தில் ஸமர்த்தர், பலவான்கள், மஹாரதர், யாகசீலர், ஸத்கார்யங்கள் செய்பவர், பெரும் பாக்யவான்கள், மஹா பலவான்கள்.

### 60-ம் அத்தியாயம் முற்றும்

## 61-ம் அத்தியாயம்

### ருக்மீ புத்ரீ சுபாக்கி, ப்ருத்யும்னனை மணத்தல், அநிருத்தன் ருக்மியின் பௌத்ரீ ருக்மவதியை மணத்தல், பலராமனுல் ருக்மீ வதம்

1. வைசம்பாயனர் சொன்னுர்: பிறகு, வெகு காலங்கழிந்த பின், சத்ருக்களை அடக்க வல்ல வீர்ய ருக்மி, பெண்ணுக்கு ஸ்வயம்வரம் ஏற்பாடு செய்தான்.

2. அங்கு ருக்மியால் அழைக்கப்பட்ட ராஜாக்களும் மிக்க வீர்யமுடைய ராஜபுத்ரர்களும் நாலா திசைகளிலிருந்தும் செல்வத்தோடு கூட வந்தனர்.

3. அங்கு மற்ற ராஜகுமாரர்களால் சூழப்பட்டு (க்ருஷ்ணன் மகன்) ப்ரத்யும்னன் வந்தான். அந்த பெண் (ருக்மி புத்ரி) அவனையே விரும்பினுள் அவனும் அழகிய கண்களுடைய அவளை விரும்பினுன்.

4. அப்போது விதர்ப்ப ராஜன் 'சபாங்கி' எனும் பெயர் கொண்டவன். ருக்மி புத்ரி காந்தியுடனும், ஒளியுடனும் கூடி பூமியில் புகழ் பெற்றவளாயிருந்தாள்

5. மஹாத்மாக்களான எல்லா அரசர்களும் அமர்ந்த பிறகு விதர்ப்பராஜ புத்ரி சத்ருக்களை அழிக்கவல்ல ப்ரத்யும்னனை வரித்தாள்.

6. கேசவன் மகன் ப்ரத்யும்னன் எல்லா அஸ்த்ரங்களிலும் ஸமர்த்தன் ஸிம்ஹம் போல் மிகவும் வலிமை வாய்ந்தவன் ரூபத்தில் உலகில் ஒப்பற்றவனாக விருந்தான்.

7. அந்த ராஜ புத்ரியும், [தக்க] வயது, ரூபம், குணம் கொண்டவள். இந்த்ரஸேனா நாராயணி போன்று அவனிடம் மிக்க ப்ரேமை கொண்டு இருந்தாள்.

8. ஸ்வயம்வரம் முடிந்ததும், அந்த ராஜாக்கள், தங்கள் நகரை யடைந்தனர். ப்ரத்யும்னனும் விதர்ப ராஜ குமாரியை அழைத்துக் கொண்டு த்வாரகையை அடைந்தான்.

9 அந்த வீரன் அவளுடன் நளன் தமயந்தியுடன் போல் ரமித்திருந்தான். அவளிடத்தில் அவன் தேவகுமாரன் போன்ற பிள்ளையைப் பெற்றான்.

10. அந்தப் பிள்ளை அநிருத்தன் எனப் புகழ் பெற்றவன். பூமியில் அரிய செயல்களால் ஒப்பற்றவன் வேதத்திலும், நீதி சாஸ்தரத்திலும், தனுர் வேதத்திலும் கரை கண்டவன்.

11. ஜனமேஜயரே அந்த அநிருத்தன் வயது வந்ததும், ருக்மியின் ஸ்வர்ணம் போன்ற பௌத்ரியை ருக்மிணி தேவி, அநிருத்தன் பத்னிக்காக விரித்தாள். அவளுக்கு ருக்மவதியெனப் பெயர்.

12, 13. ஜனமேஜயரே! பிறகு, ராஜா ருக்மி அநிருத்தன் குணங்களாலும், ப்ரத்யும்னனதும், ருக்மிணியினதும் ஸம்பந்தத்தாலும், க்ருஷ்ணனிடம், பகை கொண்டிருந்த போதிலும், பகைமையை விட்டு, ப்ரீதி கொண்ட பெரிய கீர்த்தி வாய்ந்த ராஜா ருக்மி, "ப்ரீதியுடன் கொடுக்கிறேன்" எனச் சொன்னான்.

14. ஜனமேஜயரே! கேசவன் ருக்மிணி தேவியுடனும், பலராமனுடனும், புத்ரர்களுடனும், மற்ற யாதவர்களுடனும், ஸேனையுடனும, விதர்ப்ப தேசத்தை யடைந்தான்.

15. ருக்மியின் பந்துக்களும், நண்பர்களும் ஒன்று சேர்ந் னர். ருக்மியினல் அழைக்கப்பட்ட அந்த அரசர்களும் அங்கு ந்தனர்.

16. மஹாராஜா ஜனமேஜயரே! மங்களமான திதியில் த்தமமான நக்ஷத்ரத்தில் அந்த மஹோத்ஸவமான விவாகம் நிருத்தனுக்கு நடந்தது.

17. வைதர்ப்பியான ருக்மவதியின் கை அநிருத்தனல் டிக்கப்பட்டதும், அங்கு விதர்ப்பதேசத்தவர்க்கும் யாதவருக்கும் பரானந்தம் உண்டாயிற்று.

18. அங்கு யாதவர்கள் கௌரவிக்கப்பட்டவர்களாய், தவர்கள் போல் மகிழ்ந்திருந்தனர்.

19. பிறகு அஸ்ம தேசாதிரதி, உதாரகுண வேணுதாரி, க்ஷன், ச்ருதர்வாசாணூரன், அம்சுமான், கலிங்க ராஜா ஜயத் ஸெனன், மஹாலவபான் பாண்டிய ராஜா.

20. அப்படியே ஸ்ரீமான் ரிஷீக ராஜா தென் தேசத்து மிக்க சல்வம் படைத்த இந்த எல்லா அரசர்களும் ப்ரபு ருக்மியை ஹஸ்யத்தில் அடைந்து சொன்னார்கள்:

21—23. நீ "சொக்கட்டான் ஆட்டத்தில் வல்லவன். ாங்களும் விளையாட விரும்புகிறோம், இந்த பலராமன் இந்த ந் தாட்டத்தில் ப்ரியமுடையவன், சொக்கட்டான் ஆட்டத்தில் ாமர்த்ய மற்றவன். உன்னை முன்னிட்டு, அந்த நாங்கள் அந்த லராமனை ஜெயிக்க விரும்புகிறோம்" என்று சொல்லப்பட்ட ஹாரதன் ருக்மி, சொக்கட்டான் ஆட்டத்தை விரும்பினன். வர்கள், ஸ்வர்ணத்தூண் உடையதும், புஷ்பங்களால் அலங் ரிக்கப்பட்டதும் சந்தனத் தண்ணீர் பூசப்பட்டதும், மங்களகர ானதுமான சூதாட்ட மண்டபத்தை, ஸந்தோஷத்துடன் குந்தனர்.

24. பிறகு எல்லோரும், வெண்ணிற மாலையும் பூச்சுமுடைய ராய் வெற்றியாசை கொண்டு அந்த மண்டபத்தில் புகுந்து வர்ண ஆஸனங்களில் அமர்ந்தனர்.

25 சூதாட்ட ஸமர்த்தர்களான, அயோக்யர்களால், ழைக்கப்பட்ட பலதேவனும் 'சரி' யென்று ஸந்தோஷத்துடன் சான்னன். 'சேர்ந்து விளையாடுவோம் பந்தயம் வைக்கப் டட்டும்"

26. வஞ்சனையால் ஜயிக்க விரும்பிய தென் தேசத்தரசர் ரத்னங்கள், முத்துக்கள், ஸ்வர்ணங்கள் இவைகளை ஆயிரக் கணக்கில் அங்கு கொண்டு வந்தனர்

27 பிறகு அவர்களது சூதாட்டம் ஆரம்பம்மாயிற்று: ப்ரீதியைக்குலைக்கவல்லது. கலகத்துக்கு இருப்பிடம். துர்புத்தியுடையோருக்கு கொடிய நகரமானது.

28 பலராமன் ருக்மியுடன் சூதாட்டத்தில் ஆயிரம் நாணயங்களையும், பத்து முதலான ஸ்வர்ண நாணயங்களையும் பந்தயத்தில் வைத்துத் தோற்றான்.

29 பிறகு ருக்மி வெற்றிக்கு முயலும் மஹாபலவீனை பலராமனை ஜயித்தான். மறுபடியும் அந்த ருக்மி பலதேவனை அதேயளவு மேலும் ஜயித்தான்.

30, கேசவன் தமயன் பலராமனும் ருக்மியால் அடிக்கடி ஜயிக்கப்பட்டான். ருக்மி அந்த மஹாத்மா பலராமனது கோடி ஸ்வர்ண நாணயங்களைப் பந்தயமாக ஜயித்தான்.

31. பிறகு வஞ்சமுடைய ருக்மி மகிழ்ந்து 'ஜயிக்கப்பட்டது' என்று சொன்னான் (மற்றவர்களால்) கொண்டாடப் பட்டவனாய் சிரித்துக் கொண்டே உலக்கை ஆயுதமாகவுடைய பலராமனைத் தாழ்வாகப் பேசினான்.

32. ஸ்ரீமான் (பலதேவன்) இந்த வித்தை தெரியாதவன். இதுவரை (போரில்) ஜயிக்கப்பட்டதை இவன் சூதாட்டத்தில் தோற்றுவிட்டான்.

33 34 அப்போது அதைக் கேட்டு. பற்களைக் காட்டிக் கொண்டு. கலிங்க ராஜன் மகிழ்ந்து மிகச் சிரித்தான். அச்சமயம் பலராமன் கோபங் கொண்டான்.

35. தோல்வி காரணமாக உண்டான அந்த ருக்மியின் வார்த்தையைக் கேட்டு பீஷ்மகன் பிள்ளை ருக்மியினது கொடிய வார்த்தைகளால் தாக்கப்பட்ட மஹாபலன் பலராமன் அவமானமடைந்து. மிக்க கோபங் கொண்டு கோபத்தை ஜயித்த தர்மவித்தாகிலும் கோபமடைந்தான்.

36 பிறகு, தைர்யத்தால் மனதையடக்கிக் கொண்டு, வார்த்தை சொன்னான்: பத்தாயிரம் கோடி ஸ்வர்ணம் இந்த எனது அடுத்த பந்தயம். இதை நன்கு ஏற்றுக் கொள் ராஜாவே!

37. (ருக்மியே!) அதிக தூசி படிந்த விடத்தில், கருப்பு மஞ்சள் பாசகங்களை உருட்டு? என்று இவ்விதம் பலராமன், ருக்மியை அழைத்தான்.

38. ராஜா ருக்மி ஒரு வார்த்தை சொல்லாமல் சரி என்று சொன்னன். பிறகு மகிழ்ந்தவனும் பாசகங்களை உருட்டினன்.

39. நாலாட்டம் முடிந்ததும். பலராமன் தர்மமுறைப்படி ஜயித்தான். ராஜா ருக்மி பலராமனைப் பார்த்து 'இல்லை' என்று சொன்னன்.

40. அந்த பலராமன், தைர்யத்தால் மனதை அடக்கிக் கொண்டு ஒன்றும் பேசவில்லை. பிறகு ருக்மி 'என்னல் ஜயிக்கப் பட்டது' என்று பலராமனைக் குறித்துக் கர்வத்துடன் சொன்னன்.

41 ஜனமேஜயரே அந்தக் கபட வார்த்தையை மறுபடியும் கேட்டு பலராமன் மிகக் கோபங் கொண்டு, பதில் சொல்லவே யில்லை.

42. பிறகு அசரீரி வாக்கு மஹாத்மா பலதேவனின் அந்தக் கோபத்தை வளர்க்கிறதாய், கம்பீரமான சப்தத்துடன் சொல்லிற்று. "ஸ்ரீமான் பலராமன் உண்மை சொன்னன்.

43. இந்த ருக்மி தர்ம முறைப்படி தோற்கடிக்கப்பட்டான் ஒரு வார்த்தையும் சொல்லாமல் பலராமன் செயலால் வெற்றி யடைந்தவனுகிருன்.

44 அது (ருக்மியின்) மனதால் நன்கு அறியப்பட்டது என்று அறியப்படட்டும்."

45. இவ்விதம் ஆகாயத்திலிருந்து இந்த உண்மையான நல்ல வார்த்தையைக் கேட்டு, பலவான் பலராமன், அப்படியே எழுந்திருந்து, ஸ்வர்ணமயமான பெரிய கனமான (சொக்கட்டான் பலகையால்) ருக்மிணியின் மூத்த தமயனை அடித்துக் கொன்று பூமியில் வீழ்த்தினன்.

46 விவாதத்தில் கோபங் கொண்ட யாதவ பலராமன், ஆக்ஷேபிக்கும் ருக்மியை சதுரங்க பலகையாலேயே அடித்துக் கொன்ருன்.

47 பிறகு கோபங் கொண்டு துள்ளிக் குதித்து கலிங்க ராஜனின் பற்களையும் உடைத்தான். பரபரப்புடன் ஸிம்ஹம் போல் கர்ஜிக்கவும் செய்தான்.

48. பிறகு பலவான்களில் சிறந்த பலராமன், ஸபையின் தங்கத் தூணைப் பிடுங்கி கத்தியை உயர்த்தி எல்லா அரசர்களையும் நடுங்கச் செய்தான்.

49. பின்பு பலராமன் கஜேந்திரன் போல், அந்த தூணை இழுத்துக் கொண்டு ஸபை வாயிலினின்று வெளிக்கிளம்பினன். கைசிக தேசத்தவரை நடுங்கச் செய்தான்

5051. அந்த யாதவ ஸ்ரேஷ்டன் பலராமன், கபடஸமர்த்தனை ருக்மியைக் கொன்று, ஸிம்ஹம் அல்ப ம்ருகங்களைப் போல எல்லா சத்ருக்களையும் நடுங்கச் செய்து ஜனங்களால் சூழப்பட்ட ராமன், தானகவே தங்குமிடத்துக்குச் சென்றுன். அவன் க்ருஷ்ணனுக்கு அங்கு நடந்ததையெல்லாம் அப்படியே தெரிவித்தான்.

52. அந்த மஹாதேஜஸ்ஸுடைய க்ருஷ்ணன், அப்போது ராமனைப் பார்த்து ஒன்றும் சொல்லவில்லை, அச்சமயம் தன்னை மிகவும் ஸ்ரமப்பட்டு அடக்கிக் கொண்டு கண்ணீர் பெருக்கினன்.

53. முன்னர், சத்ரு வீரர்களைக் கொல்லக்கூடிய ருக்மிணியின் மூத்த தமயனை ருக்மிணியிடம் அன்பு காரணமாக, வாஸுதேவனுல் கொல்லப்படவில்லை.

54. பிறகு இந்தரனுக் கொப்பான பலவான் ராஜா ருக்மி சூதாட்டக் கூட்டத்தில் பலராமனின் கையால், விடப்பட்ட சொக்கட்டான் பலகையால் கொல்லப்பட்டான்.

55, 56 மஹாவீர்யமுடைய போரில் ஸமர்த்தனை, தினமும் யாகம் செய்யும் த்ரும ரிஷியாலும், பார்க்கவ ரிஷியாலும் பயிற்றுவிக்கப்பட்டு, அவர்களுக்கு ஸமமான புண்யாத்மாவான, நித்ய யாகம் செய்யும் பீஷ்மகன் மகன் ருக்மி கொன்று வீழ்த்தப்பட்ட போது எல்லா வ்ருஷ்ணிகளும், அந்தகர்களும் வருத்தமுடைவர் ஆயினர்.

57, **வைசம்பாயனர் சொன்னுர்:** மஹா பாக்யவதி ருக்மிணியும் புலம்பிப் பரிதபித்தாள் அப்படி புலம்பும் அவளைப் பார்த்து கேசவன் ஸமாதானப்படுத்தினன்.

58. பரதஸ்ரேஷ்டனே! ஜனமேஜயனே ருக்மியும் அழிவும், விரோத காரணமும் எப்படி ஏற்பட்டதோ இந்த எல்லாம் உனக்குச் சொல்லப்பட்டது.

59. மஹாராஜா! ஜனமேஜயரே! வ்ருஷ்ணிகளும் எல்லா வகையிலும் (வந்த) தனங்களையெடுத்துக் கொண்டு, ராமக்ருஷ்ணரை யண்டி த்வாரவதி நகரைக் குறித்துச் சென்றனர்.

**61-ம் அத்தியாயம் முற்றும்**

## 62-அத்தியாயம்

# பலதேவனின் மஹாத்மயம்: ஹஸ்தினா புரத்தை கங்கையில் இழுத்தல்

1, ஜனமேஜய ராஜா சொன்னார்: "ப்ரஹ்மரிஷியே! பூமியைத் தாங்கும் சேஷாவதாரமான, புத்திமான் பலதேவனது, பெருமையையே திரும்பவும் கேட்க விரும்புகிறேன்

2. முன் சரித்ரமறிந்த ஜனங்கள் அந்த பலதேவனை தேஜஸ்ஸுக்கு இருப்பிடமாகவும் ஜெயிக்கப்படாதவனாகவும், மிகப் பெருமை வாய்ந்தவனாகவும் சொல்கின்றனர்.

3. ப்ராஹ்மணோத்தமரே? ஆதி தேவனாகவும், மிக்க வீர்ய முடையவனாகவும், முடிவில்லாதவனாகவும் இவனை அறிகின்றனர். அவனது செயல்களை உள்ளபடி (விரிவாக) கேட்க நான் விரும்புகிறேன்."

4, 5. வைசம்பாயனர் சொன்னார் இவன் முன்னர் பூமியைத் தாங்கும் ஆதி சேஷனாக நூல்களில் சொல்லப் படுகிறது. இவன் ஆதிசேஷன் தேஜஸ்ஸுக்கு இருப்பிடம்; ஸ்ரீமான்; [பிறரால்] நடுங்கச்செய்ய [பயப்படுத்தி] முடியாதவன்; புருஷோத்தமன்; யோகவித்யைக்கு ஆசார்யன்; பெரிய வீர்யம் வாய்ந்தவன்; தேவ ரஹஸ்யங்கள் அறிந்தவரில் முக்யன்; பலவான்; ஜராசந்தனை ஜெயித்தான் ஆனால் கொல்லவில்லை.

6, பல அரசர்கள் பூமியில் புகழ் வாய்ந்தவர்; அவர்கள் எல்லோரும் ஜராஸநதனைப் பின்பற்றினர் போரில் (பலராமனால்) ஜயிக்கப்பட்டனர்.

7. பத்தாயிரம் யானை பலங்கொண்ட பயங்கர பராக்ரம முடைய ஜராஸந்தன்; மல்யுத்தத்தால், பலராமனால் பலமுறை தோற்கடிக்கப்பட்டான்.

8 ஜாம்பவதி ஸாம்பன், 'ஹஸ்தினபுரம்' எனும் நகரில் துர்யோதனன் மகளை அபஹரித்துப்போகும் போது பிடிக்கப் பட்டான். அரசர்களால் நாற்புறமும் தடுக்கப்பட்டபோது பெண்ணை அபஹரித்தானல்லவா?

9. ஸாம்பன் தடுத்துப் பிடிக்கப்பட்டதாக அறிந்த மஹா பலன் பலராமன் அங்கு வந்தான். அவன் விடுதலையின் பொருட்டு வந்த பலராபன் அவனை அடையவில்லை,

10—12 பிறகு பலவான் ராமன் கோபங் கொண்டான் பெரிய அத்புதத்தையும் செய்தான். சத்ருக்களால் தடுக்க

முடியாததும், ஒடிக்க முடியாததும், தெய்வத்தன்மை வாய்ந்ததும் பலத்தில் ஒப்பற்றதுமான கலப்பை பாணத்தை ப்ரஹ்மாஸ்த்ரத்தால் அபிமந்த்ரித்து, உயர்த்தி நகரின் ப்ராகார மதிளில் வைத்து, மிக்க தேஜஸ்வியான பலராமன், துர்யோதனின் நகரை, கங்கை நதியில் தள்ள விரும்பினான்.

13 அந்நகர் அசைவதைக் கண்டு துர்யோதனராஜா புத்திமான் பலராமனுக்கு, பத்னியுடன் கூடிய ஸாம்பனை திருப்பிக் கொடுத்தான்.

14. அப்போது மிகப்பெரிய மனதுடைய ராமனுக்குத் தன்னை சிஷ்யனுகக் கொடுத்தான் [ஸமர்ப்புத்தான்], இந்த பலராமனும் கௌரவ அரசனான துர்யோதனனை கதாயுதப்பயிற்சிக்கு சிஷ்யனாக ஏற்றுக் கொண்டான்.

15. ராஜா ஜனமேஜயரே! ராஜ ஶ்ரேஷ்டரே! அது முதல் அசைக்கப்பட்ட இந்நகரம் கங்கையை நோக்கி இழுக்கப்பட்டது போல் [சாய்ந்து] தோன்றுகிறது.

16. பலராமனுடைய இந்த அதி ஆஶ்சர்யமான காரியம், பூமியில் சொல்லப்பட்டது, சூரன் பலராமனால் பாண்டீர மரம் [ஆலமரம்] அருகே சாயத்து முன்னர் சொல்லப்பட்டது.

17. கலப்பை ஆயுதமாகவுடைய பலராமன் ஒரு முஷ்டி [குத்தால்] ப்ரலம்பனைக் கொன்றான், மஹாவீரன் தேனுகனையும [பனை] மரத்துச்சியில் வீசியெறிந்தான், உயிர் முடிந்த அந்தக் கழுதை ரூபங்கொண்ட அஸுரன் உயிரற்று பூமியில் விழுந்தான்.

18. ஸமுத்ரத்தை நோக்கிச் செல்லுவதும், வேக அலை வரிசைகளுடன், துரிதமாகச் செல்வதுமான யமனுக்கு தங்கை யமுனா நதி, கலப்பை தரித்த பலராமனால் ப்ருந்தாவன நகரைக் குறித்து இழுக்கப்பட்டாள்.

19. அனந்தனும், அளவிட முடியாதவனும், பூமியைத் தாங்குமவனுமான ஆதி சேஷ அவதார பலராமனது இந்தப் பெருமை என்னால் உனக்குச் சொல்லப்பட்டது

20. புருஷஸ்ரேஷ்டனும், கலப்பை ஆயுதமாகவுடையவனுமான பல ராமனின் பலவித மேலான செயல்கள் மற்றவையும் இவையே இங்கு சொல்லப்படாதவை, விஸ்தாரமான புராணங்களில் கண்டுகொள்.

**62-ம் அத்தியாயம் முற்றும்**

54-ம் அத்தியாயம்

**ஸ்ரீக்ருஷ்ண பகவான் த்வாரகைக்கு இந்த்ர னிருந்து நரகாஸுரனைத் தொலைத்திட க்ருஷ்ணனை வேண்டிய அவனை வென்றிடச் சத்ய பாமை யுடன் ப்ராக்ஜ்யோதிஷபுரம் சென்று முரு முதலிய அஸுரர்களையும், நரகாஸுரனையும் வதம் செய்தல்**

1. ஜனமேஜயர் சொன்னார்: "முனிவரே! வைசம்பாயனரே! ருக்மி கொல்லப்பட்டதும், மஹாபாஹு, வீர்ய விஷ்ணு த்வாரகைக்கு வந்து செய்ததை எனக்குச் சொல்லுங்கள்.

2. வைசம்பாயனர் சொன்னார்: அந்த யாதவ ச்ரேஷ்டனும் வீர்யவானும், ஸ்ரீமானுமான பகவான் விஷ்ணு க்ருஷ்ணன் யாதவர்களால் சூழப்பட்டு, த்வாரகை நகரை, நன்றாக கவனத்துடன் கடாக்ஷித்தான்.

3 தாமரைக் கண்ணன் க்ருஷ்ணன், பலவித ரத்னங்களையும் செல்வங்களையும் தக்கபடி சேகரித்து வைத்தான்.

4. ராக்ஷஸர்களை யழித்தான். அங்கு த்வாரகையில், தைத்ய தானவ அஸுரர்கள், தொல்லை கொடுத்தார்கள். வரத்தால் மதங் கொண்ட அப்பெரிய அஸுரர்களை மஹாபாஹு க்ருஷ்ணன் கொன்றான்

5. அங்கு எல்லா தேவர்களையும் நடுங்கச் செய்யும் இந்த்ர னின் சத்ரு 'நரகன்' எனப்படும் அஸுரனும் க்ருஷ்ணனுக்குத் தொல்லைக் கொடுத்தான்.

6. லிங்க ரூபமுடைய க்ருஷ்ணத்தில் எல்லாத் தேவர்களையும் மிகத் துன்புறுத்தும் அந் நரகாஸுரன், அப்போது தேவர்களுக் கும் ரிஷிகளுக்கும் தொல்லை செய்தான்

7. அச்சமயம், பூமி புத்ரன் நரகன் த்வஷ்ப்ரஜாபதியின், புத்ரியான 'கசேரு' எனும் பெண்ணிடம் சென்றான். யானை ரூபம் கொண்டு பதினான்கு வயதுள்ள அழகிய அவளை எடுத்தான்.

8. ப்ராக்ஜ்யோதிஷ நகரின் ராஜாவான நரகாஸுரன் உருத்தமும் பயமின்றி மோஹத்தால் இவை அழ்ந்ய அவள் பலாத்காரமாக இழுத்து வார்த்தை சொன்னான்.

9 தேவ மனிதர்களிடத்தில் பலதரப்பட்ட ரத்னங்களேயும், பூமி முழுதும் ஸமுத்ரங்கள் கொண்டிருக்கும் செல்வங்கள் யெல்லாமும்.

10. இன்று முதல், எல்லா அஸுரர்களும், தைத்யதானவர் களுடன் ஒன்றுகூடி, உனக்கே காணிக்கையாகக் கொடுப்பார்கள்

11. இவ்விதம் மேலான ரத்னங்களேயும், பலவித ஆடைகளே யும், அவன் அபஹரித்தான். அந்தபூமி புத்ரன், அவைகளே (தான்) அனுபவிக்கவில்லே.

12. கந்தர்வ கன்னிகைகள் எல்லோரையும் தேவ மனுஷ்ய கன்னிகைகளேயும் ஏழு அப்ஸரக் கூட்டங்களேயும், அபஹரித்தான்.

13. பதினுலாயிரத்து நூற்றிருபத்தொரு பெண்கள் (பழய) ஒரே பின்னலேக் கொண்டு கன்யா வ்ரதத்தை அனுஸரித்தனர்.

14. **வைசம்பாயனர் சொன்னுர்** : உதார குணமுடைய நரகாஸுரன், அந்தப் பெண்கள் வஸிக்க முராஸுரன் முன் வஸித்த விடமான மணி பர்வதத்தில் 'அளகை' யெனும் நகரை நிர்மாணித்தான்

15. **வைசம்பாயனர் சொன்னுர்** : முராஸுரனின் பத்து பிள்ளேகளும், ராக்ஷஸமுக்யர்களும், அந்தப் பதினுலாயிரத்து நூறுறிருவத்தொரு பெண்களும், நரகாஸுரனுக்கு பணிவிடை செய்து கொண்டு, அவனே அனுசரித்திருந்தனர். ,அத்தகைய இந்த பெரிய அஸுரன் கரைகண்ட தலத்தின் பயனுல் மிக்க மதங் கொண்டவன்.

16 முன்னர் மஹா அஸுரன் நரகன்செய்த கோரகார்யம் அப்போது ஒன்று சேர்ந்த எல்லா அஸுரக் கூட்டங்களாலுங் கூட முன் செய்யப்படவில்லே.

17. இந்தப் பெரிய அஸுரன், தேவமாதா அதிதின்யை, குண்டலம் காரணமாக அவமானப்படுத்தினுன். அவனேப் பூதேவி பெற்ருள். அவனது நகரம் ப்ராக்ஜ்யோதிஷ்டம். அவனுக்கு போரில் வெறிகொண்ட நான்கு த்வார பாலகருமிருந்தனர்.

18 ஹயக்ரீவன், நிஸீந்தன், வீரபஞ்சநதன்; ஆயிரம் பிள்ளே களுடன் கூடிய வரத்தால் கொடுக்கப்பட்ட, பெரிய அஸுரன் 'முரு' இவர்கள் அந்த நான்கு த்வாரபாலகர்.

19. தேவையான வழிவரை, குரூபமான ராக்ஷஸருடன் சென்று புண்யாத் மக்களை நடுங்கச் செய்தான்,

20. அவனை வதம் செய்ய, சங்க. சக்ர, கதை, கட்கம் இவை தரித்த மஹாபாஹு ஜனார்த்தனன், வ்ருஷ்ணி வம்சத்தால், தேவகியிடம் வஸுதேவருக்குப் பிறந்தான்.

21 பிறகு, உலகப் புகழ் பெற்ற தேஜஸ்வீ புருஷச்ரேஷ்டன் க்ருஷ்ணனுக்கு, வாஸஸ்தானமாக த்வாரகை, தேவர்களை உபாயமாகக்கொண்டு, நிர்மாணிக்கப்பட்டது.

22 இந்த்ரனது வாஸஸ்தானமான அமராவதியைக் காட்டிலும் த்வாரகாபுரி மிக அழகானதல்லவா? பெரிய கடலால் சூழப்பட்டது.

23 ஐந்து மலைகளால் விளங்குவது. தேவபட்டணம் போன்ற அதில், தங்கத் தோரணங் கொண்ட ஸபை; 'தாளார்ஹீ' எனப் புகழ் பெற்றது ஒரு யோஜனை நீளம், ஒரு யோஜனை அகலம்.

24. அந்த ஸபையில் ராமக்ருஷ்ணர்களை முன்னிட்ட எல்லா வ்ருஷ்ணி அந்தகர்களும், இந்த உலக வாழ்க்கை முழுவதையும் பரிபாலன் செய்து கொண்டிருந்தனர்.

25. ஒரு ஸமயம், எல்லோரும் அந்த ஸபையில் உட்கார்ந்திருக்கும் போது, ஜனமேஜயரே! திவ்ய நறுமணம் கொண்ட காற்று வீசிற்று. பூ மழை பொழிந்தது.

26. பிறகு ஒளி வீசிகளால் சூழப்பட்ட கிலகிலா சப்தம், ஒரு முஹூர்த்த காலம் ஆகாயத்தில் உண்டானது. பிறகு அது பூமியில [இறங்கி] நிலைத்தது.

27 அந்த ஒளியின் நடுவில் [தேவகணங்கள் சூழ] வெள்ளை யானை மேல் இருந்தவனாய் இந்த்ரன் காணப்பட்டான்

28. ராமக்ருஷ்ணரும், உக்ரஸேன ராஜாவும், வ்ருஷ்ணி அந்தகர் கூட்டங்களுடன், மஹாத்மா தேவேந்த்ரனைப் பூஜித்து' எதிர்கொண்டழைத்தனர்.

29. அந்த இந்த்ரன் யானையிலிருந்து கீழே சீக்ரமாக இறங்கி, ஜனார்த்தனனை ஆலிங்கனம் செய்து, பலதேவனையும், உக்ரஸேன ராஜாவையும் அப்படியே ஆலிங்கனம் செய்தான்

30. வயதுக்கும் காலத்துக்கும் தக்கவாறு இதர வ்ருஷ்ணிகளையும் அப்படியே ஆலிங்கனம் செய்து கொண்டான். ராமக்ருஷ்ணர்களாலும் பூஜிக்கப்பட்டு, அந்த ஸபைக்குள் புகுந்தான்.

42. ஆகாயத்தில் ... ஸ்துதி செய்யப்பட்ட ... மனைந்தனர்.

43. தேவத் தலைவன் இந்திரன் ... சொல்லி தன்னிருப்பிடத்தையே அடைந்தான். ... ப்ராக் ஜ்யோதிஷ நகரை நோக்கிச் சென்றனர்.

44. கருடனது இறக்கைகள் அடித்து வீசும் காற்று ... வாக னையாக வீசும் வாயுவுக்கு எதிர்த்திருந்தது.

45. பிறகு பயங்கர சப்தத்துடன் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் மேகங்கள் சூழ்ந்தன. ஆகாயத்தில் செல்லும் கருடன் ... க்ஷணத்தில் போய்ச் சேர்ந்தான். தூரத்திலிருந்தே ராக்ஷஸர்களை யும் பார்த்து, அவர்களிருக்குமிடத்திற்குச் சென்றான்.

46. வாயிலில் அங்கிருக்கும் யானை, தேர்ப்படையைப் பார்த் தான். இரு முனையில் கத்திகள் தொங்கும் ஆறாயிரம் மௌரவ பாசங்களைப் பார்த்தான்.

**47—49. வைசம்பாயனர் சொன்னார் :** கருடன் மேல் சங்கம், சக்ரம், கதை தரித்தவன், நீலமேக உருவம் கொண்டவன்; பீதக வாடை யுடுத்தவன்; நாற்தோளுடையவன்; வனமாலை புரளும் மார்பினன்; ஸ்ரீ வத்ஸ ஆபரணத்தால் அடையாளமுள்ளவன்; சிரஸினால் க்ரீடம் தரித்தவன்; சூர்ய காந்தியுடையவன்; மின்ன லுடன் கூடிய சந்த்ரன் போன்ற ஒளியுடையவன்; இத்தகைய ஸ்ரீமான் க்ருஷ்ணன் நாணேற்றினான் இடிபோன்ற பெரிய சப்தம் கேட்டது விஷ்ணு தானே இங்கு வந்துள்ளான் என நரகாஸுரன் அறிந்தான்.

50. காலாந்தகன் போன்ற மஹா அஸுரன் முருகு கோபத் தால் இரண்டு டங்கு சிவந்த கண்களுடையவனாய் சக்தி ஆயுதத்தை யெடுத்துக் கொண்டு வேகமாக ஓடி வந்தான்.

51, 52 வைரத்தாலும் தங்கத்தாலும் அலங்கரிக்கப்பட்ட மிகப் பெரிய சக்தி ஆயுதத்தை (க்ருஷ்ணன்) மேல் வீசினான். எரியும் கொள்ளிக் கட்டைப்போல் ஓடிவரும் அந்த சக்தி ஆயுதத்தைப் (பார்த்து) ஜனார்த்தனன், ஸ்வர்ண சிறகுடைய அம்பையெடுத் தான். அந்த வீர ... அந்தச் சக்தி ஆயுதத்தை சக்தி ... இரண்டாகத் துண்டித்தான்.

53. இந்த க்ருஷ்ணன் சக்தி ஆயுதத்தை முறித்தபோது முருகு கோபத்தால் சிவந்த கண்களுடன், மின்னல் கூட்டம் போல் ஜ்வலித்துக் கொண்டு, திரும்ப பெரிய கதையை யெடுத்தான்.

54. தேவதேவன் க்ருஷ்ணன், அர்த்த சந்த்ர பாணத்தைக் காதுவரை யிழுத்து விட்டான். இந்த்ரனுல் இழுத்து விடப்பட்ட இடிபோல் சப்தம் எழுந்தது.

55 முருவின் தங்க பூஷனங் கொண்ட அந்தக் கதையையும் இரண்டாகச் சிதைத்தான் மறுபடியும் பல்ல பாணத்தால் போரில் முரு அஸுரன் தலையையும் அறுத்தான்.

56 57. அந்தஎல்லா பாசங்களேயும் அறுத்து, பந்துக்களுடன் முரு அஸுரனைக் கொன்று. நரகனின் மிக பலம் பொருந்திய சிறந்த ராக்ஷஸ கூட்டங்களைக் கொன்று, கற்கூட்டங்களைத் தாண்டி அந்த தேவகி புத்ரன் பகவான் க்ருஷ்ணன் அஸுர ஸேனையையும், மிக்க பலம் வாய்ந்த திதி புத்ரர் நிஸுந்தன், ஹயக்ரீவன் அப்படியே விசித்ர யுத்தம் செய்யும் மற்ற அஸுரர்களேயும் பார்த்தான்.

59 60 பலவான்களில் சிறந்த மிக்க பலமுள்ள நிஸுக்தன் சீக்ரம் தேரிலேறி க்ருஷ்ணன் வழியைத் தடுத்தான். தங்கத்தால் அழகுபடுத்திய முதுகுடைய, தடுக்க முடியாத திவ்யமான வில்லே எடுத்தான் மதுஸூதனனை நிஸுந்தன் பத்துபாணங்களால் அடித்தான். கேசவன் எழுபது கூரிய அம்புகளால் திருப்பி அடித்தான்.

61, 62 அந்த அம்புகளை தன்னையடையாமலேயே ஆகாயத்தில், மாதவன் அறுத்தான். அந்த எல்லா ஸேனைகளும் க்ருஷ்ணனை நாற்புறமும் சுற்றிக் கொண்டனர். பெரிய அம்புக் கூட்டத்தால். தேவதேவன் க்ருஷ்ணன் மறைக்கப்பட்டான். மதுஸூதனன் கோபத்துடன் அந்த எல்லா அஸுரர்களேயும் பார்த்தான்.

63, 64 பிறகு ஜனார்த்தனன் வாருணாஸ்தரத்தால், திவ்ய, பெரிய அம்பு மழை பொழிந்த அந்த ஸேனையைத் தடுத்தான். வாருணாஸ்தர மகிமையால், ஒவ்வொன்றினுலும் அந்த அநேக அஸுரர்களை, எல்லோரையும் மர்ம ஸ்தானங்களில் அடித்தான்.

65—67 போரில் தோல்வியுற்ற அந்த அஸுரர்கள் பயத்தால் நடுங்கி ஓடினர். தன் ஸேனை (பின் வாங்கி) ஓடுவதைப் பார்த்து நிஸுந்தன் திருப்பப் போருக்கு வெளிக்கிளம்பினன். நிஸுந்தன் சர மழை பொழிந்தான். கேசவனை மறைத்தான் போரில் சூர்யன்

ப்ரகாசிக்கவில்லை. ஆகாயமும் பத்து திசைகளும், அப்படியே ப்ரகாசிக்கவில்லை நிஸுந்தன் பாணங்களால் கருடவாகனனை நன்கு மறைத்தான். புருஷோத்தமன் க்ருஷ்ணன், ஸாவித்ரம் எனும் திவ்ய ஸூர்யா ஸ்த்ரத்தை எடுத்தான்.

68, 69 தேவ தேவன். ஹரி: க்ருஷ்ணன், போரில் அந் பாணத்தால் சத்ரு பாணங்களைச் சிதைத்தான். மஹாபலன் க்ருஷ்ணன், சத்ரு பாணங்களை பாணங்களால் நன்கறுத்து ஒரு பாணத்தால் குடையையும் மூன்று பாணங்களால் அந்தக்குதிரைப் பாகனையும் மறுபடியும் நான்கு பாணங்களால் நான்கு குதிரை களையும், ஐந்து பாணங்களால் த்வஜத்தையும் அழித்தான்,

70. க்ருஷ்ணன் ஒரு வெகு கூரிய அம்பால் உடலையும், பல்ல பாணத்தால் நிஸுந்தனின் தலையையும் அறுத்தான்.

71. அந்த நிஸுந்தன் ஒருவனுகவே ஆயிரம் வர்ஷங்கள் தனியே, எல்லாத் தேவர்களையும், போர் புரியச் செய்தான்.

72. (அத்தகைய) நிஸுந்தன் விழுந்ததைப் பார்த்து, புகழ் பெற்ற ஹயக்ரீவ அஸுரன், பெரிய கல்லை யெடுத்துத் தூக்கினுன்.

73, 74. ஹயக்ரீவன் மலை போன்ற கல்லை வீசி எறிந்தான் அஸ்த்ரமறிந்தோரில் சிறந்த, ப்ரபு க்ருஷ்ணன் தெய்வத்தன்மை வாய்ந்த பாரஜன்ய அஸ்த்ரத்தை எடுத்து, அந்த திவ்யாஸ்தரத் தால் கல்லை ஏழு துண்டாக உடைத்தான். அந்தப் பெரிய கல்லைப் பிளந்து பூமியில் விழச் செய்தான்.

75. பரதஸ்ரேஷ்டனே! ஜனமேஜயரே! சாரங்கத்திலிருந்து வெளிக் கிளம்பிய பெரும்பல் வர்ண பாணங்களால், தேவாஸுரப் போர் போல் மூண்டது. நானுவித ஆயுதங்களால் நிறைந்து, அவ்வளவு கொடியதாயிருந்தது

76 பிறகு மஹாபாஹு க்ருஷ்ணன், கருடன் மேலமர்ந்து சார்ங்கத்திலிருந்து பெரிய பல வர்ணங்களுடைய பாணங்களாலே பெரிய அஸுரர்களை அழித்தார்.

78. சில அஸுரர்கள் சக்ர அக்னியால், கொளுத்தப்பட்டு ஆகாயத்திலிருந்து விழுந்தனர். சிலர் ஸமீபத்தையடைந்து உயிர் நீங்கி (தீப்புண்ணுல்) விகாரமடைந்த முகத்தையுடைய வராயினர்

79. க்ருஷ்ணன் அம்பு மழை பொழிந்தான். க்ருஷ்ண பாணங்களால் மிக துன்புறுத்தப்பட்டு, மழை பொழியும் மேகங்

கள் போன்று விகார அங்கங்களுடைய எல்லா அஸுரர்களும், ரத்தத்தால் பூசப்பட்டு, புஷ்பித்த சிம்சுக மரங்கள் போல காணப் பட்டனர்.

80 விசித்ர யுத்தம் செய்யும் அஸுரர்கள் மிக நடுங்கி, ஒடித்த பாணங்களுடன் விரைந்து ஓடினர்.

81. மறுபடியும் வாயு வேகங் கொண்ட ஹயக்ரீவாஸுரன் கோபத்தால் சிவந்த கண்களுடன், பத்து பாகம் உயர்ந்த மரத்தைப் பிடுங்கியெடுத்து வேகமாக ஓடிவந்தான்.

82. மேகம் போன்ற உருவங் கொண்ட அந்த ஹயக்ரீவன், பயிற்சித் திறத்தால் பெரிய மரத்திலேறி வேகமாக க்ருஷ்ணனைக் குறித்து பிடுங்கிய மரத்தை வீசினன் மரத்தை எறிந்த வேகத்தால், எழும்பிய காற்று, மிகப் பெரிய சப்தத்தை எழுப்பியது.

83. பிற , மிக முயற்சி கொண்ட ஜனார்த்தனன், ஆயிரம் அம்புகளால் சூர்யன் போன்ற விசித்ர காந்தியுடைய அந்த அஸுரனை பலவிதமாக (அங்கங்களைத்) துண்டு துண்டாக்கினன்.

84. மறுபடி ஒரு விசேஷ பாணத்தால் ஹயக்ரீவன் மார்பில் ஸ்தனங்களின் மத்தியில் அடித்தான்.

85. அக்னி ஜ்வாலை போன்ற அந்த அம்பும் (மார்பில்) வேகமாகப் பாய்ந்து, ஹ்ருதயத்தைப் பிளந்து பின்புறம்) வெளி வந்தது.

86. புருஷோத்தமன் தேவகீ புத்ரன் க்ருஷ்ணன், கோர பலங் கொண்ட பாபி ஹயக்ரீவனை அடிவயிற்றின் நடுவிலடித்துக் கொன்றான்.

87, 88 எண்ணாயிரம் தானவர்களைக் கொன்று, சத்ருக்களைத் தப்பிக்கச் செய்யும் புருஷோத்தமன் க்ருஷ்ணன், ப்ராக்ஜ்யோதிஷ நகரைக் குறித்து ஓடினன்.

89. பஞ்ச நதியெனும் நரகனைச் சேர்ந்த அஸுரனைக் கொன்று, பிறகு செல்வத்தால் விளங்கும் ப்ராஜ்யோதிஷ நகரை யடைந்தான்.

90. அங்கு பெரும் போர் மூண்டது. பிறகு மஹாபலன் க்ருஷ்ணன், பாஞ்ச ஜந்யம் எனும் சங்கை சப்தித்தான் ப்ரளயகால மேக சப்தம் போல் மிகப் பெரிய சப்தம் கேட்டது

91. பயங்கரமான பெரிய அந்த சப்தம் மூன்று லோகங் களிலும் கேட்டது. [illegible] கோபத்தால் சிவந்த கண்களுடையவனாய் இருந்தான்.

92. எட்டு இரும்பு சக்ரங்கள் கொண்டது; ஆயிரத்து இரு நூறு முழம் உயரம்; ரத்னத்தாலும், தங்கத்தாலும் சித்ர வேலைப் பாடுடையது.

93. விஸ்தார உட்கார இடமுடையது. வைரம் பதித்த, பெரிய தங்கத்வஜத்தால் விளங்குவது. தங்கப் பிடி கொண்ட விருது கொடிகளால் நிறைந்தது

94, 95. தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டது. இத்தகைய தேரின் மத்தியில் அமர்ந்திருக்கும் வீர நரகாஸுரன், ஸந்தியா கால சூர்யன் போல் தோன்றினன்.

96. சந்த்ர நிறம் கொண்ட மிகச் சுபமான மார்புக் கவசம். அக்னி போல் ஜ்வலிக்கும் முத்துமாலை; தலையில் கிரீடம்; சூர்யன் அக்னி போன்ற உடல் காந்தி; அப்படிப்பட ஜ்வலிக்கும் காது, குண்டலங்கள் இவையுடைய நரகாஸுரன் தேரில் இருந்தான்

97. அழுக்கு நிறம், பெரிய உடல், சிவந்த கண், விகார முகம் இத்தகைய தைத்யர், தானவர், ராக்ஷஸர் எல்லோரும் பலவித கவசம் பூண்டு வந்தனர்.

98, 99. சிலர் கத்தி கேடயம் கொண்டவர், சிலர் வில், அம்பறாத்தூணி யுடையவர்; அப்படியே சிலர் சக்தி ஆயுதத்தைக் கையில் பிடித்தவர்; வேறு சிலர் சூலமேந்திய கையினர்; இவர் எல்லோரும், யானை, குதிரை, தேர் கூட்டங்களுடன் பூமியை அதிரச் செய்து கொண்டு, மிகவும் ஆயத்தமாய் போரிட்டுக் கொண்டே வெளிக் கிளம்பினர்.

100. யமன் போன்ற நரகாஸுரன் அஸுரக் கூட்டங்கள் நெருங்கி சூழ்ந்தவனாய் முழங்கும் பேரி, சங்கம், ம்ருதங்கம், பணவம் இவற்றின் மேக சப்தம் போன்ற பேரொலியைக் கேட்டான்,

101. க்ருஷ்ணன் இருக்குமிடம் சென்று, விகார முகமுடைய அவரெல்லோரும், கருடனைச் சுற்றிக் கொண்டு, ஒன்று கூடி போரிட்டனர்.

102, 103. ஸேனைகள் பெரிய அம்பு மழையால் மறைத்தனர்; சக்தி, சூலம், ஈட்டி சலாகை, அம்பு இவைகளை, ஆயிரக் கணக்கில் விடுகிறவர்களாய், ஆகாசத்தை மறைத்தனர்.

104. கார் மேகம் போன்ற ரூபங் கொண்ட ஜனார்த்தனன், க்ருஷ்ணன், மிகப்பெரிய சாரங்கவில்லை மேகவொலி உண்டாகும் வகை நாணேற்றி சரமழை பொழிந்தான்.

105. அந்த அஸுரர் ஸேனை அம்பு மழையால் பெரும் போர்க்களத்திலிருந்து ஓடியே போயிற்று

106. கோர ரூபம் கொண்ட நரகாஸுரனுடன், அந்தக் கொடிய போர் மூண்டது. க்ருஷ்ணனின் அம்புகளால் மிகத் துன்புறுத்தப்பட்ட அவர்கள் எல்லோரும், அணி வகுப்பு உடைந்தவர் ஆயினர்.

107. சிலர் கையிழந்தவர், சிலர் கழுத்து, தலை முகம் வெட்டுப் பட்டவர். சிலர் சக்ரத்தால், இரண்டாகத் துண்டிக்கப்பட்டவர். சிலர் பாணங்களால பீடிக்கப்பட்ட மார்பையுடையவர்.

108. சிலர் சக்தி ஆயுதத்தால் இரண்டாக்கப்பட்டவர். யானை, குதிரை, தேர். வாகனங் கொண்டவர் சிலர். கௌமோதகி யெனும் கதாயுதத்தால் தாக்கப்பட்டவர் சிலர் சக்ரத்தால் உருக் குலைந்தவர்.

109, காலான், குதிரை, தேர், கொண்ட ஸேனையெல்லாம் இவ்விதம் கலக்கப்பட்டது. இந்த க்ருஷ்ணனுக்கு நரகாஸுர னுடன், கடுமையான போர் மூண்டது,

110, 111. ஜனமேஜயரே! சுருக்கமாகச் சொல்கிறேன் நான் சொல்வதைக் கேள். தேவர் கூட்டங்கள் நடுங்கச் செய்கிறவனும், தேஜஸ்வியும், மேகம் போன்றவனுமான நரகாஸுரன் கோபத் தால் கண்கள் சிவந்து புருஷோத்தமன் மதுஸூதனன் க்ருஷ்ண னுடன், மது அஸுரன் போல் போர் செய்தான்.

112. வீரன் க்ருஷ்ணன் இந்த்ரன் வில் போன்ற சிறந்த வில்லையெடுத்தான். அப்படியே ஸூர்ய கிரணம் போன்ற பாணத் தையும் தொடுத்தான்.

113. போரில் க்ருஷ்ணன் தெய்வத்தன்மை வாய்ந்த அஸ்ரத் தால், நரகாஸுரன் ரதத்தை நிறைத்தான். பலவான் நரகன், சிறந்த அஸ்த்ரத்தை வேகமாக இழுத்து விட்டான்.

114. இடிபோல முழங்கி வரும் நரகனின் அஸ்த்ரத்தைப் பார்த்து, மஹா பாக்யவான் மதுஸூதனன் கேசவன், சக்ராயுதத் தால் அதைத் துண்டித்தான்

115. ஜனார்த்தனன் ஒரு விசேஷ சரத்தால் நரகனின் தேர்ப் பாகனைக் கொன்றான். குதிரைகளையும் தேரையும் த்வஜத்தையும் சேர்த்து, பத்து சரங்களால் அழித்தான்.

116. மதுஸூதனன், நரகன் கவசத்தையும் துண்டித்தான். பிறகு ஸர்ப்பத்தின் உடல் போல கவசம் நீங்கினவனாக நரகன் ஆனான்.

117. போரில் குதிரை கொல்லப்பட்ட போதிலும், கவசம் கிழிந்தும், அந்த அஸுர வீரன், அழுக்கற்ற ஜ்வாலையுடையதும், உறுதியானதும், இரும்பால் கனமானதுமான சூலத்தையெடுத் தான். இந்த்ரன் மின்னல் போன்ற காந்தியுடைய சூலத்தை வேக மாகச் சுழற்றி விட்டான்.

118. வருகிற அந்தத் தங்கப்பிடியுடன் அலங்கரிக்கப்பட்ட பட்ட சூலத்தைப் பார்த்து அற்புத கார்யம் செய்யும் க்ருஷ்ணனால் கத்தி கொண்டு அது இரண்டாகத் துண்டிக்கப்பட்டது.

119. கோர ரூபமுடைய மஹாத்மா நரகனுடன் அஸ்தரங்கள் விழுதலால் பொழிவு விளைவிக்கும் பெரும் போர் மூண்டது.

120. மதுஸூதனன், நரகாஸுரனோடு ஒரு முஹூர்த்த காலம் போர் செய்தான்; பிறகு உக்ர சக்ராயுதம் கொண்ட க்ருஷ்ணன் ஜ்வலிக்கும் சக்ரத்தால் நரகாஸுரனை இரண்டாகத் துண்டித்தான.

121. சக்ரத்தால் இரண்டாக்கப்பட்ட நரகனின் உடல் வஜ்ராயுதத்தால் இரண்டாகப் பிளக்கப்பட்ட மலைச்சிகரம் போல் பூமியில் விழுந்தது.

122, 123. தேவதேவன் க்ருஷ்ணனை யணுகி, நரகன், சூர்யன் போல் மறைந்தான். சக்ரத்தில் துண்டிக்கப்பட்ட உடலுடைய அந்த அஸுரன் வஜ்ராயுதத்தால் பிளக்கப்பட்ட கைரிக மலைபோல் போரில் விழுந்தான்.

124. பூமி தேவி, விழுந்த மகனைப் பார்த்து குண்டலங்களை யெடுத்துக் கொண்டு கோவிந்தனை ஸேவிக்க வந்தாள். இந்த வார்த்தையையும் சொன்னாள்.

125, 126. 'கோவிந்தா! உன்னாலேயே [இவன்] கொடுக்கப்பட்டான். உன்னாலேயே கொல்லவும் பட்டான். குழந்தை விளையாட்டுப் பொருள்களைப் போல், எப்படி விருப்பமோ அப்படி விளையாடு, இவை உன்னுடைய குண்டலங்கள். அவனது ப்ரஜைகளைக் காப்பாற்று.

63 அத்தியாயம் முற்றும்

## 64-ம் அத்தியாயம்

### நரகாஸுரன் மாளிகையில் புகுந்த செல்வங்களைத் த்வாரகைக்கு அனுப்புதல் அப்படியே 16 ஆயிரம் பெண்ணை விடுவித்து த்வாரகைக்கு கொண்டு போதல், தேவலோகத்தில் அதிதியிடம் குண்டலங்களைக் கொடுத்து பாரிஜாதமரம் கொணர்தல்

1. **வைசம்பாயனார் சொன்னார் :** தேவேந்த்ரன் போன்ற வீரமுடைய பூமி புத்ரன், நரகனைக்கொன்று, இந்த்ரன் தம்பி விஷ்ணு, க்ருஷ்ணன், நரகனுடைய மாளிகையைப் பார்த்தான்.

2. பிறகு, ஜனார்த்தனன், நரகனின் பொக்கிஷத்தை, அடைந்து குறைவற்ற செல்வத்தையும், பலவித ரத்னங்களையும் பார்த்தான்.

3—6 ரத்னம், முத்து, பவளங்கள், வைடூர்யக் குவியல்கள், இந்தர நீலக்கற்குவியல்கள், வைரக் குவியல்கள், ஜாம்பூனத சாதகும்ப வகை தங்க மயமான, ஜ்வலிக்கும் நெருப்பு போன்றும் சந்த்ரன் போன்றும் உள்ள விலை மதிக்க முடியாத படுக்கைகள் ஸிம்ஹாஸனங்கள், தங்கத்தண்டால் அழகிய சந்தரன் போன்றும், மழை பொழியும் மேகம் போன்றதுமான, குடையையும், சுத்தமான சொக்கத்தங்கத்தின் தாரைகள் போன்ற கிரண வரிசைகள் இவைகளையெல்லாம் பார்த்தான்.

7. நரகன் மாளிகையில் காணப்பட்ட ஶ்ரேஷ்டமான செல்வங்களெல்லாம் முற்காலத்தில், வருணனிடமிருந்து கொண்டு வரப்பட்டதென்று நம்மால் கேட்கப்பட்டது.

8. குபேரன், இந்தரன், யமன் இந்த ராஜாக்களிடமும் அந்தகைய செல்வக்கூட்டம் கேட்கப்பட்டதுமில்லை காணப்பட்டதுமில்லை.

9, 10 நரகாஸுரன், நிஸுந்தன், ஹயக்ரீவன், இவர்கள் கொல்லப்பட்டதும். கொல்லப்படாது எஞ்சிய பொக்கிஷங்களை ரக்ஷிக்கும் அஸுரர்கள் கேசவனுக்கேற்ற அந்த விலை

மதிக்க முடியாத ரத்னங்களையும் அந்தப்புரத்திலுள்ளவைகளையும் அவனிடம் ஸமர்ப்பித்தனர்.

11, 12 அஸுரர்கள் சொன்னார்கள் "இந்த பலதரப்பட்ட அநேக மணிகளும், ரத்னங்களும், பயங்கர ரூபமுடைய யானைகள் பலனைத்தால் செய்யப்பட்ட பாய்கள், கழுத்தில் தங்கக்கயிறு. வில், சலாகைகள் கொண்டவை! மனோஹரமான மிருதுக்கொடிகள் தாங்குபவை; அழகிய அங்குசம் உடையவை;

13, 14 இத்தகைய யானைகள் இருபதினாயிரம், பெண் யானைகள் இரண்டு மடங்கு, நல்ல தேசத்தில் பிறந்த குதிரைகள் எட்டு லக்ஷம். பசுக்களில் ஜனார்த்தனா! தங்கள் இஷ்டப்படி அவை எல்லாவற்றையும் வ்ருஷ்ணிகள் அந்தகர்கள் வீடுகளில் கொண்டு சேர்ப்போம்

15—17. மெல்லிய கம்பளி படுக்கை போர்வை சித்ராஸனம், ப்ரிய தோற்றமுடன், நாம் விரும்பியதைப் பேசும் பறவைகள்; சந்தன, அகில், கருப்பு அகில் கட்டைகள், மூவுலகிலுமுள்ள செல்வம், தர்மத்தால் அடையப்பட்டவை, இவையெல்லாம் உனக்கு தேவ கந்தர்வர்களின் சிறந்த பொருள்கள், நாகர்கள் செல்வர், இவையெல்லாம் நாகன் மாளிகையில் இருக்கின்றன. இவையெல்லாம் வ்ருஷ்ணி அந்தகர் வீடுகளில் கொண்டு சேர்ப்போம்.

**வைசம்பாயனார் சொன்னார்:** ஹ்ருஷீகேசன் அவை எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு நோக்கித்து எல்லாவற்றையும் த்வாரகாபட்டினத்திற்கு அஸுரர்களைக் கொண்டுவரச்செய்தான்

19, 20. பிறகு நரகன் வருணனிடமிருந்து அபஹரித்தபொன் மழை பொழியும் குடையை. மாதவன் தானே உயர தூக்கி, மேகம் உருவெடுத்தது போலிருந்தும் பக்ஷிராஜன் கருடன் பறவையை ஏறினான். சிறந்த மணி பர்வத மலையையடைந்தான்.

21, அங்கு புண்யக்காற்றுகள் வீசின. அங்கு மதுஸூதனன், வைடூர்யத்தின் நிறங்கொண்ட, தோரணங்கள், பிருதுக்கொடிகள் கூடிய வாயில்களையும் வீடுகளையும பார்த்தான்.

23. பர்வதம் தங்க சித்ரங்கொண்ட மேல் கட்டிடங்களாலும் மாடிகளாலும், விளங்கி மின்னல் தொடுத்த மேகம் போல் ப்ரகாசித்தது.

24. அங்கு தேவ, கந்தர்வத் தலைவர்களின் ப்ரிய பெண்கள் சிறந்த ஸ்வர்ணக் காந்தியுடையவர்கள் பெரிய ப்ருஷ்ட பாகத்தையுடையவர்கள், மலைக் குகையில் அடைக்கப்பட்டுள்ளவர்கள் நாற்புறத்திலிருந்தும் நரகனுக் கொண்டு வரப்பட்டு ரக்ஷிக்கப் படுபவர்கள் ஸ்வர்க்கத்துக்கொப்பான தேசத்திலிருப்பவர் யாராலும் ஜயிக்கப்படாதவர்

26. ஸுகபோகத்தை நீக்கியவர். தேவப் பெண்கள் போல் ஸுகமாக விருப்பவர்கள் இத்தகைய பெண்களை மதுஸூதனன் பார்த்தான்.

27, 28 மாற்றுக ஒரே பின்னலையுடைய அப்பெண்கள் மஹாபாஹு க்ருஷ்ணனைச் சூழ்ந்து கொண்டனர். எல்லாப் பெண்களும் காஷாய ஆடை தரித்தவர். எல்லோரும் இந்த்ரிய நிக்ரஹம் செய்தவர். வ்ரத உபவாஸத்தால் மெலிந்த உடலை யுடைய பெண்கள், க்ருஷ்ண தர்சனத்தால் எதிர் நோக்கியிருந் தவர். அவர்கள் எல்லோரும் சேர்ந்து யதுஶ்ரேஷ்டனுக்கு அஞ்சலி செய்தனர்.

29, 30. நரகன் மஹாஸுரன், முரன், ஹயக்ரீவன், நிஸுந் தன் இவர்கள் சொல்லப்பட்டதையறிந்து, பெண்கள் க்ருஷ்ணனைச் சூழ்ந்து கொண்டனர். இந்தப் பெண்களைக் காக்கும் வயதாலும் ஞானத்தாலும், வ்ருத்தரான எல்லா அஸுரர்களும் அஞ்சலிக் கையராய் க்ருஷ்ணனை வணங்கினர்.

31, 32 பிறகு. அந்த எல்லா உத்தம ஸ்த்ரிகளும் அந்தக் காளைக் கண்ணனைப் பார்த்து அவனை நாயகனுக மனதில் வரித் தனர். அவனது சந்த்ரன் போன்ற முகத்தைப் பார்த்து மகிழ்ந்த இந்த்ரியங்களுடன் மிக ஸந்தோஷித்து மஹாபஹு க்ருஷ்ணனை நோக்கி இந்த வார்த்தை சொன்னார்கள்.

33—35 "முன்னர் வாயுவும், எல்லா ப்ராணிகளின் நினை வறிந்த தேவரிஷி நாரதரும், இங்கு எங்களை நோக்கிச் சொன்ன வாக்யம் உண்மை சங்கம், சக்ரம், கதை, கட்கம் இவை தரித், நாராயணன் விஷ்ணுதேவன் பூமி புத்ரன் நரகனைக் கொன்று அவன் உங்களுக்கு பர்த்தாவாகவும் ஆவான். பெறப்பேறு பெற்றோம். வெகு நாளாய் கேட்டு சத்ருக்களை வெல்லவல்ல, மிக ப்ரியமான உன்னைப் பார்க்கிறோம். மஹாத்மாவான உனது தர்சனத்தால் செய்த நல்வினைப் பயனை நாங்கள் அடைந்தோம்"

36. பிறகு இந்த்ரன் தம்பி க்ருஷ்ணன் அந்தப் பெண்களை ஸமாதானப்படுத்தினன். தாமரைக் கண்களுடைய எல்லாப் பெண்களையும் பார்த்து, மாதவன் சொன்னன்.

37. மதுஸூதனன், கேசவன் முறைப்படி கொண்டாடி, கலந்து பேசி கிங்கரர் சுமக்கும் பல்லக்குகளில் இவர்களை அழைத் துச் சென்றான்,

38. அங்கு பல்லாக்குகளைச் சுமக்கிற காற்று வேகமுடைய. ஆயிரக் கணக்கான ராக்ஷஸ கிங்கரர்களின், கோஷம் மிகப் பெரிய தாயிருந்தது.

39. அந்த மலை ஶ்ரேஷ்டமான மணி பர்வதத்தின் சிகரம்; தோஷமற்ற சூர்ய சுந்தரர் போன்றது;

40. ரத்னம், தங்கம் இவைகளால் ஆகிய தோரணங்கள் உடையது. பக்ஷிக் கூட்டங்கள், யானைகள், மான்கள். ஸர்ப்பங்கள் மரங்களுடையது.

41. குரங்குக் கூட்டங்களால் வ்யாபிக்கப்பட்டது; கூழாங் கற்களையும் அமரக் கூடிய பெரும் பாறைகளையுமுடையது. ந்யங்கு (மான்வகை) பன்றிகள், மான்கள் இவைகள் கொண்டது.

42. அருவிகள் உடையது; விஸ்தாரமான தாழ்வரை யுடையது; ஆஸ்சர்யமான கிளைகள் கொண்ட மரங்களையுடையது, ம்ருகக் கூட்டங்கள் நிறைந்தது

43. தழைத்த வேங்கை மரக் கூட்டங்களையுடையது; மயில் கள் அகவும் சப்தம் கொண்டது. இத்தகைய மிக கொண்டாடப் பட்ட மிக ஆஸ்சர்யமான, நினைக்க முடியாத, சிகரத்தையும்; மஹாபலவான் விஷ்ணு தோள்களால் பிடுங்கி, ப்ரகாசிக்கிற அதை பக்ஷி ஸ்ரேஷ்டன் கருடன் மேல் ஏற்றினன்.

44. மணி பர்வ சிகரத்தையும், பார்யையுடன் ஜனார்த்தனனை யும், பக்ஷஸ்ரேஷ்டமான கருடன் விளையாட்டாக சுமந்தான்.

45. ஹிமயமலை சிகரம் போன்ற அந்த பக்ஷிராஜன், இறக்கை களின் பலமான அடித்தலால், எல்லா திசைகளிலும் பரபரப்பை உண்டு பண்ணினன்

46. அந்தக் கருடன் பர்வத சிரகங்களை தகர்த்துக் கொண் டும், மரங்களை அடியோடு தள்ளிக் கொண்டும் பெரிய மேகங்களைச் சிதைத்துக் கொண்டும், சில மேகங்களை இழுத்துக் கொண்டும் சென்றான்.

47. ஜனார்த்தனன் வசப்பட்டிருந்த அந்தக் காற்று வேகங் கொண்ட பக்ஷி, சந்த்ர சூர்யர்கள் தேசத்தை தாண்டிச் சென்றான்.

48. அந்த மதுஸூதனன் தேவர்களால் ஸேவிக்கப்பட்ட மேரு கிரியை யடைந்து எல்லா தேவர் இருப்பிடங்களையும் பார்த்தான்.

49, 50 ஜனமேஜய! மேலான தவமுடையவனே! ராஜாவே! விஸ்வே தேவர் மருத்துக்கள், ஸாத்யர், அஸ்வினி தேவதைகள் இவர்கள் இடங்களையும் தாண்டி, மிகச் சிறந்த புண்ய லோகங்களை யும் அடைந்து, சத்ருவை அழிக்கவல்ல க்ருஷ்ணன், தேவ லோகத்தை யடைந்து இந்த்ரன் வீட்டில் புகுந்தான்.

51. அந்த க்ருஷ்ணன் கருடனிலிருந்து இறங்கி, தேவராஜன் இந்த்ரனைப் பார்ந்தான். சதக்ருது (நூறு யாகம் செய்த) தேவேந்தரனும ப்ரீதி யடைந்தவனாய் அவனைக் கொண்டாடினான்.

52, அப்போது மனிதஸ்ரேஷ்டன் ஜனார்த்தனனால், பார்யையுடன் குண்டலங்களைக் கொடுத்து தேவேந்தரனை வணங்கினான்.

53. தேவராஜனும் க்ருஷ்ணனைப் பூஜித்து, ரத்னங்களை ஸமர்ப்பித்தான். இத்தராணியும், சத்யபாமையை முறைப்படி ஸம்மானித்தாள்.

54. அப்போது இந்த்ரனும், வாஸுதேவனும், ஒன்று கூடி தேவமாதா அதிதியின் மிக்க மேன்மை பொருந்திய, திவ்ய மாளிகையைஅடைந்தனர்.

55. அங்கு நாற்புறமும்அப்ஸரஸ்களால் பணி செய்யப்பட்டு தவமுடைய மிக்க பாக்யவதி அதிதியைஅவர்கள் பார்த்தனர்.

56. அதிதியின் மகன் சிசி (இந்த்ராணி) நாயகன், இந்த்ரன், தன் தாயை வணங்கினான். பிறகு திவ்ய குண்டலங்களை ஸமர்ப்பித்தான். ஜனார்த்தனனை முன்னிட்டு அந்த வீரச் செயலை (நரகாஸுர வதத்தை) சொன்னான்.

57. அதிதியும் அந்த இரண்டு பிள்ளைகளையும் ப்ரிதியால் அணைத்துக்கொண்டாடி, அனுகூல வார்த்தைகளால் ஆசீர்வதித்தாள்.

58 59. இந்த்ராணியும் ஸத்யபாமையும் ப்ரீதியுடன் ஸ்ரேஷ்டமான அதிதி தேவியின் அந்த இரண்டு மங்கள திருவடிகளையும் வணங்கினர். கீர்த்தி வாய்ந்த தேவமாதா அதிதி அவ்விருவரையும் ப்ரீதியுடன் ஆசீர்வதித்தாள்.

60. ஜனார்த்தனனுக்கு, பொருத்தமான இந்த வார்த்தையைச் சொன்னாள். "எல்லா ப்ராணிகளாலும் அணுக முடியாதவனாகவும் கொல்லப்பட முடியாதவனாகவும் ஆவாய். இந்த தேவராஜன் இந்த்ரன் போல் லோகத்தால் பூஜிக்கப்பட்டு, ஜயிக்கமுடியாதவனாவாய்.

61, 62, ஸ்ரேஷ்டமானவள்! ப்ரிய தோற்றம் முடையவள். எல்லா உலகிலும் புகழ் பெற்றவள்; திவ்ய மணங் கொண்டவள் மனதுக்கினியவள்; இத்தகைய பாக்யவதி உத்தம ஸ்த்ரீ ஸத்யபாமையான இந்த மருமகள், க்ருஷ்ணா! நீ மனிதனாயிருக்கும்

வரை எப்போதும் அழியாத யௌவன முடையவளாயும், மூப்படையாதவளாயும் ஆகட்டும்''

63. இவ்விதம் தேவமாதாவால் கௌரவிக்கப்பட்ட மஹாபலன் க்ருஷ்ணன், இந்த்ரனால் விடை கொடுக்கப்பட்டும், ரத்னங்களால் பஹுமானிக்கப்பட்டும்,

64. ஸத்யபாமை ஸஹிதம் க்ருடன் மீதேறி தேவரிஷிகளால் நன்கு மதிக்கப்பட்ட தேவதைகளின் உத்யானவனத்தைச் சுற்றிச் சென்றான்

65, 66. அந்த மஹாபாஹு க்ருஷ்ணன் இந்த்ரனது உத்யானத்தில், தேவதைகளால் பூஜிக்கப்பட்ட மேலான திவ்யமான புண்ய நறுமணமுள்ள பாரிஜாத மஹா வ்ருக்ஷத்தைப் பார்த்தான்

67. அந்த மரத்தை அடைந்து எல்லா ஜனங்களும் பூர்வ ஜன்மத்தை, நினைக்கிறார்கள். தேவர்களால் நன்கு ரக்ஷிக்கப்படுகிற அந்த மரத்தை, அளவற்ற வீரமுடைய விஷ்ணு, பிடுங்கி கருடன் மேல் ஏற்றினார்.

68, 69. அவனும் ஸத்யபாமாவும் அப்ஸரஸ்களின் திவ்ய கூட்டத்தைப் பார்த்தனர் அப்ஸரஸ்களால் திவ்யப் பெண் ஸத்யபாமையும் பிறகு பார்க்கப்பட்டாள். பிறகு வாயு ஸஞ்சரிக்கும் ஆகாய மார்க்கத்தால் த்வராவதி நகருக்கு சென்றான்.

70. மஹாபாஹு தேவந்த்ரனும் அச்சமயம் க்ருஷ்ணனது அந்தச் சொல்லைக் கேட்டு அதை ஏற்றுக் கொண்டான். செய்யப்பட்ட கார்யம் (உபகாரங்கள்) உடையவன்'' எனவும் சொன்னான்

71. சத்ருக்களை வெல்லும் அந்த க்ருஷ்ணன், ஸப்த ரிஷிகளால் ஸ்தோத்ரம் செய்யப்பட்டும், கொண்டாடட்டும். தேவலோகத்திலிருந்து த்வாரகைக்குப் புறப்பட்டான்.

72. தேவராஜனால் பூஜிக்கப்பட்டு, மஹாபாஹு அந்த க்ருஷ்ணன் நீண்ட வழியைக் குறியது போல் கடந்து யாதவ புரி த்வாரகையைப் பார்த்தான்.

73. இந்த்ரன் தம்பி பகவான், கருட வாகனன் ஸ்ரீமான் க்ருஷ்ணன், அப்பேற்பட்ட பெரிய செயலைச் செய்து த்வாரகையை அடைந்தான்.

**64 அத்தியாயம் முற்றும்**

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 21 | சத்தியைம் | கத்தியையும் |
| 21 | 20 | யமுனைக்ரையில் | யமுனைக்கரையில் |
| 21 | 29 | கழுகளாலும் | கழுகுகளாலும் |
| 23 | 4 | ஐந்தாம் | ஐந்தாம் |
| 25 | 19 | திடீரைன்று | திடீரென்று |
| ,, | 21 | யசோயையும் | யசோதையும் |
| 27 | 4 | விளையாட்டுாளால் | விளையாட்டுக்களால் |
| 32 | 25 | நிர்மானிக்கப் | நிர்மாணிக்கப் |
| 33 | 25 | ஆலோச்னைசித்தது | ஆலோசித்தது |
| 35 | 2 | ஆகாசயத்திலிருந்து | ஆகாயத்திலிருந்து |
| 36 | 5 | கோபவருத்தங்கள் | கோபவ்ருத்தர்கள் |
| 38 | 17 | நிறப்பபட்டன | நிரப்பப்பட்டன |
| 39 | 1 | கருத்து | கறுத்து |
| 40 | 6 | தேன்றுகிறது | தோன்றுகிறது |
| ,, | 13 | யடைகியது | யடைகிறது |
| ,, | 21 | க்ருகஷிர கள் | க்ருஷிகர்கள் |
| 41 | 10 | ஸ்ரீவத்ஸமருவுடைய | ஸ்ரீவத்ஸமறுவுடைய |
| ,, | 25 | வாஸணையையும் | வாஸனையையும் |
| ,, | 30 | [கிகப்பு] | (சிகப்பு) |
| 42 | 4 | விலையாடியும் | விளையாடியும் |
| 43 | 12 | விணை | வீணை |
| ,, | 15 | தயனம் | நயனம் |
| ,, | 16 | யமுணைவ | யமுனைக் |
| ,, | 21 | யமுணை | யமுனை |
| 45 | 11 | மைத்திரன் | மைத்திரள் |
| 46 | 14 | உதசியை | உச்சியை |
| ,, | 18 | கலக்கப்கட்டது | கலக்கப்பட்டது |
| 51 | 8 | விரித்தார்போல் | விரித்தாற்போல் |
| ,, | 11 | கீழ்முணை | கீழ்முனை |
| 52 | 6 | கணைத்து | கனைத்து |
| 53 | 26 | முணை | முனை |
| 55 | 1 | ஜனமே ஜரே | ஜனமேஜயரே |
| ,, | 5 | சீமாலிகளை | சீமாலிகனை |
| ,, | 6 | கப்சி | கட்சி |
| ,, | 9 | பண்டரக்கிளை | பாண்டரக்கினை |
| ,, | 14 | பலராமனனுடைய | பலராமனுடைய |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ,, | 26 | பிஷ்ணமாகக் | பூஷணமாகக் |
| 56 | 17 | சரிதிரம் | சரித்திரம் |
| ,, | 19 | பூது | பூமி |
| ,, | 24 | சத்ருக்கனே | சத்ருக்கனை |
| 58 | 5 | தேவர்ளால் | தேவர்களால் |
| 62 | 33 | நெற்க்கதிர் | நெற்கதிர் |
| 63 | 11 | அரசவற் | அசைவற் |
| 65 | 12 | தரமோதரன் | தாமோதரன் |
| ,, | 21 | புகலிடதம் | புகலிடம் |
| 71 | 23 | தாழ்வாரைகளில் | தாழ்வரைகளில் |
| 83 | 17 | கர்ணணே | கர்ணனை |
| 86 | 5 | ப்ரகாசிக்கிரவனல் | ப்ரகாசிக்கிறவனுய் |
| ,, | 17 | தரிசையாக | வரிசையாக |
| ,, | 18 | சரிடுதையை | சரிதையை |
| 87 | 28 | அனேந்த | அணேந்த |
| 88 | 4 | பரிமகணத்தால் | பரிமாணத்தால் |
| ,, | 10 | செய்யப்முட்ட | செய்யப்பட்ட |
| ,, | 19 | கொண்டவாறுமான | கொண்டவனுமான |
| ,, | 21 | மடையவிவ்லே | மடையவில்லே |
| ,, | 23 | அகப்மட்ட | அகப்பட்ட |
| ,, | 27 | ஸமத்தில் | ஸமயத்தில் |
| ,, | 28 | இருக்சிற | இருக்கிற |
| 89 | 3 | வலேயும் | வாலேயும் |
| ,, | 7 | அவ்வஸுரணே | அவ்வஸுரனே |
| ,, | 22 | நணேந்த | நனேந்த |
| 91 | 15 | ஆப்ரமங்களின் | ஆச்ரமங்களின் |
| 92 | 14 | பூதணே | பூதனே |
| 92 | 24 | இத்திர விழா | இந்திர விழா |
| 94 | 18 | அந்தணரே | அந்தணரே |
| ,, | 20 | பேருமுயற்சி | பெருமுயற்சி |
| ,, | 22 | வீனுக்க | வீணுக்க |
| 95 | 8 | மகிழ்ச்கி | மகிழ்ச்சி |
| 97 | 11 | டிருக்கிம்போது | டிருக்கும்போது |
| ,, | 25 | வேட்கத்துடன் | வெட்கத்துடன் |
| 98 | 3 | அக்ருரே! | அக்ரூரரே! |
| 99 | 5 | பேனல் | போனல் |
| 100 | 30 | வேதாரித்துக் | வேதத்துக் |
| 101 | 27 | செய்யப்ட்டது | செய்யப்பட்டது |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ,, | 28 | உரஸேனனுல் | உக்ரஸேனனுல் |
| 103 | 31 | பட்து | பட்டது |
| 104 | 11 | வைசம்பாயனார் | வைசம்பாயனர் |

குறிப்பு :- வைசம்பாயனர் என்ற இந்தச் சொல்லைப் பக்கங்கள் 200, 240, 277, 293, 293, 296, 301, 302, 308, 310, 317, 339, 340 இவைகளில் தவருக அச்சிட்டுள்ளனர். அங்குத் திருத்திக் கொண்டு படிக்கவும்.

| | | | |
|---|---|---|---|
| 104 | 12 | கணிகள் | கண்கள் |
| 105 | 11 | விடரிமயிர் | பிடரிமயிர் |
| ,, | 20 | சாப்புடுகிற | சாப்பிடுகிற |
| ,, | 27 | குரல்விட்டுக் | குரலிட்டுக் |
| ,, | 32 | கண்களையும்முடைய | கண்களையுமுடைய |
| 107 | 8 | பலகவான | பலவானுன |
| ,, | 24 | கடிப்பதற்க்கும் | கடிப்பதற்கும் |
| 108 | 5 | இரணங்களால் | கிரணங்களால் |
| 111 | 11 | வார்ந்தை | வார்த்தை |
| 116 | 3 | நேரில் சைல்லுதல் | தேரில் செல்லுதல |
| ,, | 18 | உடய | உடல் |
| ,, | 24 | ஸ்தானங்களை | ஸ்தனங்களை |
| 117 | 10 | பிள்ளைப்பேரில்லா | பிள்ளைப்பேறில்லா |
| 123 | 24 | லுன்டான | லுண்டான |
| 124 | 3 | பிளங்கப்பட்டு | பிளக்கப்பட்டு |
| 125 | 12 | நியமிக்கப்மட்டு | நியமிக்கப்பட்டு |
| ,, | 15 | கொடுச்கப் | கொடுக்கப் |
| ,, | 29 | ஸ்தானங் | ஸ்தனங் |
| 126 | 18 | புடுகிறதோ | படுகிறதோ |
| 127 | 29 | ஆர்யனும் | சூர்யனும் |
| 128 | 24 | கொள்கிறேன் | கொல்கிறேன் |
| 131 | 12 | யுடையறி | யுடையது |
| 136 | 30 | நனத் | ஈனத் |
| 137 | 3 | நிராக்கப்பட்டு | நிராகரிக்கப்பட்டு |
| 139 | 5 | குவாலாயபீட | குவலயாபீட |
| 146 | 29 | சாணுடன் | சாணூரன் |
| 150 | 10 | கருத்துக் | கிறுத்துக் |
| ,, | 35 | தவது | தமது |
| 151 | 12 | வேங்கயே | வேங்கையே |
| 153 | 4 | கருணையற்ற | கருணை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 153 | 20 | வருணணை | வருணனை |
| 154 | 32 | புயப்பாட்டை | புறப்பாட்டை |
| 155 | 5 | ராவணனுல் | ராவணனுல் |
| ,, | 9 | பநதுக்களிடயிருந்து | பந்துக்களிடமிருந்து |
| 157 | 1 | அவினேக | அனேக |
| ,, | 8 | அறிவொன்ணில்லா | அறிவொன்றில்லா |
| 158 | 20 | கப்ஸனின் | கம்ஸனின் |
| ,, | 24 | வணைத்தையும் | வனைத்தையும் |
| 159 | 15 | வசனை | வசன |
| 161 | 3 | ஆசப்பட | ஆசைப்பட |
| 163 | 15 | மனிதர்கு | மனிதர்க்கு |
| ,, | 15 | மேற்ப்பட்ட | மேற்பட்ட |
| ,, | 22 | சாந்திபணி | சாந்தீபினி |
| 165 | 1 | உபயேந்திரனை | உபேந்திரனை |
| 167 | 23 | முடையவர்கன் | முடையவர்கள் |
| ,, | 27 | ஜராஸந்தணை | ஜராஸந்தனை |
| 168 | 1 | பெறுக்காவில்லை | பொறுக்கவில்லை |
| ,, | 23 | ஜுனர்னனை | ஜுனர்த்தனனை |
| 170 | 31 | கணைக்கும் | கனைக்கும் |
| 171 | 10 | ஜராஸத்தனை | ஜராஸந்தனை |
| ,, | 33 | மஸ | ஸம |
| 173 | 23 | வண்ண | உண்ண |
| 174 | 13 | ஈஶ்வரணை | ஈஶ்வரனை |
| 176 | 18 | ஸேணை | ஸேனை |
| 177 | 5 | வ்ருஷ்னி | வ்ருஷ்ணி |
| ,, | 22 | பேரிய | பெரிய |
| 178 | 18 | சேராக | சேருக |
| 180 | 27 | மனமுடைந்து | மனமுடைந்து |
| ,, | 31 | நிணைக்க | நினைக்க |
| 183 | 23 | ஆநிறை | ஆநிரை |
| 184 | 23 | ஹர்யயவனுடைய | ஹர்யஶ்வனுடைய |
| 185 | 17 | அளவு | களவு |
| ,, | 29 | தளிறுடன் | தளிருடன் |
| 187 | 21 | வர்ணணை | வர்ணனை |
| 190 | 16 | குபேரணை | குபேரனை |
| ,, | 23 | அரசர்குரிய | அரசர்க்குரிய |
| ,, | ,, | பொருத்தியவன் | பொருந்தியவன் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ,, | 24 | அரசனுனை | அரசனுனை |
| 191 | 17 | கேசரா! | கேசவா! |
| ,, | 34 | வாழ்விப்பனும் | வாழ்விப்பவனும் |
| 193 | 24 | அனுசரித்தும் | அனுசரித்தும் |
| ,, | 27 | நியாத்துடன் | நியாயத்துடன் |
| ,, | 29 | பின்வாகுதல் | பின்வாங்குதல் |
| 196 | 9 | ரத்தச்சேர் | ரத்தச்சேறு |
| 197 | 19 | உலங்களிலும் | உலகங்களிலும் |
| 198 | 28 | தங்குவுதன் | தங்குவதன் |
| 200 | 15 | வைசம்பாயளார் | வைசம்பாயனர் |
| ,, | 22 | பரசுரய்மரோடு | பரசுராமரோடு |
| ,, | 32 | அனுக்கடினமான | அனுகக்கடினமான |
| 202 | 21 | மேகங்காள் | மேகங்கள் |
| 203 | 2 | கோமநிதத்தை | கோமந்தத்தை |
| 204 | 12 | பொருக்கு | போருக்கு |
| ,, | 15 | கோண்டு | கொண்டு |
| 205 | 3 | கதிரா | மதிரா |
| ,, | 4 | வைந்தேயரால் | வைநதேயரால் |
| 207 | 1 | ஓகுரு | ஓருரு |
| 209 | 11 | பாம்பனே | பாம்பணே |
| 211 | 8 | கணேக்கும் | கனேக்கும் |
| ,, | 16 | யாளே | யானே |
| 214 | 24 | விரகுகளாலும் | விறகுகளாலும் |
| ,, | 31 | ,, ,, | ,, ,, |
| 215 | 5 | விரகு | விறகு |
| ,, | 35 | பிசிணே | பிசினே |
| 219 | 6 | பொரிந்தியது | பொருந்தியது |
| 222 | 4 | வலலூரு | வல்லூறு |
| ,, | 31 | பிளக்கம்பட்ட | பிளக்கப்பட்ட |
| 224 | 25 | சூழப்மட்ட | சூழப்பட்ட |
| 225 | 21 | சேதராஜனுனை | சேதிராஜனுனை |
| 226 | 22 | ஶ்ருகாடனுடன் | ஶ்ருகாலனுடன் |
| 227 | 15 | நானேற்றிய | நாணேற்றிய |
| 229 | 16 | விட்டுய்பிரிய | விட்டுப்பிரிய |
| 230 | 5 | இறக்கமின்றி | இரக்கமின்றி |
| 232 | 11 | ராமக்ருஷ்ணன் | ராமகிருஷ்ணர் |
| 233 | 14 | த்ருதயுக | க்ருதயுக |
| ,, | ,, | வத்தபோது | வந்தபோது |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 237 | 30 | அசையம் | அசையும் |
| ,, | 31 | கடைச்கன் | கடைக்கண் |
| 238 | 16 | முள்ளவனாக | முள்ளவளாக |
| ,, | 24 | இழுக்கபட்டேன் | இழுக்கப்பட்டேன் |
| ,, | 26 | எங்கு பொவது | எங்குப்போவது |
| ,, | 28 | யமுனா | யமுனை |
| 240 | 13 | சொன்ஞர்கள் | சொன்ஞர்கள் |
| ,, | 17 | அரகர் | அரசர் |
| ,, | 21 | ருக்மினி | ருக்மிணி |
| 241 | 6 | ஹ்ரிதயத்தில் | ஹ்ருதயத்தில் |
| ,, | 10 | கர்வங்தேவர் | கர்வங் கொண்ட தேவர் |
| 244 | 19 | ஸூத்தன | ஸூந்தன் |
| 245 | 6 | வார்த்வை | வார்த்தை |
| ,, | 12 | செய்து | செய்து |
| ,, | 16 | காலான்களாய் | காலாள்களாய் |
| 247 | 4 | சாணூர்முஷ்டிக | சாணூரமுஷ்டிக |
| ,, | 14 | அறியள் | அரியன் |
| ,, | 16 | வணங்கிமவன் | வணங்குமவன் |
| ,, | 17 | பிலப்பிலி | பிறப்பிலி |
| 248 | 31 | தவற | தவிர |
| 254 | 16 | செல்தவரில்லை | செய்தவரில்லை |
| ,, | 19 | வேரு | வேறு |
| ,, | 22 | ஸமாதனம் | ஸமாதானம் |
| ,, | 23 | பலாபல | பலப்பல |
| ,, | 24 | அதிசதஞகிய | அதிசயஞகிய |
| ,, | 25 | சமணப்படுத்த | சமனப்படுத்த |
| 255 | 5-6 | அலக்ஷ்யமாகயிருந்தனர் | அலக்ஷ்யமாக விருந்தனர் |
| ,, | 9 | கலங்கிறது | கலங்குகிறது |
| 259 | 30 | பொறுமையின்றி | பொருமையின்றி |
| 262 | 9 | ரஜேந்த்ர | ராஜேந்த்ர |
| ,, | 12 | வஸ்ந்ரங்களாலும் | வஸ்த்ரங்களாலும் |
| 263 | 2 | மனிதுதென | மனிதனென |
| ,, | 5 | ஷத்ர | க்ஷத்ர |
| ,, | 22 | பீஷ்மர் | பீஷ்மகர் |
| 267 | 7 | யுத்தமான | யுக்தமான |
| ,, | 13 | [செய்தி] | [செய்த] |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 270 | 1 | கணைத்த | கனைத்த |
| ,, | 10 | 52-ம் அத்தியாயம் | 51-ஆம் அத்தியாயம் |
| ,, | 11 | 53-ம் அத்தியாயம் | 52-ஆம் அத்தியாயம் |
| ,, | 12 | காலயவணிடம் | காலயவனனிடம் |
| 273 | 2 | காலயவணன் | காலயவனன் |
| ,, | 11 | ஜனமேய | ஜனமேஜய |
| 274 | 9 | தந்நதரை | தன் நகரை |
| ,, | 11 | காலயவணன் | காலயவனன் |
| 276 | 10 | இத்தகய | இத்தகைய |
| ,, | 12 | காலயவணனின் | காலயவனனின் |
| 277 | 8 | ஜாஸந்தன் | ஜராஸந்தன் |
| ,, | 23 | போருட்செறிவு | பொருட்செறிவு |
| ,, | 30 | காலான் | காலாள் |
| 279 | 31 | தபோபலந்தால் | தபோபலத்தால் |
| 280 | 15 | க்ருணஷ்ணனை | க்ருஷ்ணனை |
| ,, | 31 | நக்ஷரத்திரம் | நக்ஷத்திரம் |
| 281 | 3 | காலயவன் | காலயவனன் |
| 284 | 5 | உக்ரஸேனுடன் | உக்ரஸேனனுடன் |
| ,, | 10 | ஆபரங்களைக் | ஆபரணங்களைக் |
| ,, | 24 | ஸ்தோந்ரம் | ஸ்தோத்ரம் |
| 286 | 6 | புகுத்தான் | புகுந்தான் |
| 289 | 2 | ஆநரிதம் | ஆனந்தம் |
| 291 | 3 | அகிழ்கள் | அகழிகள் |
| ,, | 10 | நாற்திசை | நாற்றிசை |
| 292 | 25 | வைந்தேயர் | வைநதேயர் |
| ,, | 22 | ஶ்தேஷ்டா! | ஶ்ரேஷ்டா! |
| 293 | 23 | புதிநாக | புதிதாக |
| 295 | 1 | தோடங்கள் | தோட்டங்கள் |
| ,, | 3 | பணை | பனை |
| 298 | 1 | தூற்றுக் | நூற்றுக் |
| 301 | 3 | நாற்புரம் | நாற்புறம் |
| ,, | 3 | கோபக்னி | கோபாக்னி |
| ,, | 11 | மூசுகுந்த | முசுகுந்த |
| ,, | 14 | போம் | போய் |
| 302 | 13 | வாஸுாதவன் | வாஸுதேவன் |
| ,, | 26 | நிர்மானிக்க | நிர்மாணிக்க |
| 303 | 32 | திட்டமிடபட்டுப் | திட்டமிடப்பட்டு |
| 304 | 4 | நிர்மானம் | நிர்மாணம் |
| 307 | 25 | நிர்மானித்து | நிர்மாணித்து |
| ,, | 27 | ஸ்வரூமறிந்த | ஸ்வரூபமறிந்த |
| 308 | 5 | யறைந்தவராக | நிறைந்தவராக |
| 311 | 18 | ருக்மினி | ருக்மிணி |
| 312 | 3 | நதரம் | நகரம் |
| 313 | 8 | இந்த்ரானி | இந்த்ராணி |
| 315 | 8 | அக்ரூரணை | அக்ரூரனை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 316 | 23 | திவில்லாளி | வில்லாளி |
| ,, | 24 | போர்களை | பேர்களை |
| ,, | 33 | ஒருவொருக்கொருவர் | ஒருவருக்கொருவர் |
| 317 | 1 | யாளை | யானை |
| ,, | 21 | கொல்லாம | கொல்லாமலும் |
| ,, | 22 | குண்டனபுரத்தில் | குண்டினபுரத்தில் |
| 318 | 10 | ஜனுர்தனனை | ஜனுர்த்தனனை |
| 319 | 2 | முளை | முனை |
| 320 | 14 | யடைந்நான் | யடைந்தான் |
| 321 | 28 | பென் | பெண் |
| 324 | 6 | நகரமானது | நரகமாவது |
| ,, | 34 | கருப்பு | கறுப்பு |
| 329 | 1 | 64-ம் அத்தியாயம | 63-ஆம் அத்தியாயம் |
| ,, | 23 | தொல்லேக்கொடுத்தான் | தொல்லைகொடுத்தான் |
| 330 | 5 | கொடுப்யார்கள் | கொடுப்பார்கள் |
| ,, | 19 | நூறுறிருவத்தொரு | நூற்றிருபத்தொரு |
| ,, | 26 | அதிதினயை | அதிதியை |
| 333 | 18 | நாற்தோளுடை | நாற்றோளுடை |
| ,, | 22 | நாணேற்றிருன் | நாணேற்றினுன் |
| 334 | 7 | பூஷனங் | பூஷணங் |
| 336 | 17 | ஸ்நனங்களின் | ஸ்தனங்களின் |
| 337 | 4 | மிடமுடையது | இடமுடையது |
| 338 | 5 | காலான் | காலாள் |
| ,, | 16 | அஸ்ரத் | அஸ்த்ர |
| ,, | 23 | த்வஜஜைதயும் | த்வஜத்தையும் |
| ,, | 30 | கணமானது | கனமானது |
| ,, | 38 | நரகாஸுரனோடு | நரகாசுரனேடு |
| 339 | 19 | குண்டலதிபதி | குண்டலங்களை |
| 340 | 6 | சலாக்குப் | சலாக்குக் |
| ,, | 18 | நாகன் | நரகன் |
| ,, | 25 | உயர தூக்கி | உயரத்தூக்கி |
| 341 | 12 | சொல்லப் | கொல்லப் |
| ,, | 19 | மஹாபஹு | மகாபாஹு |
| ,, | 23 | தரித் | தரித்த |
| ,, | 34 | பல்லாக்கு | பல்லக்கு |
| ,, | 38 | சுந்தரர் | சந்த்ரர் |
| 342 | 16 | பக்ஷ | பக்ஷி |
| ,, | 20 | சிரகங்களை | சிகரங்களை |
| 343 | 2 | பார்ந்தான் | பார்த்தான் |
| ,, | 7 | இத்தராணி | இந்த்ராணி |
| ,, | 30 | தோற்றம்முடை | தோற்றமுடை |
| 344 | 5 | பட்டும் | படட்டும் |
| ,, | 13 | நினேக்சிருர் | நினேக்கிருர் |
| ,, | 30 | அப்பேறபட்ட | அப்பேர்ப்பட்ட |

மற்றும் பிழைகள் காணப்படின் திருத்திக்கொள்ளவும்.